சிங்கிஸ் ஐத்மாத்தவ்

# குல்சாரி

குறுநாவல்



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

1-539

மொழிபெயர்ப்பாளர்: ரா. கிருஷ்ணையா
பதிப்பாசிரியர்: நா. தர்மராஜன், எம். ஏ.
ஓவியர்: அ. மென்நிபாய்

**Чингиз Айтматов**

ПРОЩАЙ, ГУЛЬСАРЫ!

Повесть

*На тамильском языке*

**Chinghis Aitmatov**

FAREWELL, GULSARY!

Short Novel

*In Tamil*

**வாசக நண்பர்களுக்கு**

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும் **ராதுகா பதிப்பகம்** மகிழ்ச்சியுடன் காத்திருக்கிறது. கடிதங்களைத் தயை செய்து

Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR

என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

முதலாவது பதிப்பு, 1972
இரண்டாவது பதிப்பு, 1985
சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

A $\frac{4702280200-098}{031(05)-85}$ 297-85 ISBN 5-05-000328-8

# 1

ஒரு கிழவன் பழைய பாரவண்டி ஒன்றை ஓட்டிச் சென்ருன். வண்டியை இழுத்துச் சென்ற குலுங்கா நடையுடைய சிவந்த மேனிக் குதிரையான அவனுடைய குல்சாரியும் கிழடு தான், படு கிழடு...

வளைந்து உயர்ந்து மேட்டுவெளிக்குச் சென்ற சாலை சலிப்பூட்டும் படி நீண்டதாக இருந்தது. மொட்டையாக நின்ற சாம்பல் நிறக் குன்று களிடையே குளிர் காலத்தில் காற்று ஓயாது சுழன்றடித்தது, கோடையில் அனல் பொசுக் கிற்று.

இந்த ஏற்றச் சாலையில் செல்வது தாஞ பாய்க்கு எப்பொழுதுமே ஒரு பெரிய துன்பம் தான். மெதுவாகப் போக அவனுக்குப் பிடிக் கவே பிடிக்காது. இளைஞனுக இருந்தபொழுது குதிரையிலே மாவட்டத் தலைமையிடத்துக்கு அடிக்கடி போய்விட்டு வரும்பொழுது எப்பொ ழுதும் இந்த ஏற்றத்தில் குதிரையை ஓட ஓட விரட்டியடித்துக் கொண்டுதான் செல்வான். ஏதாவது வண்டியில் வர நேரந்தால், அதுவும் மாட்டு வண்டியாக இருந்துவிட்டால், வாய்

பேசாமல் கீழே குதித்து, கையிலே கோட்டை எடுத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்து விடு வான். பகைவன் மீது பாய்வது போல ஆவேச மாக விரைந்து நடப்பான். மேட்டு வெளியை வந்தடைந்த பிறகுதான் நடையை நிறுத்து வான். மேலும் கீழுமாய் மூச்சு வாங்கும். அசைந்தாடியவாறு மேட்டை நோக்கி ஊர்ந்து வரும் வண்டிக்காகக் காத்துக் கொண்டு நிற் பான். அவன் நடந்து வந்த வேகத்தில் அவனு டைய இதயம் வலிக்கும்படி படபடத்துக் கொள்ளும். இருந்தாலும் வண்டியில் அமர்ந்து மெதுவாக ஊர்ந்து வருவதைக் காட்டிலும் இது அவனுக்கு நல்லதாகவே தோன்றும்.

சோரோ உயிரோடிருந்த பொழுது தன் நண்பனின் விபரீத வழிகள் குறித்து கலாட்டா செய்வது வழக்கம்:

''தானுபாய், நீ ஏன் அதிர்ஷ்டமில்லாத வனக இருக்கிருய் தெரியுமா? பொறுக்கமாட் டாதவன் அப்பா நீ, அதனுல்தான். எல்லாமே அதிவேகமாக நடந்தால்தான் திருப்தியடை வேன் என்கிருய். இந்த நிமிடமே உலகப் புரட்சி நடந்துவிட வேண்டும் உனக்கு! புரட் சியைப் பற்றிப் பேசுவானேன், அலெக்சாந் திரவ்கா ஏற்றத்தைப் போன்ற ஒரு சாதாரண சாலையிலே செல்வதற்கு வேண்டிய பொறுமை கூட உன்னிடம் இல்லையே. மற்றவர்களேப் போல அமைதியாக உன்னுல் வண்டியில் வர முடிகிறதா? கீழே குதித்துத் தலே தெறிக்கக் குன்றின் மீது வேகமாய் ஏறுகிருய், ஏதோ

ஓநாய் உன்னை விரட்டிக் கொண்டு வருகிற மாதிரி. இதனால் என்ன லாபம் உனக்கு? மற்ற வர்களும் வந்து சேரும்வரை நீ உச்சியிலே காத்துக் கொண்டுதானே நிற்க வேண்டியிருக் கிறது. தனியே ஓடிப் போய் உலகப் புரட்சி நடத்திட முடியாதென்று உனக்குத் தெரியும். எல்லாரும் வருகிறவரை காத்துக் கொண்டுதான் இருக்கணும்.''

ஆனால் அது நெடுநாட்களுக்கு முன்பு, மிக நெடுநாட்களுக்கு முன்பு.

இன்று தானுபாய் அலெக்சாந்திரவ்கா ஏற்றத் தைக் கடந்து வந்ததைக் கவனிக்கக்கூட இல்லை. முதிய வயதுக்குரிய இயல்புகள் வேர்விட்டு வளர்ந்து விட்டன. அவன் வேகமாகவும் ஓட்ட வில்லை, மெதுவாகவும் ஓட்டவில்லை; குதிரையை அதற்குரிய நடையிலே போகும்படி விட்டுவிட் டான். இப்போதெல்லாம் தனியேதான் போய் வந்தான். இரைச்சல் மிக்க சாலை நெடுகிலும் முன்பு அவனுடன் கூட்டமாக வந்தவர்கள் எப்படியெப்படியோ போய்விட்டனர். சிலர் யுத்தத்திலே உயிரிழந்து விட்டார்கள், சிலர் இறந்துபோய் விட்டார்கள், சிலர் வீட்டை விட்டு வெளியே வராமல் அந்திமக் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார்கள். இளைஞர்கள் இப்பொழுதெல்லாம் கார்களில் போய் வந்தனர். யாரும் அவனுடன் கிழட்டுக் குதிரையின் பின்னால் மந்த கதியில் செல்ல விரும்பவில்லை.

பழங்காலத்துச் சாலையிலே சக்கரங்கள் கடகடத் தன. இன்னும் ப்ல மைல்களுக்கு அவை கட

கடக்க வேண்டும். அவனுக்கு எதிரே ஸ்தெப்பி வெளி விரிந்து சென்றது. பிறகு கால்வாய்க்கு அப்பால் மலையடிவாரத்தை ஒட்டினாற்போல் போயாக வேண்டும்.

குதிரை சோர்வடைந்து கொண்டிருந்தது; பலமிழந்து ஒடுங்கிக் கொண்டிருந்தது போலத் தோன்றிற்று. சிறிது நேரத்துக்கு முன்பே அவன் இதை கவனித்தான். ஆனால் தனது சோகச் சிந்தனைகளில் மூழ்கியிருந்ததால் இதைப் பற்றி அதிகம் கவலைப்பட்டுக் கொள்ளவில்லை. சாலையிலே குதிரை சற்றுச் சோர்வடைந்தால் என்னவாம்? ஒன்றும் கெட்டு விடாது. வீட்டுக்குப் போனதும் சரியாகிவிடும்...

அரிய பொன்னிறப் பிடரி முடிக்காக குல்சாரி* என்று பெயரிடப்பட்ட அந்தக் குலுங்கா நடைக்கிழட்டுக் குதிரை அதன் வாழ்வில் கடைசி முறையாக அலெக்சாந்திரவ்கா ஏற்றத்தில் ஏறிச் சென்று இறுதி மைல்களை மெள்ளக் கடந்து கொண்டிருந்தது என்று அவனுக்கு எப்படித் தெரியும்? குதிரைக்குத் தலை சுற்றியது; அதன் மங்கிய பார்வையில் பூலோகமே வர்ண வட்டங்களாகச் சுழன்று முதலில் ஒரு முனையும் பிறகு எதிர் முனையும் வானத்தைத் தொடும்படி ஆடிக் குலுங்குவது போலத் தெரிந்தது; குல்சாரிக்கு முன்னால் இருந்த தரை அவ்வப்பொழுது காரிருளில் மூழ்கி விட, சாலையும் மலை

---

* குல்சாரி — கிர்கீஸ் மொழியில் பொன்னிறக் குவளை மலர். — ப-ர்.

களும் இருக்க வேண்டிய இடத்தில் மூடு பனிப் படலம் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது— இதெல்லாம் அவனுக்கு எப்படித் தெரியும்?

குதிரையின் மூப்படைந்து விட்ட தள்ளாத இதயத்தில் நசநசவென்று வலித்தது. கழுத்துப் பட்டை குதிரையை வருத்திற்று, மூச்சு விடுவது மேலும் கடினமாகி வந்தது. பின்புறச் சேணம் நழுவிச் சென்று பிட்டத்தில் வெட்டிற்று. கழுத்துப் பட்டைக்கு அடியில் இடதுபுறத்தில் கூர்மையாக ஏதோ ஒன்று குத்திக் கொண் டிருந்தது. அது முள்ளாக இருக்கலாம், அல்லது பட்டையின் ஒட்டுக் கம்பளி மெத்தையைக் கிழித்து வெளியே துருத்திக் கொண்டு வந்து விட்ட ஆணி முனையாகவும் இருக்கலாம். கழுத்துக் காய்ப்பிலிருந்த சிறு காயத்தில் எரிச்சல் பொறுக்க முடியவில்லை. உழுத வயலில் சேற்றில் நடப்பது போல அந்தக் குதிரை சிரமப்பட்டுக் காலை எடுத்து வைத்து நடந்தது.

ஆயினும் கடு முயற்சி செய்து தொடர்ந்து போய்க் கொண்டிருந்தது. கிழவன் தானுபாய் இடையிடையே அதட்டியோ லகானல் தட்டியோ அதை உசுப்பி விட்டபடி தன் சிந்தனையிலே ஆழ்ந்திருந்தான். அவன் சிந்திக்க வேண்டியவை நிறைய இருந்தன.

பழங் காலத்துச் சாலையிலே சக்கரங்கள் கடகடத்தன. குல்சாரி வழக்கமான அதன் நடையிலே போய்க் கொண்டிருந்து—முதன்முதல் முனைந்து எழுந்து நின்று அடர்ந்த பரட்டைப்

பிடரியுடைய பெரிய தாய்க் குதிரையின் பின்னால் புல்வெளியில் தத்துப்புத்தென ஓடிய நாள் முதலாக அதற்குரிய தனிச் சிறப்பாகி விட்ட குலுங்காக் கெச்சை நடை அது.

குல்சாரியின் கூடப் பிறந்த புகழ்மிக்க அந்தக் குலுங்கா நடையின் காரணமாக அது இனிய பல நாட்களுடன் சேர்ந்து பொல்லாத பல நாட்களையும் காண வேண்டியதாயிற்று. அந்தக் காலத்தில் யாரும் அதைப் பாரவண்டியில் பூட்டலாமெனக் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்கள், அது அபவாதமாகக் கருதப்பட்டிருக்கும்...

அது மிக நெடுங் காலத்துக்கு முன்பு. இப்பொழுது அதெல்லாம் கடந்த காலத்திய நினைவாகி விட்டது. குல்சாரி இப்பொழுது கடைசி முறையாகப் பந்தய இலக்குக் கோட்டினை வந்தடைய தீரமுடன் பாடுபட்டுக் கொண்டிருந்தது. என்றுமே இவ்வளவு மெதுவாக அது இலக்குக் கோட்டினை நெருங்கியதில்லை. என்றுமே இவ்வளவு வேகமாக அந்தக் கோடு அதை நோக்கிப் பறந்தோடி வந்ததில்லை. இன்னும் ஓரடியிலே அடைந்துவிடலாமென்று எண்ணும்படி அந்த வெண்ணிறக் கோடு அவ்வளவு அருகே வந்து விட்டது.

பழங்காலத்துச் சாலையிலே சக்கரங்கள் கடகடத்தன.

குளம்புகளுக்கு அடியில் தரை அதிர்ந்தாடுவது போன்ற உணர்ச்சி, மங்கி இருட்டாகி வந்த குதிரையின் உணர்வில் நெடுங் காலத்துக்கு முன்பு கோடையின் பகற் பொழுதுகளைப்

பற்றிய அரச புரச்லான நினைவை உசுப்பி விட்டது. மலைகளில் அமைந்த புல்வெளி நனைந்து இதமாயிருந்தது. நம்புதற்கரிய வியத்தகு உலக மான அதில் கதிரவன் குதூகலமாய்க் கனைத்துக் கொண்டு மலைகள் மீது துள்ளியோட, பச்சிளங் கன்றுக, அசடாக இருந்த குல்சாரி அதை விரட்டிக் கொண்டு புல்வெளியையும் அருவி யையும் கடந்து புதர்களிடையே ஓடிக் கொண் டிருந்தது. முடிவில் மந்தையின் பொலி குதிரை சினங்கொண்டு காதுகளைப் பின்புறம் சாய்த்துக் கொண்டு அதனிடம் ஓடி வந்து அதைத் திரும்பி வரச் செய்தது. மிக நெடுங்காலத்துக்கு முற்பட்ட அந்நாட்களில் மந்தைகள், ஏரியிலே தெரியும் பிம்பங்களைப் போல் தலை கீழாக அங்குமிங்கும் செல்வது போலிருக்கும். பரட் டைப் பிடரியுடைய பெரிய அதன் தாய்க் குதிரை வெதுவெதுப்பான பால் போன்ற முகிலாகிவிடும். தாய்க் குதிரை திடுமெனச் செறுமி அன்பு பொழியும் முகிலாகும் அக்கணங் கள் இன்பமிக்கவை. அதன் காம்புகள் கெட்டி யாக மிக இனிமையாக இருக்கும். குல்சாரியின் உதடுகளில் பால் நுரைத்துக் கொண்டு பாயும். அந்தப் பாலின் செழுமையும் இனிமையும் தாங்காமல் குல்சாரிக்கு மூச்சுத் திணறும். தாயின் வயிற்றுடன் ஒட்டிக்கொண்டு மூக்கால் முட்டிக் கொண்டு நிற்கையில் எவ்வளவு சுகமாக இருக்கும்! இன்ப மயக்கத்தில் சொக்கச் செய்து விடுமே, அந்தப் பால்! கதிரவன், பூமி, தன் தாய் ஆகிய அனைத்து உலகமே அந்த ஒரு

வாய்ப் பாலில் உள்ளடங்கிவிடுமே. முக்கமுக்கக் குடித்தாலுங்கூட முடிவின்றி இன்னும் குடித்துக் கொண்டிருக்கலாம் போலிருக்குமே...

அந்தோ, அதெல்லாம் சீக்கிரமே முடிந்து விட்டது. எல்லாமே விரைவில் மாறிப் போய் விட்டன. கதிரவன் கனைத்துக் கொண்டு மலைகள் மீது தாவிக் குதித்தோடுவது நின்று விட்டது. அதற்குப் பதில் நாள் தவறாமல் அவன் கிழக்கிலே உதித்து மேற்கு நோக்கிச் செல்ல முற்பட்டான். மந்தைகள் தலைகீழாக நகர்ந்து செல்வதும் முடிவுற்றுவிட்டது. மிதிபட்ட புல் தரையில் அவற்றின் குளம்புகள் சதபுதவெனப் பதிந்து தரையைக் கருமையாக்கின. அல்லது தேங்கி நின்ற நீருக்கடியில் கற்கள்மீது தட்டி அவற்றை நொறுங்கச் செய்தன. பரட்டைப் பிடரியுடைய பெரிய தாய்க்குதிரை மிகவும் கண்டிப்பானதாகிவிட்டது. அதை அதிகம் தொல்லை செய்தால் வலிக்கும்படி குல்சாரியைக் கடித்தது. போதிய பால் இல்லை. குல்சாரி இனி புல் தின்ன வேண்டியதாயிற்று. நீண்ட பல ஆண்டுகளுக்கு நீடித்த ஒரு வாழ்க்கை முறை தொடங்கலாயிற்று. இப்பொழுது அந்த வாழ்க்கையும் இறுதியை நெருங்கிக் கொண்டிருந்தது.

ஓடி மறைந்துவிட்ட அந்தக் கோடையை குல்சாரி தன் நீண்ட வாழ்வில் திரும்பவும் காணவே இல்லை. அது சேணமிடப்பட்டுச் சென்றது, அதன் குளம்புகள் எத்தனையோ சாலைகளைக் கடந்து சென்றன, எத்தனையோ

பேரை அது தன்மீது ஏற்றிச் சென்றது. அந்தச் சாலைகளுக்கு முடிவே இல்லை. இப்பொழுது தான், கதிரவன் திரும்பவும் மலைகள்மீது தாவிக் குதித்தோடவும் குல்சாரியின் கால்களுக்கடியில் தரை விம்மிப் புடைத்தாடவும் தொடங்கி, மங்கிவந்த அதன் கண்களுக்கு எதிரே யாவும் மினுமினுக்கிய இப்பொழுதுதான், இத்தனை காலமாக எங்கோ ஓடி மறைந்திருந்த அந்தக் கோடை மறுபடியும் அதன் முன்னே தெரிந்தது. மலைகள், நனைந்த புல்வெளி, மந்தைகள், பரட்டையான பிடரியுடைய பெரிய தாய்க் குதிரை ஆகிய யாவும் ஒரு விநோத ஒளியில் இப்பொழுது தோற்றமளித்தன. முண்டிக் கொண்டு முன்னே சென்று கழுத்துப் பட்டையிலிருந்தும் ஏர்க்காலிலிருந்தும் பிய்த்துக் கொண்டு வெளி வந்துவிட வேண்டுமென்று, தன் முன்னே திடுமென்று தோன்றிய அந்தக் கடந்த கால உலகினுள் பிரவேசிக்க வேண்டுமென்று பெரு முயற்சி செய்தது. ஆனால் கானல் நீரைப் போல ஏமாற்றிய அந்தக் காட்சி நகர்ந்து நகர்ந்து போய்க் கொண்டே இருந்தது. குல் சாரிக்கு இது சித்திரவதையாக இருந்தது. அதன் தாய் நெடுங் காலத்துக்கு முன்பு கூப்பிட்டது போலவே மெல்லக் கனைத்து அதனை அழைத்தது. அன்று போலவே மந்தைகள் பாய்ந்தோடின. குதிரைகளுடைய விலாப்புறங்களும் வால்களும் குல்சாரி மீது உராய்ந்தன. ஆனால் மினு மினுத்துப் புலம்பிய கருமையைச் சமாளிக்கும் பலம் அதனிடம் இல்லை. இந்தக் கருமை

முன்னிலும் ஆவேசமாய் அதைச் சுற்றிச் சுழன்று வால்களை வீசிச் சுரீரென அடித்து, அதன் கண்களிலும் நாசியிலும் வெண்பனியை வாரியெறிந்தது. குல்சாரிக்கு வியர்த்து விரு விருத்தது, ஆயினும் குளிரில் உடல் நடுங்கிற்று. அடைய முடியாத அவ்வுலகம் சுழன்றடித்த பனிக் காற்றிலே ஓசையின்றி மறையலாயிற்று. மலைகள், புல்வெளி, அருவி யாவும் மறைந்துவிட்டன. மந்தைகள் பாய்ந்தோடி விட்டன. பரட்டைப் பிடரியுடைய பெரிய தாய்க் குதிரை மட்டும்தான் இன்னும் அதன் முன்னுல் சென்று கொண்டிருந்தது. தாய்க் குதிரை அதை விட்டுப் பிரிந்து செல்ல விரும்ப வில்லை. குல்சாரியை அது அழைத்தது. குல்சாரி பலமாகக் கனைத்தது. ஆனுல் அந்தக் கத்தல் முனகலாகவே வெளிவந்தது. அதன் குரல் அதற்கே கேட்கவில்லை. பிறகு யாவும் மறைந்து விட்டன, பனிக்காற்றும் மறைந்து விட்டது. சக்கரங்களின் சத்தம் நின்றுவிட்டது. கழுத்துப் பட்டைக்கடியில் இருந்த சிறிய காயத்தின் கடுப்பும் நின்றுவிட்டது.

குல்சாரி அப்படியே நின்றுவிட்டது. அதன் உடல் அசைந்தாடிற்று, கண்கள் வலித்தன, காதுகளில் ஒரு விநோத ரீங்காரம் ஒலித்தது.

தானுபாய் லகானைப் போட்டுவிட்டு மெள்ளக் கீழே இறங்கி மரத்துப் போன கால்களை நீட்டிச் சரிசெய்து கொண்டு வாய் திறக்காமல் மௌனமாகக் குதிரையிடம் போனுன்.

குல்சாரியைப் பார்த்தபடி வாய்க்குள் ‘‘அட

இழவே!'' என்று சபித்துக் கொண்டான்.

குதிரையின் பெருந்தலையும் நீண்ட குச்சி போன்ற கழுத்தும் கழுத்துப் பட்டைக்கு அடியிலிருந்து துருத்திக் கொண்டு நின்றன. அதன் விலா எலும்புகள் புடைத்தெழுந்து கணுக்கணுவான முதுகுத் தண்டுக்குக் கீழே எலும்பும் தோலுமான விலாப் புறங்களை மேலே உயரச் செய்தன. முன்னொரு காலத்தில் பொன்னிறமாயிருந்த அதன் பிடரி முடிகள் வியர்வையிலும் அழுக்கிலும் தோய்ந்து கறுத்திருந்தன. எலும்பாய் இளைத்துவிட்ட அதன் இடுப்பிலிருந்து வழிந்த வியர்வைத் துளிகள் வயிற்றிலும் கால்களிலும் குளம்புகளிலும் கொழகொழப்பான கோடுகளை ஏற்படுத்தியிருந்தன.

''அப்படி ஒன்றும் நான் உன்னை விரட்டி ஓட்டி வரவில்லையே''—குதிரை முன்னால் நின்று அவசரமாய் வேலை செய்த தானபாய் தன்னுள் முணுமுணுத்துக் கொண்டான். சேணக் கச்சையையும் கழுத்துப் பட்டையையும் தளர்த்தி விட்டு, பிறகு கடிவாள வாயிரும்பை வெளியே எடுத்தான். பிசுபிசுப்பான சூடான எச்சில் அதில் ஒட்டிக் கொண்டிருந்தது. குல்சாரியின் மூக்கையும் கழுத்தையும் தனது கோட்டின் கை நுனியால் துடைத்தான். பிறகு கடைசியாக எஞ்சியிருந்த உலர்புல்லைத் துடைத்தெடுப்பதற்காக வண்டிக்கு விரைந்து வந்தான். ஒரு கை அள்ளிச் சென்று குதிரையின் முன்னால் போட்டான். ஆனால் குல்சாரி அந்தத் தொடவில்லை, அதற்கு உடம்பு நடுங்கிக் குலுங்கிற்று.

''இந்தா, தின்னு! ஏன் மாட்டேன்கிறாய்?'' ஒரு பிடி எடுத்துக் கொடுத்து தானுபாய் அதை விசாரித்தான்.

குதிரையின் உதடுகள் துடித்தன, ஆனால் அவற்றால் புல்லைப் பற்றிக் கொள்ள முடியவில்லை. தானுபாய் குல்சாரியின் கண்களைக் கவனித்துவிட்டு முகத்தைச் சுளித்துக் கொண்டான். இமைகளின் மடிப்புக்களால் பாதியளவு மூடப்பெற்று ஆழமாய் அழுந்தியிருந்த அதன் கண்களில் அவனால் ஒன்றும் பார்க்க முடியவில்லை. அவை ஒளியிழந்து, பாழடைந்த வீட்டின் சன்னல்களைப் போல வெறிச் சென்றிருந்தன.

தானுபாய் செய்வதறியாது சுற்றுமுற்றும் பார்த்தான். தொலைவிலே மலைகளும் சுற்றிலும் வெற்று ஸ்தெப்பி வெளியும் தெரிந்தன. சாலையில் யாருமே தென்படவில்லை. வருடத்தின் இப்பகுதியில் வழிப்போக்கர்களைக் காண்பது அரிது.

சந்தடியற்ற அந்தச் சாலையில் கிழட்டுக் குதிரையும் கிழவனும் தன்னந்தனியே விடப்பட்டிருந்தனர்.

அது பிப்ரவரி மாத இறுதி. சமவெளிகளை வெண்பனி விட்டகன்றுவிட்டது. மலையிடுக்குகளிலும் கோரைகளிடையிலும் குளிர் காலத்தின் பதுங்கிடங்களில் மட்டும் தான் கடைசிப் பனிப் பெருக்குகளின் மிச்சங்கள் எஞ்சியிருந்தன. பழைய வெண்பனியின் அரசபுரசலான கந்தம் காற்றிலே மிதந்து வந்தது. தரை இன்னமும் ஜில்லிட்டு இறுகி உயிரற்றுச் சாம்பல் நிறமுடை

யதாக இருந்தது. கல்லாக உறைந்து கிடந்த ஸ்தெப்பி குளிர்கால இறுதியில் வெறிச்சோடிப் போய்த் துயரமூட்டிற்று. அதைப் பார்த்ததுமே தானுபாய்க்குப் பகீரென்றது.

அவனுடைய கலைந்த தாடி துருத்திக் கொண்டு நிற்க, ஆட்டுத் தோல் கோட்டின் தேய்ந்த கைமுனைக்கு அடியிலிருந்து அவன் கண்கள் மேற்றிசையை உற்று நோக்கின. பூமியின் விளிம்புக்கு மேல் மேகங்களாலான தொட்டிலிலிருந்து கதிரவன் தொங்கிக் கொண்டிருந்தான். பனிமூடிய மங்கலான அஸ்தமனக் காட்சி அடிவானத்திலே படர்ந்து கொண்டிருந்தது. மழை அல்லது புயலுக்கான அறிகுறி எதுவும் காணப்படவில்லை. ஆனால் குளிரும் இனந்தெரியாத ஒருவகை அச்ச உணர்வும் காற்றிலே நிறைந்திருந்தன.

''இப்படி ஆகுமெனத் தெரிந்திருந்தால் புறப்பட்டிருக்க மாட்டேனே'' என்று தானுபாய் சோகமாக மனத்துள் நினைத்துக் கொண்டான். ''இனி திரும்பவும் முடியாது, போகவும் முடியாது—திக்கற்ற நிலையிலே சிக்கிக் கொண்டுவிட்டேன். காரணமின்றி குதிரையை திண்டாட்டத்தில் விடப் போகிறேன்.''

ஆம், விடிகின்ற வரை காத்திருந்துவிட்டுக் கிளம்பியிருக்க வேண்டும். பகற்பொழுதில் வழியில் ஏதாவது நேர்ந்தாலும், வழிப்போக்கன் யாராவது வருவான் என்று எதிர்பார்க்க முடியும். அவன் பிற்பகலில் புறப்பட்டான். ஆண்டின் இப்பகுதியில் இப்படிப் புறப்படலாமா? இது புத்திசாலி செய்கிற காரியமா?

ஒரு சிறு மேட்டின் மீது ஏறி நின்று கார் அல்லது லாரி கண்ணில் படுகிறதா என்று பார்த்தான். ஆனால் இரு திசைகளிலும் சாலே வெறிச்சோடிக் கிடந்தது. சோர்வுடன் திரும்பி வண்டியை வந்தடைந்தான்.

''நான் கிளம்பி வந்திருக்கக் கூடாது'' என்று மறுபடியும் சொல்லிவிட்டு என்றும் தன்னே விட்டகலாத அவசரப் புத்திக்காகத் திரும்பவும் தன்னேத் திட்டிக் கொண்டான். அவனுக்குத் தன் மீதும், மகனுடைய வீட்டிலிருந்து அவசர மாய் அவனேப் புறப்படச் செய்தவை யாவற் றின் மீதும் கோபம் கோபமாக வந்தது. ஆமாம், இராப் பொழுதுக்கு அங்கே தங்கி, குதிரைக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்திருக்க வேண்டும். அங்கே தங்குவதா?..

தானுபாய் ஆத்திரமாய்க் கையை வீசிக் காற் றைச் சறுக்கெனச் சீவினன். ''முடியாது, ஒரு போதும் என்னுல் அங்கே தங்க முடிந்திருக் காது. நடந்தே வருவதென்ருலுங்கூடப் புறப் பட்டுத் தான் இருப்பேன்! கணவனுடைய தகப்பனிடம் போய் ஒருத்தி அப்படிப் பேசலாமா? என்னதான் ஆனுலும் தகப்பனுயிற்றே என்று நினேத்தாளா? நான் கட்சியிலே சேர்ந்து என்ன பயன், மேய்ப்பாளன் அல்லது மந்தைக்காரனே விட அதிகம் உயர முடியவில்லேயே, அதுவும் முடிவில் வயதுக் காலத்தில் கழுத்தைப் பிடித்துக் கட்சியிலிருந்து வெளியே தள்ளிவிட்டார்களே என்றல்லவா ஏசினுள், திமிர் பிடித்தவள்!.. என் மகன் இருக்கானே, அவன் அதுக்கு மேலே

வாயைத் திறக்கவே இல்லை; நிமிர்ந்து பார்க்கக்கூட தைரியம் இல்லை அவனுக்கு. அவள் சொன்னால் தகப்பனை நிராகரிக்கக்கூடத் தயங்கியிருக்க மாட்டான். கழிசடைப் பயல், முந்திக் கொண்டு போய்ப் பெரிய ஆளாக வேண்டுமென்று பார்க்கிறான். சீ, இனி பேசிப் பயன் இல்லை! இந்தக் காலத்துப் பசங்கள் உதவாக்கரையாகி வருகின்றனர், அவ்வளவுதான்.''

தானுபாய்க்கு உடம்பெல்லாம் கொதித்தது, சட்டைக் காலர்ப் பொத்தானைக் கழற்றி விட்டுக் கொண்டான். பெருமூச்சு விட்டபடி, குதிரையையும் சாலையையும் நெருங்கி வந்த இரவையும் கவனியாது வண்டியைச் சுற்றி நடைபோட ஆரம்பித்தான். அப்படியும் ஆத்திரம் அடங்கவில்லை. மருமகளுடன் சண்டை போடுவது தனக்குக் கண்ணியக் குறைவு என்று நினைத்து மகன் வீட்டில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தான். இப்பொழுது திடுதிப்பென ஆத்திரம் பொங்கி வழிந்தது. வழி நெடுகக் கசப்புற்று மனத்துள் சிந்தனை செய்து வந்ததையெல்லாம் அவளிடம் சொல்லித் தீர்த்துவிட வேண்டும் போலிருந்தது. ''கட்சியில் என்னைச் சேர்த்துக் கொண்டதும், வெளியே தள்ளியதும் நீயல்லவே. பெண்ணே, உனக்கு என்ன தெரியும்? அன்று எப்படிப்பட்ட நிலைமை என்று உனக்குத் தெரியுமா? இப்பொழுது பேசுவது ரொம்பச் சுலபம். இன்று நீங்கள் எல்லோரும் படித்துவிட்டு வந்துவிடுகிறீர்கள், சிறப்பு, மரியாதை எல்லாம் கிடைக்கிறது. ஆனால் எங்கள் செயல்கள் யாவற்றுக்கும் அன்று

நாங்களேதான் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. எங்கள் தந்தையர்கள், தாய் மார்கள், நண்பர்கள், பகைவர்கள் எல்லோ ருடைய செயல்களுக்கும், ஏன் அண்டை வீட்டுக்காரனுடைய நாயின் செயல்களுக்குங் கூட — உலகிலுள்ள எல்லாவற்றுக்குமே — நாங்கள் தான் பொறுப்பு. நான் கட்சியிலிருந்து விலக்கப் பட்டது பற்றி பேசுகிறுயே, நீ யார் அதைப் பற்றி பேச? பெண்ணே, அது என்னுடைய விவகாரம். அதைப் பற்றி நீ பேசாதே!''

''அதைப் பற்றி நீ பேசாதே!'' மேலும் கீழுமாய் நடந்தபடி மறுபடியும் பலமாகக் கூறினுன். ''அதைப் பற்றி நீ பேசாதே!'' என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந் தான். இதில் அவனுக்கு மிகவும் வேதனை அளிப் பதாக, மானக்கேடாக இருந்தது என்னவெனில், ''அதைப் பற்றி நீ பேசாதே'' என்பதைத் தவிர, சொல்வதற்கு வேறு ஒன்றும் அவனுக்குத் தோன்ருமல் போனதுதான்.

அவன் வண்டியைச் சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருந்தான். ஏதாவது செய்தாக வேண் டும், இரவெல்லாம் இங்கேயே இருந்துவிட முடியாது என்பது நினைவுக்கு வரும்வரை சுற்றிச் சுற்றி நடந்து கொண்டே இருந்தான்.

குல்சாரி பூட்டிய சேணத்துடன் உயிரற்ற தாய், கூனிக் குறுகிய நிலையில், குளம்புகளை ஒட்டிச் சேர்த்துக் கொண்டு அசையாமல் நின்றது. மரத்துப் போய், உயிரற்ற பிணமாகிவிட்டது போலத் தோன்றியது.

''ஏன் அப்பா, என்ன ஆயிற்று?'' தாஹுபாய் அதனிடம் ஓடிச்சென்ருன். குதிரையின் மெல்லிய, நீண்ட முனகல் அவன் காதில் விழுந்தது. ''தூங்கிக் கொண்டா இருந்தாய்? உடம்பு சரியில்லையா?'' குதிரையின் குளிர்ந்த காதுகளை வேகமாகக் கையால் தடவிப் பார்த்தான். அதன் பிடரி முடிகளுக்குள் விரல்களைச் செலுத்திஞன். அங்கும் குதிரையின் தோல் ஜில்லென்று ஈரமாயிருந்தது. குதிரையின் பிடரி முடிகள் வழக்கத்துக்கு மாருக இலேசாக இருப்பது போல கைக்குத் தெரிந்ததுதான் தாஹுபாய்க்கு மிகவும் அச்சமூட்டியது. ''குல்சாரிக்கு ரொம்ப வயதாகி விட்டது'' என்று சோகத்துடன் நினைக்கலாஞன். ''குதிரையின் பிடரி முடிகள் மெலிந்து இறகு போல இலேசாகிவிட்டன. நம் எல்லோருக்கும் வயதாகிவிட்டது. எல்லோருக்கும் ஒரே முடிவு தான் காத்துக் கொண்டிருக்கிறது.'' என்ன செய்வதென்று தெரியாமல், முடிவுக்கு வர முடியாதவஞக நின்று கொண்டிருந்தான். குதிரையையும் வண்டியையும் விட்டுவிட்டு வீட்டை நோக்கி நடந்தால், நள்ளிரவுக்குள் அவனுடைய குடிசைக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம். அருவியின் தலைத் திசையில் ஒரு மைல் தொலைவிலிருந்த பாசன மேற்பார்வையாளரின் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த அந்தக் குடிசையில் அவனும் அவன் மனைவியும் வசித்து வந்தனர். கோடையில் தாஹுபாய் புல் அறுத்து உலர வைக்கும் வேலையைக் கவனித்துக் கொண்டான். குளிர் காலத்தில் உலர்ந்த புல் போர்களைக் கண்

காணித்து, மேய்ப்பாளர்கள் தக்க காலத்துக்கு முன்பே உலர்புல்லை எடுத்து உபயோகிக்காதபடி பார்த்துக் கொண்டான்.

சென்ற இலையுதிர் காலத்தில் பண்ணை அலுவலகத்துக்கு அவன் போயிருந்தான். நகரிலிருந்து வந்திருந்த இளம் சாகுபடி நிபுணனான புதிய வேலைக் குழுத் தலைவன் அப்பொழுது அவனிடம் சொன்னான்: ''அக்சக்கால், உங்களுக்கு ஒரு புதிய குதிரை தரப் போகிறோம். கொஞ்சம் கிழடுதான், இருந்தாலும் உங்களுக்கு வேண்டிய வேலைகளைச் செய்து கொடுத்துவிடும்.''

''எப்படிப்பட்ட குதிரை? எலும்பும் தோலுமாகத்தானே இருக்கிறது?'' என்று சந்தேகம் தொனிக்கும் குரலில் தானபாய் விசாரித்தான்.

''வந்து பாருங்கள். ஒரு மாதிரி சிவந்த மேனியாக இருக்கிறது பாருங்கள். அதை உங்களுக்குத் தெரிந்திருக்குமே, முன்பு நீங்கள் அதில் சவாரி செய்வது வழக்கமாமே.''

தானபாய் லாயத்துக்குப் போய்க் குதிரையைப் பார்த்தான். முற்றத்திலே நின்ற குலுங்கா நடைக் குதிரையைக் கண்டதும் உள்ளம் நெகிழ்ந்து கலங்கி நின்று விட்டான். ''திரும்பவும் ஒன்று சேர்கிறோமா?'' —கிழட்டுக் குதிரையைப் பார்த்தபடி நின்றவன் தன் வாய்க்குள் கூறிக் கொண்டான். வேண்டாமென்று சொல்ல

---

° **அக்சக்கால்** —வயதில் மூத்தவரைக் குறிக்கும் மரியாதைச் சொல். — **ப-ர்.**

மனம் வராமல் குல்சாரியை வீட்டுக்கு அழைத்துச் சென்ருன்.

அவனுடைய மனேவியால் அந்தக் குதிரையை அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லே.

''அதே குல்சாரிதானு இது? இருக்க முடியாது!'' என்று அவள் கூறிஞள்.

''அதுவேதான்'' என்று மனேவியின் பார்வையிலிருந்து திரும்பிக் கொண்டு தானுபாய் முணுமுணுக்கும் குரலில் சொன்னுன்.

குல்சாரியுடன் இணேந்த நினேவுகளேக் கிண்டிக் கிளராமலிருப்பதுதான் நல்லது. தானுபாய் அந்தக் காலத்தில் இளேஞனுக இருந்தான், குற்றம் முற்றிலும் அவனுடையதே. விரும்பத் தகாத வழியில் பேச்சு திரும்பிவிடாதிருக்கும் பொருட்டு அவளிடம் அவன் கடுமையாகவே பேசினுன்:

''ஏன் அப்படியே நின்று கொண்டிருக்கிருய்? சாப்பாட்டைச் சூடு பண்ணு. பசி தாங்க முடியவில்லே.''

''வயது என்னவெல்லாம் செய்துவிடுகிறது என்று நினேத்துப் பார்த்தேன். குல்சாரி என்று நீ சொல்லியிராவிடில் எனக்கு அடையாளம் தெரிந்திருக்காது, அப்படி மாறிவிட்டது.''

''இதில் என்ன ஆச்சரியம்? நாம் மட்டும் மாருமல் அப்படியே இருக்கிருேம் என்று நினேக்கிருய்? காலம் யாரையும் விட்டு வைக்கவில்லே.''

''நானும் அதைத்தான் சொன்னேன்'' என்று அவள் எதையோ நினேத்துக் கொண்டு தலேயை ஆட்டிக் கொண்டாள். பிறகு வேடிக்கையாய்ச்

சிரித்தபடி அவனிடம் கேட்டாள்: ''உன்னுடைய குலுங்கா நடை குல்சாரியில் ஏறிக் கொண்டு திரும்பவும் இரவில் கிளம்பப் போகிறுயா? நான் ஆட்சேபிக்கவில்லே, அனுமதி தருகிறேன்.''

''அதெல்லாம் அந்தக் காலம்.'' சங்கடமான இந்தப் பேச்சைத் தட்டிக் கழித்துவிட்டு அவளி டமிருந்து எதிர்ப்பக்கம் திரும்பிக் கொண்டான். அவள் வேடிக்கையாகக் கேட்ட கேள்விக்கு அவனும் வேடிக்கையாகப் பதில் சொல்லியிருக்க வேண்டும். ஆனுல் அவன் வெட்கத்தால் குழப்ப மடைந்து, பரண் மீதேறி உலர்ந்த புல்லே எடுப்பதில் முனேந்து விட்டான். சற்று நேரம் பரண் மீதே காத்துக் கொண்டிருந்தான். அவள் மறந்து விடுவாள் என்று நினேத்தான், ஆனுல் அவள் எதையும் மறக்கவில்லே.

புகைபோக்கியிலிருந்து புகை குபுகுபுவென்று வந்தது. அவன் மனேவி ஆறிப்போன மதிய உணவை இரவு சாப்பாட்டுக்காகச் சுட வைத் தாள். இன்னமும் அவன் புல் எடுப்பதாகப் பாவனே செய்து பரண் மேலே வேலே செய்து கொண்டிருந்தான். முடிவில் அவள் கதவருகே வந்து கூப்பிட்டாள்:

''சாப்பாடு திரும்பவும் ஆறுமுன் கீழே இறங் கிவா!''

கடந்த காலத்தைப் பற்றி அவள் மேற் கொண்டு ஒன்றும் பேசவில்லே. பேசிப் பயனில் லேயே...

அவ்வருடம் இலேயுதிர் காலம், குளிர் காலம் முழுவதும் குலுங்கா நடையானேத் தர்னுபாய்

பராமரித்து வந்தான். அதற்கு வெந்த கூளமும் சிவப்பு வள்ளிக் கிழங்கு மசியலும் அளித்தான். குல்சாரியின் பற்கள் தேய்ந்து கட்டையாகியிருந்தன. குதிரையைத் திரும்பவும் தெம்பு பெறச் செய்துவிட்டதாக நினைத்திருந்தான். பிறகு இப்படி ஆகிவிட்டது. இப்பொழுது என்ன செய்வது?

குதிரையைச் சாலையிலே விட்டுவிட்டுப் போக அவனுக்கு மனம் வரவில்லை.

''குல்சாரி, என்ன செய்யப் போகிறோம்? இப்படியே நின்று கொண்டிருந்தால் என்ன ஆவது?'' என்று சொல்லிக் குதிரையை மெல்லத் தட்டி உசுப்பிவிட்டான். குல்சாரி காலை நகர்த்தி வைத்து அசைந்தது. ''இதோ இரு, வந்துவிட்டேன்!''

மருமகளுக்கு அவன் உருளைக் கிழங்கு எடுத்துச் சென்றிருந்த காலிச் சாக்கை வண்டியினுள்ளிருந்து தனது சவுக்குக் கம்பினால் குத்தி இழுத்து அதிலிருந்து ஒரு பொட்டலத்தை எடுத்தான். வழியில் சாப்பிட அவன் மனைவி அவனுக்கு பன் ரொட்டி சுட்டுத் தந்திருந்தாள். ஆனால் சாப்பாடு பற்றிய நினைவின்றி வந்தவன், ரொட்டி இருப்பதை மறந்தே விட்டான். பாதி ரொட்டியைப் பிட்டுக் கோட்டு முனையில் வைத்துத் தூளாக்கிக் குதிரையிடம் கொண்டு போய்க் கொடுத்தான். ரொட்டியின் வாசனையை குல்சாரி பலமாய் உள்ளுக்கு இழுத்ததே ஒழிய அதனால் தின்ன முடியவில்லை. உடனே தானுபாய் அதற்கு ஊட்டத் தொடங்கினான். துண்டுகளை எடுத்து

அதன் வாய்க்குள் கொடுத்தான். குல்சாரி மென்று அசைபோட ஆரம்பித்தது.

''தின்னு, மெதுவாய் வீடு போய்ச் சேர்ந்து விடுவோம்.'' தானுபாய்க்கு நம்பிக்கை பிறந்தது. ''மெதுவாய்ப் போய்ச் சேர்ந்துவிடுவோம். வீட்டுக்குப் போனதும் எல்லாம் சரியாகிவிடும். என் கிழவியும் நானுமாய்ச் சேர்ந்து உன்னை நலம் பெறச் செய்துவிடுவோம்'' என்றான். குதிரையின் உதடுகளிலிருந்து வழிந்த எச்சில் அவனுடைய நடுங்கும் கைகளில் சொட்டிற்று. அது வெதுவெதுப்பாய் இருக்கக் கண்டு அவன் மகிழ்ந்து கொண்டான்.

பிறகு லகானைக் கையில் பிடித்துக் கொண்டான்.

''புறப்படு, போவோம்! இங்கே நின்று பயனில்லை. புறப்படு!'' என்றான் உறுதியுடன்.

குலுங்கா நடையான் அங்கிருந்து நகர்ந்தது. வண்டி கிரீச்சிட்டது. சாலை வழியே சக்கரங்கள் மெள்ளத் தடதடத்தன. இருவரும் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தனர்—வயதான கிழவனும் கிழட்டுக் குதிரையும்.

''பலமெல்லாம் இழந்துவிட்டது பாவம்'' என்று எண்ணியபடி தானுபாய் சாலையின் ஓரத்தில் நடந்தான். ''குல்சாரி, உனக்கு வயது என்ன ஆகிறது? குறைந்தது இருபதாவது இருக்குமே. இல்லை, இன்னும் அதிகம் இருக்கும்...''

## 2

யுத்தம் முடிவுற்றபின் இருவரும் முதன்முதலாகச் சந்தித்தனர்.

கார்ப்பரல் தானுபாய் பக்காசவ் மேற்கிலும் பிறகு கிழக்கிலும் போர் புரிந்தான். ஜப்பான் சரணுகதியடைந்ததும் படை விலக்கம் செய்யப் பட்டான். மொத்தம் சுமார் ஆறு ஆண்டுகள் போர் வீரனுகச் சேவை புரிந்திருந்தான். பாக்கியசாலிதான், அதிக ஆபத்தில்லாமல் தப்பித்துக் கொண்டான்: தளவாடப் பிரிவில் பணி புரியும் போது ஒரு முறை குண்டு வெடிப்பதிர்ச்சியால் வீழ்த்தப்பட்டான், மறு முறை மார்பிலே காயமுற்றுவிட்டான். ஆஸ்பத்திரியில் இரண்டு மாதங்கள் இருந்தபின் மறுபடியும் தனது பழைய படைப்பிரிவிலே சேவை புரிந்தான்.

வீட்டுக்குத் திரும்புகையில் வழியில் ரயில் நிலேயங்களில் அங்காடிப் பெண்கள் அவனேக் ''கிழவரே'' என்று அழைத்தனர். வேடிக்கையாக அப்படி அழைத்தனர். தானுபாய் கோபித்துக் கொள்ளவில்லே. அவன் இளேஞனல்லதான், ஆனுல் கிழவனுமல்ல. பார்வைக்குத்தான் ஒரு மாதிரி இருந்தான். யுத்தத்திலே அடிபட்டு முகம் பழுப்பேறி முதுமைத் தோற்றமளித்தது, மீசையிலும் நரை தென்பட்டது. ஆனுல் உடலிலும் உள்ளத்திலும் இளமையின் தெம்பு நிறைய இருந்தது. ஓராண்டு ஆனபின் அவன் மனேவி முதல் மகளேயும் அதன் பின் இரண்டாவது மகளேயும் பெற்றெடுத்தாள். மகள்கள்

இருவருக்கும் ஏற்கனவே மணமாகி பிள்ளைகளும் பிறந்துவிட்டன. கோடையில் அவர்கள் அடிக்கடி பெற்றோர் வீட்டுக்கு வந்து சென்றனர். மூத்த மகளின் கணவன் லாரி டிரைவர். லாரியில் எல்லோரையும் ஏற்றிக் கொண்டு அவன் கிளம்பி விடுவான்; பெற்றோரைப் பார்ப்பதற்காக அவர்கள் மலைகளுக்கு வந்து சேர்வார்கள். தாஜுபாய்க்கும் அவன் மனைவிக்கும் தமது பெண் மக்களைப் பற்றிக் குறை எதுவும் இல்லை. ஆனால் மகன்தான் ஏமாற்றம் அளிப்பவனாக இருந்தான். ஆனால் அது வேறொரு கதை...

யுத்தம் வெற்றிகரமாக முடிவுற்றுத் தாஜு பாய் வீட்டுக்குத் திரும்பியபோது மெய்யான வாழ்க்கை இப்பொழுதுதான் தொடங்குகிறது என்ற புத்துணர்வு அவன் உள்ளத்தைப் பூரிப் படையச் செய்தது. பெரிய நிலையங்களில் எல் லாம் படையாட்களின் ரயிலை வரவேற்று வாத் தியக் குழு இசை முழங்கிற்று. வீட்டிலே அவன் மனைவி அவனுக்காகக் காத்திருந்தாள். அவர் களுடைய பையனுக்கு ஏழு வயது, விரைவில் பள்ளி செல்ல ஆரம்பித்துவிடுவான். தான் புதுப் பிறவி எடுத்திருப்பதாகவும் இது வரை நடந்தவை எல்லாம் முக்கியமல்ல என்பதாகவும் அவனுக்குத் தோன்றிற்று. நடந்தவற்றை மறந்து விட்டு இனி நடக்கப் போகிறவற்றை மட்டுமே சிந்திக்க வேண்டுமென்று விரும்பினான். வரப் போகின்ற இந்த வருங்காலம் குறித்து அவன் மனத்துள் தோன்றிய சித்திரம் தெக்கத் தெளி வாய், சிக்கல் எதுவுமின்றி எளியதாய் இருந்தது:

அவன் இனிதே வாழ்வான், குழந்தைகளே வளர்த்து ஆளாக்குவான், யாவற்றையும் பாங்குற அமைத்திடுவான், வீடு கட்டிக் கொள்வான் — சுருக்கமாய்ச் சொன்னல் சுகமாய் வாழ்வான். இனி எதுவும் குறுக்கிடாது, தடுத்து நிற்காது; ஏனெனில் இதுகாறும் நடந்தவை யாவும், இப்பொழுது மெய்யான வாழ்வு மலர வேண்டும், காலமெல்லாம் அவர்கள் எதற்காகப் பாடுபட்டு வந்தார்களோ, எதற்காக உயிரை விட்டுப் போராடி யுத்தத்தில் வெற்றி பெற்ருர்களோ அந்த வாழ்வு மலர வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காக நடந்தவைதானே.

ஆனல் தாஞபாய் அவசரக்காரன், மிதமிஞ்சிய அவசரக்காரன் என்பது தெரிய வந்தது — எப்படியென்ருல் அந்த வருங்காலத்துக்காகப் புதிய தியாகங்கள், எத்தனேயோ பல ஆண்டுகளுக்கு எண்ணரும் புதிய தியாகங்களேச் செய்ய வேண்டியிருந்தது.

ஆரம்பத்தில் அவன் ஒரு பட்டறையில் கொல்லனது சம்மட்டிக்காரனுய் வேலே செய்தான். முன்ெெருரு காலத்தில் அவன் இந்த வேலேயில் கைதேர்ந்தவனுக இருந்தான். ஆகவே திரும்பவும் அந்த பட்டறைக் கல்லின் சவாலே ஏற்றுக் காலேயிலிருந்து இரவு வரை முழு பலத்தையும் கொண்டு சம்மட்டியைச் சுழற்றியடிக்கலானுன். பழுத்துச் செவ்வொளி வீசிய இரும்பைக் கொல்லன் திருப்பிப் போடுவதற்குப் போதிய அவகாசமின்றித் திணறும்படி அவ்வளவு வேகமாக அடித்தான். தனது சம்மட்டி தாளம்

தவருமல் அடித்து எல்லாக் கவலைகளும் இன்னல்களும் மூழ்கிவிடும்படி உலைக்களம் அதிர எழுப்பிய ஒலி இன்றுங்கூட அவன் காதில் இரைந்து கொண்டிருந்தது. ரொட்டியும் துணிமணியும் தட்டுப்பாடாகி மக்கள் தவித்தனர். பெண்கள் வெறுங்காலில் ரப்பர் உறைகளைப் போட்டுக் கொண்டு நடந்தனர். குழந்தைகள் சர்க்கரையின் ருசி அறியாமலே வளர்ந்தனர். கூட்டுப் பண்ணை கழுத்தளவுக்குக் கடனில் அழுந்திக் கிடந்தது, அதன் பாங்கிக் கணக்கு முடக்கப்பட்டிருந்தது. ஆனல் தானுபாய் யாவற்றையும் தனது சுழன்று பாயும் சம்மட்டியால் ஒதுக்கித் தள்ளிவிட்டு வேலை செய்தான். ஓங்கி ஓங்கி சம்மட்டியால் அடித்தான், பட்டறைக் கல் அதிர்ந்தது, நீலத் தீப்பொறிகள் எழுந்து சிதறியோடின. "உம்-ம், உம்-ம்!" என்று உறுமிக் கொண்டு சம்மட்டியை மேலே உயர்த்திச் சுழற்றியடித்தான். "எல்லாம் சரியாகிவிடும். தலைமையான பணியை முடித்துவிட்டோம், யுத்தத்திலே வெற்றி பெற்ருேம்! வெற்றி பெற்ருேம்!" என்று எண்ணியவாறு அடித்துக் கொண்டே இருந்தான். அவனுடன் சேர்ந்து அவனுடைய சம்மட்டியும் "வெற்றி பெற்ருேம், வெற்றி பெற்ருேம்! வெற்றி-வெற்றி-வெற்றி!" என்று முழங்கிற்று. இப்படி நினைத்தது அவன் மட்டுமல்ல, எல்லோருமே அந்நாட்களில் வெற்றியுணர்வினை மூச்சாக உள்ளுக்கிழுத்து உற்சாகமடைந்தனர். உண்ணும் உணவு போல இவ்வுணர்வு அவர்களுக்குத் தெம்பூட்டிற்று.

பிறகு தாஞபாய் மந்தைக்காரஞகி மலைகளுக்குப் புறப்பட்டுச் சென்ருன். சோரோ அவஞேடு பேசி இதற்கு இணங்கும்படிச் செய்துவிட்டான். சோரோ இறந்து பல வருடங்களாகி விட்டன. அன்று அவன் தான் கூட்டுப்பண்ணையின் தலைவன். யுத்த காலம் பூராவும் அவன்தான் தலைவஞக இருந்தான். இருதய நோயாளியாதலால் அவன் இராணுவ சேவைக்கு அழைக்கப்படவில்லை. வீட்டிலே இருந்துங்கூட அவன் மிகவும் மூப்படைந்து விட்டான். யுத்தம் முடிவுற்று வீட்டுக்குத் திரும்பிய தாஞபாய் இதை உடனே காணமுடிந்தது.

உலைக்கள வேலையை விட்டுவிட்டு மந்தைக் காரஞவதற்கு வேறு யாராலும் அவனை இணங்க வைத்திருக்க முடியாது. ஆனுல் சோரோ அவனது பழம் பெரும் நண்பன். மிகப் பல ஆண்டுகளுக்கு முன்பு காம்சொமோல் இளைஞர் களாயிருந்த இவர்கள் இருவரும்தான் கூட்டுப் பண்ணையை நிறுவ வேண்டுமென்று முதன்முதல் குரல் எழுப்பியவர்கள். இருவருமாகச் சேர்ந்து குலாக்குகளை ஒழித்தனர். தாஞபாய் இதில் விசேஷ உற்சாகம் காட்டிஞன். உடைமை நீக்கப்பட வேண்டியவர்களது பட்டியலில் இருந்தோருக்கு அவன் சிறிதும் இரக்கம் காட்டவே இல்லை...

அவனை வேலை மாற்றத்துக்கு ஒத்துக் கொள்ள வைப்பதற்காகச் சோரோ உலைக்களத்துக்கு வந்திருந்தான். இந்த முயற்சியில் வெற்றி பெற்றதும் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டவஞய்த் தோன்றிஞன்.

''சம்மட்டியிடமிருந்து உன்னைப் பிரிக்கவே முடியாதென்றல்லவா அஞ்சினேன்'' என்று சோரோ சிரித்துக் கொண்டே கூறினன்.

சோரோ நோய் வாய்ப்பட்டவன், பார்க்கச் சகிக்காதபடி மெலிந்திருந்தான். அவனுடைய கழுத்து குச்சி போலிருந்தது, ஒடுங்கிய கன்னங் களில் ஆழமான மடிப்புகள் விழுந்திருந்தன. இன்னமும் வெதுவெதுப்பாகவே இருந்தது, ஆயினும் கோடையிலுங்கூட சோரோ பழைய அதே ஸ்வெட்டருடன் தான் எந்நேரமும் காணப்பட்டான்.

உலேக்களத்துக்கு அருகே ஒரு பாசனக் குட்டையின் ஓரத்தில் இருவரும் உட்கார்ந்து கொண்டு பேசினர். சோரோ இளைஞனுக இருந்தபோது எப்படிப்பட்டவனுக இருந்தான் என்பது தானுபாயின் நினைவுக்கு வந்தது. அந்தக் காலத்தில் சோரோ கண்ணுக்கினிய இளைஞனுக இருந்தவன். கிராமத்திலே அவன்தான் அதிகம் படித்தவன். அவனுடைய அமைதியான நடத் தைக்காகவும் அன்பு உள்ளத்துக்காகவும் எல் லோருக்கும் அவனைப் பிடித்திருந்தது. ஆனல் தானுபாய்க்கு அவனுடைய அன்பு உள்ளம் பிடிக்கவே இல்லை. கூட்டம் நடைபெறும்போது அடிக்கடி எழுந்து அவன் சோரோவைக் கடிந்து கொள்வான்; வர்க்கப் பகைவர்களிடம் இரக்கம் காட்டுகிறன், இது மன்னிக்க முடியாதது என்று கண்டன முழக்கம் செய்வான். அவன் பேச்சு பத்திரிகைக் கட்டுரை மாதிரியாகவே இருக்கும். வாசிப்புக் கூட்டங்களில் உரத்த குரலில் படித்துக்

காட்டப்பெற்றவை யாவற்றையும் அப்படியே மனப்பாடம் செய்தவனைப் போலப் பேசுவான். சில நேரங்களில் அவனுடைய பேச்சு அவனையே கதிகலங்கச் செய்வதாயிருக்கும். எனினும் அது கேட்பதற்குப் பிரமாதமாகவே இருந்தது.

''மூன்று நாட்களுக்கு முன்பு நான் மலைகளுக்குப் போயிருந்தேன்'' என்று சோரோ கூறினன். '''படையாட்கள் எல்லோரும் திரும்பி விட்டார்களா?' என்று கிழவர்கள் விசாரித்தனர். 'திரும்பிவிட்டார்கள், உயிர் பிழைத்தோர் எல்லோரும் வந்துவிட்டார்கள்' என்றேன். 'எப்பொழுது வேலை செய்யத் தொடங்க உத்தேசம்?' என்று கேட்டனர். 'எல்லாரும் ஏற்கெனவே வேலை செய்து கொண்டுதானே இருக்கிறார்கள், வயல் வேலைகளும் கட்டுமான வேலைகளும் செய்கிறார்களே' என்றேன். 'அது தெரியும் எங்களுக்கு. ஆனல் குதிரைகளைக் கவனித்துக் கொள்ளப் போவது யார்? நாங்கள் சாகும் வரை காத்திருக்கலாம் என்று நினைக்கிறார்கள்? எங்களுக்குக் காலம் நெருங்கிவிட்டது, அதிகம் காத்திருக்க வேண்டியிராது.' இதைக் கேட்டதும் நான் வெட்கித் தலை குனிந்துவிட்டேன். அவர்கள் கூறியதன் அர்த்தம் புரிகிறதல்லவா உனக்கு? யுத்த காலத்தில் குதிரைகளைப் பராமரிக்கக் கிழவர்களை மலைகளுக்கு அனுப்பி வைத்தோம். இன்னமும் அவர்கள் மேலே மலைகளில் தான் இருந்து வருகின்றனர். அது கிழவர்களுக்கு ஏற்ற வேலையல்ல. இடை நேரமில்லாமலே இராப் பகலாய் குதிரையிலே ஓடிக்

கொண்டிருக்க வேண்டிய ஒரு வேலே. குளிர் கால இரவுகளில் எப்படி இருக்குமென்று நினைத்துப் பார். தெர்பிஷ்பாய், நினைவிருக்கிறதா? கிழவர் குதிரை மீதிருந்தபடி குளிர் தாளாது மாண்டு விட்டார். சேனைக்குக் குதிரைகள் தேவைப்பட்ட போது மந்தையிலிருந்து பிரித்துக் குதிரைகளைப் பழக்கித் தந்தனர். அறுபது வயதுக்கு அதிகமான பின் சைத்தான் குதிரையிலே ஏறி குன்றிலும் குழியிலும் போய்ப் பார் தெரியும். உன் உடம் பிலுள்ள ஒவ்வொரு எலும்பையும் குதிரை முறிக்காது விட்டால் நீ அதிர்ஷ்டசாலிதான். நெருக்கடி காலத்தில் நிலைமையைத் தீரமுடன் சமாளித்ததற்காக அவர்களுக்கு நாம் கடமைப் பட்டவர்களாவோம். இப்பொழுது ஆட்கள் இராணுவத்திலிருந்து திரும்பி வந்துவிட்டார் கள், ஆனால் தகராறு செய்கிறார்கள். வெளிநாடு களுக்குப் போய் அறிவிலும் பண்பாட்டிலும் உயர்வு கண்டவர்கள் மந்தைக்காரர்களாவதற்கு விரும்பவில்லை. மலைகளிலே போய்க் காலத்தை வீணுக்குவதா என்கிறார்கள். அதுதான் நிலைமை. நீதான் எங்களுக்கு உதவ வேண்டும். நீ செல் வாயானால் ஏனையோரையும் நாங்கள் போகும் படிச் செய்யலாம்.''

''சரி, சோரோ. என் மனைவியிடம் இது பற்றிப் பேசுகிறேன்'' என்று சிந்தனையில் ஆழ்ந்தவனாய்த் தானபாய் பதிலளித்தான். ''இந்த ஆண்டுகளில் என்னென்னவெல்லாமோ நடைபெறக் கண்டுவிட்டோம். ஆனால், சோரோ, நீ மட்டும் அப்படியே தான் மாற்றமின்றி

இருக்கிறாய். உன்னுடைய அன்பு உள்ளம் நீ மண்ணோடு மண்ணாகும் வரை உன்னை விட்ட கலாது போலிருக்கிறது. ஒரு வேளை அதுதான் சரியானதோ என்றுகூட நினைக்க வேண்டியிருக் கிறது. யுத்தத்திலே நாம் கண்ணுற்ற பலவற் றுக்கும் பிற்பாடு நாம் எல்லோருமே அன்பு உள்ளம் கொண்டோராகவே நடந்து கொள்ள வேண்டும். வாழ்க்கையில் அதுவே பிரதான மெனச் சொல்லலாம் போலிருக்கிறது.''

அவர்களுடைய உரையாடல் அத்துடன் முடி வுற்றது. தானுபாய் உலைக்களத்துக்குப் புறப் பட்டுப் போய்க் கொண்டிருந்தபோது சோரோ அவனைக் கூப்பிட்டான்:

''தானுபாய் கொஞ்சம் இரு!'' குதிரையை அவனிடம் ஓட்டிச் சென்று தானுபாயின் முகத் தைப் பார்ப்பதற்காக ஆசனத்திலிருந்து குனிந் தான். ''உனக்கு என்மீது கோபம் இல்லையே?'' என்று மெதுவாகக் கேட்டான். ''எனக்கு நேரமே கிடைக்கவில்லை. உன்னிடம் வர வேண் டும், அந்தக் காலத்தில் பேசுவோமே அம்மாதிரி எல்லாவற்றையும் பற்றி உன்னுடன் பேச வேண் டும் என்று எவ்வளவோ விரும்பினேன். நாம் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துப் பேசி எவ்வளவோ காலமாகிறது. யுத்தம் முடிவடைந்த தும் யாவும் எளிதாகிவிடும் என்று நினைத்திருந் தேன், ஆனால் அப்படி ஒன்றும் ஆகவில்லை. சில நாட்கள் என்னால் தூங்கவே முடிவதில்லை, தொல்லைகள் அவ்வளவு அதிகமாகிவிடுகின்றன. பண்ணையைத் திரும்பவும் சரியான நிலைக்குக்

கொண்டு வந்து மக்களுக்கு உணவளித்துத் திட்டங்களை நிறைவேற்ற என்ன வழியென்று ஓயாமல் மண்டையை உடைத்துக் கொள்கிறேன். மக்கள் முன்பு போலில்லை, மாறிவிட்டனர், நன்கு வாழ வேண்டுமென விரும்புகிறார்கள்...''

இருவரும் திரும்பவும் உட்கார்ந்து உரையாட வாய்ப்பில்லாமலே காலம் உருண்டோடிவிட்டது...

சிறிது காலத்துக்கெல்லாம் தானுபாய் மந்தைக் காரனாய் மலைகளுக்குச் சென்றதும் கிழவர் தொர் கோயின் மந்தையிலே தங்க நிறப் பிடரி முடிகளையுடைய பதினெட்டு மாதச் சிவந்த மேனிக் குதிரையை முதல்'முதலாகப் பார்த்தான்.

''அக்சக்கால், எனக்கு நீங்கள் விட்டுச் செல்வது இவ்வளவுதானு? மந்தை ஒன்றும் பிரமாதமாகப் பேசக் கூடியதாக இல்லையே!'' — குதிரைகள் யாவும் எண்ணிக் கணக்கிடப்பட்டு அடைப்புக்குள்ளிருந்து வெளியே ஓட்டப்பட்டதும் தானுபாய் குத்தலாகக் கிழவரிடம் சொன்னுன்.

தொர்கோய் ஒற்றை நாடிச் சரீரமுடைய கிழவர். சுருக்கம் விழுந்த அவர் முகத்தில் சிறு பையனுடைய முகத்தில் இருப்பது போன்ற மெல்லிய சிறு முடிகளே அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்டன. மென்முடிகள் அடர்ந்த அவருடைய பெரிய ஆட்டுத்தோல் தொப்பி குடைக் காளானைப் போல அவர் தலையிலே தொத்திக் கொண்டிருந்தது. இத்தகைய கிழவர்கள் துடியானவர்களாகவும் சுடு

சொற்களை அள்ளிவீசும் வாயரட்டைகளாகவும் இருப்பதே வழக்கம்.

ஆனால் தானுபாயின் குத்தல் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளாமலே அவர் அமைதி யாகப் பதிலளித்தார்:

''சாதாரண மந்தைதான், மெச்சிப் புகழ் வதற்கு ஒன்றும் இல்லை'' என்று அமைதியான குரலில் பதிலளித்தார். ''சில நாட்களுக்கு நீ குதிரைகளை ஓட்டிச் செல்வாயானால், எல்லா வற்றையும் கண்டு கொள்வாய்.''

''சும்மா வேடிக்கைக்காகவே சொன்னேன்'' என்று தானுபாய் இதமாய்ப் பேச முயன்றான்.

''எனினும் இம்மந்தையில் சிறப்புக்குரியது ஒன்று உள்ளது.'' தொர்கோய் தமது தொப் பியைக் கண்ணிலிருந்து மேலே தள்ளிவிட்டுக் கொண்டு அங்கவடியில் உந்தி நின்றவாறு சவுக்கின் கட்டையால் சுட்டிக் காட்டினார். ''அதோ அந்தப் பொன்னிறப் பிடரி முடிகளு டைய சிவந்த மேனிக் குட்டியைப் பார், வலது பக்கமாய் ஒதுங்கி மேய்ந்து கொண்டிருக்கிறது பார்—அது சிறப்புடையதாக விளங்கும்'' என்றார்.

''பந்து போல உருண்டையாய் இருக்கிறதே, அதுவா? மிகச் சிறியதாய்க் கட்டைகுட்டை யாய் அல்லவா இருக்கிறது?''

''குளிர்காலக் குட்டி அது. கொஞ்சம் காத் திருந்து பார், எப்படிப்பட்டது என்று தெரியும்.''

''இந்தக் குட்டியிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கிறது?''

''பிறவியிலேயே அது குலுங்கா நடையான்.''

''அதனுல் என்ன?''

''இதற்கு நிகரானவற்றை நான் அதிகம் கண்டதில்லே. அந்தக் காலத்திலே இதற்கு எவ்வளவு வேண்டுமானுலும் விலே கொடுத்து வாங்கத் தயாராக இருப் பார்கள். இது போன்ற ஒரு குதிரைக்காக அன்று பந்தயங் களிலே ஒருவரையொருவர் கொன்று கொள்வார் கள்.''

''சரி, கிட்டத்திலே சென்று பார்ப்போம்!'' என்றுன் தானுபாய்.

இருவரும் தம் குதிரைகளேத் தட்டிவிட்டு, மந்தையின் முனேயைச் சுற்றிச் சென்று பொன் னிறக் குட்டியைத் தனியே பிரித்து விரட்டிக் கொண்டு சென்றனர். குட்டி ஓடத்தான் விரும் பிற்று. பிடரி முடிகளே மிடுக்காய்க் குலுக்கி ஆட்டிக் கனேத்துக் கொண்டு குலுங்கா நடை போட்டு விசைப் பொறிபோல வேகமாய் ஓட முற்பட்டது. திரும்பவும் மந்தைக்கே வந்து சேரும் வண்ணம் மிகப் பெரியதொரு அரைவட்டம் வரைந்து கொண்டு பறந்தோ டிற்று. தானுபாய் ஆனந்தமடைந்து கூச்சலிட் டான்.

''ஓகோ! ஓடுவதைப் பாருங்களேன்!''

''நான்தான் அப்பவே சொன்னேனே!'' என்று கிழவர் கூச்சலிட்டுப் பதில் கொடுத்தார்.

ஓடி விளேயாடும் குழந்தைகளேப்போல இரு வரும் குட்டியின் பின்னுல் தம் குதிரைகளே விரட்டிச் சென்றனர். அவர்களுடைய கூச்சல்

அதை உசுப்பிவிட அதன் குலுங்கா நடை மேலும் மேலும் விரைவாகிச் சென்றது. முயற்சி இல்லாமலே அனுயாசமாக ஓடிற்று. அதன் ஓட்டம் குலுங்கும் பாய்ச்சலாக மாறுது, விண் ணிலே செல்லும் புள்ளென அசங்காது பறந் தோடிற்று.

முடிவில் இருவரும் தம் குதிரைகளை நாலு கால் பாய்ச்சலில் ஓடச் செய்ய வேண்டியதாகி விட்டது. ஆனால் அந்தக் குட்டி தொடர்ந்து அதே சீரான குலுங்கா நடையில் விரைந்தோடிக் கொண்டிருந்தது.

''எப்படிப் போகிறது பார், தானுபாய்!'' என்று குல்லாயை வீசி ஆட்டியவாறு தொர் கோய் கூச்சலிட்டார். ''கை அசைவுக்கு இசை வாய் வீசிப்பாயும் வாளைப் போல, குரல் கொடுப் பதற்கு இசைவாகப் பறந்தோடுவதைப் பார் இதோ! ஏய், ஏய்! ஏய்-ய்-ஏய்!''

தங்கப் பிடரி சிவந்த மேனிக் குட்டி முடிவில் மந்தைக்குத் திரும்பி வந்து சேர்ந்ததும் இரு வரும் அதை விட்டு விலகினர். களைத்துப் போன குதிரைகளை மித நடையிலே ஓட்டிக் கொண்டு திரும்பிய அவர்கள் ஆவேசம் அடங்கி அமைதியடைய நெடு நேரமாயிற்று.

''தொர்கோய், நீங்கள் வளர்ந்துள்ள குட்டி அருமையிலும் அருமையானது! நன்றி, நன்றி! பார்க்கப் பார்க்க அங்கமெல்லாம் புல்லரிக் கிறது.''

''ஆம், அற்புதமான குதிரை'' என்றார் கிழ வர். ''ஆனால் ஒன்று'' என்று பின் தலையைச்

சொரிந்தபடி திடுமெனக் கடுமையான குரலில் கூறினர்: ''யார் கண்ணும் பட்டுவிடாமல் அதை நீ பாதுகாத்து வர வேண்டும். வேறு யாரிடத்தும் அதை விட்டு வைக்காதே. அரிய குலுங்கா நடைக் குதிரை—எழில் நங்கையைப் போன்றது. எத்தனையோ பேர் அதன்மீது கண் வைத்திருப்பார்கள். உனக்குத் தெரிந்தது தானே, நல்லவனை அடையும் பெண் நறுமலரென மலர்ந்து அனைவரையும் களிப்புறச் செய்வாள். ஆனால் தீயவனிடம் சிக்குண்டு விட்டால் அவளைப் பார்க்க நெஞ்சு பொறுக்காது. பிறகு ஒன்றும் செய்வதற்கில்லை. நல்ல குதிரையும் இதே போலத்தான். கெடுப்பது ரொம்பச் சுலபம். அரிய குதிரை சடுதியில் சீரழிந்துவிடும்.''

''அக்சக்கால், நீங்கள் கவலைப் படாதீர்கள். நான் ஒன்றும் தெரியாதவனல்ல, கவனமாகப் பார்த்துக் கொள்கிறேன்.''

''நல்லது. அதன் பெயர் குல்சாரி. நினைவில் வைத்துக் கொள்.''

''குல்சாரியா?''

''ஆம், என்னுடைய பேத்தி சென்ற கோடையில் இங்கு வந்து என்னுடன் தங்கியிருந்தாள். அவள் வைத்த பெயர். அப்பொழுது சின்னஞ் சிறு குட்டியாக இருந்தது, எந்நேரமும் அவளை விட்டுப் பிரியாது விளையாடிக் கொண்டிருக்கும். மறந்துவிடாதே: குல்சாரி.''

தொர்கோய் அலுக்காது பேசக் கூடியவர் என்பது தெரிந்தது. இரவெல்லாம் தானபாய்க்கு ஓயாது புத்திமதி சொல்லிக் கொண்டிருந்தார்.

தானுபாய் பொறுமையுடன் யாவற்றையும் கேட்டுக் கொண்டான்.

தொர்கோயும் அவர் மனைவியும் முகாமை விட்டுக் கிளம்பியபோது அவனும் சிறிது தூரம் கூடச் சென்று வழியனுப்பி வைத்தான். இது வரை அவர்கள் வசித்து வந்த ஒட்டுக் கம்பளிக் கூடாரத்தில் இனி அவனும் அவன் குடும்பத் தினரும் குடியேறிவிடுவார்கள். அவனுடைய உதவியாளனுக்காகத் தனியே ஒரு கூடாரம் இருந்தது. ஆனால் இதுவரை உதவியாளன் யாரும் கிடைக்கவில்லை. தற்போதைக்கு எல்லா வற்றையும் அவனேதான் கவனித்துக் கொண் டாக வேண்டும். விடைபெற்றுக் கொண்டு பிரியுமுன் தொர்கோய் அவனுக்கு இன்னொரு புத்திமதியையும் அளித்துவிட்டுச் சென்றார்.

''குட்டியை இப்பொழுது ஒன்றும் செய்யாதே. வேறு யாரிடமும் அதை விட்டுவிடாதே. அடுத்த வசந்தத்தில் நீயே அதை மந்தையிலிருந்து பிரித்துப் பழக்கு. கவனமாய் இதைச் செய்ய வேண்டும். முதலில் அதிகம் சவாரி செய்யாதே, இல்லையேல் நடை குலைந்து குதிரை வீணாகிவிடும். முதல் சில நாட்களுக்கு அதிகம் தண்ணீர் குடிக்காமல் பார்த்துக் கொள். அதை நன்றாகப் பழக்கியதும், நான் உயிரோடு இருந்தால், என்னிடம் கொண்டு வந்து காண்பி...''

பிறகு தொர்கோயும் அவர் கிழவியும் சாமான் களைச் சுமந்து வந்த ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டு குதிரைகளில் சென்றனர். மந்தை யையும் கூடாரத்தையும் மலைகளையும் தானுபா

யிடம் விட்டுச் சென்றனர்...

ஆனால் குல்சாரி தன்னைப் பற்றி எவ்வளவு எல்லாம் பேச்சு அடிபடுகிறது, இனியும் அடிபடப் போகிறது, இதன் விளைவுகள் எப்படியிருக்கும் என்பது எதுவுமே தெரியாமல் ஓடித் திரிந்து கொண்டிருந்தது!..

எப்பொழுதும் போல மந்தையுடன் சேர்ந்து சுதந்திரமாய் ஓடிக் கொண்டிருந்தது. எதுவும் மாறிவிடவில்லை. மலைகள், புல்வெளிகள், அருவிகள்—யாவும் அப்படியேதான் இருந்தன. பழைய கிழவருக்குப் பதிலாக இப்பொழுது ஒரு புதிய எஜமானன் மந்தையைக் கவனித்துக் கொண்டான். பட்டாளத்துப் பெருங் கோட்டும் ரோமக் குல்லாயும் போட்டிருந்தான். புதிய எஜமானனுடைய குரல் கரகரப்பாக இருந்தது, பலமாகவும் கண்டிப்புடனும் ஒலித்தது. மந்தைக்கு விரைவில் அவன் பழக்கப்பட்டவனாகி விட்டான். அவன் குதிரையில் என்னதான் மந்தையைச் சுற்றிப் பாய்ந்தோடி விரட்டினாலும் மந்தைக் குதிரைகள் அதைப் பற்றிக் கவலைப் பட்டுக் கொள்ளவில்லை.

பிறகு வெண்பனி பெய்ய ஆரம்பித்தது. அடிக்கடி பெய்தது. நெடுநேரம் உருகாமல் தரை முழுதும் மூடிக் கொண்டுவிட்டது. குதிரைகள் பாதத்தால் கிளறிவிட்டுப் புல் மேய வேண்டியிருந்தது. குளிர் காற்றிலே எஜமானனின் முகம் கடுகடுப்பாயிருந்தது. கைகள் பழுப்பேறியிருந்தன. இப்பொழுது ஒட்டுக் கம்பளி பூட்சும் ஆட்டுத்தோல் கோட்டும் போட்டிருந்தான்.

குல்சாரியின் முடிகள் வளர்ந்துவிட்டன, ஆயினும் குளிரில், முக்கியமாய் இரவுகளில் அதற்கு அங்க மெல்லாம் நடுங்கிற்று. கடுங் குளிர் இரவுகளில் மறைவான ஒதுக்கிடத்தில் குதிரைகள் ஒன்ரோ டொன்று ஒண்டிக் கொண்டு, விடியும் வரை அசைவற்று நின்றன. உறைபனியிலே அவை வெள்ளை வெளேரென்ருகிவிடும். எஜமானன் குதிரை மீது அவற்றின் பக்கத்திலேதான் இருந்து வந்தான். உரையிட்ட கைகளைத் தேய்த்து முகத்திலே ஒத்திக் கொண்டிருந்தான். இடையிடையே மறைந்துவிடுவான், பிறகு திரும்பி வருவான். அருகே அவன் இருக்கையில் குதிரைகளுக்குப் பாதுகாப்பாக இருக்கும். கூச்சலிடுவான், அல்லது குளிரில் இறுமிக் கொள் வான். உடனே குதிரைகள் தலையை உயர்த்திக் காதுகளை நிமிர்த்திக் கொண்டு பார்க்கும், அருகில் அவன் இருப்பதைக் கண்டதும் திரும் பவும் அடங்கி இரவுக் காற்றின் சலசலப்பையும் முனகலையும் கேட்டபடிக் கண்ணுறங்கிவிடும். அந்தக் குளிர் காலம் முதலாகத் தானுபாயின் குரலைக் குல்சாரி அடையாளம் கண்டு கொள்ளத் தெரிந்துகொண்டுவிட்டது. அதன்பின் எந்நாளும் அக்குரலை அது மறக்கவே இல்லை.

ஓர் இரவில் மலைகளில் கடும் பனிப்புயல் வீசிற்று. கடுக்கும் குளிர்ந்த வெண்பனி குதிரை களின் பிடரி முடிகளில் ஒட்டிக் கொண்டு நின் றது, அவற்றின் வால்களைக் கனக்கச் செய்தது, கண்களை வருத்திற்று. மந்தை இருப்புக் கொள் ளாமல் தவித்தது. குதிரைகள் நடுங்கிய

வண்ணம் மேலும் நெருக்கமாய் ஒண்டிக் கொண் டன. கிழத் தாய்க் குதிரைகள் பரபரப்புற்றுக் கனைத்துப் பச்சிளங் கன்றுகளை மந்தையின் நடுப் பகுதிக்குள் தள்ளி விட்டன. குல்சாரியை அவை ஓரத்துக்குத் தள்ளிச் சென்றுவிட்டன. மந்தையின் மையப் பகுதிக்கு அதனால் திரும்பி வர முடியவில்லை. உதைத்தும் முண்டிக் கொண் டும் உள்ளே சென்றுவிடலாமென்று பார்த்தது. ஆனால் முற்றிலும் வெளியே தள்ளப்பட்டுவிட் டது. முடிவில் மந்தையின் பொலி குதிரையிடம் சிக்கிக் கொண்டது. சிறிது நேரமாய்ப் பொலி குதிரை மந்தையைச் சுற்றி ஓடி, வலுவான தன் குளம்புகளால் வெண்பனியைக் கிளறிப் புரட்டி மந்தையை மேலும் நெருக்கமாம் ஒன்று சேரச் செய்து கொண்டிருந்தது. இடையில் சில நேரங்களில் அச்சுறுத்தும் பாவனையில் தலையைத் தணித்துக் கொண்டு காதுகளைப் பின்புறம் சாய்த்தபடி எங்கோ பாய்ந்தோடி இருட்டிலே மறைந்துவிடும். அதன் கனைப்புங்கூட காதுக்கு எட்டாதபடி தொலைவுக்கு ஓடிவிடும். பிறகு கடுஞ் சீற்றம் கொண்டதாகத் திரும்பி ஓடிவரும். குல்சாரி தனியே நின்றதைக் கண்ட பொலி குதிரை அதனிடம் பறந்தோடி திடு மெனத் திரும்பிப் பயங்கரமாய் அதன் விலா விலே உதைத்தது. வலிதாங்காமல் குல்சாரி திக்குமுக்காடிற்று. அதனுள் ஏதோ வெடித்து நொறுங்கிவிட்டது போலிருந்தது. கீச்சுக் குரலில் கத்திவிட்டுக் குப்புற விழப் பார்த்தது. இதன் பின் அது சுயேச்சையாய் விலகி நிற்க முயலாது

பணிவுடன் மந்தையின் ஓரத்தில் ஒண்டிக் கொண்டு நின்றது. விலாப் பக்கத்தில் வலி பொறுக்க முடியவில்லை, இதென்ன அநியாயம் என்று அது நெஞ்சு பொறுமிற்று. குதிரைகள் அமைதியாய் நின்றன. பிறகு குல்சாரி தொலை விலே நெடுநேர ஊளை ஒலிக்கக் கேட்டது. அதற்குமுன்பு ஓநாயின் ஊளையை அது கேட்ட தில்லை. கணப் பொழுதுக்கு யாவும் ஒடுங்கி உறைந்துவிட்டது போலிருந்தது. மந்தை துணுக் குற்று விறைத்து நின்று காது கொடுத்துக் கேட்டது. எங்கும் அமைதி நிலவிற்று. அச்சம் தரும் மயான அமைதி. வெண்பனி பெய்து கொண்டிருந்தது. குல்சாரியின் உயர்த்திய தலையிலே வெண்பனி ஒட்டிக் கொண்டு சலசலத் தது. எஜமானனை எங்கே காணோம்? அந்த நேரத்தில் மந்தைக்கு அவன் மிகவும் தேவைப் பட்டான். குதிரைகள் அவனுடைய குரலைக் கேட்குமாயின், அவன் கோட்டின் புகைநெடியை முகருமாயின் எவ்வளவு தெம்பாயிருக்கும்! ஆனால் அவனை அங்கே காண முடியவில்லை. குல்சாரி கண்களை உருட்டி விழித்தது; அச்சத்தில் கல்லாய்ச் சமைந்து நின்றது. ஒரு நிழல் பாய்ந் தோடிற்று, இருளில் வெண்பனியிலே மறைந் தோடிற்று. குல்சாரி பின்பக்கம் தாவிற்று. மந்தை மிரண்டு ஓடிற்று. ஆவேசமாய்க் கனைத் தவாறு இருளின் கருமையில் குதிரைகள் விழுந் தடித்துக் கொண்டு ஓடின. அந்நேரத்தில் எந்த சக்தியாலும் அவற்றைத் தடுத்து நிறுத்தியிருக்க முடியாது. எங்கும் நிற்காமல் யாவும் பாய்ந்

தோடின. மலையிலே நிலச்சரிவின் போது கீழே பாய்ந்து விழும் கற்களைப் போல ஒன்றை யொன்று தள்ளியடித்துக் கொண்டு பறந்தோ டின. குல்சாரிக்கு ஒன்றும் புரியவில்லை, ஆவே சமான இந்தப் பயங்கரப் பந்தயத்தில் அதுவும் சேர்ந்து கொண்டு ஓட்டமாக ஓடிற்று. திடுதிப் பென துப்பாக்கி வெடி முழங்கிற்று, பிறகு இன்னொரு வெடி. பாய்ந்தோடிய குதிரைகளுக்கு எஜமானனின் சீற்றக் கூச்சல் கேட்டது. பக்க வாட்டிலிருந்து வந்த அந்தக் கூச்சல், பிற்பாடு மந்தையைக் கடந்து சென்று இப்பொழுது முன்புறத்திலிருந்து ஒலிக்கத் தொடங்கிற்று. ஓயாது கேட்ட அந்தக் கூச்சலை எட்டிப் பிடிக்கும் பொருட்டு குதிரைகள் வேகமாக ஓடின. எஜமானன் தம்முடன்தான் இருக்கிறான், யாவருக்கும் முன்னால் குதிரையில் பாய்ந்தோடிச் செல்கிறான். குன்று முனையிலிருந்து கீழே விழும் அபாயம் ஒவ்வொரு அடியிலும் அவனை எதிர் நோக்கிற்று. இப்பொழுது அவனுடைய குரல் பலவீனமாய் ஒலித்தது. பிறகு கரகரப்பாகிவிட் டது. ஆயினும் தொடர்ந்து அவன் கூச்சலிட் டான்: ''ஓய், ஓய், ஓ-ஓ-ய்!'' குதிரைகள் தம்மைத் துரத்தி வந்த பீதியிடமிருந்து பறந் தோடி மந்தைக்காரனின் குரலைப் பின்தொ டர்ந்து சென்றன.

பொழுது புலர்வதற்குள் தானபாய் மந்தையை ஒதுக்கிடத்துக்குத் திருப்பியழைத்து வந்துவிட் டான். இவ்விடத்தை வந்தடைந்ததும் குதிரை கள் நின்றன. அவற்றிடமிருந்து அடர்த்தியான

முகில் போல ஆவி எழுந்தது. விலாப்புறங்கள் புடைத்தெழுந்து தணிந்தன. இன்னும் அவை அச்சத்தால் நடுங்கிக் கொண்டுதான் இருந்தன. சூடேறிய உதடுகளால் வெண்பனியைக் கவளம் கவளமாய்க் கவ்விக் கொண்டன. தானுபாயும் வெண்பனியைத் தின்றான். குத்திட்டு உட் கார்ந்து ஜில்லிட்ட வெண்பனியைக் கை நிறைய அள்ளினான். பிறகு முகத்தைக் கைக்குள் புதைத்துக் கொண்டு அசையாமல் அப்படியே உட்கார்ந்திருந்தான். இனியும் வெண்பனி மிருது வாய் விழுந்து கொண்டுதான் இருந்தது. குதிரை களின் சூடான முதுகுகளில் உருகி அழுக்கேறிய மஞ்சள் துளிகளாய் விலாப் புறங்களில் உருண் டோடிற்று...

ஆழ்ந்த வெண்பனி உருகி தரை வெளிப் பட்டுப் பசுமை பெற்றது. குல்சாரி விரைவில் பொருத்து வளரத் தொடங்கிற்று. எல்லாக் குதிரைகளும் மயிர் உதிர்த்துப் பளபளக்கும் புது மேனி பெற்றன. குளிர் காலமும் அதன் இன்னல்களும் இப்பொழுது வெறும் புரட்டு போலத் தோன்றின. குதிரைகள் அவற்றை மறந்துவிட்டன; ஆனால் மனிதன் மறக்கவில்லை. கொடுங் குளிரும் ஓநாய்கள் ஊளையிட்ட இரவு களும் அவன் நினைவை விட்டகலவில்லை. குதிரை யில் அமர்ந்திருக்கையில் கைகால்கள் மரத்துப் போனதையும், சில நேரங்களில் வாய் விட்டுக் கதறாமல் கட்டுப் படுத்திக் கொள்ளும் பொருட்டு உதட்டைக் கடித்துக் கொண்டதையும், உறைந்து

உணர்ச்சியற்றுவிட்ட கைகளையும் கால்களையும் கணப்புத் தீயிலே கதகதப்பாக்கிக் கொண்டதையும் அவன் மறந்துவிடவில்லை. புலிக்குக் கவசமிட்டு மூடிய பனிக்கட்டியை வசந்தத்தில் நினைத்துக் கொண்டான். சோனிக் குதிரைகள் இறந்துவிட்டதையும், பிறகு பண்ணை அலுவலகத்தில் பார்வையைக் கவிழ்த்துக் கொண்டு நஷ்டங்களைக் குறிப்பெழுதிக் கையெழுத்திட்டதையும் நினைத்துப் பார்த்தான். கையெழுத்திட்டதும் கோபம் பொங்கியெழக் கையை ஓங்கிக் கூட்டுப் பண்ணைத் தலைவனுடைய மேஜையிலே குத்திக் கூச்சலிட்டதும் அவன் நினைவுக்கு வந்தது:

''என்னை அப்படிப் பார்க்காதே! நான் ஒன்றும் நாஜியல்ல! மந்தைகளுக்கு வேண்டிய களஞ்சியங்கள் எங்கே, சொல்லு! தீவனமும் ஓட்சும் எங்கே? உப்பு எங்கே? எங்களுக்கு அங்கே என்ன இருக்கிறது, காற்றைத் தவிர? பண்ணையை நாம் நிர்வகிக்கும் அழகைப் பார்! நாங்கள் உடுத்தியுள்ள கந்தல்களைப் பார்! எங்கள் கூடாரங்களைப் பார்! எப்படி வாழ்கிறோம், வந்து பாரேன்! ரொட்டி கூட எங்களிடம் போதிய அளவு இல்லை. போர் முனையிலேகூட இதைக் காட்டிலும் நூறு மடங்கு நன்றாய் இருந்ததே. நீ இங்கே உட்கார்ந்து கொண்டு, ஏதோ நான்தான் அந்தக் குதிரைகளைக் கொன்றது மாதிரி என்னைப் பார்க்கிறாய்!''

பண்ணைத் தலைவனுடைய வேதனைமிக்க மௌன

னமும் வெளிறிய முகமும் அவன் நினைவுக்கு வந்தன. தனது ஆத்திரக் கூச்சல் குறித்து தான் வெட்கமடைந்ததும், பிறகு மன்னிப்புக் கேட்க முயன்றதும் தானுபாயின் மனக் கண் முன்னே தெரிந்தன.

''பொறிந்து தள்ளிவிட்டேன். இதை மனதில் வைத்துக் கொள்ளாதே. என்னை மன்னித்து விடு'' என்று முணுமுணுத்தான்.

''நீ தான் என்னை மன்னிக்க வேண்டும்'' என்றான் சோரோ.

பிறகு தானுபாய் மேலும் சங்கடப்பட வேண்டியதாயிற்று. பண்ணையின் தலைவன் உணவுப் பொருட் காப்பாளனைக் கூப்பிட்டு, ''தானு பாய்க்கு ஐந்து கிலோ மாவு கொடு'' என்றான்.

''குழந்தைகள் கின்டர் கார்டன் என்னுவது?''

''எந்தக் கின்டர் கார்டன்? ஒரு தரம் சொன்னதும் புரிந்து கொள்ள மாட்டேன் எனகிறாயே நீ! தானுபாய்க்கு ஐந்து கிலோ கொடுக்கச் சொன்னேன்!''

தானுபாய் வேண்டாமென்று மறுக்கவே விரும்பினான். சீக்கிரத்தில் தாய்க்குதிரைகளிடம் பால் கறக்க ஆரம்பித்து விடுவோம், குமிஸ்° கிடைக்கும் என்று சொல்ல நினைத்தவன், பண்ணைத் தலைவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு அது உண்மையல்ல என்பதை உணர்ந்து கசப் புற்றவனாய்த் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு மௌனமாயிருந்து விட்டான். அந்த மாவி

° குமிஸ் என்பது குதிரையின் பால். — ப-ர்.

லிருந்து தயாரிக்கப்பட்ட சேமியாக் கஞ்சியைச் சாப்பிட முற்பட்ட ஒவ்வொரு தரமும் சூடு பொறுக்க மாட்டாமல் கறண்டியைக் கிண்ணத்திலே போட்டுவிட்டு, ''கொதிக்கக் கொதிக்கக் கொடுத்து என் வாயைப் பொசுக்கவா விரும்புகிறாய்?'' என்று கத்துவான்.

''வாயால் ஊதிச் சூடு குறைந்ததும் சாப்பிடேன். சின்னக் குழந்தையா நீ?'' என்று அவன் மனைவி அமைதியாக பதில்ளிப்பாள்.

ஆம், யாவும் அவன் நினைவுக்கு வந்தன...

பிறகு மே மாதம் பிறந்தது. இளங் காளைகள் மகிழ்ச்சிக் கனைப்பொலி எழுப்பி ஓடின. ஆவேசமாக ஒன்றன்மீது ஒன்று பாய்ந்து மோதிக் கொண்டன. பிற மந்தைகளிலிருந்து இளம் பெண் குதிரைகளை இழுத்து வந்தன. மந்தைக்காரர்கள் சீற்றங்கொண்டு அங்குமிங்கும் ஓடினர், போராடிய காளைகளை விலக்கி விட்டுவிட்டு ஒருவரையொருவர் ஏசிக் கொண்டனர், சில நேரங்களில் பேச்சுத் தடித்துக் கைகலப்பாகிச் சாட்டைகளால் ஒருவரையொருவர் விளாசிக் கொள்ளும் அளவுக்குப் போய்விடும். குல்சாரி கவலையற்று ஓடித் திரிந்தது. தூறல்களுக்கிடையே கதிரவன் ஒளி வீசினான். காலுக் கடியில் பசும் புல் வளர்ந்து உயர்ந்து வந்தது. புல்வெளிகள் கண்ணைப் பறிக்கும்படி பச்சைப் பசேலெனப் பளிச்சிட்டன. அவற்றுக்கு மேல் பனி முடி தரித்த மலைகள் வெள்ளொளி விட்டுப் பளபளத்தன. பொன்னிறப் பிடரி முடி, சிவந்தமேனிக் குலுங்கா நடையான் அந்த

வசந்தத்தில் அதன் மிக இனிய காளைப் பருவத்தை வந்தடைந்தது. பொசுபொசுப்பான உருண்டை வடிவத்திலிருந்த கன்று வளர்ந்து வனப்புமிக்க மெல்லுருப் பெறலாயிற்று. உயரமாய் வளர்ந்துவிட்டது. கழுக்கு மொழுக்கென்றிருந்த திரட்சி மறைந்து அகன்ற மார்பும் மெல்லிய இடையும் பெற்று அதன் உடல் முக்கோண வடிவமுடையதாயிற்று. அமைச்சலான மெலிந்த உரு, வில்போல் வளைந்த மூக்கு, விலகி விரிந்த மைந்த கண்கள், உறுதிவாய்ந்த உதடுகள்—இவற்றுடன் அதன் தலை இப்பொழுது மெய்யான குலுங்கா நடையானுக்குரிய வடிவம் பெற்றுவிட்டது. ஆனால் குல்சாரி இதையெல்லாம் இலட்சியம் செய்வதாயில்லை. அடங்காத ஒரேயொரு மோகம் அதனை ஆட்டிப் படைத்தது. இதனால் அதன் எஜமானனுக்கு ஏற்பட்ட தொல்லை கொஞ்சநஞ்சமல்ல. ஓட்டப் பந்தயத்திலே அதற்கு அப்படி ஒரு மோகம். ஏனைய இளங் குதிரைகளைத் தன் பின்னால் ஓடி வரும்படிக் கவர்ந்திழுத்துக் கொண்டு அது பொன்னிற வால் நட்சத்திரமெனக் காற்றைக் கிழித்துக் கொண்டு பறந்தோடும். யாரும் அறியாத ஒரு சக்தி அதை ஓயாது ஓடச் செய்தது—குன்றிலும் குழியிலும் ஆற்றின் பாறைக் கரைகளிலும் செங்குத்தான பாதைகளிலும் மலைப் பிளவுகளிலும் ஓடிக் கொண்டே இருக்கச் செய்தது. இரவில் விண்மீன்கள் பதித்த வானத்துக்கு அடியில் தூங்கும்பொழுது அது காணும் கனவுகளிலும்கூட குளம்புகளுக்கடியில் தரை

பறந்தோடிக் கொண்டும், அதன் பிடரி முடிகளிலும் காதுகளிலும் காற்று சீட்டியடித்துக் கொண்டும், குளம்புகள் படபடத்து ஒலித்துக் கொண்டும் இருக்கும்.

எஜமானனிடம் அதற்கிருந்த மனப்பாங்கு நேரடியாய் அதனுடன் சம்பந்தப்படாத ஏனைய எல்லா விவகாரங்களிலும் எப்படியோ அதே போலவே இருந்தது: அவனிடம் அதற்கு விசேஷ விருப்பும் இல்லை, அதே போதில் எந்தப் பகைமையுணர்வும் இல்லை. ஏனெனில் தானுபாய் எவ்விதத்திலும் அதன் குறுக்கே நிற்கவில்லை. அதிகம் போனால் எப்பொழுதாவது கடிந்து கொள்வான், இளங் குதிரைகள் நெடுந் தொலைவு விலகிச் சென்று அவன் விரட்டிக் கொண்டு ஓடி வர நேரும் போது இரைவான். சில நேரம் எஜமானன் சுருக்குக் கயிறு கட்டிய தனது கோலால் சிவந்த மேனிக் குலுங்கா நடையானின் பிட்டத்தில் சுரீரென அடிப்பான். வலியைக் காட்டிலும் அதிகமாக வியப்பின் காரணமாக குல்சாரி வெலவெலத்துப் போய்விடும். உடனே அதன் குலுங்கா நடையின் வேகமும் அதிகரித்து விடும். மந்தைக்குத் திரும்புகையில் அதன் வேகம் அதிகரிக்கும் அளவுக்கு அதன் எஜமானனும் ஆனந்தப்பட்டுக் கொள்வான். சுருக்குக் கயிற்றுக் கோலை ஏந்திப் பிடித்துக் கொண்டு அதன்கூடக் குதிரையிலே ஓடோடி வரும் அவன் அதற்கு ஊக்கமூட்டும் பொருட்டு எழுப்பிய ஆனந்தக் குரலைக் கேட்டபடி குல்சாரி ஓடிச் செல்லும். அவன் பாடத் தொடங்குவதும்

அதன் காதில் ஒலிக்கும். இது போன்ற நேரங்களில் எஜமானன் அதற்கு மிகவும் பிடித்த வஞ்கி விடுவான். அவனுடைய பாட்டுக்கு ஏற்ப நடை போட்டு ஓடி அது மட்டற்ற மகிழ்ச்சியடையும். பிற்பாடு அதற்கு இந்தப் பாட்டுகள் நன்கு பழக்கமாகிவிட்டன. பலவகையான பாட்டுகளையும் பாடுவான்: இன்பகரமானவை, துன்பத்தில் தோய்ந்தவை, நீண்டவை, சிறியவை, சொற்களுடைத்தவை, சொற்களில்லாதவை இப்படி விதவிதமான பாட்டுகள் அவை. எஜமானன் மந்தைக்கு உப்பு அளித்திடும் நேரங்களிலும் குல்சாரிக்கு அவனை மிகவும் பிடித்திருக்கும். நீளமான மரத் தொட்டிகளில் தாறுமாய் உப்புக் கட்டிகளை வீசி எறிவான். மந்தைக் குதிரைகள் அடித்து மோதிக் கொண்டு ஓடிவரும். உப்பு என்றால் அவற்றுக்கு உயிர்தான். உப்பை நக்கிச் சுவைத்து கொண்டு நின்ற நேரத்தில்தானே குல்சாரி சிக்கித் தவிக்க நேர்ந்தது?

ஒரு நாள் எஜமானன் காலி வாளியைத் தட்டித் தாளம் எழுப்பி ''ஓய், ஓய், ஓய்!'' என்று குதிரைகளைக் கூவியழைத்தான். தொட்டிகளை நோக்கி அவை விரைந்தோடி வந்தன. பிற குதிரைகளுடன் சேர்ந்து குல்சாரியும் உப்பை நக்கிக் கொண்டு நின்றது. எஜமானனும் அவன் உதவியாளனும் சுருக்குக் கயிற்றுக் கோல்களை ஏந்தியபடி நெருங்கிவந்தது குறித்து அது சிறிதும் கவலைப்பட்டுக் கொள்ளவில்லை. குல்சாரியுடன் சம்பந்தப்படாத காரியம்

அது. சேணமிட்ட குதிரைகளேயும் கறவைக் குதிரைகளேயும் பிடித்துச் செல்லவே அவர்கள் இந்தக் கோல்களேப் பயன்படுத்தி வந்தனர், ஒரு நாளும் தன்னேப் பிடித்துச் சென்றதில்லே. அது எப்பொழுதும் சுதந்திரமாய் ஓடித்திரிந்து கொண்டுதான் இருந்தது. திடீரென இப்பொழுது குதிரை முடிச் சுருக்கு அதன் தலேயில் மாட்டப் பெற்று கழுத்திலே தொங்கிற்று. என்ன நடைபெறுகிறது என்பதை குல்சாரி இன்னும் புரிந்து கொள்ளவில்லே. சுருக்குக் கயிறு அதை அச்சமடையச் செய்யவில்லே. ஆகவே தொடர்ந்து அது உப்பை நக்கிக் கொண்டு நின்றது. பிற குதிரைகளாயிருப்பின் தலேயிலே சுருக்கை மாட்டியதும் துள்ளிக் குதித்து எகிறும். ஆனல் குல்சாரி அசையாது அசங்காது நின்றது. முடிவில் அதற்குத் தாகமெடுக்கவே ஆற்றுக்குப் போய்த் தண்ணீர் குடிக்க விரும்பிற்று. ஏனேய குதிரைகளிடமிருந்து முண்டிக் கொண்டு விலகி வர முயன்றது. சுருக்கு அதன் கழுத்தில் இறுகி அது துணுக்குற்று நிற்கும்படி வெடுக்கென இழுத்தது. இதன்முன் என்றுமே இது போன்ற ஒன்று அதற்கு நிகழ்ந்ததே இல்லே. குல்சாரி முண்டிக் கொண்டு இழுத்துவிட்டுக் கனேத்தது, விழிகளே உருட்டிப் பார்த்தது, பிறகு எகிறியது. மற்ற குதிரைகள் சிதறியோடின. இப்பொழுது அது தன்னேச் சுருக்கிலே சிக்க வைத்தவர்கள் நேரே தன் எதிரே நிற்பதைக் கண்டது. எஜமானன் முன்னல் நின்முன், அவன் உதவியாளன் பின்புறத்தில் இருந்தான். பிற மந்தைக்

காரர்களுடைய சிறுவரும் சிறுமியரும் அவர் களைச் சுற்றிலும் காணப்பட்டனர். அண்மையில் தான் இவர்கள் மந்தை முகாமுக்கு வந்திருந் தனர். நாள் முழுதும் இச்சிறுவர்கள் மந்தை யைச் சுற்றிக் குதிரைகளில் பாய்ந்தோடி ஓயாமல் தொல்லை செய்து வந்தனர்.

குலுங்கா நடையான் அரண்டுவிட்டது. மீண் டும் மீண்டும் எகிறியது. கதிரவன் அதன் முன்னால் சுழன்று ஆடி எரியும் வட்டங்களாய்ப் பிளந்து பிரிந்து சென்றான். மலைகளும் பூமியும் சுற்றிலும் கூடியிருந்தோரும் குலுங்கி ஆடிக் கீழே விழக்கண்டது. அச்சமூட்டும் பயங்கர இருள் தன்னைச் சூழ்ந்து கொண்டு விட்டது போலிருந்தது. முன்னங் கால்களால் அதை உதைத்து விரட்ட முயன்றது.

எவ்வளவுதான் திமிறிய போதிலும் அதன் கழுத்திலிருந்த சுருக்கு மேலும் மேலும் இறு கித்தான் சென்றது. மூச்சுத் திணறிய குல்சாரி அந்த ஆட்களிடமிருந்து விலகி ஓடும் முயற் சியை விட்டு விட்டு, நேரே அவர்கள் மீது பாய்ந்தது. அவர்கள் சிதறியோடினர்; கணப் பொழுதுக்குக் கழுத்துச் சுருக்கு தளர்ந்தது. தனக்குச் சுருக்கிட்டவர்களைக் கீழே தள்ளித் தரையிலே இழுத்துச் சென்றது குல்சாரி. பெண் கள் கூச்சலிட்டுக் கத்திச் சிறுவர்களைக் கூடாரங் களுக்குள் விரட்டினர். விழுந்தவர்கள் உருண்டு புரண்டு எழுந்ததும் குல்சாரியின் கழுத்திலே திரும்பவும் சுருக்கு இறுகிவிட்டது. இம்முறை குல்சாரி மூச்சு விட முடியாதபடி அவ்வளவு

பலமாகச் சுருக்கு அதன் கழுத்தை நெரித்தது. மூச்சுத் திணறிப் போய்த் தலே கிறு கிறுக்க குல்சாரி அப்படியே நின்றுவிட்டது.

எஜமானன் கயிற்றைப் பிடித்துக் கொண்டு பக்கவாட்டிலிருந்து அதனே நெருங்கி வந்தான். குல்சாரி விழிகளே உருட்டி அவனேப் பார்த்தது. அவன் ஆடைகள் கிழிந்திருந்தன, முகத்தில் காயம் பட்டிருந்தது. ஆயினும் அவன் கண் களில் கோபக் குறி இல்லே. பெருமூச்சு விட்டுக் காயமுற்ற உதடுகளேச் சப்பிக் கொண்டு அவன் இதமாய்க் கூறினன்:

''குல்சாரி, நீ அப்படியே நில். தம்பி, நீ பயப்படாதே!''

அவனுடைய உதவியாளன் கயிற்றை இழுத்துப் பிடித்துக் கொண்டு எச்சரிக்கையுடன் அவன் பின்னல் வந்தான். முடிவில் எஜமானன் கையை நீட்டிக் குலுங்கா நடையானின் தலேயைத் தட்டிக் கொடுத்தவாறு பின்புறம் திரும்பாமலே அவசரமாய்க் கேட்டான்:

''கடிவாளக் கயிறு!''

உதவியாளன் கடிவாளக் கயிற்றை அவனிடம் கொடுத்தான்.

''அசையாதே, தம்பி, அப்படியே நில்'' என்று சொல்லி எஜமானன் குல்சாரியின் கண்களேக் கையால் மறைத்துக் கொண்டு கடிவாளக் கயிற்றை அதன் தலேயில் மாட்டினன்.

இனி அதன் வாயில் கடிவாள இரும்பைப் பொருத்திவிட்டுச் சேணமிட வேண்டியதுதான் பாக்கி. தலேயில் கடிவாள வாரை மாட்டியதும்

குல்சாரி பலமாய்க் கனைத்துவிட்டு வாரிலிருந்து தலையை உலுக்கியெடுக்க முயன்றது. ஆனால் அதன் எஜமானன் உடனே அதன் மேல் உதட்டைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டுவிட்டான்.

''முறுக்கி! முறுக்கி!'' என்று உதவியாளனிடம் கத்தினான். உதவியாளன் ஓடி வந்து முரட்டுத்தோல் முறுக்கியை குல்சாரியின் மேல் வாயில் மாட்டி அதனுள் ஒரு கம்பை வைத்துச் சுற்றி முறுக்கத் தொடங்கினான்.

வலி தாங்காமல் குலுங்கா நடையான் பின்னங் கால்களில் அமர்ந்து கொண்டுவிட்டது. அதன்பின் அது எதிர்ப்புக் காட்டவே இல்லை. ஜில்லிட்ட இரும்புத் துண்டு அதன் பற்களுக்கிடையில் கடகடத்தது. முடிவில் அது வாயின் கோடியில் இறுத்திப் பொருத்தப்பட்டது. அதன் முதுகிலே எதையோ வைத்து இழுத்துக் கட்டினர். அதன் நெஞ்சு வார்களால் இறுக்கப்பட்டது. வலப்புறமாகவும் இடப்புறமாகவும் அதைக் கீழே சாய்த்துத் தள்ளினர். ஆனால் குல்சாரி அதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளவில்லை. வாயில் துடித்தெழுந்த பொறுக்க முடியாத வலி வேறு எதையுமே அது கண்டுகொள்ள முடியாதபடிச் செய்துவிட்டது. அதன் விழிகள் பிதுங்கிக் கொண்டு வெளியே வந்துவிடும் போலிருந்தன. அதனால் அசையவும் முடியவில்லை, மூச்சுவிடவும் முடியவில்லை. அதன் எஜமானன் எப்பொழுது, எப்படி அதன் முதுகில் ஏறிச் சேணத்தில் அமர்ந்தான் என்பதைக்கூட

அது கவனிக்கவில்லை. வாயிலிருந்து முறுக்கி கழற்றியெடுக்கப்பட்ட பிறகே அதற்கு நிதானம் திரும்பிற்று.

வார்களால் இழுத்துக் கட்டப்பெற்று முதுகிலே சுமை அழுத்தி இருந்த இரண்டொரு கணங்களுக்கு அது மதி மயங்கிய நிலையில் அங்கே நின்றது. பிறகு விழிகளை உருட்டிப் பின்புறம் பார்த்த போது தன் முதுகிலே ஓர் ஆள் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அது மிரண்டு ஓட முயன்றது. ஆனால் கடிவாள இரும்பு அதன் வாயைக் கிழித்துவிடும் போலிருந்தது, முதுகிலிருந்த ஆளின் பாதங்கள் அதன் விலாப் புறங்களில் அழுத்திக் குத்தின. குலுங்கா நடையான் எகிறித் தாவிற்று, கொடுங்கோபங் கொண்டு கனைத்தது, துள்ளிக் குதித்துப் பின்னங் கால்களால் எட்டி உதைத்தது. துடி துடித்து முதுகிலிருந்த சுமையைத் தூக்கியெறிய முயன்று தாவிப் பாய்ந்தது. இதற்குள் இன்னொரு குதிரை மீது ஏறிக் கொண்டுவிட்ட உதவியாளன் கயிற்று முனையை கெட்டியாகப் பிடித்துக் கொள்ளவே அதன் தலை பலமாக இழுக்கப்பட்டது. பிறகு குல்சாரி வட்டமாக அவனைச் சுற்றித் தவ்வி யோடத் தொடங்கிற்று. வட்டம் விரைவில் முடிவுற்றுவிடும், பிறகு நேரே பாய்ந்தோடி விடலாம் என்று நினைத்தது. ஆனால் வட்டம் முடிவடைவதாயில்லை. சுற்றிச் சுற்றி அது ஓடி வந்து கொண்டிருந்தது. அந்த ஆட்களும் இதையே தான் விரும்பினர். எஜமானன் அதைச் சவுக்கால் அடித்து, குதிகாலால் குத்தி வேகமாக

ஓடும்படித் தூண்டினன். குல்சாரி மொத்தம் இரண்டு தரம் அவனைக் கீழே தள்ளுவதில் வெற்றி கண்டது. ஆனல் ஒவ்வொரு தரமும் அவன் எழுந்து ஓடி வந்து மறுபடியும் அதன் முதுகில் ஏறிக் கொண்டு விட்டான்.

முடிவே இருக்காது போலிருந்தது, ஓயாமல் அது சுற்றிச் சுற்றி ஓடிக் கொண்டிருந்தது. குதிரைக்குத் தலை சுற்றிற்று. சுற்றிலும் பூமி சுழன்றது, கூடாரங்கள் சுழன்றன, தொலைவிலே மேய்ந்து கொண்டிருந்த குதிரைகள் சுழன்றன, மலைகள் சுழன்றன, வானத்தில் மிதந்த மேகங் கள் சுழன்றன. பிறகு அது அயர்ந்து போய் ஓட்டம் நடையாகிவிடும்படி வேகத்தைக் குறைத்துக் கொண்டது. தாங்க முடியாத தாகம் அதற்கு ஏற்பட்டது.

ஆனல் அவர்கள் அதைத் தண்ணீர் குடிக்க விடவில்லை. அந்தியில் அவர்கள் அதன் சேணத் தைக் கழற்றவில்லை. சுற்றுப் பட்டையை மட்டும் தளர்த்திவிட்டுச் சூடு தணியும்படி அங்கேயே நிற்கும் படிக் கட்டிவிட்டனர். லகான் கள் சேணத்தின் முன்பக்கத்தில் இழுத்துச் சுற்றப்பட்டிருந்ததால் அது தலையை உயர்த்திக் கொண்டு நிற்க வேண்டியிருந்தது, படுக்க முடியவில்லை. அங்கவடிகளை மேலே தூக்கி சேணத்தில் மாட்டிவிட்டனர். அன்று இரவு முழுவதும் இதே நிலையில் அது நின்று கொண் டிருந்தது. அன்று தனக்கு நிகழ்ந்த நம்ப முடி யாத பலவற்றுலும் கதி கலங்கிப் போய் அமைதி யாக நின்று கொண்டிருந்தது. கடிவாள வாயிரும்பு

இன்னமும் அதற்கு ஒரு பெரிய உபத்திரவமாக இருந்தது; தலையைத் துளியளவு அசைத்தாலும் கூட உயிர் போகிற மாதிரி வலித்தது. வாயி லிருந்த இரும்பின் கரகரப்பு சகிக்க முடியவில்லை. வாயின் இரு முனைகளும் வீங்கிவிட்டன. வார் கள் உராய்ந்து விலாப் புறங்களில் ஏற்பட்ட சிராய்ப்புகளில் எரிந்தது. வதைக்கப்பட்டுவிட்ட அதன் முதுகில் சேண இருக்கையின் அடியில் வலித்தது. தாகத்தால் அதற்கு உயிரே போய் விடும் போலிருந்தது. ஆறு சலசலத்து ஓடுவது அதன் காதில் விழுந்தது, இதனால் தாகம் மேலும் பொறுக்க முடியாததாயிற்று. வழக்கம் போல் மந்தைகள் ஆற்றுக்கு அக்கறையில் மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றின் குளம் பொலியும் கனைப்புகளும் இரவு மந்தைக்காரரர் களது கூச்சல்களும் கேட்டன. மக்கள் அவர் களுடைய கூடாரங்களுக்கு முன்னால் கணப்புத் தீக்களைச் சுற்றியமர்ந்து ஓய்வெடுத்துக் கொண் டிருந்தார்கள். சிறுவர்கள் நாய்களைக் கேலி செய்து அவற்றைப் பார்த்துக் குரைத்துக் கும்மாளமடித்தனர். ஆனால் குல்சாரி எல்லோ ராலும் மறக்கப்பட்டு இங்கே தனியே நின்று கொண்டிருந்தது.

நிலா உதித்தெழுந்தது. மஞ்சள் நிற நிலா வொளி பட்டு மலைகள் இருளிலிருந்து மிதந்து வெளியே வந்து மெள்ள அசைந்தாட முற்பட் டன. விண்மீன்கள் பூமியை நெருங்கி நகர்ந்து வர வர மென்மேலும் பிரகாசமாய் ஒளிர்ந்தன. இம்மியும் அசையாது இதே இடத்தில் அடக்கம்

ஒடுக்கமாய் குல்சாரி நின்றது. அதே நேரத்தில் இன்னொரு இளங் குதிரை சுற்றிலும் அலைந்து அதைத் தேடிச் சென்றது. அந்தக் கருஞ் சிவப்புப் பெண்குதிரைக் குட்டியின் கனைப்பு அதன் காதுக்கு எட்டிற்று. குல்சாரியுடன் கூட வளர்ந்து வந்த குட்டி அது, இதன் முன் ஒரு நாளும் குல்சாரி அதை விட்டுப் பிரிந்ததில்லை. அதன் நெற்றியிலே வெண்ணிற நட்சத்திரம் இருந்தது. குல்சாரியுடன் கூடப் பந்தயம் போட்டுக் கொண்டு ஓடுவதில் அதற்கு அடங்காதவிருப்பம். காளைக் குதிரைகள் அதை விரட்டத் தொடங்கிவிட்டன. ஆனால் எப்பொ ழுதும் அது அவற்றிடமிருந்து தப்பித்து குல் சாரியுடன் கூட ஓட வந்துவிடும். இன்னும் அது போதிய அளவு வளர்ந்தாகவில்லை. குல்சாரியுங் கூட ஏனைய காளைக் குதிரைகள் முயற்சி செய் ததைச் செய்யும் வயதை வந்தடைந்தாகவில்லை.

அந்தப் பெண் குதிரைக் குட்டியின் குரல் அருகில் ஒலிப்பது குல்சாரிக்குக் கேட்டது. ஆம், அதேதான். அதன் குரலை அடையாளம் தெரிந்து கொண்டுவிட்டது. பதில் கொடுக்க விரும்பிற்று, ஆனால் சித்திரவதைக்கு உள்ளாகி வீங்கிப் போன வாயைத் திறக்க அதற்கு பயம். அப் படிப் பயங்கரமாக வலித்தது. முடிவில் அந்தக் குட்டி குல்சாரியின் இருப்பிடத்தைக் கண்டு கொண்டுவிட்டது. நிலாவொளியில் அதன் நெற்றி யின் வெள்ளை நட்சத்திரம் பளிச்சிடச் சந்தடி யின்றி அதனிடம் ஓடி வந்தது. அதன் வாலும் கால்களும் நனைந்திருந்தன. ஆற்றைக் கடந்து

வந்த அது நீரின் குளிர்ந்த மணத்தைத் தன்னுடன் கொண்டு வந்திருந்தது. குல்சாரியை மூக்கால் வருடிற்று; கதகதப்பான அதன் உதடுகள் குல்சாரியின் பிடரியிலே அழுந்தின. மெள்ளக் கனைத்து குல்சாரியைத் தன்னுடன் வரும்படி அழைத்தது. ஆனால் குல்சாரியால் அசைய முடியவில்லை. பிறகு அந்தக் குட்டி தலையை அதன் கழுத்தில் வைத்து அதன் பிடரி முடிகளை உதடுகளால் கோதிவிட்டது. குல்சாரியும் அதன் கழுத்தில் தலையை வைத்து அதே போலச் செய்திருக்க வேண்டும். ஆனால் குட்டிக் குதிரையின் முத்தங்களை அதனால் திருப்பித் தர முடியவில்லை. அசைய வழியின்றி நின்று கொண்டிருந்தது. அதற்கு ஒரே தாகம். குட்டிக் குதிரை அதற்குக் குடிக்க ஏதாவது கொண்டு வந்து கொடுக்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அது ஓடிச் சென்றபோது ஆற்றுக்கு அப்பால் அதன் நிழல் இருளில் மறையும் வரை குல்சாரி ஏக்கத்துடன் அதைப் பார்த்துக் கொண்டு நின்றது. அது வந்து சென்றுவிட்டது. குல்சாரியின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் வழிந்தோடின. முத்து முத்தாகக் கன்னங்களில் ஓடி மெள்ள அதன் காலடியில் விழுந்தன. அதன் வாழ்விலே முதன் முதலாகக் குல்சாரி அழுதது.

மறு நாள் விடிந்ததும் எஜமானன் அதனிடம் வந்தான். வசந்தம் பிறந்து விழித்துக் கொண்ட மலைகளைப் பார்த்துவிட்டு தானுபாய் உடலை நிமிர்த்திச் சோம்பல் முறித்துக் கொண்டான். ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு முனகிக்

கொண்டான். அவன் உடலில் ஒவ்வொரு எலும்பும் வலித்தது.

''நேற்று என்னை அந்தப் பாடு படுத்தி வைத்து விட்டாய். குளிராகவா இருக்கிறது? ஆமாம், கல்லாய் உறைந்து போன மாதிரி நிற்கிறாயே, பாவம்.''

குலுங்கா நடையானின் கழுத்தில் தட்டிக் கொடுத்தான். அதனுடன் பேசியபோது அவன் குரலில் அன்பும் பரிவும் ததும்பின. அவன் என்ன சொல்கிறான் என்று குல்சாரிக்கு எப்படித் தெரியும்? தானுபாய் அதனிடம் சொன்னான்:

''தம்பி, என்மீது நீ கோபப்படக் கூடாது. வாழ்வெல்லாம் நீ மனம் போனபடித் திரிந்து கொண்டிருக்க முடியுமா? பழகிப் போனதும் எல்லாம் சரியாகிவிடும். உன்னைத் துன்புறுத்த நேர்ந்தது குறித்து வருந்துகிறேன், ஆனால் வேறு வழி இல்லையே, என்ன செய்வது? வாழ்க்கை இப்படித்தான், தம்பி. நீ கம்பீர நடை போட இதெல்லாம் செய்தாக வேண்டியிருக்கிறது. தொடக்கத்தில் சமாளிக்க வேண்டிய துன்பம் தீர்ந்தபிறகு எதுவும் உனக்குப் பெரிய காரிய மாக இராது. தாகமெடுக்கிறது, இல்லையா? பசியும் தாங்க முடியவில்லை, அல்லவா?..''

குதிரையை ஆற்றுக்கு அழைத்துச் சென்றான். அங்கே லகானைக் கழற்றிவிட்டு குல்சாரியின் சுரந்த வாயிலிருந்து இரும்புத் துண்டை கவன மாக வெளியே எடுத்தான். குலுங்கா நடையான் உடல் சிலிர்த்து ஆவலுடன் தண்ணீருக்கு ஓடி ஆசை தீரக் குடித்தது. நீரின் குளுமை அதை

மயங்கச் செய்வதாயிருந்தது. குடிக்கக் குடிக்க எவ்வளவு ஆனந்தமாயிருந்தது! இதற்காக அது மனிதனை மனமார வாழ்த்திற்று!

இப்படியே சென்றது. விரைவில் சேணம் அதற்கு ஒரு தொல்லையாக இராதபடி அவ்வளவு பழக்கப்பட்டு விட்டது. முதுகில் ஆளை ஏற்றிக் கொண்டு ஓடுவது அதன் மனதுக்கு மகிழ்ச்சி தரலாயிற்று. குலுங்கா நடையானுக்குரிய சந்தம் தவருத இசையுடன் குளம்புகள் தரையில் தட்டித் தாளமிட அது தலை தெறிக்கும் வேகத்தில் சாலைகளில் ஓட விரும்பிற்று. ஆனல் அதன் எஜமானன் அதன் வேகம் அளவு மீறி விடாதபடி அதைக் கட்டுப் படுத்திச் சென்ருன். முதுகிலுள்ள ஆள் சிறிதும் குலுங்காமல் அது பறந்தோடக் கற்றுக் கொண்டது. அது சவாரி ஏற்றிக் கொண்டு விரைந்தோடும் எழிற் காட்சி, காண்போரைப் பரவசப்படச் செய்வதாயிருந் தது.

''முதுகிலே ஒரு குடம் நீரை வைத்தால் துளிக் கூட சிந்தாமல் சுமந்து கொண்டு ஓடும்!'' என்று எல்லோரும் பாராட்டினர்.

''பிரமாதமாய்ப் பழக்கிப் பயிற்சியளித்திருக் கிருய், நன்றி, நன்றி!'' என்று பழைய மந்தைக் காரரான முதியவர் தொர்கோய் புகழ்ந்து கொண்டார். ''உன்னுடைய குலுங்கா நடை யான் பெயரும் புகழும் பெறப் போவதைப் பார்!'' என்ருர்.

3

சந்தடியற்ற சாலையிலே அந்தப் பழைய பார வண்டியின் சக்கரங்கள் மெள்ளக் கிரீச்சிட்டு நகர்ந்தன. இடையிடையே கிரீச்சொலி நின்று விடும். குலுங்கா நடையான் நடக்க முடியாமல் ஓய்ந்து போய் நின்று விட்டதைக் குறித்தது அது. அப்பொழுது நிலவிய மயான அமைதியில் குல்சாரியின் இதயம் அயர்ந்து போய் தக்-தக், தக்-தக், தக்-தக் என்று அடித்துக் கொண்டது அதன் காதில் எதிரொலித்தது...

சற்று நேரம் அது ஓய்வெடுத்துக் கொள்ள அவகாசம் அளித்தபின் கிழவன் தானாபாய் திரும்பவும் லகானைக் கையிலெடுத்து அசைத்தபடி, ''சரி, கிளம்பு குல்சாரி. நேரமாகிறது புறப்படு'' என்பான்.

இப்படித் தயங்கித் தள்ளாடி இருவருமாக ஒன்றரை மணி நேரம் நடந்தனர். முடிவில் மேற்கொண்டு செல்ல முடியாமல் குதிரை நின்றுவிட்டது. அதற்கு மேல் ஒரு தப்படிகூட அதனால் வண்டியை இழுத்துச் செல்ல முடியவில்லை. தானாபாய் பீதியுற்றுவிட்டான்.

''குல்சாரி, என்ன ஆயிற்று? இருட்டாகி வருகிறது பார்!''

ஆனால் குதிரை அவன் சொன்னதைப் புரிந்து கொள்ளவில்லை. அது சேணத்துடன் பரிதாபமாக நின்று கொண்டிருந்தது. அதன் கழுத்தால் தாங்க முடியாதபடி கனத்துவிட்ட அதன் தலை மெள்ள அசைந்தாடிற்று. அதன் ஒடுங்கிய

கால்களில் சாய்ந்தாடிய வண்ணம் நின்றது. தடதடத்து அடித்துக் கொண்ட அதன் இத யத்தின் துடிப்பு அதன் காதில் எதிரொலித் தது: தக்-தக், தக்-தக், தக்-தக்.

''குல்சாரி, என்னை நீ மன்னிக்க வேண்டும். முன்பே இதை நான் செய்திருக்க வேண்டும். வண்டியும் சேணமும் என்னவாயினும் கவலை யில்லை, எப்படியாவது உன்னை நான் வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்தால் போதும்'' என்றான் தானபாய்.

ஆட்டுத் தோல் கோட்டைக் கழற்றியெறிந்து விட்டு, அவசரமாய்க் குதிரையின் சேணத்தைக் கழற்ற முற்பட்டான். குதிரையை ஏர்க்காலி லிருந்து வெளியே வரச் செய்து அதன் கழுத்துப் பட்டையைத் தலையிலிருந்து உருவினான். சேணத்தை வண்டியினுள் விட்டெறிந்தான்.

''அவ்வளவுதான்'' என்று சொல்லிக் கோட்டை எடுத்துப் போட்டுக் கொண்டு குலுங்கா நடை யாளிடம் திரும்பினான். கழுத்துப் பட்டை யின்றி, சேணமின்றி, உடலுக்கு மிகவும் பெரிய தான தலையைத் தொங்க விட்டுக் கொண்டு, குளிர்ந்த அந்திப் பொழுது ஸ்தெப்பி வெளியின் நடுவில் பேய் உருவம் போலக் குதிரை நின்றது. ''அட தெய்வமே! குல்சாரி, எப்படி இருந்த நீ எப்படி ஆகிவிட்டாய், பார்!'' என்று தான பாய் அங்கலாய்த்துக் கொண்டான். ''தோர் கோய் இப்பொழுது கல்லறையிலிருந்து எழுந்து வந்து உன்னைப் பார்த்தால் எப்படித் துணுக் குற்றுப் போவார், தெரியுமா உனக்கு?..''

லகானைப் பிடித்திழுத்தான். கிழக் குதிரையும் கிழவனும் சாலையிலே மெள்ள நகர்ந்து சென்றனர். கைவிடப்பட்ட வண்டி அவர்களுக்குப் பின்னால் கிடந்தது. அவர்களுக்கு முன்னால் மேற்குத் திசையில் கருஞ் சிவப்பு இருள் சாலையின்மீது கவிழ்ந்து வந்தது. ஓசையின் இரவு ஸ்தெப்பி வெளியெங்கும் பரவிச் சென்று மலைகளை மூடியணைத்து, அடிவானத்தையும் மூடிமறைத்துச் சென்றது.

மெள்ள நடந்த தானபாய் குலுங்கா நடையானின் நீண்ட பல ஆண்டு வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை நினைத்து மனங் கசந்து தனது சக மனிதர்கள் குறித்துக் குறைபட்டுக் கொண்டான்: ''நாம் எல்லோருமே இப்படித்தான். வாழ்நாளின் இறுதியிலேதான், மனிதன் நோயுற்றுப் படுத்த பிறகு தான், அல்லது மாண்டு போகையில்தான், ஒருவரையொருவர் நினைத்துக் கொள்கிறோம். அப்பொழுதுதான், எவ்வளவு அருமையான ஆளை இழந்துவிட்டோம், எவ்வளவு நல்லவன், எப்படியெல்லாம் சேவை புரிந்தவன் என்று திடுமென நினைத்துக் கொள்கிறோம். நீயோ வாயில்லாத ஜீவன், உன்னைப் பற்றி நினைத்துக் கவலைப்படப் போகிறவர் யார்? இந்த குல்சாரி எத்தனை பேரை முதுகிலே சுமந்து கொண்டு ஓடிற்று? இப்பொழுது வயது முதிர்ந்து விட்டது, ஆகவே எல்லோராலும் மறக்கப்பட்டு விட்டது. காலை எடுத்து வைத்து நகர முடியாமல் திண்டாடுகிறது. ஒரு காலத்தில் அதியற்புதப் பந்தயக் குதிரையாக இருந்தது!..''

அவன் நினைவுகள் மறுபடியும் அவனைக் கடந்த காலத்துக்கு இட்டுச் சென்றன. இந்தக் கடந்த காலங் குறித்து இவ்வளவு காலமாக நினைத்துப் பார்க்காமலே இருந்துவிட்டோமே என்று அவன் மீண்டும் வியப்படையலானான். நடைபெற்றவை யாவும் அவன் நினைவிலே உயிர் பெற்றெழுந்தன. எதுவுமே மறக்கப்பட்டு விடுவதில்லை என்று தோன்றிற்று. இதற்கு முன்பு அவன் கடந்த காலத்தைப் பற்றி அதிகம் சிந்தித்துப் பார்த்ததில்லை, தன் மனம் அதைச் சிந்தித்துப் பார்க்க அனுமதிக்காமலே இருந்து விட்டான். ஆனால் இப்பொழுது தன் மகனு டனும் மருமகளுடனும் நடை பெற்ற உரை யாடலுக்குப் பிறகு, இருண்ட சாலை வழியே சாகும் நிலையிலுள்ள குதிரையை இழுத்துக் கொண்டு மெள்ள நடக்கையில், மறைந்தோடி விட்ட அந்த ஆண்டுகளை உள்ளத்திலே துன் பமும் துயரமும் குமுறியெழ நினைத்துப் பார்த் தான். அவ்வாண்டுகளின் நிகழ்ச்சிகள் யாவும் அவன் கண்ணெதிரே எழுந்தன.

அவன் சோகச் சிந்தனையிலே ஆழ்ந்தவனாக மென் மேலும் பலமாக லகானை இழுத்துக் கொண்டு மெள்ள நடக்க அவனுக்குப் பின்னால் குலுங்கா நடையான் தள்ளாடியபடி வந்தது. கிழவனின் கை மரத்துப் போனதும் லகானின் முனைகளை மற்றொரு தோள்மீது மாற்றிக் கொண்டு தொடர்ந்து குதிரையை இழுத்துச் சென்றான். பிறகு களைப்படைந்ததும் குதிரையைக் களைப் பாறும்படி விட்டான். பிறகு கண நேரம்

சிந்தித்துவிட்டு லகானைக் குதிரையின் தலையி லிருந்து கழற்றியெடுத்தான்.

''உன்னால் நடக்க முடிந்த நடையில் மெள்ள நட, உன் பின்னால் நான் வருகிறேன். கவலைப் படாதே, உன் பின்னாலேயே வருகிறேன், அவ சரப்படாமல் மெதுவாகப் போய்க் கொண்டிரு.''

இப்பொழுது குலுங்கா நடையான் முன்னே செல்ல, தானபாய் பின்தொடர்ந்தான். அவன் தோளில் லகான் தொங்கிற்று, அதைத் துறக்க ஒருபோதும் அவனுக்கு மனம் வராது. குல்சாரி நின்றதும் அவனும் நின்று அது திரும்பவும் தெம்பு பெறும் வரைக் காத்திருந்தான். பிறகு இருவரும் திரும்பவும் மெள்ள நகர்ந்தனர். கிழக் குதிரையும் கிழவனுமாகப் போய்க் கொண்டிருந்தனர்.

இதே சாலையில் புழுதித் தடம் விட்டு குல்சாரி பறந்தோடிய அந்நாட்களை நினைத்துத் தான பாய் சோகப் புன்னகை புரிந்து கொண்டான். அந்தப் புழுதித் தடத்தின் அடையாளத்தைக் கொண்டு பல மைல்களுக்கு அப்பாலிருந்தே குலுங்கா நடையானின் ஓட்டத்தைத் தெரிந்து கொள்வோமென அன்று மேய்ப்பாளர்கள் சொல் வார்கள். அதன் குளம்புகளுக்கு அடியிலிருந்து வெள்ளைக் கோடு போல எழும் அந்தத் தடம் ஸ்தெப்பி வெளியின் குறுக்கே கிழித்துச் சென்று, ஜெட் விமானம் விட்டுச் செல்லும் புகைத் தடம் போல, காற்றில்லாத நாளில் சாலையின் மேல் தொங்கிக் கொண்டிருக்கும். சூரியன் படாமல் கண்களுக்கு மேல் கையை வைத்துக்

கொண்டு தொலைவிலே பார்த்துவிட்டு ''அதோ பார், குல்சாரி செல்வதை!'' என்று மேய்ப்பாளர்கள் கூறுவது வழக்கம். அந்த அற்புதக் குதிரையில் அமர்ந்து வெப்பக் காற்று முகத்திலே வீசப் பறந்தோடும் பாக்கியவானை நினைத்து அப்பொழுது தானுபாய் பொறாமைப்பட்டுக் கொள்வான். அது போன்ற குலுங்கா நடையான்மீது சவாரி செய்யக் கொடுத்து வைக்க வேண்டுமே, கிர்கீஸியனுக்கு அது அரும்பெரும் சிறப்பாயிற்றே.

குல்சாரி எத்தனையோ கூட்டுப் பண்ணைத் தலைவர்கள் வந்து சென்றதைக் கண்டிருக்கும். கெட்டிக்காரர்கள், முட்டாள்கள், நேர்மையானவர்கள், நேர்மையற்றோர் — இப்படி எல்லா வகைத் தலைவர்களும் பதவியில் அமர்ந்திருப்பார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் தமது பதவியின் முதல் நாளிலிருந்து கடைசி நாள் வரை குலுங்கா நடையான் மீதுதான் சவாரி செய்வது வழக்கம். ''இவர்கள் எல்லோரும் இப்பொழுது என்ன செய்கிறார்கள்? பகற் பொழுது முழுதும் தம்மைச் சுமந்து கொண்டு ஓடிய குல்சாரியைப் பற்றி அவர்கள் எப்பொழுதாவது சிறிது நேரம் நினைத்துக் கொள்வதுண்டா?'' என்னும் கேள்வி தானுபாயின் மனத்துள் எழுந்தது.

மலையிடுக்கின் மீதிருந்த பாலத்தை ஒருவாறு வந்தடைந்ததும் மறுபடியும் நின்றுவிட்டனர். குலுங்கா நடையான் படுக்கலாமென முழங்கால்களை வளைத்தது. ஆனால் தானுபாய் அதைப்

படுக்க விடவில்லை: படுத்துவிட்டால் திரும்பவும் எதனுலும் அதை எழுந்து நிற்க வைக்க முடியாது.

''எழுந்திரு! எழுந்திரு!'' என்று அதட்டி லகானைச் சுழற்றி குதிரையின் தலையிலே அடித்தான். குல்சாரியை அடித்துவிட்டோமே என்று தன்னைத் தானே கடிந்து கொண்டு, ''படுக்கக் கூடாதென்பது தெரியவில்லையா உனக்கு? நீ சாக விரும்புகிருயா? அதற்கு நான் இடந் தர மாட்டேன்! மாட்டவே மாட்டேன்! எழுந்திரு, எழுந்திரு!'' என்று கூச்சலிட்டான்.

குல்சாரி பெருமுயற்சி செய்து கால்களை நிமிர்த்து வைத்து முனகிக் கொண்டது. இருட்டாயிருந்த போதிலும் தானுபாய்க்கு நேரே அதன் கண்ணைப் பார்க்க மனம் துணியவில்லை. அதைத் தட்டிக் கொடுத்துவிட்டு அதன் இடது பக்க விலாவைத் தடவினுன், பிறகு அவ்விடத்தில் காதை வைத்து அழுத்திக் கேட்டான். குதிரையின் நெஞ்சினுள் இதயம் நீர்ச் செடிகளில் சிக்கிக் கொண்டுவிட்ட காற்ருலைச் சக்கரத்தைப் போல கடகடவென்று அடித்துக் கொண்டிருந்தது. முதுகு வலிக்கும் வரை தானுபாய் குனிந்து நின்று குதிரையின் விலாப்புறத்தில் காதை வைத்துக் கேட்டான். பிறகு நிமிர்ந்து தலையை ஆட்டிப் பெருமூச்சு விட்டான். இனி வேறு வழியில்லை, பாலத்தைத் தாண்டியதும் சாலையை விட்டிறங்கி மலையிடுக்கின் ஓரத்தில் செல்லும் பாதையில் திரும்பிவிட வேண்டியது தான் என்று முடிவு செய்தான். மலைகளை நோக்கிச்

சென்ற அந்தப் பாதை சீக்கிரமாக வீட்டுக்குப் போய்ச் சேர்வதற்கான குறுக்கு வழி. இரவில் அங்கே எளிதில் வழி தவறிவிட நேரலாம், ஆனல் தானுபாய் இப்பகுதிகளே நன்கு அறிந்தவன்; அவனுடைய ஞாபக சக்தி அவனே வழி தவற விட்டுவிடாது. குதிரையால் மட்டும் நடக்க முடிந்துவிட்டால் வீடு போய்ச் சேர்ந்து விடலாம்.

கிழவன் இப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில் பின்புறத்தில் ஒரு லாரியின் தலே விளக்குகள் ஒளி வீசின. இரு பிரகாச வட்டங்கள் காரிருளேக் கிழித்துக் கொண்டு திடுமெனத் தோன்றின. அதிர்ந்தாடும் நீண்ட ஒளிக் கற்றைகளே உணர் கொம்புகளேப் போல நீட்டிச் சாலேயைத் துழாவியபடி அவை வேகமாக நெருங்கிவந்தன. தானுபாயும் குலுங்கா நடையானும் பாலத்தை ஒட்டினற் போல் நின்றனர். லாரியால் அவர்களுக்கு எந்தப் பயனும் இல்லே. இருப்பினும் தானுபாய் அதன் வரவுக்காகக் காத்துக் கொண்டு நின்ருன். ஏன் காத்திருக்க வேண்டுமென்று அவனுக்கே தெரியாது. ''அப்பாடா, நம்மை நோக்கி யாரோ வருகின்றனர்'' என்று நினேத்தான். சாலேயிலே பிற மனிதர்களும் செல்கின்றனர் என்ற நினேப்பு அவனுக்கு ஆறுதலளித்தது. அவன் கண் குருடாகி விடும்படி தலே விளக்குகளின் ஒளி அவனுக்கு நேர் எதிரே வீசிற்று. அந்த ஒளி கண்களே வருத்தாதபடி கையை உயர்த்திக் காப்பு அமைத்துக் கொண்டான்.

லாரியிலே வந்த இருவரும் கிழவனையும் அவன் அருகே பரிதாப நிலையில் நின்ற குதிரையையும் வியப்புடன் உற்றுப் பார்த்தனர். சேணம், கடிவாளம் எதுவுமின்றி நின்ற அது கொஞ்சமும் குதிரையாக இல்லை, எஜமானனை விடாது பின் தொடர்ந்து வந்த நாய் போலிருந்தது. நேர் எதிரே வீசிய விளக்கொளி கிழவனையும் குதிரையையும் கணப் பொழுதுக்கு மாய வெள்ளை உருவங்களாக மாற்றியது.

''நள்ளிரவிலே இந்தக் கிழவர் இங்கே என்ன செய்கிருர், தெரியவில்லையே?'' என்று டிரைவரிடம் கேட்டான், ரோமத் தொப்பி அணிந்த நெட்டையான இளைஞன்.

''நாம் அங்கே பார்த்த அந்த வண்டி இவருடையதாகத்தான் இருக்கும்'' என்று லாரியை நிறுத்தியபடி அந்த டிரைவர் கூறினன். பிறகு சன்னலுக்கு வெளியே தலையை நீட்டி ''கிழவரே, என்ன ஆயிற்று? அங்கே சாலையில் கிடக்கும் வண்டி உன்னுடையதுதானு?'' என்று கத்தினன்.

''ஆமாம்'' என்ருன் தானபாய்.

''அப்படித்தான் நினைத்தேன். கேட்பாரற்று அனுதையாய்க் கிடந்தது. அருகே யாரையும் காணேம். வழியில் குதிரை தென்படும் என்று நினைத்தோம். ஆனல் சல்லிக் காசு பெருததாய் இருக்கிறதே.''

தானபாய் ஒன்றும் சொல்லவில்லை.

டிரைவர் கீழே இறங்கி சாலை ஓரத்துக்குச் சென்று சிறுநீர் கழித்தான். வோத்காவின் துர்

நாற்றம் கிழவனின் மூக்கைத் துளைத்தது.

''என்ன ஆயிற்று?''

''குதிரையால் வண்டி இழுக்க முடியவில்லை. கிழடாகிவிட்டது, உடம்பு சரியில்லை.''

''உ-ம். எங்கே போகணும்?''

''வீட்டுக்கு. சரிகோசுப் பிளவுக்குப் போயாக வேண்டும்.''

''ஊய்-ய்!'' என்று டிரைவர் விசிலடித்தான். ''மலைமீது அவ்வளவு தூரம் போயாக வேண்டுமா? அடாடா, எனது பாதையில் எங்காவது இருக்கக் கூடாதா உன் வீடு? வேண்டுமானால் பின் பக்கத்தில் ஏறிக் கொள், அரசுப் பண்ணையில் கொண்டு போய் விடுகிறேன். அங்கிருந்து காலையில் புறப்பட்டு வீடு போய்ச் சேரலாம்.''

''நன்றி, என்னால் குதிரையை விட்டுவிட்டு வர முடியாது.''

''தோலும் துருத்தியுமாய் நிற்கும் இந்தப் பிணத்தையா? அதோ அந்த மலையிடுக்கிலே தள்ளி விடு, தொல்லை ஒழிந்து போகும். உதவி வேண்டுமா, சொல்லு. நானும் வருகிறேன்.''

''உன் வேலையைப் பார்த்துக் கொண்டுபோ!'' என்று தானுபாய் கோபமாக முணுமுணுத்தான்.

''நான் கூப்பிடவில்லை என்று சொல்லாதே!'' ஏளனமாய்ச் சிரித்தபடி டிரைவர் லாரிக் கதவை இழுத்து மூடிக் கொண்டான். பிறகு தன் பக்கத்தில் அமர்ந்திருந்த இளைஞனிடம் ''கிழவனுக்குப் புத்தி சரியில்லை!'' என்றான்.

லாரி புறப்பட்டு புகை மேக ஒளியினுள் மறைந்து சென்றது. அதன் பின்முனை விளக்

குகளின் செவ்வொளி பட்டுப் பளிச்சிட்ட மலை யிடுக்குப் பாலம் சுமை பொறுக்க மாட்டாது கிரீச்சிட்டுப் புலம்பிற்று.

''கிழவரைப் போய் கலாட்டா செய்கிறாயே, உனக்கு இம்மாதிரி ஏற்பட்டிருந்தால் எப்படி இருந்திருக்கும்?'' பாலத்தைக் கடந்ததும் இளைஞன் இவ்வாறு கேட்டான்.

''ஏற்பட்டிருந்தால் என்னவாம்?.. எவ்வ ளவோ இக்கட்டான நிலைமைகளை எல்லாம் நான் சமாளித்திருக்கிறேனே'' என்று கொட் டாவி விட்டுவிட்டு வளைந்த பாதையில் லாரியை ஓட்டியபடி டிரைவர் பதிலளித்தான். ''கிழ வருக்கு நல்ல முறையில் ஆலோசனை கூறினேன். அவர் கேட்கவில்லை. எலும்பும் தோலுமாய் நிற்கும் கிழட்டுக் குதிரை, அதில் என்ன அப்படிச் சிறப்பைக் கண்டுவிட்டார் கிழவர்? பழங் காலத் துக்கு உரியது. இளைஞனே, இது தொழில் நுட்பம் கோலோச்சும் காலம். எங்கும் இயந் திரங்கள்தான் முன்னிலையில் இருக்கின்றன. யுத்த காலத்திலுங்கூட அப்படித்தான் இருந் தன. பழங் காலத்துக் கிழட்டுக் குதிரைகள், மனிதர்கள் இன்று யாருக்கு வேண்டும்?''

''மனித உணர்வில்லாதவன் அப்பா நீ!'' என்றான் இளைஞன்.

''இதையெல்லாம் பெரிதாக நினைத்துப் பயனில்லை.''

லாரி மறைந்து மீண்டும் இருள் சூழ்ந்து கொண்டது. கண்கள் இருட்டில் பார்க்கப் பழகிக் கொண்டதும், ''வா, போவோம்!

புறப்படு!'' என்றான் தானபாய்.

பாலத்தைக் கடந்ததும் குல்சாரியை நெடுஞ் சாலையிலிருந்து கீழே இறங்கச் செய்தான். மலைப் பிளவின் ஓரத்தில் இருட்டில் அரசபுரசலாய்த் தெரிந்த பாதையிலே இருவரும் மெதுவாய்ச் சென்றனர். மலைகளுக்குப் பின்னாலிருந்து அப்பொழுதுதான் வெண்ணிலா எட்டிப் பார்த்தது. அதன் வரவை எதிர்பார்த்து விண்மீன்கள் குளிர்ந்த வானத்தில் கண்சிமிட்டின.

## 4

மந்தையிலிருந்து குல்சாரி பிரித்துப் பழக்கப் பட்ட ஆண்டில் மந்தைகள் வழக்கத்தை விட அதிக காலம் இலையுதிர் கால மேய்ச்சல் வெளி களில் தங்கியிருந்தன. அவ்வாண்டு அசாதாரண மாக நீண்ட இலையுதிர் காலம். குளிர் காலம் கடுமையாயில்லை, அடிக்கடி பெய்த வெண்பனி உடனுக்குடன் உருகி வந்தது. மேயப் போது மான புல் இருந்தது. வசந்தம் பிறந்ததும் மந்தைகள் அடிவாரங்களுக்குத் திரும்பின, ஸ்தெப்பி மலரத் தொடங்கியதும் மேலும் கீழ் மட்டங்களை வந்தடைந்தன.

யுத்தப் பிற்கால ஆண்டுகள் யாவற்றிலும் தானபாய் வாழ்க்கையில் இதுவே மிகச் சிறந்த காலம் எனலாம். முதிய வயதெனும் அந்த நரைக் குதிரை நெடுந் தொலைவில் இல்லை என் றாலும், இன்னமும் அது கணவாய்க்கு அப்பாலே

தான் இருந்தது. இளம் குலுங்கா நடையான் மீது சவாரி செய்யும் வயதை அவன் கடந்த வனுகிவிடவில்லை. இன்னும் சில ஆண்டுகள் தாமதித்து குல்சாரி அவன் வாழ்வில் அடிவைத் திருந்தால், குலுங்கா நடையான் மீது சவாரி செய்வது அவனுக்கு அவ்வளவு பெரிய இன்ப அனுபவமாய்த் தோன்றியிருக்காது; ஆடவனுக் குரிய அந்தக் கம்பீர உணர்ச்சி அந்த அளவுக்கு ஏற்பட்டிராது. சிற்சில நேரங்களில் மிடுக்கும் வீறுப்பும் மிக்கவனுக நடந்து கொள்ளத் தானு பாய் தயங்கியதில்லை. பந்தயக் குதிரையாய்ப் பறந்தோடும் குலுங்கா நடையான் மீது சவாரி செய்கையில் எவன்தான் தயங்குவான்? குல் சாரியும் இதை உணர்ந்தே இருந்தது. முக்கிய மாகக் கிராமத்தை நோக்கி வயல்களின் குறுக்கே தானுபாய் சவாரி செய்கையில் வேலைக்குச் செல்லும் பெண்களைச் சந்திக்க நேரும்போது மிடுக்கின்றி அமர்ந்திருப்பது எப்படி? அந்தப் பெண்களிடமிருந்து நெடுந் தொலைவில் வரும் போதே தானுபாய் குதிரையின் சேணத்தில் ஆடம்பரமாக நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு விடுவான். அவன் உடலின் ஒவ்வொரு தசை நாரும் மீட்டிவிடப் பெற்றது போலாகிவிடும். அவனுடைய பரபரப்பு அவன் குதிரையையும் பற்றிக் கொண்டுவிடும். முதுகுடன் அனேகமாக ஒரே மட்டத்தில் இருக்கும்படிக் குல்சாரி வாலை உயர்த்திக் கொண்டுவிடும். அதன் பிடரி முடி கள் காற்றிலே விம்மிப் புடைத்தெழும். கம்பீர மாய்க் கனைத்துக் கொண்டு, குளம்புகள் சாலை

யில் பட்டதும் படாததுமாய் வருடிச் செல்ல, முதுகில் அமர்ந்திருப்பவனை இலாவகமாய்த் தூக்கிக் கொண்டு பறந்தோடும். சிவப்பும் வெள்ளையுமான குட்டைத்துணிகளைத் தலையில் கட்டிக் கொண்டு நடந்து வரும் அந்தப் பெண் கள் சாலையின் இரு ஓரங்களில் ஒதுங்கி, பச்சைப் பசேலென முழங்கால் உயரத்துக்கு வளர்ந்த கோதுமைப் பயிருக்கிடையே நிற்பார்கள். வைத்த கண் வாங்காது அவனைப் பார்த்தபடிக் கல்லாய்ச் சமைந்து போய் நிற்பார்கள். தலைகள் மட்டும் ஒருமித்த முறையில் திரும்பும்; வரிசையாய் மலர் முகங்கள் ஒளிரும், கண்களும் பளிச்சிடும், பற்களும் சற்றுப் பிரகாசித்து மறையும்.

''ஏய்! நில்லு! இரு, ஒரு நாள் உன்னைப் பிடித்து நிறுத்துகிறோமா, இல்லையா பார்!'' எல்லோருமாகச் சேர்ந்து சிரித்துக் கூச்சலிடு வார்கள்.

அவர்கள் உண்மையாகவே அவனை இடை மறித்து நிறுத்திய நாட்களும் உண்டு. கைகளைக் கோர்த்துக் கொண்டு சாலையின் குறுக்கே நின்று அவனைத் தடுத்துவிடுவார்கள். கூத்தும் கும்மாளமுமாகிவிடும். தானுபாயைக் குதிரை யிலிருந்து கீழே இழுத்துத் தரையிலே விட்டுக் கொக்கரித்துச் சிரித்தபடி சாட்டையை அவன் கையிலிருந்து பிடுங்கப் பார்ப்பார்கள்.

''நீ எப்பொழுது எங்களுக்குக் கொஞ்சம் குமிஸ் கொண்டுவந்து கொடுக்கப் போகிறாய்?''

''உன் பாடு கொண்டாட்டம்தான். குலுங்கா நடையான்மீது ஏறிக் கொண்டு ஜோராய்

சவாரி செய்கிருய்! எங்களைப் பார், பகலெல்லாம் வயலில் இடுப்பொடிய வேலை செய்கிரேம்.''

''எல்லாரும் மந்தைக்காரர்களாகி விடுங்களேன், யாரும் தடுக்கவில்லையே உங்களை. ஆனல் உங்கள் கணவன்மார்களிடம் வேறு பெண்களைப் பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள். ஏனென்ருல் அங்கே மலையிலே குளிர் தாங்காமல் ஐஸ் கட்டியாய் உறைந்து போவீர்கள்!''

''நீ அப்படித்தான் சொல்லுவாய்!'' மறுபடியும் அவனைப் பிடித்திழுத்துக் கூச்சலிட ஆரம்பித்துவிடுவார்கள்.

ஆனல் யாரும் குலுங்கா நடையான் மீது ஒரு முறைகூட ஏறிச் சவாரி செய்ய தானுபாய் அனுமதித்ததில்லை. சாலையிலே சந்திக்கும் தோறும் இதயம் படபடக்கக் குதிரையை உடனே அவள் பக்கத்திலே போய் நிற்கச் செய்வானே, அந்தப் பெண்ணையும்கூட இதற்கு அனுமதித்ததில்லை. அவளும் இந்தக் குதிரையில் ஒரு தரங்கூடச் சவாரி செய்தறியாள். அதன் மீது சவாரி செய்ய விரும்பியிருக்கவும் மாட்டாள்.

அவ்வாண்டில் தானுபாய் தணிக்கைக் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டான். இந்த வேலையை முன்னிட்டு அடிக்கடி அவன் கிராமத்துக்கு வர வேண்டியிருந்தது. அனேகமாய் ஒவ்வொரு தரமும் அவன் அந்தப் பெண்ணைச் சந்தித்துப் பேசுவான். எத்தனையோ தரம் ஆர்வமிழந்து

மனம் ஒடிந்த நிலையில் பண்ணை அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டிருப்பான். அவன் கண்களையும் குரலையும் கை அசைவுகளையும் கொண்டு குல்சாரி உடனே அவனுடைய இந்த மன நிலையை உணர்ந்து கொண்டு விடும். ஆனால் வழியில் அந்தப் பெண்ணைக் காண்பானுயின் உடனே அவனுக்கு ஆர்வம் பிறந்துவிடும்.

''குல்சாரி, அவசரமில்லை! மெதுவாகப் போவோம்!'' என்று இரகசியக் குரலில் சொல்லி, வேகமாக ஓடும் குலுங்கா நடையானைச் சாந்தப் படுத்துவான். அந்தப் பெண்ணின் பக்கத்துக்கு வந்ததும் குதிரையை மெள்ள நடக்கச் செய் வான்.

அவர்கள் இருவரும் தணிந்த குரலில் பேசிக் கொள்வார்கள். சில சமயங்களில் வாய் பேசாமல் மௌனமாகவே போய்க் கொண்டிருப் பார்கள். தன் எஜமானனின் மனச் சுமை குறைந்துவிடுவதை குல்சாரி உணரும். அவன் குரலில் உற்சாகம் தொனிக்கும், கைகள் மிருது வாகிவிடும். இதனால் தான் சாலையில் அந்தப் பெண்ணைச் சந்திக்க நேரும் போதெல்லாம் குல்சாரிக்குப் பரம திருப்தியாய் இருக்கும்.

கூட்டுப் பண்ணையில் நிலைமை மிகவும் மோச மாயிருந்தது, விவசாயிகளுக்கு சொற்ப வரு வாயே கிடைத்து வந்தது—இதெல்லாம் குல் சாரிக்கு எப்படித் தெரியும்? தணிக்கைக் குழு வின் உறுப்பினனுன தானுபாய் பக்காசவ், நிலைமை இப்படி மோசமாய் இருக்கக் காரணம் என்ன, நல்ல வாழ்வு பிறக்க இன்னும் எவ்வளவு

காலம் தான் காத்திருப்பது என்று கூட்டுப் பண்ணையின் தலைவனிடம் கேட்க விரும்பினுன் என்பது அதற்கு எப்படித் தெரியும்? அரசுக்குச் செலுத்த வேண்டியவற்றைப் பூரணமாய்ச் செலுத்த வேண்டும், வேலை செய்தவர்கள் வெறுங் கையுடன் நிற்க நேராமல் தக்க ஊதியம் பெறுவதற்கு பண்ணையில் போதிய அளவு எஞ்சியிருக்க வேண்டும்—இத்தகைய காலம் எப்பொழுது வருமென்று அவன் பண்ணைத் தலைவனுடன் விவாதிக்க விரும்பியதை குல்சாரியால் புரிந்து கொள்ள முடியுமா?

முந்திய ஆண்டில் விளைச்சல் மிகவும் குறைந்து விட்டது. இவ்வாண்டில் அக்கம் பக்கத்துப் பண்ணைகள் அரசுக்குச் செலுத்தத் தவறியதைத் தானே செலுத்தி இப்பிராந்தியம் கெட்ட பெயர் பெருதபடித் தடுக்க வேண்டியிருந்தது. இதன் பொருட்டுப் பண்ணை தனது பங்குக்கும் கூடுதலாக அரசுக்குத் தானியமும் கால்நடைகளும் விற்பனை செய்ய வேண்டியிருந்தது. வருங்காலம் எப்படிப் பட்டதாயிருக்கும், கூட்டுப் பண்ணை விவசாயிகளுடைய நிலை மேம்படுமா என்று யாருக்கும் தெரியவில்லை. காலம் உருண்டோடிற்று, யுத்தம் பழைய நினைவாகி வந்தது. ஆயினும் மக்கள் முன்பு போலவேதான் இருந்தனர்; சின்னஞ்சிறிய சொந்தக் காய்கறிக் கொல்லை நிலங்களில் தம்மால் பயிரிட முடிந்ததைக் கொண்டும், பண்ணையின் பயிர் நிலங்களிலிருந்து திருட முடிந்ததைக் கொண்டும் ஜீவனம் நடத்தி வந்தனர். பண்ணையில் பணம்

இல்லை. அரசுக்கு விற்ற தானியம், பால், இறைச்சி இவை யாவற்றுலும் அவர்களுக்கு நஷ்டமே ஏற்பட்டு வந்தது. மந்தைகள் கோடையில் கொழுத்துச் செழிப்பாகவே இருந்தன. ஆனால் குளிர் காலம் வந்ததும் யாவும் பாழாகி விட்டன — கால்நடைகள் குளிராலும் பட்டினியாலும் மடிந்து போயின. கொட்டில்கள், களஞ்சியங்கள், தீவனப் பதனக் கிடங்குகள் இவையெல்லாம் வேண்டியிருந்தன. ஆனால் கட்டிடப் பொருள்கள் கிடைக்கவில்லை, கிடைக்குமென உறுதியளிப்போர் யாருமில்லை. நீண்ட யுத்த ஆண்டுகளுக்குப் பிற்பாடு அவர்களுடைய வீடுகள் இருந்த அலங்கோல நிலையை என்னென்று சொல்வது? கூட்டுப் பண்ணைச் சந்தைகளில் உருளைக்கிழங்கும் ஆடுகளும் விற்றுப் பணம் சம்பாதிப்பதில் காலத்தைச் செலவிட்டவர்களால் மட்டும்தான் புது வீடுகள் கட்டிக் கொள்ள முடிந்தது. தேவையான கட்டிடப் பொருள்களை எங்கிருந்தோ இவர்களால் வாங்கி வர முடிந்தது.

''தோழர்களே, இதில் ஏதோ பெரிய தவறு இருக்கிறது. நிலைமை இவ்வாறு இருக்கலாகாது. நாம் ஏதோ, எங்கோ தவறு செய்கிறோம்'' என்பான் தானபாய். ''இப்படித்தான் யாவும் இருக்குமென்று என்னால் நம்ப முடியவில்லை. ஒன்று நாம் திறமையாக வேலை செய்வது எப்படி என்பதை மறந்து விட்டோம், அல்லது நாம் சரியாகத் தலைமை தாங்கப்படவில்லை.''

‘‘இதில் எது தவறு? சொல்லேன் பார்ப் போம்’’ என்று கேட்டுப் பண்ணையின் கணக்கர் அவன் முன்னால் ஒரு கட்டுக் காகிதத்தை எடுத்துப் போட்டார். ‘‘இதோ இருக்கிறது திட்டம்... இவைதாம் நாம் பெற்றுக் கொண் டவை. நாம் விற்பனை செய்தவை இவை. இதுதான் ஆன செலவு, இது வந்த வரவு. இதோ இருக்கிறது இருப்பு. லாபம் ஒன்று மில்லை, எல்லாம் நஷ்டம்தான். ஏனையோரைக் குற்றம் சொல்வதற்கு முன்னால் இதையெல்லாம் பார்த்து நிலைமையைப் புரிந்து கொண்டு பேசு. இங்கே நீ மட்டும்தான் கம்யூனிஸ்டு, நாங்கள் எல்லோரும் மக்களின் பகைவர்கள் என்றா நினைக்கிறாய்?’’

ஏனையோரும் இந்த உரையாடலில் சேர்ந்து கொள்வார்கள். விரைவில் அனல் பறக்கும் பலத்த வாக்குவாதமாகிவிடும். தானபாய் தலை யைக் கைகளால் அழுத்திக்கொண்டு உட்கார்ந்தி ருப்பான். ஏன் இப்படி ஆக வேண்டும்? என்றைக்காவது இதைப் புரிந்து கொள்ள முடியுமா என்பதில் நம்பிக்கை இழந்தவனாக உட்கார்ந்திருப்பான். கூட்டுப் பண்ணைக்காக அவன் அப்படி துயருற்றதற்குக் காரணம் பண் ணையில் அவன் வேலை செய்து வந்தான் என்பது மட்டுமல்ல, சில தனிப்பட்ட காரணங்களும் இருந்தன. தானபாயின் பழைய செயல்களுக் காக அவன் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள விரும்பியவர்கள் பலரும் இருந்தனர். தன் முது குக்குப் பின்னால் அவர்கள் தன்னைப் பார்த்துச்

சிரித்தது அவனுக்குத் தெரியும். நேருக்கு நேர் சந்திக்கையில் அவர்கள் அவனை வெறித்துப் பார்த்தனர். ''என்ன ஆயிற்று பார்த்தாயா? திரும்பவும் எங்களைக் குலாக்குகள் என்று சொல்லி எங்கள் உடைமைகளைப் பறிக்கவா விரும்புகிறாய்? இம்முறை அதிகம் கிடைக்காது. யுத்தத்திலே நீ ஒழிந்து போயிருக்கக் கூடாதா? திரும்பி வந்து நிற்கிறாயே?..'' என்று சொல்வது போலிருக்கும் அவர்களுடைய பார்வை.

அவனுடைய கண்களும் அவர்களுக்குத் தக்கபடி பதிலளிக்கும்: ''குழி பறிக்கும் எலிகளே, கொஞ்சம் காத்திருங்கள், தெரியும்! மேல் நிலைக்கு வருகிறோமா இல்லையா பாருங்கள்!''

இவர்கள் அந்நியர்களல்ல. எல்லோரும் அவன் உறவினர்கள். அவனுடைய ஒன்றுவிட்ட சகோதரன் குலுபாயும் இவர்களில் ஒருவன். இப்பொழுது கிழவனாகிவிட்டான்; யுத்தத்துக்கு முன்பு சைபீரியாவில் ஏழாண்டு இருந்துவிட்டு வந்தவன். அவன் மகன்களும் தகப்பனை ஒத்தவர்களாகவே இருந்தனர். எல்லோரும் தானாபாயை நஞ்செனவெறுத்தனர். இவர்களுடைய பிள்ளைகளும் இதே போலத் தானாபாயின் சந்ததியினரை வெறுத்தாலும் வெறுக்கலாம். அதற்குப் போதிய காரணம் இருந்தது. எல்லாம் பழைய சரித்திரம். ஆனால் கேடுகள் நெடுங்காலத்துக்கு மக்கள் மனதைவிட்டு மறையாதிருப்பவை. குலுபாயை அவன் அப்படி நடத்தியது சரிதானா? குலுபாய் நேர்மையான ஒரு சாதாரண விவசாயி, நடுத்தர விவசாயி என்பதற்கு மேல்

அதிகம் சொல்ல முடியாதவன்தானே? அவன் தனது உறவினன், குடும்பத்தவன் என்பதை மறுப்பதற்கில்லை. தாஹுபாயின் தகப்பனுடைய மூத்த மனைவியின் புதல்வனே குலுபாய். இளைய மனைவியின் புதல்வன் தாஹுபாய். கிர்கீஸியர் களிடையே இத்தகைய சகோதரர்கள் ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்களாகக் கருதப்படு கிறவர்கள். ஆகவே தாஹுபாய் தன் சொந்த அண்ணனுக்கே விரோதமாய்ச் சென்றான் என்று தானே அர்த்தம். அக்காலத்தில் எவ்வளவு ஆவேசமாகக் கண்டித்துப் பேசினார்கள்! நடந் ததை இன்று திரும்பவும் ஆலோசித்துப் பார்ப் பார்களாயின் பலரும் வேறு விதமாகத் தீர்ப்புக் கூறலாம். ஆனால் அப்போது? கூட்டுப் பண் ணையை உத்தேசித்துத்தானே அன்று அப்படிச் செய்தான்? ஆனால் உண்மையில் அது அவசி யம்தானா? முன்பெல்லாம் இதைப் பற்றி அவ னுக்கு எவ்வித சந்தேகமும் இருந்ததில்லை. ஆனால் யுத்தத்துக்குப் பிறபாடு சில நேரங் களில் அவனுக்கு சஞ்சலம் ஏற்படுவது உண்டு. அவசியமில்லாமல் தனக்கும் கூட்டுப் பண்ணைக் கும் பகைவர்களை சிருஷ்டித்துக் கொண்டது சரிதானா?

''ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்? விழித்துக் கொள், தாஹுபாய்!'' மற்றவர்கள் அவனை உசுப்பிவிட்டுத் திரும்பவும் உரையாடலில் சேர்ந்து கொள்ளும்படிச் செய்வார்கள். மறுபடியும் பேச்சு மும்முரமாக ஆரம்பிக்கும்: குளிர் காலத் தில் உரத்தை எடுத்துச் சென்று வயல்களில்

சேர்த்தாக வேண்டும். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் இதைச் சேகரித்தாக வேண்டும். வண்டிகளில் சக்கரங்கள் இல்லை. சக்கரங்கள் தயாரிக்க மரமும், கட்டுப் போட இரும்புப் பட்டையும் வாங்கியாக வேண்டும். ஆனால் பணத்துக்கு எங்கே போவது? கடன் வாங்க முடியுமா? எதைப் பணயமாய் அளிப்பது? பாங்கி இவர்களுடைய வாய்ச் சொல்லை ஏற்றுக்கொண்டு கடன் அளித்துவிடாதே. பழைய பாசனக் குட்டைகளைப் பழுது பார்த்துச் சரி செய்தாக வேண்டும், புதிய பாசனக் குட்டைகள் தோண்டியாக வேண்டும். இது எளிதல்ல, பிரம்மாண்டமான வேலை. இவ்வேலைகளைக் குளிர் காலத்தில் செய்வது சாத்தியமில்லை. நிலம் உறைந்து கெட்டியாயிருந்தது, அதனுள் மண் வெட்டி அழுந்தவே அழுந்தாது. வசந்தத்திலும் இவ்வேலைகளைச் செய்ய அவகாசம் இல்லை. விதைப்பு வேலைகளுக்கும், ஆடுகள் குட்டிபோடுவதற்கும் களையெடுத்தல், புல்லறுத்தல் முதலான பல வேலைகளுக்கும் உரிய காலம் அது... ஆட்டு மந்தைகளின் நிலை என்ன? குட்டிகளுக்குக் கொட்டகைகள் எங்கே? பால் பண்ணைப் பிரிவிலும் நிலைமைகள் படுமோசமாகவே இருந்தன. கூரை மக்கிப் போய்விட்டது; தீவனம் இல்லை; யாரும் பசு பராமரிப்பாளராக வேலை செய்ய விரும்பவில்லை. பால் பண்ணையில் தினமும் நெடுநேரம் வேலை செய்வதுதான் மிச்சம், முடிவில் பலன் ஏதுமில்லை. இன்னும் எத்தனையோ பிரச்சினைகள், பற்றுக் குறைகள்—

நினைக்கவே பயங்கரமாக இருந்தது.

ஆயினும் அவர்கள் மனதைத் தைரியப்படுத்திக் கொள்வார்கள், கட்சிக் கூட்டத்திலும் பண்ணையின் நிர்வாகக் குழுவிலும் பிரச்சினைகளைத் திரும்பவும் விவாதிப்பார்கள். சோரோதான் பண்ணையின் தலைவன். சோரோவின் அருமை பெருமைகளைத் தாஷுபாய் பல காலத்துக்குப் பிற்பாடு தான் புரிந்து கொள்ள முடிந்தது. குற்றம் கூறுவது சுலபம்தான். தாஷுபாய் ஒரேயொரு மந்தைக்கு மட்டுமே பொறுப்பாளி. ஆனால் சோரோவோ கூட்டுப் பண்ணையின் எல்லா விவகாரங்களுக்கும் பொறுப்பு ஏற்றுக் கொண்டவன். ஆம், சோரோ அபாரத் திடமுடையவனாகவே இருந்துள்ளான். யாவும் நிலை குலைந்து செல்வதாய்த் தோன்றிய நேரத்தில், வட்டார மையத்தின் அதிகாரிகள் அவனைக் கடிந்து கொண்டும் பண்ணையில் எல்லோரும் அவன் மீது சீறிப் பாய்ந்தும் வந்த நேரத்தில் அவன் சிறிதும் மனம் தளர்ந்துவிடவில்லை. சோரோவின் இடத்தில் தாஷுபாய் இருந்திருந்தால் நிச்சயம் அவனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கும், அல்லது தற்கொலை செய்து கொண்டிருந்திருப்பான். ஆனால் சோரோ எதற்கும் அசையாமலிருந்தான், இருதயக் கோளாறு ஏற்படுகின்றவரை தொடர்ந்து பண்ணையை நிர்வகித்து வந்தான். அதற்குப் பிற்பாடும் இரு ஆண்டுகளுக்குக் கட்சி நிறுவகனாகச் செயலாற்றினான். சோரோ எதையும் நயமாகப் பேசி விளங்க வைக்கும் திறன் படைத்தவன். என

வேதான் அவனுடன் பேசிவிட்டுச் செல்லும் போதெல்லாம் தானுபாய்க்குப் புது நம்பிக்கை பிறக்கும். யாவும் சரியாகிவிடும், ஆரம்பத்தில் அவர்கள் கனவு கண்டு வந்ததெல்லாம் முடிவில் நனவாகிவிடும் என்கிற தெளிவுடன் செல்வான். சோரோவிடம் அவனுக்கிருந்த நம்பிக்கை ஒரே யொரு முறைதான் நிலை குலையலாயிற்று, அதற்குரிய குற்றமுங்கூட பெருமளவுக்கு அவனையே சேரும்...

பண்ணை அலுவலகத்திலிருந்து தானுபாய் கடுப்பு மிக்கவனாகப் புருவங்களை நெரித்துக் கொண்டு வெளியே வந்து குதிரையின் சேணத் தின் மீது தாவியமர்ந்து கோபமாய் லகானை உலுக்குகையில், அவனை வதைத்த இந்தச் சிந்தனைகள் குல்சாரிக்குத் தெரியாதுதான். ஆனால் தன் எஜமானன் துன்புறுகிறான் என்பதை அது தெளிவாய் உணர்ந்து கொண்டுவிடும். தானுபாய் ஒருபோதும் குல்சாரியை அடித்த தில்லை என்றாலும், இது போன்ற தருணங்களில் அவனிடம் அதற்கு அச்சமாகவே இருக்கும். சாலையில் அப்பொழுது அவர்கள் அந்தப் பெண்ணைச் சந்திக்க நேர்ந்தால் எஜமானனின் மனநிலை மாறி அன்பு மிக்கவனாகிவிடுவான் என்பது குல்சாரிக்குத் தெரியும். லகானை இழுத் துப்பிடித்து அவளுடன் இதமாகப் பேச முற்படு வான். அவள் குல்சாரியின் பிடரியில் தட்டிக் கொடுத்து அதன் கழுத்தை வருடிவிடுவாள். அவளைப் போல வேறு யாருக்கும் அவ்வளவு மிருதுவான கைகள் இருந்ததில்லை. அற்புதமான

கைகள் அவை, நெற்றியில் நட்சத்திரத்தை யுடைய சிவந்த பேனிப் பெண் குதிரைக் குட்டியின் உதடுகளைப் போல மிருதுவாகவும் இதமாகவும் இருக்கும். அவளுடைய கண்களைப் போல் உலகில் வேறு யாரிடத்தும் காண முடி யாது. தாஞபாய் சேணத்திலிருந்து அவள் பக்கம் குனிந்து கொண்டு பேசுகையில் அவள் சிரித்துக் கொள்வாள், அல்லது முகத் தைச் சுளித்துக் கொள்வாள், அல்லது தனக்கு உடன்பாடில்லை என்பதைத் தெரிவிக்கும் முறை யில் தலையை அசைத்துக் கொள்வாள். வேகமாக ஓடும் அருவியின் அடியிலுள்ள பளிங்குக் கற் களைப் போல அவளுடைய கண்கள் கருமை குறைந்து மென்னிறம் பெற்று மீண்டும் கறுத்து விடும். அவனிடமிருந்து பிரிந்து செல்கையில் திரும்பிப் பார்த்துவிட்டுத் திரும்பவும் தலையை ஆட்டிக் கொள்வாள்.

சிந்தனையில் ஆழ்ந்தவனுகத் தாஞபாய் அவன் பாதையிலே தொடர்ந்து போய்க் கொண்டிருப் பான். லகான்களைத் தளர்த்திக் குதிரையை அதன் நடையிலே போக விடுவான். இலாவக மான கெச்சை நடையே அதன் வழக்கமான நடை. தாஞபாய் குதிரையின் மீது சேணத்தில் அமர்ந்திருப்பதாகவே தெரியாது. அவனும் குதிரையும் தனித்தனியே தாமாகவே போய்க் கொண்டிருப்பது போலிருக்கும். பிறகு ஒரு பாட்டு உருவாகிவிடும். அதுவும் தானுகவே தோன்றியது போல வெளிப்படும். குலுங்கா நடையானின் ஒழுங்கு தவருத கெச்சை நடைக்கு

இசைவான தாளத்தில் தானுபாய் மெள்ளப் பாடுவான். நெடுங் காலத்துக்கு முற்பட்ட மக்களது துயரங்களைக் கூறும் அந்தப் பாட்டின் சொற்களை விழுங்கிவிட்டு மெட்டை மட்டும் இசைப்பான். அவனுடைய குதிரை வழக்கமான பாதையிலே ஆற்றைக் கடந்து ஸ்தெப்பியிலுள்ள மந்தைகளை நோக்கி அவனை ஏற்றிச் செல்லும்.

எஜமானன் இம்மாதிரியான மன நிலையில் இருக்கையில் குல்சாரி ஆனந்தப்பட்டுக் கொள்ளும். அதற்கு அந்தப் பெண்ணைப் பிடித்திருந்தது. அவளுடைய உருவத்தையும் நடையையும் உடனே அது அடையாளம் கண்டு கொண்டு விடும். அதற்குத் தெரியாத ஒருவகைப் புல்லின் விநோதமான மணத்துடன் கூடியவளாய் அதன் கூர் உணர்வு கொண்ட நாசிகள் அவளை அடையாளம் தெரிந்து கூறிவிடும். கிராம்பின் மணம் அது. அவள் கிராம்பு மணி ஆரம் அணிந்திருந்தாள்.

''பியூபியூஜான்! குல்சாரிக்கு உன்மேல் எவ்வளவு ஆசை, பாரேன்'' என்று தானுபாய் அவளிடம் சொல்வான். ''திரும்பவும் தட்டிப் பாரேன். சிறு குட்டி போல எப்படிக் காதுகளை ஆட்டிக் கொள்கிறது பார். மந்தைக்குத் திரும்பியதும் அதற்கு ஆவேசம் வந்துவிடும். அதன் வழியில் விட்டோமானால் நாய் சண்டை போடுகிற மாதிரி பொலி குதிரைகளுடன் சண்டை போடும். அதனால் தான் அதற்கு நான் சேணமிட்டுப் பெரும் பகுதி நேரம் அதன்மீது சவாரி செய்து வருகிறேன். இன்னும் அது இளங்

குட்டியாகவே இருக்கிறது, பொலி குதிரைகள் அதைக் காயப்படுத்திவிடுமென்று எனக்குப் பயம்.''

''எனக்குத் தெரியும், அதற்கு என்னைப் பிடித் திருக்கிறது'' என்று எதையோ நினைத்தவளாக அவள் பதிலளித்தாள்.

''அப்படியென்ருல், மற்றவர்களுக்கு உன்னைப் பிடிக்காதா?''

''நான் அப்படிச் சொல்லவில்லை. ஆனுல் காதலுக்குரிய காலத்தைக் கடந்தவர்கள் நாம். நீ துன்பமடைவதைக் கண்டு நான் மனம் வருந்த விரும்பவில்லை.''

''நான் ஏன் துன்பமடைய வேண்டும்?''

''ஏனென்ருல் நீ ஏனையோரைப் போன்ற வனல்ல, வேறு விதமானவன். நீ துன்பமடை வாய்.''

''நீ மட்டும் எப்படியாம்?''

''என்னைப் பற்றி நான் கவலைப்படவில்லை. யுத்தத்தில் கணவனை இழந்தவள் நான். ஆனுல் நீ...''

''நான் தணிக்கைக் குழு உறுப்பினன். போகிற வழியில் உன்னைச் சந்திக்க நேர்ந்தது. சில விவரங்களை உன்னிடம் விசாரித்துத் தெரிந்து கொள்கிறேன்'' என்று தானுபாய் வேடிக்கை யாய்ப் பேசும் பாவனையில் பேச முயன்ருன்.

''விசாரித்து விவரம் தெரிந்து கொள்ள நாள் தவருமல் என்னுடன் நின்று பேச வேண் டியதில்லை. நீ எச்சரிக்கையாக இருப்பது நல்லது.''

''எதைப் பற்றி நான் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்கிறாய்? சாலையிலே நான் போக நேர்ந்தது, அதே போல நீயும் வர நேர்ந்தது— அவ்வளவுதான்.''

''நான் போகும் வழி வேறு. நாம் பிரிய வேண்டிய இடம் வந்துவிட்டது. போய் வருகிறேன். பேச நேரமில்லை எனக்கு.''

''பியூபியூஜான், கொஞ்சம் இரு!''

''எதற்காக? தாறுபாய், என்னை இருக்கச் சொல்லிப் பயனில்லை. நீ விபரம் அறியாதவனல்ல. ஏற்கெனவே எனக்கு இருக்கிற கஷ்டம் போதும்.''

''உனக்கு நான் பகைவனல்ல, பியூபியூ ஜான்.''

''உனக்கேதான் நீ பெரும் பகைவன்.''

''அதற்கு என்ன அர்த்தம்?''

''உன் இஷ்டம் போல் அர்த்தப்படுத்திக் கொள்.''

உடனே அவள் வேகமாக நடந்து போய் விடுவாள். தாறுபாயும் ஏதோ வேலையாகப் போகிறவனைப் போல கிராமத் தெருக்களில் குதிரையை ஓட்டிச் செல்வான். மாவாலை அல்லது பள்ளிக்கூடம் வரை சென்றபின் திரும்பி வந்து தொலைவிலிருந்தபடி அவள் தனது மாமியார் வீட்டிலிருந்து வெளியே வருவதைப் பார்ப்பான். பகற் பொழுதில் மகளை மாமியாரிடம் விட்டுவிட்டுச் சென்றவள் இப்பொழுது குழந்தையைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு தன் சொந்த வீட்டுக்குச்

செல்வாள். அவன் பக்கம் திரும்பிப் பார்க்க விரும்பாதவளைப் போல அவள் நடந்து செல்லும் முறை, கரிய கம்பளிச் சால்வையினுள்ளிருந்து தெரிந்த அவளுடைய வெளுத்த முகம், அவளுடைய பெண் குழந்தை, அதனுடன் ஓடிய நாய்க் குட்டி—யாவும் கண்நிறைந்த காட்சியாக அவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்.

முடிவில் அவள் தனது வீட்டின் வேலிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே மறைந்து விடுவாள். அவன் தொடர்ந்து தன் பாதையிலே போய்க் கொண்டிருப்பான். காலி வீட்டின் கதவை அவள் திறப்பது அவன் மனக்கண்ணில் தெரியும். உள்ளே சென்றதும் அவள் தனது மெத்தைக் கோட்டைக் கழற்றிப் போட்டு விட்டுப் பருத்தி உடையுடன் வெளியே கிணற்றடிக்கு ஓடுவாள். பிறகு அடுப்பை மூட்டுவாள். முகம் கழுவிக் கொள்வாள்; குழந்தைக்கு உணவு ஊட்டுவாள். மந்தை திரும்பியதும் தனது பசுவை அழைத்துச் செல்ல வெளியே வருவாள். நிசப்தமான அவ்வீட்டில் இரவு நெடுநேரமான பிறகும் தூங்காமல் இருட்டில் தனியே படுத்திருப்பாள். காதலுக்கு இடமில்லை, அவன் குடும்பஸ்தன், இந்த வயதில் காதல் கொள்வது பைத்தியக்காரத்தனம், காலக் கிரமம் வேண்டும், அவன் மனைவி ஓர் உத்தமி, அவள் மனம் வருந்தும்படி நடப்பது சரியல்ல என்பதாகத் தனக்கும் அவனுக்கும் வற்புறுத்த முயன்றவாறு படுத்திருப்பாள்.

இந்தச் சிந்தனைகள் தானுபாய்க்குச் சோக மூட்டுவதாயிருக்கும். ''விதி நமக்கு எதிராக இருக்கிறது'' என்று சொல்லி ஆற்றுக்கு அப்பால் தெரிந்த மங்கிய ஒளியினுள் உற்றுப் பார்த்த படியே பழங்காலத்துப் பாட்டு ஒன்றைப் பாடு வான். உலகிலுள்ள ஏனைய யாவற்றையும் இப்பொழுது அவன் மறந்துவிடுவான். தனக் குள்ள வேலைகள், கூட்டுப் பண்ணை, குழந்தை களுக்கு வேண்டிய துணிமணி, பாத அணிகள், தன் நண்பர்கள், பகைவர்கள், இத்தனை ஆண்டு களாய்த் தன்னுடன் பேசாமலே இருந்துவரும் ஒன்றுவிட்ட சகோதரன் குலுபாய், அவன் கனவுகளில் அடிக்கடி தோன்றி அவனை வியர்த்து விருவிருக்க வைத்துவிடும் யுத்தம் ஆகிய யாவற் றையும் அடியோடு மறந்துவிட்டு எதார்த் தத்தைப் பற்றி நினைவு இல்லாதவனுகப் போய்க் கொண்டிருப்பான். குதிரை ஆற்றைக் கடந்ததையும் எதிர்க் கரையில் தொடர்ந்து போய்க் கொண்டிருப்பதையும் கவனியாதவனுக உட்கார்ந்திருப்பான். மந்தை அருகிலிருப் பதை நாசியால் உணர்ந்த குல்சாரி துடித்து ஓடத் தொடங்கிய பிறகே மோன நிலையிலி ருந்து திடுதிப் பென்று விழித்துக் கொள் வான்.

''ஏய், குல்சாரி! அவசரம் வேண்டாம்!'' என்று துணுக்குற்று லகானை இழுத்துப் பிடிப் பான்.

# 5

தாஜுபாய்க்கும் குல்சாரிக்கும் அது அதியற்புதமான காலம். குலுங்கா நடையானின் புகழ் கால் பந்தாட்டக்காரனின் புகழை ஒத்தது. நேற்று வரை பந்தை உதைத்துக் கொண்டு ஓடிய சிறுவனாய் இருந்தவன் இன்று திடீரெனப் பொது மக்களால் போற்றிப் புகழப்படும் வீரனாகிவிடுகிறான். போட்டி விளையாட்டு நிபுணர்கள் அவனைப் பற்றிக் காரசாரமாக விவாதிக்கிறார்கள். திரள் திரளான கூட்டத்தினரின் உள்ளங் கவரும் வெற்றியாளனாகிவிடுகிறான். அவன் கோல்கள் போடும் வரை அவன் கீர்த்தி ஓங்கி உயர்ந்து செல்கிறது. பிறகு சிறிது சிறிதாக மங்கி, முடிவில் எல்லோராலும் அறவே மறக்கப்பட்டவனாகிவிடுகிறான். முன்பு அவனை வானுற உயர்த்திப் புகழ்ந்தவர்கள்தான் எல்லோருக்கும் முதலாக இப்பொழுது அடியோடு அவனை மறந்துவிடுகிறார்கள். முன்பு பெரும் புகழ் படைத்தவனாக விளங்கிய அவனுக்குப் பதிலாக இப்பொழுது ஒரு புதிய நட்சத்திரம் உதித்தெழுகிறது. பந்தயக் குதிரையின் கீர்த்தியும் இப்படிப்பட்டது தான். பந்தயங்களில் வெற்றி வாகை சூடிவரும் வரையில் அதன் புகழ் ஓங்கிய வண்ணமுள்ளது. ஒரேயொரு வித்தியாசம் என்னவெனில் குதிரை மீது யாரும் பொறாமை கொள்வதில்லை. குதிரைகள் பொறாமையை அறியாதவை, அதிர்ஷ்டவசமாய் மனிதர்கள் குதிரைகள்மீது பொறாமை கொள்ள

இன்னும் கற்றுக் கொள்ளவில்லை...

அன்று கிழவர் தொர்கோய் கூறியது அப்படியே உண்மையாகிவிட்டது. அந்த வசந்தத்தில் குலுங்கா நடையான் மிக வேகமாகப் பேரும் புகழும் பெற்றது. இளைஞர், முதியோர் அனைவராலும் போற்றப்பட்டது. ''குல்சாரி!'', ''தானபாயின் குலுங்கா நடையான்'', ''கிராமத்தின் புகழ் ஒளி'' என்று அவர்கள் அதைப் புகழ்ந்து கொண்டனர்.

புழுதி பறந்த தெருவில் மூன்று நான்கு வயதான சிறுவர்கள் குலுங்கா நடையானைப் போல ஓடி ''நான்தான் குல்சாரி!'', ''இல்லை, நான்தான் குல்சாரி!'', ''அம்மா அவனிடம் சொல்லேன், நான் தான் குல்சாரி! நானே தான்!'' என்று கூச்சலிட்டனர்.

முதலாவது பெரிய பந்தயத்திலேயே குலுங்கா நடையான் புகழின் சிறப்பையும் சக்தியையும் தெரிந்து கொண்டுவிட்டது. மே தினம் அது. மாபெரும் பொதுக் கூட்டம் முடிவுற்றதும் ஆற்றின் ஓரத்தில் விசாலமான புல்வெளியில் போட்டிகள் ஆரம்பமாயின. நெடுந் தொலைவுகளிலிருந்தும் பக்கத்து அரசுப் பண்ணையிலிருந்தும் மலைகளிலிருந்தும்—கஸாக்ஸ்தானிலிருந்தும்கூட—மக்கள் வந்திருந்தனர். கஸாக்குகள் தமது பந்தயக் குதிரைகளைக் கொண்டு வந்திருந்தனர்.

யுத்தத்துக்குப் பிறகு கூடிய கூட்டங்களில் இதுவே மிகப் பெரியதென்று பேசப்பட்டது.

அன்று அதிகாலையில் தானபாய் தன் குதி

ரைக்குச் சேணமிட்டு என்றையும் விடக் கவன மாகச் சுற்றுப்பட்டையையும் அங்கவடிகளையும் ஒழுங்கு செய்தான். அவன் கண்களில் பளிச் சிட்ட பரபரப்பும் அவன் கைகளுடைய இலே சான துடிப்பும் ஏதோ அசாதாரண நிகழ்ச்சி நடைபெறப் போவதைக் குலுங்கா நடையா னுக்கு உணர்த்தின.

''குல்சாரி, என்னை ஏமாற்றிவிடாதே.'' குதிரையின் பிடரியையும் முன்முடிகளையும் கோதியபடி தானுபாய் அதன் காதுக்குள் சொன்னான். ''உன் பெயருக்கு இழுக்கு ஏற் படுத்தி விடாதே. காதில் விழுகிறதா? அதற்கு நமக்கு உரிமையில்லை, தெரிகிறதா?''

எல்லோருடைய மூச்சிலும் பரபரப்பான பேச்சிலும், சந்தடியிலும் இரைச்சலிலும் ஆவ லும் துடிப்பும் நிறைந்திருந்தன. மலைகளில் புல்வெளிகளில் மந்தைக்காரர்கள் தமது குதிரை களுக்குச் சேணமிட்டனர். சிறுவர்கள் அங்கு மிங்கும் ஓடினர். பிறகு மந்தைக்காரர்கள் ஒன்றுகூடித் திரளாக ஆற்றை நோக்கிப் புறப் பட்டனர்.

புல்வெளியில் பெருந்திரளாகக் கூடியிருந்த மக்களையும் குதிரைகளையும் கண்டு குல்சாரி மலைத்துப் போய்விட்டது. ஆறு, புல்வெளி, வெள்ளப் பெருக்கில் மூடிய நிலங்களின் ஓரத்தி லிருந்த குன்றுகள் ஆகிய யாவற்றின்மீதும் சப்தம் அதிர்ந்தது. கண்ணைப் பறிக்கும் வண்ணச் சால்வைகளையும் ஆடைகளையும் செங்கொடி களையும் பெண்களுடைய வெண்ணிறத் தலைப்

பாகைகளேயும் கண்டு குல்சாரி மதிமயங்கியது. குதிரைகள் சித்திர வேலைப்பாடு செய்யப்பட்ட சேணங்களை அணிந்திருந்தன. அங்கவடிகள் கிணுகிணுத்தன, கடிவாள இரும்புகளும் வெள்ளி மார்புக் கவசங்களில் தொங்கிய பதக்கங்களும் கணீரென்று ஒலி எழுப்பின.

கூட்டமாக நிறுத்தப்பட்டிருந்த குதிரைகள் பொறுமையிழந்து கால்களைத் தட்டின, புறப் படத் தயாராய் எகிறிக்கொண்டு நின்றன, தரையைக் குளம்பால் பிருண்டின. போட்டி களுக்குப் பொறுப்பான கிழவர்கள் அந்த அகன்ற வட்டத்துக்குள் குதிரைகளில் அங்குமிங்கும் பாய்ந்தோடினர்.

குல்சாரியின் தசைநார்கள் மீட்டிவிடப் பெற்ற நிலையில் தயாராயிருந்தன. தன்னுள் தன் பலம் கிளர்ந்தெழ அது துடியாய் நின்றது. அதன் இரத்த நாளங்களில் ஆவேசங் கொண்ட சைத் தான் புகுந்து கொண்டு அதைப் படுத்தி வைத் தது. வட்டத்தினுள் பாய்ந்து அதிவேகமாய்ப் பறந்தோடினாலன்றி அந்தச் சைத்தானை வெளியே விரட்ட முடியாது போலிருந்தது.

போட்டிகளின் துவக்கத்தைத் தலைவர் அறி வித்ததும் தானுபாய் லகானைத் தளர்த்தினன். குலுங்கா நடையான் உடனே அவனைத் தூக்கிக் கொண்டு வட்டத்தின் நடுமையத்துக்கு ஓடிற்று. பிறகு எத்திசையில் செல்வதென்று விளங்காமல் திடுமெனத் திரும்பிற்று. கூட்டத்தினர் ''குல் சாரி, அதோ குல்சாரி!..'' என்று பரபரப் புடன் கூறிக் கொண்டனர்.

அந்தப் பெரிய பந்தயத்தில் பங்கு கொள்ள விரும்பியோர் எல்லோரும் வட்டத்திற்குள் வந்து விட்டனர். மொத்தம் சுமார் ஐம்பது குதிரைவீரர்கள் நின்றனர்.

''மக்களிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளுங்கள்!'' போட்டித் தலைவர் உருக்கமான குரலில் அறிவித்தார்.

சிரைத்த தலைகளில் காப்புகள் கட்டியிருந்த போட்டியாளர்கள் விரல்களை விரித்துக் கைகளை உயர்த்தியபடி வரிசையாய் அணி வகுத்துச் சென்றனர். ''ஓமீன்!'' என்னும் வாழ்த்தொலி கூட்டத்தினரிடமிருந்து எழுந்தது; நூற்றுக் கணக்கான கரங்கள் உயர்ந்து தம் நெற்றிகளைத் தொட்டுத்தடவின; பிறகு வழிந்தோடும் நீரைப் போல முகங்களில் சரிந்து சென்றன.

பிறகு போட்டியாளர்கள் ஆறு மைலுக்கு அப்பால் ஒரு வெளியில் குறிக்கப்பட்டிருந்த துவக்கக் கோட்டை நோக்கிக் குதிரைகளில் பாய்ந்தோடினர்.

இதற்கிடையில் வட்டத்தினுள் போட்டியாட்டங்கள் ஆரம்பமாயின. தரையில் நின்றவர்களுக்கிடையிலும், குதிரைகளிலே அமர்ந்தவர்களுக்கிடையிலும் மற்போர்களும், குதிரையிலே ஓடிவந்து தரையிலுள்ள காசுகளை எடுத்துச் செல்லும் போட்டிகளும், மற்றும் பலவும் நடைபெற்றன. இப்போட்டிகள் யாவும் பூர்வாங்க நிகழ்ச்சிகள் தான். அன்றைய பிரதான நிகழ்ச்சி குதிரைவீரர்கள் நின்ற தொடக்கக் கோட்டிலிருந்துதான் தொடங்கவிருந்தது.

குல்சாரி கடிவாள இரும்பிலிருந்து விடுபட வேண்டுமென்று முண்டிக் கொண்டு நின்றது. எஜமானன் தன்னை முன்னே செல்லவிடாது ஏன் இப்படி இழுத்துப் பிடிக்க வேண்டுமென்று அதற்கு விளங்கவில்லை. அதன் இரு பக்கங்களிலும் நின்ற குதிரைகளும் இதே போலத்தான் துள்ளித் துடித்தன. அங்கே இத்தனை குதிரைகள் துடித்துக் கொண்டு நின்றதையும், யாவும் கடிவாளக் கயிறுகளிலிருந்து திமிறிக் கொண்டு ஓட முயன்றதையும் கண்ட குல்சாரி பொறுமையிழந்து கடுங்கோபம் கொண்டது; அதன் உடல் குலுங்கி அதிர்ந்தது.

முடிவில் எல்லாக் குதிரைகளும் ஒரே வரிசையில் மூக்குகளை வைத்துக்கொண்டு தொடக்கக் கோட்டிலே நின்றன. போட்டித் தலைவர் அவ்வரிசையின் ஒரு முனையிலிருந்து குதிரையிலே சென்று மறு முனையிலே வந்து நின்று வெள்ளைக் கைக் குட்டையை உயர்த்தினார். எல்லாக் குதிரைகளும் கல்லாய் உறைந்து உணர்ச்சித் துடிப்போடு உஷாராக நின்றன. கைக் குட்டை படபடத்து ஆடிற்று. குதிரைகள் முன்னே தாவிப் புறப்பட்டன. குல்சாரி யாவற்றுடனும் ஓடிற்று. இடியென முழக்க மெழுப்பிய குளம்புகளுக்கடியில் தரை அதிர்ந்தது. குதிரைகளுக்குப் பின்னால் புழுதி மேகம் எழுந்தது. சவாரி செய்வோரின் கூச்சலால் கிளர்த்திவிடப்பெற்றுக் குதிரைகள் பரவிச் சிதறிப் பாய்ந்தோடின. பாய்ந்தோடத் தெரியாத குல்சாரி மட்டும் அதற்குரிய குலுங்கா நடை

யிலே ஓடிற்று. அதுவே அதன் பலவீனமும் பலமும்.

ஆரம்பத்தில் கூட்டமாகச் சேர்ந்து ஓடியவை சில கணங்களுக்கெல்லாம் நீள் தொடரில் ஓட முற்பட்டன. குல்சாரி இதைக் கவனிக்க வில்லை. வேக ஓட்டக் குதிரைகள் தன்னை முந்திக் கொண்டு சாலையைச் சென்றடைந்த தைத்தான் அது கண்ணுற்றது. அவற்றின் குளம்புகளுக்கு அடியிலிருந்து கதகதப்பான கூழாங்கற்களும் காய்ந்த களிமண் கட்டிகளும் பறந்தெழுந்து அதன் தலையிலே தட்டின. அதற்கு இடப்புறத்தும் வலப்புறத்தும் குதி ரைகள் பாய்ந்தோடின. அவற்றில் சவாரி செய்தவர்கள் கூச்சலிட்டனர், சவுக்கைக் காற் றிலே சொடுக்கினர். எங்கும் புழுதி கிளர்ந்தெ ழுந்தது. புழுதி மேகம் மேலும் மேலும் பெரி தாகி தரை முழுதும் பரவிற்று. வியர்வை, தீக்கல், மிதிபட்ட இளம் காஞ்சிரைப் பூண்டு இவற்றின் நெடி மூக்கில் ஏறிற்று.

பாதி தூரம் ஓடும்வரை இவ்வாறுதான் இருந்தது. பத்துக் குதிரைகள் பிய்த்துக் கொண்டு குலுங்கா நடையாலுல் ஒருபோதும் அடைய முடியாத வேகத்தில் யாவற்றுக்கும் முன்னுல் பாய்ந்தோடிக் கொண்டிருந்தன. பந்தயத்தின் இரைச்சல் அடங்கத் தொடங்கிற்று. பின்னுல் வந்தவை மேலும் மேலும் பின்தங்கி வந்தன. ஆனுல் தனக்கு முன்னுல் பல குதிரை கள் விரைந்தோடுவதையும் இன்னமும் லகான் இழுத்துப் பிடிக்கப்பட்டு தான் கட்டுப்படுத்

தப்பட்டதையும் கண்டு குல்சாரிக்கு ஆத்திரம் பொங்கிற்று. சீற்றத்தில் அதன் கண்கள் கறுத்து விட்டன. சாலே அதன் குளம்புகளுக்கடியில் பறந் தோடிற்று. விண்ணிலிருந்து தணிந்து நெருப்புக் கோளமாய்த் தொங்கிய கதிரவன் தன்னே நோக்கி உருண்டு வருவதைப் போல குல் சாரிக்குத் தோன்றியது. வெப்பமான வியர்வை அதன் உடம்பை நனேத்தது. வியர்க்க வியர்க்க உடம்பு இலேசாகி வருவது போலிருந்தது.

முன்னே பாய்ந்தோடிக் கொண்டிருந்த குதி ரைகள் களேப்படைந்து கொஞ்சம் கொஞ்சமாக அவற்றின் வேகம் குறையத் தொடங்கிய நேரம் வரலாயிற்று. இது வரை சேமிக்கப்பட்டு வந்த குல்சாரியின் பலம் இப்பொழுது முழு அளவுக்குச் செயல்பட ஆரம்பித்தது. ''குல்சாரி, இனி முன்ஞல் போ!'' என்று கத்திஞன் தாஞபாய். கதிரவன் மேலும் வேகமாய்க் குல்சாரியை நோக்கி உருண்டோடி வந்தான். பிறகு ஏனேய போட்டியாளர்களின் அனல் பறக்கும் முகங் கள் ஒவ்வொன்ருய்க் கடந்து செல்ல குல்சாரி அவற்றை எட்டிப்பிடித்துத் தாண்டிச் சென்றது. சொடுக்கிய சாட்டைகளேயும் பிறகு குதிரை களின் பற்களேயும் திறந்த வாய்களேயும் தாண்டி ஓடிற்று. இது வரை அதைக் கட்டுப்படுத்தி வந்த லகான் திடீரெனத் தளர்ந்துவிட்டது. சேணத்தின் சுமையும் சவாரி செய்பவனின் சுமையும் திடீரென்று மறைந்துவிட்டன. போட்டி யின் ஆவேச உணர்ச்சி அதை ஆட்கொண்டு விட்டது.

அதற்கு முன்னுல் இரு குதிரைகள் — ஒன்று கரு மேனியான் மற்றென்று செக்கர் மேனியான் — ஒன்று சேர்ந்து ஓடிக் கொண்டிருந்தன. அவற்றில் சவாரி செய்த போட்டியாளர்களின் கூச்சல் களாலும் சவுக்குகளாலும் தூண்டிவிடப்பட்டு இரண்டும் ஓர் அங்குலங்கூட ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுக்காமல் ஓடின. இரண்டும் அற்புதமான குதிரைகள். குல்சாரி அவற்றை எட்டிப் பிடிக்க நெடு நேரமாயிற்று. முடிவில் சாலையின் ஏற்றம் ஒன்றில் அது இரண்டை யும் பின்னுல் விட்டுவிட்டு ஓடிற்று. பிரம்மாண்ட அலையின் உச்சியைத் தாண்டிப் பாய்வது போல அந்தக் குன்றின் உச்சியை குல்சாரி தாண்டிச் சென்றது. கண நேரம் எடையில்லாமல் காற் றிலே தொங்குவது போன்ற உணர்ச்சி உண்டா யிற்று. அதன் மூச்சே நின்றுவிடும் போலிருந் தது. பிறகு சரிந்து போகும் சாலையில் பறந் தோடுகையில் அதன் கண் கூசும்படி என்றை யும்விடப் பிரகாசமாகக் கதிரவன் ஒளிக் கற்றை களை அள்ளி வீசினுன். விரைவில் அதன் பின் னுல் குளம்புகளின் இடிமுழக்கம் காது செவிடு படக் கேட்டது. கரு மேனியானும் செக்கர் மேனியானும் அதை எட்டிப் பிடிக்கும் அளவுக்கு நெருங்கிவந்துவிட்டன. குல்சாரியின் இருபுறத் திலும் நெருங்கி வந்துவிட்ட அவை அதன் கூடவே ஓடோடி வந்தன.

மூன்று குதிரைகளும் ஒன்றிணைந்த ஒரே அமைப்பாக இப்படி ஒருமித்துத் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தன. தற்போது தான் ஓடிக்

கொண்டிருக்கவில்லை, அசைவற்று விநோத முறையில் கல்லாக உறைந்து விட்டதாகக் குல்சாரி நினைத்தது. ஏனைய இரு குதிரைகளின் கண்களில் ஒளிர்ந்த உணர்ச்சி பாவத்தையும் கூட அது பார்க்க முடிந்தது. அரு முயற்சியை வெளிக்காட்டிய அவற்றினுடைய தலைகள், வாய் இரும்பில் இறுகிய பற்கள், கடிவாளங்கள் ஆகிய யாவும் தெளிவாக அதற்குத் தெரிந்தன. கரு மேனியானின் வைராக்கியமும் ஆத்திரமும் நன்கு புலப்பட்டன. செக்கர்மேனியானின் சஞ்சலப் பார்வையில் அதன் மிரட்சியைக் காண முடிந்தது. பிறகு செக்கர்மேனியான் பின்னடைந்துவிட்டது. குற்ற உணர்வு வெளிப்பட மிரண்டு பார்த்த அதன் கண் முதலில் மறைந்தது, பிறகு துடிதுடித்த அதன் நாசிகளும் மறைந்தன, இருந்த இடம் தெரியாமல் அந்தக் குதிரை பார்வையை விட்டு அகன்றுவிட்டது. கரு மேனியான் பின்னடைய நெடு நேரமாயிற்று. இது வேதனை மிக்க நிகழ்ச்சியாகச் சிறுகச் சிறுக நடந்தேறியது. அருகில் நின்றபடி உயிரிழந்து வருவதாகத் தோன்றிற்று, செயலற்ற கொடுஞ் சீற்றத்தால் அதன் கண்கள் மங்கிப் போய் பஞ்சடைந்து வந்தன. தோல்வியை ஏற்க மனம் ஒப்பாது அது இப்படி குல்சாரியின் பார்வையிலிருந்து மறையலாயிற்று.

தன்னுடன் போட்டியிட்ட இரு குதிரைகளும் பின்தங்கியதும் குல்சாரி ஓரளவு சுலபமாக மூச்சு விட முடிந்தது. வெள்ளி போலப் பளிச்

சிட்ட ஆற்றின் வளேவும் பச்சைப் புல்வெளியும் தன் முன்னல் தெரியக் கண்டது; தொலே விலிருந்து வந்த மக்கள் குரலின் இரைச்சலேக் கேட்டது. பேராவல் கொண்ட பந்தய ரசிகர்கள் சிலர் குதிரையிலேறி முன்னல் வந்து காத்திருந் தனர். குல்சாரி தம்மை நெருங்கியதும் அதன் பாதையின் இருமருங்கிலுமிருந்து கூச்சலிட்டுக் கோஷம் எழுப்பி அதனுடன் சேர்ந்து ஓடினர். திடீரென்று குல்சாரிக்குத் தன் பலமெல்லாம் மறைந்துவிட்டது போலத் தோன்றிற்று. அளவு மீறிய தொலேவு ஓடி வந்ததன் விளேவு. தன் பின்னல் என்னவாயிற்று, ஏனேய குதிரைகள் தன்னே எட்டிப் பிடிக்க நெருங்கி வருகின்றனவா என்பது அதற்குத் தெரியவில்லே. மிக வேகமாய் அது பலமிழந்து வந்தது. இனியும் தொடர்ந்து தன்னல் ஓடிக் கொண்டிருக்க முடியாது என் பதை உணர்ந்தது.

ஆனல் அதற்கு முன்னல் அங்கே பெருந் திரளாகக் கூடியிருந்த மக்கள் கிளர்ந்தெழுந்து கர்ச்சனே செய்தனர். ஓடி வந்தவர்களும் குதி ரையில் வந்தவர்களுமாய்ச் சேர்ந்து அரவணேக்கும் இரு கரங்களேப் போல் குல்சாரியை நோக்கி நகர்ந்து வந்தனர். கூச்சல் மேலும் மேலும் பலமாகக் கேட்டது. அவர்கள் முழங்கியது இப்பொழுது அதன் காதில் தெளிவாக விழுந் தது: ''குல்சாரி! குல்சாரி! குல்சாரி!..'' ஆர்வக் கூச்சல்களேயும் கோஷங்களேயும் கேட்டு காற்றை இழுப்பது போல அவற்றை இழுத்து நெஞ் சினுள் நிரப்பிக் கொண்டு புது பலம் பெற்று

குல்சாரி முன்ஞல் பறந்தோடிற்று. மக்களின் பலம் மகத்தானது! ஜனசக்தியே சக்தி!..

மகிழ்ச்சி ஆரவாரமிட்டுப் பொங்கிய ஜன சமுத்திரத்தின் இடையமைந்த ஓட்டப் பாதை யிலே குல்சாரி அதி வேகமாய் ஓடிற்று. பிறகு வேகத்தைக் குறைத்துக் கொண்டு புல்வெளி யிலே வட்டமிட்டுத் திரும்பிற்று.

அத்துடன் முடிவுற்றுவிடவில்லை. இப்பொ ழுதுங்கூட குல்சாரியோ தாஞபாயோ சற்று அமைதியாய் நின்று களைப்பாற முடியவில்லை. குல்சாரி மூச்சு விட்டுச் சற்றே நிதானமடைந்தி ருக்கும். மக்கள் அதற்குள் வெற்றியாளனுக்கு வட்டமாய் இடைவெளி விட்டு விலகி நின்று கொண்டனர். திரும்பவும் கோஷம் கிளர்ந் தெழுந்தது: ''குல்சாரி! குல்சாரி! குல்சாரி!'' அதன் எஜமானனின் பெயரையும் அவர்கள் முழங்கினர்: ''தாஞபாய்! தாஞபாய்! தாஞ பாய்!''

மக்களின் ஆர்வ முழக்கம் திரும்பவும் குல்சாரி யிடம் அதியற்புத விளைவை உண்டாக்கிற்று. பெருமைக்குரிய வெற்றியாளனைத் தலையைக் கம்பீரமாக உயர்த்திக் கொண்டு கண்களில் ஒளிமின்ன வட்டத்தினுள் நுழைந்தது. இந்தப் பெருஞ்சிறப்பால் குல்சாரிக்குத் தலை கிறுகிறுத் தது. திரும்பவும் அம்பெனப் பறந்தோடத் தயாராகிவிட்டது போலத் துள்ளித் துடித்தது. தான் எழில் மிக்கவன், சக்தி படைத்தவன், புகழுக்குரியவன் என்பதை அது உணர முடிந்தது.

வெற்றியின் குறியாய்க் கைகளை விரித்துக்

கொண்டு தாளுபாய் இடைவெளிகளுக்கிடையே மேலும் கீழுமாய்க் குதிரையிலே போய் வந்தான். ''ஓமின்'' என்னும் வாழ்த்து மறுபடியும் கூட்டத்தினரிடையே அலைமோதிற்று. மறுபடியும் நூற்றுக் கணக்கான கரங்கள் உயர்ந்து நெற்றியைத் தொட்டன, பிறகு வழிந்தோடும் நீரைப் போல முகங்களிலே சரிந்து சென்றன.

எண்ணற்ற அம்முகங்களிடையே குலுங்கா நடையான் தான் நன்கு அறிந்த ஒரு முகத்தைத் திடுமென அடையாளம் கண்டு கொண்டு விட்டது. அந்தப் பெண்ணின் முகம் அது. இப்பொழுது அவள் கரு நிறச் சால்வைக்குப் பதில் வெள்ளைச் சால்வை அணிந்திருந்தாள். இருப்பினும் அவளுடைய உள்ளங் கைகள் அவள் முகத்திலிருந்து கீழே சரிந்த அக்கணத்தில் குல்சாரி அவளை அடையாளம் தெரிந்து கொண்டு விட்டது. மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து முன் வரிசையிலே அவள் நின்று கொண்டிருந்தாள். கதிரவன் ஒளி பளிச்சிட்டு விளையாடும் அருவியின் அடியிலுள்ள பளிங்குக் கற்கள்போல் பிரகாசித்த அவளுடைய கண்கள் அவர்களை விட்டு விலகவே இல்லை. குல்சாரி நெருங்கிச் சென்று அவள் பக்கத்திலே நிற்க விரும்பிற்று. தன் எஜமானன் அவளுடன் பேச வேண்டும், நெற்றியிலே நட்சத்திரமுடைய செக்கர் மேனிப் பெண் குதிரைக் குட்டியின் உதடுகளைப் போல மிருதுவாகவும் இதமாயுமுள்ள அந்த அற்புதக் கைகளால் அவள் தனது பிடரியைத் தட்டிக் கொடுத்துக் கழுத்தை வருடிவிட வேண்டும்

என்று அது விரும்பிற்று. ஆனல் எக்காரணமோ தெரியவில்லை தானுபாய் எதிர்த் திசையிலே அதன் லகானைப் பிடித்திழுத்துக் கொண்டிருந் தான். தனது எஜமானனின் செயல் அதற்குப் புரியாப் புதிராக இருந்தது. அவளைச் சென்ற டையும் பொருட்டு அது முன்னங் கால்களை உயர்த்தித் தாவ முயன்று கொண்டிருந்தது. அவன் பேச வேண்டிய அந்தப் பெண் அதோ எதிரே நிற்பதைக் காண முடியாதபடி எஜ மானன் பார்வை இழந்தா போய்விட்டான்?..

மே இரண்டாம் நாளான மறு தினமும் குல்சாரிக்குச் சிறப்பு மிக்க நாள்தான். ஸ்தெப்பி வெளியில் நண்பகலில் வெள்ளாடு-பற்றும் போட் டிக்கு ஏற்பாடாகியிருந்தது. போலோவைப் போன்றதோர் ஆட்டம் இது. பந்துக்குப் பதிலாகத் தலை வெட்டப்பட்ட வெள்ளாட்டின் முண்டம் உபயோகிக்கப்பட்டது. வெள்ளாட் டின் ரோமம் நீளமாகவும் முரடாகவும் இருப் பதால் ஆட்டக்காரர்கள் எளிதில் அதைப் பற்றிக் கொண்டு முண்டத்தை எடுத்துக் கொண்டு ஓடலாம்.

ஸ்தெப்பி வெளியில் பண்டைப் பெரும் கூச்சல் திரும்பவும் ஒலித்தது. பூமி திரும்பவும் அதிர்ந்தது. ஆட்ட ரசிகர்கள் குதிரைகளில் ஏறிக் கூச்சலிட்டுக் கோஷமிட்டவாறு ஆட்டக் காரர்களைச் சுற்றி ஓடினர். திரும்பவும் குல்சாரி விழா நாளின் வீரனாக விளங்கிற்று. ஏற்கனவே புகழ் பெற்றுவிட்ட அது இம்முறை உடனடி

யாகவே இந்த ஆட்டத்தில் வலிவுமிக்க முதற் பெரும் குதிரையாகப் போற்றப்பட்டது. இருப் பினும் தானுபாய் தலைமையான இறுதி ஆட்ட மான அலாமன்-பெய்காவுக்காக அதை அடக் கியிருத்திக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். ஆட்டத் தலைவர் இந்த ஆட்டத்துக்குரிய துவக்க அறிவிப்பை அளித்ததும் எவரும் கலந்து கொள் ளத்தக்க பெரும் போட்டி ஆரம்பமாகிவிடும். ஏனையோர் அனைவரையும்விட சாதுர்யமும் விரைவும் கொண்ட ஆட்டக்காரர் ஆட்டைப் பற்றிக் கொண்டு தனது கிராமத்துக்கு எடுத்துச் செல்வார். அன்றைய ஆட்டங்களிலே தலைமை யான இந்த அலாமன்-பெய்காவுக்காக எல்லோரும் ஆவலுடன் காத்திருந்தனர். எந்தக் குதிரை வீரனும் இதில் பங்கு கொள்ள உரிமை பெற் றவன். ஒவ்வொருவரும் தமது திறமையைச் சோதித்துப் பார்க்கவிரும்பினுர்.

தொலைவில் கஸாக் தரப்பினரின் வெளியில் மே மாதக் கதிரவன் அடிவானத்தை நோக்கித் தணிந்து வந்து கொண்டிருந்தது; முட்டையின் மஞ்சள் கரு போல அடர்ந்த மஞ்சள் கோள மாகத் தொங்கியது. மறைவு எதுவுமின்றி நேரே வெறுங் கண்ணுல் அதை உற்று நோக்க முடிந்தது.

கிர்கீஸிய, கஸாக்கியக் குதிரை வீரர்கள் போட்டியிட்டுக் கொண்டு அங்குமிங்கும் ஓடினர். சேணங்களிலிருந்து குனிந்து தொங்கியவாறு தாவிச் சென்று ஆட்டின் முண்டத்தைப் பற்றிக் கொண்டும், ஒருவரிடமிருந்து ஒருவர் பிடுங்கிக்

கொண்டும் ஓடினர். பிறகு கூச்சலிடும் கூட்டமாய் ஒன்று சேர்ந்தனர்; மறுபடியும் கோஷமிட்டுச் சிதறி வெளியின் குறுக்கே பறந்தோடினர்.

பல்வேறு வடிவங்களிலும் அமைந்த நீண்ட நெடும் நிழல்கள் ஸ்தெப்பியின் குறுக்கே ஓட்டமாக ஓடிய ஒரு கணத்தில், ஆட்டத் தலைவர் அலாமன்-பெய்கா ஆட்டம் தொடங்கிவிட்டதென்று அறிவித்தார். ''அலாமன்!'' என்று கூவியவாறு ஆட்டின் முண்டம் வட்டத்தினுள் எறியப்பட்டது.

உடனே குதிரை வீரர்கள் அதைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு ஒருவரோடொருவர் முண்டியடித்துத் தள்ளியபடி அதைப் பற்றிக் கொள்ள முயன்றனர். அந்தப் பெரிய நெரிசலுக்கிடையே இது செயற்கரிய செயலாகும். குதிரைகள் பற்களை வெளியே தெரியும்படிக் காட்டி ஒன்றையொன்று கடித்துக் கொண்டு ஆவேசமாகச் சுழன்று திரும்பின. இந்த நெரிசலுக்கிடையே சிக்கிய குல்சாரி தவியாகத் தவித்தது. திறந்த வெளிகளை அடைய வேண்டுமென்று அது ஏங்கிற்று. ஆனால் தானுபாயால் ஆட்டைப் பற்றிக் கொள்ள முடியவில்லை. திடுமெனக் கீச்சுக் குரலில் கூச்சல் எழுந்தது: ''கஸாக்குகள் பற்றிக் கொண்டுவிட்டனர்! விடாதே! விடாதே!'' கிழிந்துபோன பட்டாளத்துச் சட்டை அணிந்த கஸாக் இளைஞன் ஒருவன் கருஞ்சிவப்புப் பொலிகுதிரையில் முண்டிக்கொண்டு நின்று ஏனைய குதிரைகளிடமிருந்து பிய்த்துக் கொண்டு

ஓடினுன். காலுக்கடியில் அங்கவடியின் தோலுக்குக் கீழ் வெள்ளாட்டு முண்டத்தை இழுத்து அழுத்திக் கொண்டு குதிரையை விரட்டிச் சென்ருன்.

''தாஞபாய், விடாதே பிடி! கருஞ்சிவப்புக் குதிரையிலே போகிருன் பார், பிடி! நீ ஒருவன் தான் அவனைப் பிடிக்கக் கூடியவன்!'' என்று அவனை விரட்டிச் சென்றவர்கள் தாஞபாயைப் பார்த்துக் கத்தினர்.

கருஞ்சிவப்பு பொலிகுதிரையில் அந்தக் கஸாக் இளைஞன் காலுக்கடியில் முண்டம் எம்பியெம்பி ஆட, அடிவானத்தில் மறைந்து கொண்டிருந்த கதிரவனை நோக்கிப் பறந்தோடிக் கொண்டிருந் தான். எக்கணத்திலும் அவன் அந்த நெருப்புக் கோளத்துக்குள் பறந்து, பொசுங்கிச் சிவப்புப் புகைச் சுருளாகிவிடுவான் போலத் தோன்றி யது.

தாஞபாய் ஏன் தன்னை இழுத்துப் பிடித்து அடக்குகிருன் என்று குல்சாரியால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனுல் கஸாக் குதிரை வீரன் பெருந் திரளாகத் தன்னை விரட்டி வருவோரையும் தனக்கு உதவக் கூட்டமாய் ஓடி வரும் தன் இனத்தோரையும் விட்டுப் பிரிந்து முன்னே செல்லும் வரை காத்திருக்க வேண்டுமென்பது குல்சாரியின் எஜமானனுக்குத் தெரியும். கருஞ்சிவப்பு பொலிகுதிரையைச் சுற்றி அவர்கள் காப்பு வளையமிட்டுவிட்டார் களாயின், பரிசை கஸாக் இளைஞனிடமிருந்து பற்றிக் கொள்ள வழி இல்லாமற் போய்விடும்.

அவனைத் தனியே சந்தித்துப் போரிடுவது ஒன்று தான் இனி வெற்றிக்குரிய ஒரே வழி.

தனக்குத் தக்க வாய்ப்பு வரும்வரைக் காத்திருந்துவிட்டுத் தானுபாய் குலுங்கா நடையானை முன்னே பறந்தோடும்படி விட்டான். தரையோடு உடலைப் படிய வைத்துக் கொண்டு அது கதிரவனை நோக்கிப் பறந்தோடிற்று. பின்பக்கத்திலிருந்து கேட்ட குளம்பொலியும் குரல்களும் பின்தங்கி மேலும் மேலும் மங்கிவந்தன, அதே போதில் குல்சாரிக்கும் கருஞ் சிவப்பு பொலி குதிரைக்கும் இடையிலிருந்த தூரம் குறைந்து சென்றது. பொலிகுதிரை பெரும் சுமையைத் தூக்கிச் சென்றது, அதை எட்டிப்பிடிப்பது பெரிய காரியமல்ல. கருஞ் சிவப்புக் குதிரையின் வலப் பக்கமாய்த் தானுபாய் குல்சாரியைச் செலுத்தினான். கஸாக்கின் காலுக்கடியில் கெட்டியாக அப்பக்கத்தில் தான் ஆட்டின் முண்டம் தொங்கிக் கொண்டிருந்தது. குல்சாரி அந்தக் குதிரையை எட்டிப் பிடித்ததும் ஆட்டின் கால்களில் ஒன்றைப் பற்றிக் கொள்வதற்காகத் தானுபாய் சேணத்திலிருந்து சாய்ந்தான். ஆனால் கஸாக் இளைஞன் உடனே தனது பரிசை இடப் பக்கத்துக்கு மாற்றிக் கொண்டுவிட்டான். குதிரைகள் கதிரவனை நோக்கிப் பறந்தோடிக் கொண்டிருந்தன. இனி தானுபாய் பின்தங்கிச் சென்று இடப் பக்கமாகத் திரும்பவும் தனது போட்டியாளனை எட்டிப் பிடித்தாக வேண்டும். குலுங்கா நடையானை அந்தக் கருஞ்சிவப்புக் குதிரையிடமிருந்து பின்தங்குமாறு வேகத்தைக்

குறைக்கச் செய்வது சுலபமாயிருக்கவில்லே. ஆயினும் தாளுபாய் முடிவில் இதில் வெற்றி பெற்ருன். பட்டாளத்துச் சட்டை அணிந்த அவ்விளேஞன் மறுபடியும் ஆட்டு முண்டத்தை வலது பக்கத்துக்கு மாற்றிக் கொண்டுவிட்டான்.

''பலே கைகாரனப்பா!'' என்று உணர்ச்சிப் பரவசமுற்றவனுகத் தாளுபாய் கூச்சலிட்டான்.

குதிரைகள் கதிரவனே நோக்கிப் பறந்தோடிக் கொண்டிருந்தன.

திரும்பவும் பழைய தந்திரத்தைக் கையாண்டு பயனில்லே என்பதைத் தாளுபாய் கண்டான். அதற்குப் பதில் குல்சாரியைக் கருஞ்சிவப்புக் குதிரையை ஒட்டிப் போகச் செய்து பக்கத்துக் குதிரையின் சேணத்தில் தன் உடலேச் சாய்த்து இருத்திக் கொண்டான். அவ்விளேஞன் பிய்த்துக் கொண்டு செல்ல முயன்ருன், ஆனல் தாளுபாய் அதற்கு இடந் தரவில்லே. குல்சாரியின் வேகமும் குழைவும் துணே புரியத் தாளுபாய் இப்பொழுது கருஞ் சிவப்புக் குதிரையின் கழுத்தின் குறுக்கே சாய்ந்து படுத்துக் கொண்டுவிட்டான். முடிவில் ஒரு வகையாகத் தன் கைகளே நீட்டி ஆட்டு முண்டத்தைக் கெட்டியாய்ப் பிடித்துத் தன் பக்கத்துக்கு இழுக்க முயன்ருன். வலது பக்கமாய் எம்பி இரு கைகளேயும் கொண்டு முண்டத்தைப் பிடித்திழுப்பது ஓரளவு சுலபமாயிருந்தது. அனேகமாய் முண்டத்தில் பாதிப் பகுதியைத் தன் பக்கத்துக்கு இழுத்துவிட்டான்.

''கஸாக் சகோதரனே, போச்சு உன் பரிசு!''

என்று கூவியபடி தானுபாய் இழுத்தான்.

''நண்பனே, முடியாது உன்னால்! கிடைக்காது உனக்கு!'' என்று அவ்விளைஞன் கூச்சலிட்டுப் பதிலளித்தான்.

குதிரைகள் இணைந்து பறந்தோட அவற்றின் மீதிருந்த இரு ஆட்டக்காரர்களிடையே இழு பறிப் போராட்டம் நடந்தேறியது. பிடிபட்ட இரைக்காகப் போராடும் கழுகுகளைப் போல இருவரும் முண்டியடித்துக் கொண்டனர். உறுமிக் கொண்டும் உச்சக் குரலில் கூச்ச லிட்டும் சென்றனர். சண்டையிடும் விலங்கு களைப் போலச் சீறி விழுந்தனர். இருவரின் கரங்களும் உருக்குப்பட்டைகளாய் அவர்களை இறுகப் பிணைத்திட ஒருவரையொருவர் பணிய வைத்துவிட வேண்டுமென்று பெரு முயற்சி செய்தனர். அவர்களுடைய நகங்களிலிருந்து இரத்தம் கசியத் தொடங்கிவிட்டது. சவாரி செய்தவர்களின் இந்தப் போராட்டத்துடன் ஒன்றிவிட்ட குதிரைகள் சீற்றம் மேலிட்டு அவர் களைச் சுமந்து கொண்டு, சிவந்த நெருப்பாகத் தகதகத்த கதிரவனை நோக்கி ஓடின.

துணிச்சல் மிக்க இது போன்ற வீராவேச ஆட்டங்களை நமக்கு அளித்துச் சென்ற நம் முன்னோரைப் போற்றுவோமாக!

பறந்தோடிய இரு குதிரைகளுக்கும் இடையே வெள்ளாட்டு முண்டம் இப்பொழுது தொங்கிக் கொண்டிருந்தது. போட்டியின் முடிவு நெருங்கிக் கொண்டிருந்தது. மௌனமாகப் பற்களை இறுகக் கடித்தபடி இருவரும் முழு பலத்தையும்

கொண்டு முண்டத்தை இழுக்க முயன்றனர். முண்டத்தைத் தன் பக்கம் இழுத்துக் காலுக் கடியில் இருத்தியழுத்தித் திடுமெனத் தனியே பிய்த்துக் கொண்டு ஓடிவிடப் பார்த்தனர். கஸாக் இளைஞன் வலிவுமிக்கவன், அவன் கரங் கள் உருண்டு திரண்டு கெட்டியாக இருந்தன. தானுபாயைவிட அவன் பல ஆண்டுகள் இளை யவன். ஆயினும் அனுபவம் மிகுந்த முக்கியத் துவமுடையதாகும். திடீரெனத் தானுபாய் வலது அங்கவடியை உதைத்துத் தள்ளிவிட்டு பாதத்தைக் கருஞ் சிவப்புப் பொலிகுதிரை யின் விலாவில் வைத்து அழுத்தினான். முண்டத் தைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ள முயன்ற அதே நேரத்தில் போட்டியாளனுடைய குதிரை யைத் தன்னிடமிருந்து தள்ளி விட்டுக் கொண் டான். கஸாக் இளைஞனின் பிடி முடிவில் தளரலாயிற்று.

''விழுந்து விடாதே!''—தோல்வியுற்ற போட் டியாளன் தானுபாயை எச்சரித்தான்.

திடீர் அதிர்ச்சியில் தானுபாய் தன் சேணத் திலிருந்து சரிந்துவிடப் பார்த்தான், ஆனால் கீழே விழுந்துவிடாதபடி தப்பித்துக் கொண் டான். ஆவேச வெற்றிக் கூச்சல் அவன் வாயிலிருந்து வெளிக் கிளம்பிற்று. குலுங்கா நடையானை சுழன்று திரும்பச் செய்து, தான் வென்று கொண்ட பரிசை அங்கவடித் தோலுக் கடியில் வைத்தழுத்திக் கொண்டு தனது எதி ராளியிடமிருந்து தப்பித்து ஓடினான். கூச்ச லிட்ட குதிரை வீரர்கள் பெருந்திரளாக அவனை

நோக்கிப் பாய்ந்தோடி வந்தனர்.

''குல்சாரி! குல்சாரி பரிசைப் பற்றிக் கொண்டு விட்டது!''

''பிடி, விடாதே! தானுபாயை விடாதே!'' அவனை வழி மறிக்கும் பொருட்டு கஸாக் குழுவினர் ஓடோடி வந்தனர்.

அவர்கள் தன்னை வழி மறித்துவிடாது எப்படியாவது அவன் தப்பித்துச் சென்று தனது கிராமத்தினர் தனக்குக் காப்பு வளையமிட வகை செய்தாக வேண்டும்.

குலுங்கா நடையானை மறுபடியும் சுழன்று திரும்பச் செய்து, தன்னை விரட்டி வருவோரிடமிருந்து விலகி ஓடினான். தனது சிறு அசைவையுங்கூட உணர்ந்து கொண்டுவிடும் குலுங்கா நடையான் விரட்டி வருவோரிடமிருந்து சுழன்று திரும்பியதைத் தானுபாய் போற்றினான்: ''அப்படியல்லவா செய்ய வேண்டும்! குல்சாரி, நன்றி! நன்றி!''

திடுமெனச் சுழன்று திரும்பிய குலுங்கா நடையான் தரையோடு தரையாய் ஒட்டிக் கொண்டு விட்டதென்று நினைக்கும்படி அப்படித் தட்டையாகி, பிறகு எம்பியெழுந்து நேரே பறந்தோடிற்று. அக்கணத்தில் தானுபாயின் தோழர்கள் அவனை வந்தடைந்து சூழ்ந்து கொண்டனர். எல்லோருமாகச் சேர்ந்து அங்கிருந்து பாய்ந்தோடினர். ஆனால் விரட்டி வந்தவர்கள் விடுவதாயில்லை, திரும்பவும் வழி மறித்துக் குறுக்கே வரலாயினர். தானுபாயின் கோஷ்டியினர் மறுபடியும் திரும்பி ஓட வேண்

டியதாயிற்று. பெருந்திரளாய் ஸ்தெப்பி வெளியின் குறுக்கே வேகமாகப் பறந்து செல்லும் புள்ளி னங்கள் மாறி மாறி ஓர் இறக்கையிலிருந்து மற்ருென்றுக்குச் சாய்ந்து வளைந்து செல்வது போலக் குதிரை வீரர்கள் பெருங் கும்பலாக வளைந்து திரும்பிப் பாய்ந்தோடினர். அடர்ந்த புழுதி கிளம்பி காற்று பூராவிலும் வியாபித்து விட்டது. கூக்குரல்கள் அதிர்ந்து ஒலித்தன. இடையில் ஒரு குதிரையும் அதில் சவாரி செய்த வனும் குப்புற விழுந்தனர். ஒருவன் கரணமடித்து விழுந்து புரண்டான். மற்ருெருவன் நொண்டிக் கொண்டு குதிரையிடம் ஓடினுன். ஆயினும் எல்லோரும் இந்தப் போட்டியாட்டத்தின் ஆர்வத்தாலும் ஆவேசத்தாலும் பீடிக்கப்பட் டிருந்தனர். விளையாட்டின்போது நடைபெறும் எதற்கும் யாரையும் குற்றம் கூறலாகாது. துணிச்சலும் அபாயமும் ஒரே தாயின் வயிற்றில் பிறந்தவை...

கதிரவனது மெல்லிய ஓரம் மட்டும் தான் மறையாது மேலே தெரிந்தது. அந்தி இருள் பரவிக் கொண்டிருந்தது. அந்தி வேளையின் நீலக் குளுமையில் அலாமன்-பெய்காவின் களே பரம் இன்னும் அடங்கியபாடில்லே. குதிரை களின் குளம்புகளுக்கடியில் பூமியே அதிர்ந்து கொண்டிருந்தது. யாரும் இப்பொழுது கூச்ச லிடவில்லே, யாரும் எவரையும் விரட்டிச் சொல்லவில்லே. ஆயினும் ஓட்டத்தின் விறு விறுப்பால் ஆட்கொண்டு எல்லோரும் தொடர்ந்து போட்டியிட்டு ஓடிக் கொண்டிருந்தனர். இந்த

வெள்ளப் பெருக்கு ஸ்தெப்பி எங்கும் பரவிக் கரிய அலையாகக் குன்றின்மீது பாய்ந்து ஏறியும் பிறகு சரிந்து விழுந்தும் போட்டியாட்டத்தின் சந்தத்துக்கும் இசைக்கும் ஏற்பப் பாய்ந்தோடிய வண்ணமிருந்தது. குதிரையில் சவாரி செய் தோரின் முகங்கள் கருத்தூன்றிய மோன நிலை யில் இருந்ததற்குக் காரணம் இது தானே? கஸாக் தொம்ராவின், கிர்கீஸ் கொமுஸின் மணி நாத இசையைத் தோற்றுவித்தது இதே சந்தம்தானே?..

அவர்கள் ஆற்றை நெருங்கிவிட்டனர். எதிரே தெரிந்த கரிய புதர்களுக்கு அப்பால் அது மங்கலாய்ப் பளபளத்துக் கொண்டிருந்தது. இனி போக வேண்டிய தூரம் சொற்பம்தான். ஆற்றைக் கடந்து கிராமத்தை அடைந்ததும் ஆட்டம் முடிந்துவிடும். தானபாயும் அவன் தோழர்களும் ஒன்று சேர்ந்து ஒரே தொகு தியாக ஓடிக் கொண்டிருந்தனர். குல்சாரி நடுமையத்தில் சென்றது—பரிவாரக் கலங்களுக்கு நடுவிலே செல்லும் தலைமைக் கப்பலைப் போல.

குல்சாரி களைப்புற்று ஓய்ந்துவிட்டது. அதன் வலுவுக்கும் உறுதிக்கும் ஒரு பெருஞ் சோதனை யாக அமைந்த நாள் அது. செயலற்றுச் சோர்ந்து விழுந்துவிடும் நிலையை நெருங்கிவிட் டது. அதன் இடப்புறத்திலும் வலப்புறத் திலும் வந்த இருவரும் அதன் கடிவாளத்தைப் பிடித்து அது தளர்ந்து நின்றுவிடாது இழுத்துச் சென்றனர். ஏனையோர் பக்கவாட்டிலும் பின் புறத்திலுமிருந்து தானபாய்க்குக் காப்பு அளித்

தனர். சேணத்தின் குறுக்கே வைக்கப்பட்டிருந்த வெள்ளாட்டு முண்டத்தின்மீது அவன் குப்புறப் படுத்திருந்தான். தானுபாயின் தலை எம்பி யெம்பி ஆடிற்று, உட்காரச் சக்தியற்றவனுகக் குதிரையில் அமர்ந்திருந்தான். புடைசூழ்ந்து வந்தவர்கள் உதவியிராவிடில் அவனுலும் அவனுடைய குலுங்கா நடையாலுைம் ஓரடிகூட நகர முடிந்திருக்காது. பழங்காலத்துக் குதிரை வீரர்கள் தாம் கைப்பற்றியதை இப்படித்தான் தூக்கிச் சென்றிருக்க வேண்டும். காயமுற்ற வீரர்கள் பகைவர்களின் கையில் அகப்படாதபடி இப்படித்தான் அழைத்துச் செல்லப்பட்டிருக்க வேண்டும்...

ஆறு, புல்வெளி, கூழாங்கல் நிறைந்த அகன்ற துறை—யாவும் எதிரே தெரிந்தன. இருட்டிவிட்டதென்ருலும் இவற்றை அவர்கள் கண்டு கொள்ள முடிந்தது.

நீர் தளபுளக்க அவர்கள் ஆற்றைக் கடந்தனர். ஆறு கடையப்பெற்று நுரைத்துவிட்டது. காது செவிடுபட எழுந்த குளம்பு ஒலிக்கும் பூநீர்த் தூவலுக்குமிடையே குலுங்கா நடையானை எதிர்க் கரைக்கு இழுத்துச் சென்றனர். இலக்கை வந்தடைந்துவிட்டனர்! வெற்றி வாகை சூடிவிட்டனர்!

தானுபாயின் சேணத்திலிருந்து வெள்ளாட்டு முண்டத்தை இழுத்தெடுத்துக் குதிரையிலே ஒருவர் அதை கிராமத்துக்குத் தூக்கிச் சென்ருர்.

கஸாக்குகள் அக்கறையில் காத்து நின்றனர்.

''அருமையான ஆட்டம்! உங்களுக்கு நன்றி!'' என்று கிர்கீஸ் குதிரை வீரர்கள் கூச்சலிட்டனர்.

''சென்று வருகிறோம்! திரும்பவும் இலையுதிர் காலத்தில் சந்திப்போம்!'' என்று கூறிக் கஸாக்குகள் தம் குதிரைகளைத் திருப்பிக் கொண்டு புறப்பட்டனர்.

ஒரே இருட்டு. தானுபாய் வேறொருவரின் வீட்டினுள் விருந்தினர்களிடையே அமர்ந்திருந்தான். வெளியே குலுங்கா நடையானும் மற்ற குதிரைகளும் கட்டப் பெற்றிருந்தன. எந்நாளும் குல்சாரி இப்படிக் களைப்புற்றிருந்ததில்லை. மந்தையிலிருந்து பிரிக்கப்பட்டுச் சவாரிக்குப் பழக்கப் படுத்தப்பட்ட நாளை வேண்டுமானால் விதிவிலக்காகச் சொல்லலாம். ஆனால் அப்பொழுது அது சிறு குட்டியாய் இருந்தது. உள்ளே வீட்டினுள் குல்சாரியைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''தானுபாய், உன்னுடைய குல்சாரியை வாழ்த்திப் பானம் அருந்துவோம். குல்சாரி இல்லையேல் நம்மால் வெற்றி பெற்றிருக்க முடியாது.''

''ஆம், ஒருபோதும் முடிந்திருக்காது. அந்தக் கருஞ்சிவப்புப் பொலிகுதிரை சிங்கம் மாதிரி வலுமிக்கதாக இருந்தது. அந்தக் கஸாக் இளைஞனும் அருந்திறமை உடையவன். அவன் நிச்சயமாகப் பேரும் புகழும் அடைவான்.''

''அது மெய்தான். கஸாக்குகளிடமிருந்து

குல்சாரி பறந்தோடித் தப்பிய காட்சி இன்னும் என் கண் முன்னே அப்படியே தெரிகிறது. தரையோடு தரையாய் அது தணிந்து பறந் தோடியபோது என் இதயம் அப்படியே நின்று விடும் போலிருந்தது.''

''பழங் காலத்து வெற்றி வீரர்கள் இது போன்ற ஒரு குதிரையைப் பெற எதுவும் செய்யத் தயாராயிருந்திருப்பார்களே. மெய்யான துல்துல் அல்லவா இது!''

''தானுபாய், எப்பொழுது இதைப் பொலி யூட்டவிடப் போகிருய்?''

''ஏற்கனவே விரட்டிக் கொண்டு ஓடத் தொடங்கிவிட்டது. ஆனல் இன்னும் வயது வரவில்லே. அடுத்த வசந்தத்தில் விடலாமென்று இருக்கிறேன். இலேயுதிர் காலத்தில் மேய்ந்து திரியவிட்டு இன்னும் கொஞ்சம் பெருக்கச் செய்ய வேண்டும்...''

இரவு நெடுநேரம் வரை அவர்கள் பானமருந்தி அலாமன்-பெய்கா ஆட்டத்தின் பல நுட்பங் களேயும் குலுங்கா நடையானுடைய சிறப்பு களேயும் பற்றி விவாதித்துக் கொண்டிருந் தனர். குல்சாரி வெளியே நின்று வாயிரும்பை அழுத்தி மென்று அசை போட்டுக் கொண் டிருந்தது. அதன் உடம்பிலிருந்த வியர்வை காய்ந்து வந்தது. இரவின் குளுமையில் நெடு

---

துல்துல் —கிர்கிஸ் வீரகாவியக் குதிரை. — ப-ர்.

நேரம் அது வெறும் வயிற்றுடன் நிற்க வேண்டியிருந்தது. பசிகூட அதனை அதிகம் வருத்தவில்லை. அதன் தோள்கள் வலித்தன, கால்கள் கனத்துவிட்டன, குளம்புகளில் எரிச்சல் எடுத்தது. அலாமன்-பெய்காவின் பேரிரைச்சலில் இன்னமும் அதன் தலை கிறுகிறுத்தது. துரத்தி வருவோர் எழுப்பிய கூச்சல் அதன் காதில் விழுந்தது. இடையிடையே காதுகளைச் சிலிர்ப்பிக் கொண்டு கனைத்தது. அதன் உடல் அதிர்ந்தது. புல்லில் படுத்துப் புரண்டெழுந்து உடம்பை உலுக்கிக் கொள்ள வேண்டுமென்று, புல்வெளியில் மற்ற குதிரைகளுடன் சுற்றித் திரிய வேண்டுமென்று விரும்பிற்று. ஆனால் அதன் எஜமானன் வெளியே வருவதாயில்லை.

முடிவில், இருட்டில் அவன் மெள்ள அசைந்தாடியபடி வெளியே வந்தான்; அவனிடம் வீசிய கடுமையான நாற்றம் அதன் மூக்கில் ஏறியது. தானபாயிடம் இது போன்ற நாற்றம் ஏற்படுவது அரிதினும் அரிது. ஆனால் இதற்கு அடுத்த ஆண்டில் குலுங்கா நடையானுக்குக் கிடைத்த புதிய எஜமானனிடம் எந்நேரமும் இந்த நாற்றம் இருக்கும். அந்த ஆளிடமும், சகிக்க முடியாத அந்த நாற்றத்திடமும் குல்சாரிக்கு அடங்காத வெறுப்பு உண்டாகிவிடும்.

தானபாய் தன் குதிரையிடம் சென்று அதன் முன்முடிகளை விரலால் கோதிவிட்டான், கழுத்து வாரின் கம்பளிக்கடியில் கையை விட்டுத் தடவினான்.

''வியர்வை அடங்கிவிட்டதா? களைப்பாக

இருக்கிறதல்லவா? எனக்கும் தாள முடியாத களைப்பு. ஏன் என்னை அப்படிப் பார்க்கிறாய்? கொஞ்சம் குடித்துவிட்டு வந்தேன், அவ்வளவு தப்பா அது? உன்னை வாழ்த்தித்தானே குடித் தேன். இன்று நமக்குக் கொண்டாட்ட நாளா யிற்றே. அப்படி ஒன்றும் அதிகம் குடித்துவிட வில்லை. என்னால் எவ்வளவு தாங்க முடியும் என்று தெரிந்தவன். நான் போர்முனையிலுங்கூட அளவு அறிந்து நிறுத்திக் கொண்டவன். வா போவோம், என்னை அப்படிப் பார்க்காதே. மந்தைக்குத் திரும்பி ஓய்வெடுத்துக் கொள் வோம், புறப்படு...''

அவன் குல்சாரியின் சுற்றுப்பட்டையை இறுக் கினான், வீட்டிலிருந்து வெளியே வந்தோருடன் பேசினான். பிறகு ஒவ்வொருவரும் தன்னுடைய குதிரையில் ஏறிக் கொண்டு பிரிந்து சென்றனர்.

உறக்கத்தில் ஆழ்ந்த கிராமத் தெருக்களின் வழியே தானபாய் தன் குதிரையின் மேல் சென்றான். எங்கும் நிசப்தமாயிருந்தது. சன்னல் கள் இருண்டிருந்தன. தொலைவில் டிராக்டர் ஒன்று மெல்லப் படபடத்தது. மலைகளுக்கு மேல் நிலா உயர்ந்தெழுந்துவிட்டது. மலர்ந்து விட்ட ஆப்பிள் மரங்கள் தோட்டங்களில் வெண்ணிற நுரை உரி தரித்து நின்றன. எங்கோ ஒரு குயில் கூவிக் கொண்டிருந்தது. அந்தக் கிராமத்தில் அந்த ஒரேயொரு குயில் மட்டும்தான் கூவிக் கொண்டிருந்தது. கான மழை பொழிந்துவிட்டு பிறகு அதைக் காது கொடுத்துக் கேட்பது போல மௌனமா

யிருந்தது. பிறகு திரும்பவும் உச்ச ஸ்தாயியில் கூவத் தொடங்கிற்று.

லகானை இழுத்துப் பிடித்தான் தாஞபாய்.

''எங்கும் நிறைந்திருக்கும் எழிலைப் பாரேன்!'' என்று உரக்கக் கூறினுன். ''எத்தனை அமைதி! குயிலின் இசையைத் தவிர வேறு ஓசை எதுவுமில்லை—எங்கும் நிசப்தம். குல்சாரி, நான் என்ன சொல்கிறேன் தெரிகிறதா? உனக்கு எப்படித் தெரியும்? நீ விரும்புவதெல்லாம் மந்தையிடம் போக வேண்டும் என்பது ஒன்றே தான். ஆனுல் நான்...''

அவர்கள் கொல்லுப் பட்டறையைக் கடந்து சென்றனர். கடைசித் தெரு வழியே ஆற்றுக்குச் சென்று பிறகு மந்தைகள் இருக்கும் திசையில் திரும்ப வேண்டும். ஆனுல் ஏனே தெரியவில்லை குல்சாரியின் எஜமானன் அதை இழுத்துப் பிடித்து ஒரு ஓரமாக ஓட்டினுன். நடுத் தெருவிலே சென்று அந்தப் பெண்ணின் வீட்டுக்கு எதிரே நிறுத்தினுன். அந்தப் பெண்ணின் பெண் குழந்தையுடன் எந்நேரமும் காணப்பட்ட அந்த நாய் ஓடி வந்து குரைத்துவிட்டு நின்றது, பிறகு வாலைக் குழைத்துக் கொண்டது. தாஞபாய் ஆலோசித்த படி குதிரையின்மீது உட்கார்ந்திருந்தான். பிறகு பெருமூச்செறிந்து விட்டு அரைமனத்துடன் லகானைக் கையில் எடுத்தான்.

குலுங்கா நடையான் திரும்பவும் புறப்பட்டுச் சென்றது. தாஞபாய் அதை ஆற்றை நோக்கித் திருப்பினுன். சாலையை வந்தடைந்ததும்

குதிரையைத் தட்டிவிட்டான். மேய்ச்சல் வெளிக்குச் செல்ல வேண்டுமென்றுதான் குல்சாரியும் துடித்துக் கொண்டிருந்தது. புல்வெளியைக் கடந்தனர். இதோ ஆறு வந்துவிட்டது. குல்சாரியின் லாடங்கள் ஆற்றங் கரையின் கற்களில் தட்டிக் கணீரென ஒலித்தன. தண்ணீர் ஐஸ் கட்டி போல ஜில்லிட்டது. பாதி ஆற்றைக் கடந்ததும் எஜமானன் திடுமென இழுத்து, குதிரையை வெடுக்கெனத் திரும்பச் செய்தான். தவறு செய்கிருனென்று குல்சாரி தலையை ஆட்டிக் குலுக்கிக் கொண்டது. எதற்காகத் திரும்ப வேண்டுமாம்? ஒரு நாளைக்கு எவ்வளவு தூரம்தான் ஓடுவது? அதன் எஜமானன் சவுக்கைச் சொடுக்கி விலாப்புறத்தில் அடித்தான். சவுக்கடிபட குல்சாரி விரும்பவில்லை. கடிவாள இரும்பைக் கோபமாய்க் கடித்துவிட்டு மனமின்றித் திரும்பிற்று. மீண்டும் புல்வெளியைக் கடந்து சாலையின் ஓரமாய்ச் சென்று அந்தத் தெருவிலே திரும்பி அவ்வீட்டுக்குச் சென்றது.

அங்கே வந்ததும் எஜமானன் அமைதியிழந்தவனுகத் தடுமாறிஞன்; என்ன செய்வதென்று விளங்காதவனுக லகானை அப்படியும் இப்படியுமாய் இழுத்தான். அவர்கள் வேலியின் இரட்டைக் கதவுக்கு முன்னுல் நின்றனர். உண்மையில் சாய்ந்துபோன இரு கம்பங்கள் மட்டும்தான் எஞ்சியிருந்தன, கதவு இல்லை. மறுபடியும் அந்த நாய் வெளியே ஓடிவந்து குரைத்துவிட்டுப் பிறகு வாலைக் குழைத்தவாறு

நின்றது. வீட்டினுள் இருட்டாகவும் நிசப்தமாக வும் இருந்தது.

தாஹுபாய் கீழே இறங்கிக் குலுங்கா நடை யானை அழைத்துக் கொண்டு முற்றத்தைக் கடந்தான். சன்னலுக்கு அடியில் சென்று கண்ணாடியில் தட்டினான்.

''யார் அது?'' உள்ளிருந்து ஒரு குரல் கேட் டது.

''நான்தான், பியூபியூஜான். கதவைத் திற, நான்தான்!''

வீட்டினுள் ஒரு சிறு விளக்கு ஏற்றப்பட்டு அதன் ஒளி மங்கலாய்ச் சன்னலில் தெரிந் தது.

''என்ன சேதி? இவ்வளவு நேரங் கழித்து எங்கிருந்து வருகிறாய்?'' என்று வாயிற் படியில் வந்து நின்ற பியூபியூஜான் கேட்டாள். கழுத் தருகே திறந்திருந்த வெண்ணிற ஆடை அணிந் திருந்தாள். அவளுடைய கரிய கூந்தல் தோள் களின் மீது கிடந்தது. இதமான இனிய மணம் அவளைச் சூழ்ந்திருந்தது, இனந்தெரியாத அந்தப் புல்லின் அரிய கந்தமும் அதில் கலந்திருந் தது.

''என்னை நீ மன்னிக்க வேண்டும்'' என்றான் தாஹுபாய் மெதுவாய். ''அலாமன் ஆட்டம் முடிவடைய நெடுநேரமாகிவிட்டது. ஓய்ந்து போய்விட்டேன், குதிரையும் அயர்ந்துவிட்டது. அதைக் களைப்பாற விட வேண்டும். மந்தை களிடம் திரும்பிச் செல்வதெனில் நெடுந் தொலைவு போயாக வேண்டும்.''

பியூபியூஜான் ஒன்றும் சொல்லவில்லை.

நிலவொளி படிந்த அருவியின் அடியிலுள்ள பளிங்குக் கற்களைப் போல் அவள் கண்கள் ஒளிர்ந்துவிட்டு அடங்கின. அவள் தன்னிடம் வந்து கழுத்தைத் தடவிக் கொடுப்பாளென குலுங்கா நடையான் எதிர்பார்த்தது; ஆனால் அவள் அதனிடம் வரவில்லை.

''இங்கே குளிராயிருக்கிறது'' என்றாள்; அவனுக்கு உடல் நடுங்கிற்று. ''ஏன் அங்கே நின்று கொண்டிருக்கிறாய்? வா உள்ளே. நல்ல சாக்கு ஒன்றை ஆலோசித்து வைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறாய்'' என்று சொல்லி மெல்லச் சிரித்தாள். ''நீ ஒரு தீர்மானத்துக்கு வர மாட்டாய் என்றல்லவா நினைத்தேன். குதிரையிலே இருந்து கொண்டு சிறு பையனைப் போல அப்படித் தடுமாறினாயே.''

''இதோ வருகிறேன். குல்சாரியை எங்காவது கட்டிவிட்டு வருகிறேன்.''

''வேலியின் ஓரத்தில் அந்த மூலையில் கட்டு.''

என்றுமே எஜமானன் கைகள் இப்படி ஆடியதில்லை. அவசர அவசரமாகக் கடிவாள இரும்பை வெளியே எடுத்தான். சுற்றுப்பட்டையை அவன் கழற்றியெடுப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. ஒரு வாரைத் தளர்த்தி இன்னொன்றைத் தளர்த்த மறந்துவிட்டு நீண்ட நேரம் தடுமாறினான்.

அந்தப் பெண்ணும் தானுபாயும் வீட்டுக்குள் மறைந்தனர். சன்னல் வழியே தெரிந்த விளக்கு சீக்கிரம் நிறுத்தப்பட்டுவிட்டது.

பழக்கமில்லாத அந்த முற்றத்தில் குல்சாரிக்குச் சங்கடமாகவே இருந்தது.

நிலாவொளி பளிச்சென்று வீசிற்று. குல்சாரி கண்களை உயர்த்திப் பார்த்தபோது பால் போன்ற வெண்ணிற ஆவியாய் மலைகள் வானுர உயர்ந்து நிற்பது தெரிந்தது. உணர்வு மிக்க அதன் காதுகளால் ஒவ்வொரு சிறு ஓசையையும் உற்றுக் கேட்டது. பாசனக் குட்டையில் நீர் தளதளத்தது. தொலைவில் முன்பு கேட்ட அதே டிராக்டரின் படபடப்பு கேட்டது. அதே ஒற்றைக் குயிலின் இசை பழத் தோட்டத்திலிருந்து வந்தது.

பக்கத்திலிருந்த மரத்திலிருந்து வெண்ணிற ஆப்பிள் மலர்கள் ஓசையின்றி குதிரை யின் தலையிலும் பிடரி முடிகளிலும் உதிர்ந் தன.

இரவின் இருள் குறைந்து வந்தது. குலுங்கா நடையான் ஒரு காலிலிருந்து இன்னொரு காலுக்கு மாறியவாறு தன் எஜமானனை எதிர் பார்த்துப் பொறுமையுடன் காத்துக் கொண்டு நின்றது. இது போல இன்னும் பல தடவை இங்கு நின்று இரவைக் கழிக்க வேண்டியிருக் கும் என்று அதற்குத் தெரியாது.

விடிந்ததும் தானுபாய் வெளியே வந்தான். குல்சாரியின் வாயில் கடிவாள இரும்பைப் பொருத்தியபோது அவன் கை கதகதப்பாயிருந் தது. இப்பொழுது அவனுடைய கைகளில் இனமறியாத அந்தப் புல்லின் அரிய கந்தம் வீசிற்று.

தாஞுபாயை வழியனுப்ப பியூபியூஜான் வெளியே வந்தாள். அவனுடன் ஒட்டிக்கொண்டு நின்ருள். மீண்டும் மீண்டும் அவளை அவன் முத்தமிட்டான்.

''உன் மீசை சுருக்குச் சுருக்கென்று குத்து கிறது'' என்று அவள் முணுமுணுத்தாள் ''சீக்கிரம் புறப்படு, பொழுது நன்ருய்ப் புலர்ந்துவிட்டது.'' அவள் வீட்டுக்குள் போகத் திரும்பிஞள்.

''பியூபியூ, இங்கே வா'' என்று அவன் கூப்பிட்டான். ''குல்சாரியைத் தட்டிக் கொடுத்து விட்டுப்போ. குலுங்கா நடையானைக் கவனி யாது போகிருயே'' என்ருன்.

''ஆமாம், மறந்தே விட்டேன்'' என்று அவள் சிரித்துக் கொண்டாள். ''அதன் மேலெல்லாம் ஆப்பிள் மலரைப் பார்!'' கொஞ்சும் குரலில் சொல்லியபடி அவளது அற்புதமான கைகளால் குதிரையைத் தட்டிக் கொடுத்தாள். நெற்றியிலே நட்சத்திரமுடைய செக்கர் மேனிப் பெண் குதிரைக் குட்டியின் உதடுகளைப் போன்ற மிருது வான, இதமான கைகள் அவை.

ஆற்றைக் கடந்ததும் தாஞுபாய் பாடத் தொடங்கிஞன். பாட்டின் சந்தத்துக்கேற்ப குல்சாரி மகிழ்ச்சியுடன் கெச்சு நடை போட்டு விரைந்து சென்றது. மந்தைகளையும் பசும் புல்வெளியையும் சென்றடையும் பொருட்டு ஆவலுடன் விரைந்தது.

அந்த மே மாத இரவுகளில் தாஞுபாய் அதிர்ஷ்ட சாலியாகவே விளங்கிஞன். இராப்

பொழுதில் மந்தைகளைக் கவனித்துக் கொள்வது முறைப்படி இப்பொழுது அவனுடைய பொறுப் பாயிருந்தது. குலுங்கா நடையானுக்கும் ஒரு விபரீத இரவு வாழ்க்கை ஆரம்பமாயிற்று. பகற் பொழுதில் அது மேய்ந்து கொண்டிருக்கும். பிறகு இரவில் எஜமானன் மந்தையைப் பள்ளத் தாக்கிற்கு ஓட்டிக்கொண்டு போய் விட்டதும் இருவருமாய்ப் பறந்தோடி அவ்வீட்டின் முற்றத் தில் நிற்பார்கள். பொழுது புலரத் தொடங் கியதும் ஸ்தெப்பி வெளியில் சரிவரக் கண்ணுக்குத் தெரியாத பாதைகளில் திருடர்களைப் போல் ஓடோடி வருவார்கள். பள்ளத்தாக்கில் விடப் பட்ட குதிரைகளை ஒன்று திரட்டி எண்ணிக் கணக்கிட்ட பிறகுதான் எஜமானன் அமைதிய டைவான். குல்சாரிக்கு அது கடுமையான வாழ்க்கையாகவே இருந்தது. போகும் போதும் சரி, திரும்பிவரும்போதும் சரி, எஜமானனுக்குப் பொறுக்க முடியாத அவசரம். திறந்த வெளி யிலே இராப் பொழுதில் பறந்தோடுவது எளிய காரியமல்ல. ஆனால் எஜமானனின் விருப்பம் அப்படியிருக்கையில் என்ன செய்வது, பறந்தோடத்தானே வேண்டும்.

குல்சாரி விரும்பியது முற்றிலும் வேறொன்று. அதன் விருப்பப்படி விட்டிருந்தால் அது ஒரு போதும் மந்தையைவிட்டு விலகி வந்திருக் காது. ஆண் குதிரைக்குரிய குணம் அதனுள் தலைதூக்கி வந்தது. தற்போதைக்கு அது மந் தையின் பொலி குதிரையுடன் ஒத்துப் போக முடிந்ததென்றாலும், ஏதாவதொரு பெண்

குதிரை குறித்து இரண்டுக்கும் சண்டை நாளுக்கு நாள் வலுத்துக் கொண்டிருந்தது. அடிக்கடி இப்பொழுது குல்சாரி கழுத்தையும் வாலையும் வில் போல் வளைத்து நின்று மந்தைக்கு முன்னால் தனது பிரதாபங்களைக் காட்டிக் கொள்ளும். பலக்கக் கனைத்துவிட்டுத் துள்ளிக் குதித்து பெண் குதிரைகளின் இடைப் புறத்தை நெருடிவிடும். அந்தக் குதிரைகள் புளகாங்கிதமுற்று உடனே அதனுடன் ஒட்டிக்கொண்டு நிற்கும். இதைக் கண்டு மந்தையின் பொலிகுதிரை பொருமையுற்றுச் சீறியெழும். குலுங்கா நடையான் பல சந்தர்ப்பங்களில் சரியானபடி உதைபட நேரும். பொலிகுதிரை சண்டையில் மூர்க்கமானது. ஆயினும் குல்சாரிக்கு இரவெல்லாம் முற்றத்திலே கட்டிப் போடப்பட்டிருப்பதைவிட சண்டையின் பரபரப்பும் பொலிகுதிரையின் சீற்றமும்தான் பிடித்திருந்தன. அது பெண் குதிரைகளுக்காக ஏங்கித் தவித்தது. கால்களைத் தட்டித் தரையைக் குளம் பால் கிளறிக் கொண்டு நிற்கும். முடிவில் ஒருவாறு அமைதியடையும். கடுமையான ஒரு சம்பவம் குறுக்கிட்டிராவிடில் இந்த இராப் பொழுது யாத்திரைகள் எவ்வளவு காலத்துக்கு நீடித்திருக்குமோ யாருக்குத் தெரியும்?..

அன்று இரவு குலுங்கா நடையான் வழக்கம் போல் முற்றத்தில் நின்று கொண்டு எப்பொழுது எஜமானன் வெளியே வருவான், மந்தைக்குத் திரும்பிப் போய்ச் சேரலாமென்று காத்திருந்தது. அப்படியே கண்ணயரப் போகும் நேரம். லகான்

மேலே உத்திரத்தில் கட்டப்பட்டிருந்ததால் அதனால் படுக்க முடியவில்லை, நின்று கொண்டிருந்தது. தூங்கித் தலை கொஞ்சம் சாய்ந்ததும் வாயின் முனைகள் வலிக்கும்படி கடிவாள இரும்பு வெட்டியிழுத்தது. இந்நிலையிலுங்கூட அது மெள்ளக் கண்ணயரத் தொடங்கிவிட்டது. வானம் மப்பும் மந்தாரமுமாகிக் கறுத்துக் கொண்டிருந்தது.

குல்சர்ரி அரைத் தூக்கத்திலிருக்கையில் திடீரென்று மரங்கள் சலசலக்கும் சப்தம் கேட்டது. யாரோ அவற்றின்மீது தாக்குதல் தொடுத்து உச்சிகளை ஆட்டிக் குலுக்கி அவற்றைக் கீழே சாய்த்து இழுப்பதுபோல் மரங்கள் சலசலத்தன. முற்றத்தின் குறுக்கே காற்று பலமாய் வீசி அங்கிருந்த காலிப் பாற் குடத்தைக் கவிழ்த்தது. குடம் தடதடவென உருண்டோடி, கொடியில் தொங்கிய துணிகளை இழுத்துச் சுருட்டிச் சென்றது. நாய் ஒன்று ஊளையிட்டுக் கத்தி விட்டு எங்கே போய்ப் பதுங்குவதென்று தெரியாமல் அங்குமிங்கும் ஓடிற்று. குலுங்கா நடையான் கோபமாய்க் கனைத்துவிட்டுக் காதுகளை உயர்த்திக் கொண்டு அசையாது நின்றது. பிறகு தலையை உயர்த்தி, ஸ்தெப்பி வெளியின் திசையில் உற்று நோக்கிற்று. அங்கிருந்து கறுப்பாகவும் பயங்கரமாகவும் ஏதோ ஒன்று உறுமிக்கொண்டு நெருங்கி வருவது போலத் தோன்றியது. மறுகணமே இரவு முறிந்து விழும் மரங்களைப் போல சடசடத்தது, வானத்தின் குறுக்கே இடி உருண்டோடியது, மின்னல்

கிறல்கள் மேகங்களுக்கிடையே பளிச்சிட்டன. மழை தாரையாகக் கொட்டிற்று. குல்சாரி சவுக்கால் அடிபட்டது போல முண்டியடித்துக் கயிற்றை வெட்டி இழுத்து ஆவேசமாய்க் கனைத்தது. தனது மந்தையின் கதி என்னுகுமோ என்னும் அச்சம் அதை ஆட்டிப் படைத்தது. தன் இனத்தை அபாயத்திலிருந்து பாதுகாக்க வேண்டுமென்ற அடங்காத உள்ளுணர்ச்சி கிளர்த்திவிடப் பட்டுவிட்டது. மந்தைக்குத் துணை புரிய அங்கே ஓடும்படி இந்த உணர்ச்சி அதனை ஏவிற்று. தன்னைக் கட்டியிருந்த தறியையும் அங்கே தன்னை இருத்தி வைத்த கடிவாளத்தையும் வாயிரும்பையும் பிறவற்றையும் எதிர்த்துக் கடுஞ் சீற்றமுற்றுக் கலகம் புரிந்தது. உதைத்துக் கொண்டு முண்டியது, தரையைப் பாதங்களால் தட்டிக்கிளறியது, மந்தையிடமிருந்து பதில் கிடைக்குமா என்று ஓயாமல் கனைத்தது. ஆனுல் புயலின் ஊளையையும் சீறலையும் தவிர வேறு சப்தம் எதுவும் கேட்கவில்லை. அன்று இரவு கட்டு அறுத்துக் கொண்டு ஓட முடிந்திருந்தால் அது என்ன பாடுபடுத்தியிருக்கும்?

அதன் எஜமானன் நீளமான கைகளைக் கொண்ட வெண்ணிற உள்ளாடையுடன் வெளியே ஓடி வந்தான். அந்தப் பெண்ணும் வெண்ணிற ஆடையில் அவன் பின்னுல் ஓடி வந்தாள். மறு கணமே அவர்களுடைய ஆடைகள் மழையில் சொட்டச் சொட்ட நனைந்துவிட்டன. அவர்களுடைய நனைந்த முகங்களையும்

மிரண்ட கண்களையும் பளிச்சிடச் செய்த நீல மின்னல் வீட்டின் மூலையை ஒளிமயமாக்கியது. இருட்டில் வீசிய காற்றில் வாயிற் கதவு திறந்து கொண்டது.

குதிரையை அவிழ்க்க முயன்ற தானுபாய் ''இரு, அவிழ்க்கிறேன்! ஆடாதே!'' என்று கூவினுன். ஆனுல் குல்சாரி அவனை அடையாளம் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. சீற்றங் கொண்டு அது எஜமானனைத் தாக்கிற்று. கயிற்றைப் பிய்த்தெறிய வேண்டுமென்று துடியாய்த் துடித்தது; வேலியே சிதைந்து விடும் போலிருந்தது. சுவற்றுடன் ஒட்டிக் கொண்டு தானுபாய் மெள்ள அதை அணுகிக் கைகளால் தலையை மூடிமறைத்துக் கொண்டு ஒரு தாவு தாவி, கடிவாளத்தைப் பிடித்து தன் முழு பலத்தையும் கொண்டு இழுத்தான்.

''சீக்கிரம்! கயிற்றை அவிழ்த்து விடு!'' என்று அந்தப் பெண்ணிடம் கத்தினுன்.

அவள் அவிழ்த்து விட்டதுதான் தாமதம், குலுங்கா நடையான் முண்டிக் கொண்டு முற்றத்தின் குறுக்கே தானுபாயை இழுத்துச் சென்றது.

''என் சவுக்கை எடுத்துக் கொடு!''

பியூபியூஜான் அதை மிக அவசரமாக எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

''ஆடாமல் நில்! உன்னைக் கொன்றுவிடுவேன்!'' என்று கூச்சலிட்டு தானுபாய் ஆவேசமுற்றவனுய்க் குதிரையைச் சவுக்கால் விளாசினுன். சேணத்தில் அவன் ஏறி உட்கார்ந்து மந்தையிடம் சென்ருக வேண்டும். இக்கணமே

சென்றாக வேண்டும். மந்தைக்கு என்ன நேர்ந் ததோ? குதிரைகளைப் புயல் எங்கே ஓடச் செய்ததோ?

குலுங்கா நடையானும் உடனே, அக்கணமே மந்தையிடம் ஓட வேண்டுமென்று துடியாய்த் துடித்தது. கட்டுக்கடங்காத பெரும் சக்தியான அதன் உள்ளுணர்ச்சி இந்த அபாயத் தருணத் தில் அதை அங்கே அழைத்தது. எனவேதான் அது கனைத்துக் கொண்டு எகிறியது, அறுத்துக் கொண்டு பாய்ந்தோடுவதற்காகப் போரா டியது. தாரையாக மழை கொட்டிக் கொண் டிருந்தது, புயல் பேய்த்தனமாக வீசிற்று, மின்னலும் இடியும் விண்ணைப் பிளக்க இரவு நடுங்கி அதிர்ந்து கொண்டிருந்தது.

''கெட்டியாகப் பிடித்துக் கொள்!'' என்று தானபாய் கத்தினன். பியூபியூஜான் கடிவாளத் தைப் பிடித்திழுத்துக் கொண்டு நின்றாள். அவன் சேணத்தின் மீது தாவி ஏறினன். சரியாக உட்காரக் கூட நேரமில்லை, குல்சாரியின் பிடரி யைப் பிடித்துக் கொண்டு அவன் தொங்கிக் கொண்டிருக்கையில் குதிரை அந்த முற்றத் திலிருந்து பறந்தோடிற்று, அந்தப் பெண்ணைக் கீழே மழை நீரில் விழுந்து புரளும்படித் தள்ளி விட்டு ஓட்டமாக ஓடிற்று.

கடும் புயலால் அலைக்கழிக்கப்பட்ட அந்த இரவில் குல்சாரி கடிவாள இரும்பு, சவுக்கு, எஜமானனின் கூச்சல் எதற்கும் அடங்கவில்லை, மழையைக் கிழித்துக் கொண்டு இரகசியமான ஆருவது புலனல் வழி காட்டப்பெற்றுப் பறந்

தோடிற்று. முதுகில் இருந்தவன் இப்பொழுது அதன் எஜமானனுக இருக்கவில்லை. அவனை லட்சியம் செய்யாமல் அது ஓடிச் சென்றது; நொங்கும் நுரையுமாய் ஓடிய ஆற்றின் குறுக்கிலும் இடியும் நீரும் சீறிப் பாய்ந்த வெளியிலும் புதர்களிலும் குழிகளிலும் மலையிடுக்குகளிலும் எங்கும் நிற்காது ஓடோடிச் சென்றது. முன்பு நடைபெற்ற பெரிய பந்தயத்திலும் சரி அலாமன்-பெய்கா ஆட்டத்தின் போதும் சரி, இதன் முன் என்றுமே ஓடியிராத வேகத்தில் குல்சாரி புயல் மோதிய அந்த இரவில் ஓடிற்று.

வெறி பிடித்த குதிரை தன்னை எங்கே தூக்கிச் செல்கிறதென்றுகூட தானுபாய்க்குத் தெரியவில்லை. சுட்டெரிக்கும் தீயின் நாக்குகளைப் போல மழை அவன் முகத்திலும் உடலிலும் விளாசி வீசிற்று. அவன் மூளையில் ஒரேயொரு சிந்தனைதான் அலைமோதியது: ''மந்தை என்ன ஆயிற்றோ? குதிரைகள் எங்கே ஓடினவோ? கீழே சமவெளிக்கு ஓடி ரயில் பாதைக்குச் சென்றிருந்தால் என்னவது? விபத்தாகி விடுமே! கடவுளே! அப்படி எதுவும் நேரும்படி செய்துவிடாதே! அங்கே சென்றிருந்தால் அதோ கதிதான்! அல்லா, நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்! அர்பாக்கி,° என்னைக் கைவிட்டு விடாதீர்! குல்சாரி, நீ விழக் கூடாது! விழக் கூடாது!

---

° அர்பாக்கி —முன்னேரின் ஆத்மாக்கள். — ப-ர்.

ஸ்தெப்பி வெளிக்கு, மந்தையிடம் என்னைக் கொண்டு போய்விடு!''

மின்னல் கீற்றுகள் ஸ்தெப்பி வெளியின்மீது பாய்ந்தோடின, வெண்ணிறத் தீ கண் கூசும்படி பளிச்சிட்டது. மீண்டும் எங்கும் பூரண இருள் குடி கொண்டுவிட்டது, புயல் சீறியது, காற்றின் சாட்டையடியில் மழை வீரிட்டு அலறியது.

மாறி மாறிக் கண்கூசும் பேரொளியும் பிறகு கரிய இருளுமாக இருந்தது...

குலுங்கா நடையான் வாயை விரியத் திறந்து கொண்டு எகிறிக் கனைத்தது. அது கூவியழைத் தது, உருக்கமாய் வேண்டிற்று, தேடிற்று, ஏங்கித் தவித்தது. ''மந்தைக் குதிரைகளே, எங்கே இருக்கிறீர்கள்? எங்கே? பதில் கூறுங் கள்!'' என்று கனைத்தது. பதிலுக்கு வானம் இடி முழங்கிற்று. திரும்பவும் குல்சாரி பறந் தோடிற்று, புயலின் மையத்தினுள் ஓடிச் சென்று தேடிற்று...

மாறி மாறிக் கண்கூசும் பேரொளியும் பிறகு கரிய இருளுமாக இருந்தது...

விடியும் வரை புயல் ஓயவில்லை. சிறுகச் சிறுக மேகங்கள் கலைய முற்பட்டன. கிழக் கிலிருந்து இடி உருண்டோடி உறுமி அதிர்ந்து கொண்டுதான் இருந்தது. உருக்குலைந்த பூமி புகைந்தது.

சில பேர் குதிரைகளில் ஏறி ஸ்தெப்பி வெளி யில் பாய்ந்தோடித் தமது மந்தைகளை விட்டு விலகி வந்துவிட்ட குதிரைகளைத் திரட்டினர்.

தானபாயின் மனைவி அவனைத் தேடிக் கொண்

டிருந்தாள். இல்லை, அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள் என்பதுதான் உண்மை. அவளும் அக்கம் பக்கத்தோரும் இரவில் குதிரை களிலே ஏறி அவனுக்கு உதவுவதற்காக ஓடி வந்தனர். மந்தை இருந்த இடத்தைத் தேடிப் பிடித்து அதைப் பள்ளத்தாக்கிலேயே இருக் கும்படிச் செய்தனர். ஆனால் அங்கே தானுபா யைக் காணவில்லை. வழி தவறியிருப்பான் என்று நினைத்தனர். ஆனால் அப்படி இருக்காது என்பது அவளுக்குத் தெரியும். பக்கத்து வீட்டுப் பையன் பரபரப்புற்று ''ஜெய்தார், அதோ பார், தானுபாய்!'' என்று கூச்சலிட்டுவிட்டு அவனை எதிர் கொண்டழைப்பதற்காகக் குதி ரையை விரட்டிச் சென்றபோது, ஜெய்தார் அசையவில்லை. அமைதியாகத் தன் குதிரையிலே அமர்ந்து, தவறிழைத்த தன் கணவன் திரும்பி வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

தானுபாய் சோக உருக் கொண்டு உம்மென்று வந்தான். நொண்டிய குதிரையின் மீது தலையில் தொப்பியின்றி நனைந்த உள்ளாடையுடன் அமர்ந்திருந்த அவனைப் பார்க்கச் சகிக்கவில்லை.

''உங்களைக் காணுமே என்று தேடிக் கொண் டிருக்கிறோம். ஜெய்தாருக்குக் கவலையாயிருந் தது...'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூச்சலிட் டான் சிறுவன்.

சிறுவனே, சிறுவனே, என்ன பேச்சு இது?..

''வழி தவறிவிட்டேன்'' என்று தானுபாய் முணுமுணுத்துக் கொண்டான்.

கணவனும் மனைவியும் இப்படித்தான் சந்தித்

துக் கொண்டனர். ஒரு வார்த்தை கூடப் பேசிக் கொள்ளவில்லை. குதிரைகளைப் பள்ளத் தாக்கிலிருந்து ஓட்டி வருவதற்காகச் சிறுவன் சென்ற பின், அவள் மெள்ளக் கூறினாள்:

''உடுத்திக் கொள்வதற்குக் கூட உனக்கு நேரம் கிடைக்கவில்லையா? நல்ல வேளை, உள்ளா டையும் பூட்சும் போட்டுக் கொள்ளவாவது நேரம் கிடைத்ததே. வெட்கமாயில்லை உனக்கு? நீ இளைஞனல்ல; உன் குழந்தைகள் பெரியவர் களாகி வருகின்றனர். நீ இருக்கிற அழகைப் பார்...''

தானபாய் ஒன்றும் சொல்லவில்லை. என்ன சொல்ல முடியும்?

இதற்கிடையில் சிறுவன் மந்தையை வெளியே ஓட்டி வந்துவிட்டான். எந்தக் குதிரையும் எந்தக் குட்டியும் விலகிச் சென்றுவிடவில்லை.

''அல்திக்கே, நீ வா, வீட்டுக்குப் போவோம்'' என்று சிறுவனிடம் ஜெய்தார் கூறினாள். ''இன் றைக்கு நமக்கு வேலை நிறைய இருக்கிறது. காற்று கூடாரங்களைக் கவிழ்த்துவிட்டது. அவற் றைச் சரி செய்வோம், வா நீ.''

பிறகு குரலைத் தணித்துக் கொண்டு தானபா யிடம் சொன்னாள்: ''நீ இங்கேயே இரு. ஏதா வது சாப்பிடவும் உடுத்திக் கொள்ளத் துணி களும் கொண்டு வந்து தருகிறேன். நீ இருக்கும் இந்த உடுப்புடன் அங்கே எல்லோருக்கும் முன்னால் வந்து உன் மூஞ்சியைக் காட்டாதே.''

''கீழே போய்க் காத்திருக்கிறேன்'' என்றான் தானபாய்.

அவர்கள் சென்றதும் தானுபாய் குதிரைகளைப் புல்வெளியை நோக்கி ஓட்டிச் சென்றான். நெடுந் தூரம் போக வேண்டியிருந்தது. கதிரவன் தோன்றி விட்டான், காற்று கதகதப்பாகிவிட்டது. ஸ்தெப்பி வெளி எயங்கும் ஆவி கிளம்பிற்று. மீண்டும் அது உயிர் பெற்று வந்தது. மழை, இளம் புல் இவற்றின் மணம் வீசிற்று.

குதிரைகள் வெள்ளக் காடுகளையும் மலையிடுக்கையும் கடந்து சென்று ஒரு சிறு குன்றின் மீது ஏறின. இங்கே தானுபாயின் கண் முன்னே ஒரு புதிய உலகம் காட்சியளித்தது. வெள்ளை முகில்கள் திட்டுத் திட்டாய்த் தெரிந்த அடிவானம் நெடுந் தொலைவுக்கு அப்பால் இருப்பது போலத் தோன்றியது. வானம் நிர்மலமாய்த் தெளிந்து நெடிதுயர்ந்து விரிந்து பறந்திருந்தது. தொலைவிலே ஸ்தெப்பி வெளியில் ஒரு ரயில் வந்து கொண்டிருந்தது.

தானுபாய் குதிரையிலிருந்து இறங்கி புல்லில் நடந்தான். புற்களுக்கிடையிலிருந்து ஒரு வானம் பாடி படபடத்துக் கிளம்பிக் கூவிக் கொண்டு காற்றிலே உயர்ந்தெழுந்தது. அவன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு மெள்ள நடந்தான், பிறகு திடீரென்று தரையின் மேல் குப்புற விழுந்தான்.

இதற்கு முன்பு குல்சாரி தன் எஜமானனை என்றுமே இந்நிலையில் கண்டதில்லை. அவன் முகத்தைத் தரையில் புதைத்துக் கொண்டு படுத்துக் கிடந்தான். அவன் உடல் விம்மல்களால் ஆடிக் குலுங்கிற்று. வெட்கமும் வருத்

தமும் தாங்காமல் அழுதான். தன் வாழ்விலே கடைசியாக இன்பம் கிட்டிற்று, கிட்டிய இன்பத்தை இழந்துவிட்டோமென்பதை உணர்ந்து அழுதான். வானம்பாடி தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தது...

மறு தினம் மந்தைகள் மலைகளை நோக்கிப் புறப்பட்டன. அடுத்த ஆண்டு வசந்தம் பிறக்கும் வரை அவை திரும்ப மாட்டா. மந்தை முகாமினர் ஆற்றின் ஓரமாகக் கிராமத்தைக் கடந்து சென்று கொண்டிருந்தனர். ஆடுகள், பசுக்கள், குதிரைகள் யாவும் மந்தை மந்தையாகப் போய்க் கொண்டிருந்தன. பொதிக் குதிரைகளும் ஒட்டகங்களும் வரிசையாகச் சென்றன. பெண்களும் குழந்தைகளும் குதிரைகளின் மேல் சென்றனர். பரட்டை முடி நாய்கள் அவர்களைப் பின் தொடர்ந்தன. கூச்சலும் குதிரைகளின் கனைப்பும் ஆடுகளின் கத்தலும் காற்றில் நிரம்பிவிட்டன...

தானுபாய் தனது மந்தையைப் பெரிய புல்வெளியின் குறுக்கே அண்மையில் போட்டி ஆட்டங்களுக்காக மக்கள் பெருந் திரளாகக் குழுமியிருந்த மேட்டின் மீது ஓட்டிச் சென்றான். கிராமத்தின் பக்கம் திரும்பிப் பார்க்கக் கூடாதென்று பெரு முயற்சி செய்தவாறு அவன் போய்க் கொண்டிருந்தான். கிராமத்தில் ஓரத்திலிருந்த அந்த வீட்டை நோக்கித் திடுமெனக் குல்சாரி திரும்பிய போது அதற்குச் சவுக்கடிதான் கிடைத்தது. நெற்றியில் நட்சத்திரமுடைய செக்கர் மேனிப் பெண் குதிரைக்

குட்டியின் உதடுகளைப் போல மிருதுவான, இதமான அற்புதக் கைகளையுடைய அந்தப் பெண்ணின் வீட்டிற்குச் செல்லாமலே அவர்கள் போய்ச் சேர்ந்தனர்...

மந்தை விறுவிறுப்பாக நடந்தது.

குல்சாரி தன் எஜமானன் பாட வேண்டுமென்று விரும்பிற்று. ஆனால் அவன் பாடவில்லை. அவர்கள் கிராமத்தைப் பின்னால் விட்டுவிட்டுச் சென்றனர். முன்னால் மலைகள் இருந்தன. கிராமமே, ஸ்தெப்பி வெளியே போய் வருகிறோம். வசந்தத்தில் மீண்டும் சந்திப்போம். எதிரில் மலைகள் இருந்தன.

## 6

நள்ளிரவு நெருங்கிவிட்டது. குல்சாரியால் அதற்கு மேல் நடக்க முடியவில்லை. இடையில் பன் முறை நின்று ஓய்வெடுத்துக் கொண்டபின் மலையிடுக்கு வரை எப்படியோ திணறிக் கொண்டு நடந்து வந்துவிட்டது. மலையிடுக்கைக் கடந்து செல்வது அதன் சக்திக்கு மீறியதாகி விட்டது. கிழவன் தானபாய் இதற்கு மேல் தன் குதிரையிடமிருந்து எதுவும் எதிர்பார்க்கத் தனக்கு உரிமையில்லை என்பதை உணர்ந்தான். வேதனை தாங்க மாட்டாமல் குல்சாரி முனகியது, மனிதனைப் போல முனகியது. திரும்பவும் அது படுக்க முயன்றபோது தானபாய் தடுக்கவில்லை.

அது குளிர்ந்திருந்த தரையில் படுத்துக் கொண்டு தலையை இப்படியும் அப்படியுமாய் அசைத்துக் கொண்டு தொடர்ந்து முனகிற்று. குளிர் தாங்க முடியவில்லை, உடலெல்லாம் நடுங்கிற்று. தானுபாய் தனது ஆட்டுத் தோல் கோட்டைக் கழற்றி குதிரையின் முதுகில் போர்த்தினுன்.

''உன்னுல் தாங்க முடியவில்லை! குல்சாரி, குளிரில் உனக்கு உடல் உதறுகிறது. முன்பெல் லாம் நீ குளிரைப் பொருட்படுத்தவே மாட் டாய்.''

இன்னும் என்னவெல்லாமோ தானுபாய் முணு முணுத்துக் கொண்டிருந்தான். குல்சாரிக்கு எதுவும் காதில் விழவில்லை. அதன் இதயம் இப்பொழுது அதன் தலைக்குள் படபடத்து ஏனைய எல்லா ஓசைகளையும் மூழ்கடித்துக் கொண்டிருந்தது. தக்-தக், தக், தக்-தக், தக் என்று அது தட்டித்துடித்தது. விரட்டி வருவோ ரிடம் அகப்படாது தப்பும் பொருட்டு மந்தை பீதியுற்று ஓடுவது போல இருந்தது.

மலைகளுக்குப் பின்னுலிருந்து நிலா தோன்றி மங்கல் ஒளி பரப்பி உலகத்துக்கு மேல் விண் ணிலே தொங்கிற்று. எரி நட்சத்திரம் ஒன்று ஓசையின்றி சரிந்து விழுந்து அணைந்தது...

''நீ இங்கேயே படுத்திரு. நான் போய்க் கொஞ்சம் காய்ந்த புல் கொண்டு வருகிறேன்'' என்றுன் கிழவன்.

அவன் அங்குமிங்கும் அலைந்து கடந்த வருடக் கோரைகளின் காய்ந்த தண்டுகளைச் சேகரித்

தான். கையளவு சேகரிப்பதற்குள் முட்கள் அவன் கைகளில் குத்திப் பிறாண்டி விட்டன. பிறகு எதற்கும் தயாராகக் கையில் கத்தியை வைத்துக் கொண்டு மலையிடுக்கினுள் இறங்கினான். அங்கே புதர்கள் சிலவற்றைக் கண்டான். இவற்றை எடுத்துச் சென்றால் நல்ல தீ மூட்டலாம்.

அருகில், நெருப்பு இருந்தால் குல்சாரிக்கு எப்பொழுதும் பயம்தான். ஆனால் இப்பொழுது அது தீயைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. அலையலையாய் வெப்பமும் புகையும் அதன் மேல் தவழ்ந்து சென்றன. தானபாய் ஒரு சாக்கின் மீது உட்கார்ந்து கொண்டு மௌனமாகத் தீயை உற்று நோக்கியபடி கைகளை வெதுவெதுப்பாக்கிக் கொண்டான். புதர்க் குச்சிகளையும் கோரைகளையும் ஒவ்வொன்றாக நெருப்புக்குள் எறிந்து கொண்டிருந்தான். இடையிடையே எழுந்து சென்று குதிரையின் முதுகிலிருந்த கோட்டை இழுத்துச் சரிசெய்து விட்டுத் திரும்பி வந்து தீயின் அருகே அமர்ந்து கொண்டான்.

குல்சாரி சற்றுக் கதகதப்படைந்தது, அதன் உதறல் நின்றுவிட்டது. ஆனால் அதன் கண்களை மஞ்சள் படலம் மூடிக் கொண்டுவிட்டது; நெஞ்சு அடைத்துப்போய் மூச்சு விட முடியாமல் சிரமப்பட்டது. காற்று வீசவே தீ மூண்டெழுந்து எரிந்தது, பிறகு தணிந்து அடங்கிற்று. குல்சாரிக்கு எதிரே உட்கார்ந்திருந்த கிழவன் — அக்காலத்தில் அதன் எஜமான

ளுக இருந்த அவன்—மறைந்து மறைந்து மீண்டும் அதன் எதிரே தோன்றிக் கொண்டிருந்தான். புயல் வீசிய இரவில் இருவரும் ஸ்தெப்பி வெளியில் பறந்தோடுவது போல ஜுர மயக்கம் கொண்ட குலுங்கா நடையா னுக்குத் தோன்றிற்று. அது எகிறிக் கனைத்து விட்டு ஓடிற்று, மறைந்துவிட்ட மந்தையைத் தேடிற்று. மின்னல் பளிச்சிட்டுவிட்டு மறைந்தது.

மாறிமாறிக் கண்கூசும் பேரொளியும் கரிய இருளுமாக இருந்தது...

## 7

குளிர் காலம் பின்வாங்கிச் சென்றது. வாழ்க்கை அப்படி ஒன்றும் மோசமாயில்லை என்று மந்தைக்காரர்களுக்குக் காட்டுவதற்காகத் தற்காலிகமாகப் பின்வாங்கிச் சென்றது. இனி கதகதப்பான நாட்களை எதிர்பார்க்கலாம், கால்நடைகள் பருத்துக் கொழுத்துவிடும், பாலும் இறைச்சியும் நிறையக் கிடைக்கும், கொண்டாட்ட நாட்களில் பந்தயங்களும் ஆட்டங்களும் நடைபெறும். இவற்றுடன் கூட ஆட்டுப் பேறுக்கால வேலைகள், உரோமம் வெட்டுதல், குட்டிகளை வளர்த்தெடுத்தல், புது மேய்ச்சல் வெளிகளுக்குக் குடி பெயர்ந்து செல்லுதல் போன்ற அன்றாட வேலைகளை ஒட்டிய கவலைகளும் இருக்கவே செய்யும். தவிரவும் அவர

வரும் தத்தமக்குரிய வாழ்க்கையை நடத்துவர். காதலும் பிரிவும், பிறப்பும் இறப்பும், குழந்தைகள் காணும் வெற்றிகளால் கிட்டும் பெருமிதம், போர்டிங் பள்ளியில் தரப்படும் மோசமான மதிப்புரைகளைக் கேட்கையில் ஏற்படும் ஏமாற்றம், பெற்றவர்களாகிய நாம் வீட்டிலே தங்கியிருந்தால் குழந்தைகள் நன்றாய்ப் படித்திருக்குமே என்ற ஏக்கம் ஆகிய பலவும் நிறைந்த வாழ்க்கை அது. எத்தனையோ பல நிகழ்ச்சிகளும் நடை பெறும். கவலைகள் வேண்டிய அளவு இருந்து கொண்டுதான் இருக்கும். ஆயினும் குளிர் காலத்தின் இன்னல்கள் தற்காலிகமாக மறக்கப்பட்டுவிடும். உணவு போதிய அளவு இல்லாத கஷ்டம், கால்நடைகளுக்கு ஏற்படும் சேதம், பனிக்கட்டி மூடிய தரை, கிழிந்த கூடாரங்கள், குளிரும் கொட்டில்கள் ஆகிய யாவும் அடுத்த ஆண்டு வரை பண்ணையின் குறிப்புகளிலும் உரைகளிலும் புதைக்கப்பட்டுவிடும். பிறகு திரும்பவும் குளிர் காலம் அவர்களைத் தேடி வரும், இடி முழக்கமிட்டவாறு வெண்ணிற ஒட்டகத்தில் வந்து சேரும். மேய்ச்சல்காரன் மலைகளில் இருப்பினும் ஸ்தெப்பி வெளியில் இருப்பினும் தேடிப் பிடித்து அவனை அழைத்துத் தனது கொடூர இயல்புகளை வெளிப்படுத்திக் காட்டும். இதுவரை மறந்திருந்தவை அனைத்தும் திரும்பவும் இப்பொழுது அவன் நினைவுக்கு வரும். குளிர் காலங்கள் முன்பு என்றும் இருந்தது போலவேதான் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இருந்து வருகின்றன...

எல்லாமே இவ்வாறுதான் இருந்தன, அன்றுங் கூட வற்றி வதங்கிப் போன ஆடுகளும் குதிரைகளும் மலைகளிலிருந்து கீழே இறங்கிவந்து ஸ்தெப்பி வெளி முழுவதும் சிதறிச் சென்றன. வசந்தம் பிறந்து விட்டது. குளிர் காலத்தில் சாகாமல் பிழைத்துக் கொண்டவை கீழே திரும்பின.

அந்த வசந்தத்தில் குல்சாரி முழு வளர்ச்சி பெற்ற பொலிகுதிரையாகி விட்டது. தானபாய் இப்பொழுதெல்லாம் மிக அரிதாகவே அதில் சவாரி செய்தான். கூடுங் காலம் நெருங்கிவிட்டதால் அதை அதிகம் தொந்தரவு செய்யாது சுதந்திரமாகத் திரியவிட்டான்.

குல்சாரி சிறந்த பொலிகுதிரையாகி வந்தது. தந்தையைப் போல அது குட்டிகளைக் கண்ணும் கருத்துமாகப் பேணிக் காத்தது. தாய்க் குதிரை கவனமின்றி இருந்துவிடுமாயின் உடனே அது ஓடிச் சென்று குட்டியை மந்தையிலிருந்து பின் தங்கிவிடாதபடியும் விலகிச் சென்று விடாதபடியும் பாதுகாக்கும். மற்றுமோர் அரிய பண்பும் அதனிடம் இருந்தது: அவசியமின்றி மந்தைக்குத் தொந்தரவு ஏற்படுவது அதற்குப் பிடிக்காது, அது போன்ற சந்தர்ப்பங்களில் மந்தையை அது வேறு இடத்துக்கு இட்டுச் சென்றுவிடும்.

அவ்வருடம் குளிர் காலத்தில் கூட்டுப் பண்ணையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. கூட்டுப் பண்ணைக்குப் புதிய தலைவர் ஒருவர் வந்தார். சோரோ தனது பதவியை அவரிடம் ஒப்படைத்துவிட்டு இப்பொழுது வட்டார



10-539

மருத்துவ மனையில் இருந்து வந்தான். அவனுக்கு இருதயக் கோளாறு கடுமையாகிவிட்டது. தானு பாய் தன் நண்பனைப் போய்ப் பார்த்துவரத் திட்டமிட்டிருந்தான், ஆனால் அவகாசம் கிடைக்கவில்லை. மந்தைக்காரனுடைய வாழ்க்கை அதிகமான குழந்தைகளை வளர்த்தெடுக்கும் தாயின் வாழ்க்கையை ஒத்தது. நாள் முழுதும் ஓய்ச்சல் ஒழிவு இருக்காது. முக்கியமாகக் குளிர் காலத்திலும் வசந்தத்தின் தொடக்கத்திலும் வேலைகளுக்கு முடிவே இருக்காது. குதிரையோ ஆடோ இயந்திரத்தைப் போன்றதல்ல, ஓடாமல் நிறுத்தி வைத்துவிட்டுப் போய்விட முடியாது. ஆகவே வட்டார மருத்துவமனைக்குப் போய் வர தானுபாய்க்கு அவகாசம் இல்லாமலே போய் விட்டது. இப்பொழுது அவனுக்கு உதவியாளர் யாரும் இல்லை. அவன் மனைவி உதவியாளராகக் குறிக்கப்பட்டிருந்தாள். எப்படியோ ஜீவனம் நடத்தியாக வேண்டுமல்லவா, அதற்காக இந்த ஏற்பாடு. வேலை நாள் ஊதிய அளவு இன்னமும் அற்ப சொற்பமாகவே இருந்தது. ஒருவருக்குப் பதிலாக இருவருமாக வேலை செய்தால் அதிக ஊதியம் கிடைக்குமே.

ஆனால் ஜெய்தார் கைக் குழந்தையை வைத்திருப்பவள். இப்படிப்பட்ட உதவியாளரால் என்ன செய்துவிட முடியும்? ஆகவே தானுபாய் தன் குதிரையை விட்டு இறங்காமல் இராப் பகலாக மந்தையுடன் இருக்க நேர்ந்தது. அக்கம் பக்கத்தவர்களில் ஒருவர் தனக்குப் பதிலாக மந்தையுடன் வந்திருக்க ஏற்பாடு செய்ய

அவன் முயன்று கொண்டிருக்கையில், சோரோ மருத்துவமனையை விட்டு வீட்டுக்கு வந்து விட்டான் என்று தகவல் கிடைத்தது. மலைகளி லிருந்து கீழே வந்ததும் சோரோவைப் பார்த் துவிட்டு வருவதென்று அவனும் அவன் மனை வியும் முடிவு செய்தனர். ஆனால் சமவெளிக்குத் திரும்பி அவர்கள் புதிய முகாமை அமைத்தது தான் தாமதம், அந்தப் பயங்கர சம்பவம் நடைபெற்றுவிட்டது—தானுபாயால் உணர்ச்சி வயப்படாது அமைதியாகச் சிந்தித்துப் பார்க்க முடியாத சம்பவம்...

பந்தயக் குதிரையின் புகழ் இரு பக்கமும் கூர்மையான கத்தி போன்றதாகும். அதன் கீர்த்தி ஓங்க ஓங்க உள்ளூர் அதிகாரிகள் அத னிடம் அதிக அக்கறை காட்டத் தொடங்கி விடுகிறார்கள்.

தானுபாய் அன்று காலையில் குதிரைகளை மேய்ச்சல் வெளியில் கொண்டு போய் விட்டு விட்டுக் காலை உணவருந்துவதற்காக வீட்டுக்குத் திரும்பி வந்தான். கைக்குழந்தையான தன் மகளை மடியில் வைத்துக் கொண்டு மனைவி யுடன் வீட்டு விவகாரங்கள் குறித்துப் பேசிய வாறு தேநீர் அருந்திக் கொண்டிருந்தான். போர்டிங் பள்ளியிலிருந்த தன் மகனைப் போய்ப் பார்த்துவிட்டு வருவதெனத் திட்டமிட்டான். நகரிலிருந்து திரும்புகையில் பழைய சாமான் கள் விற்கப்படும் சந்தைக்குச் சென்று மனை விக்கும் குழந்தைகளுக்கும் துணிமணிகள் வாங்கி வரலாமென்று இருந்தான்.

''ஜெய்தார், குல்சாரியில் தான் கிளம்ப வேண்டும்'' என்று தேநீரைச் சுவைத்தபடிக் கூறினன். ''இல்லையேல் பொழுது போகுமுன் என்னல் திரும்பி வர முடியாது. இதுவே கடைசி முறை, திரும்பவும் குல்சாரியைத் தொந்தரவு செய்ய மாட்டேன்.''

''சரி, அப்படியே செய்'' என்ருள் அவன் மனைவி.

வெளியே குதிரைகளின் குளம்பொலி கேட்டது. கூடாரத்தை நோக்கி யாரோ வருவது தெரிந்தது.

''யார் அது, போய்ப் பார்'' என்று மனைவியிடம் சொன்னன்.

அவள் வெளியே போய்ப் பார்த்துவிட்டு இப்ராகிம் வந்திருப்பதாகக் கூறினள். இப்ராகிம் தான் பண்ணையின் குதிரைப் பிரிவின் தலைவன். அவனுடன் வேருெரு புதிய ஆளும் வந்திருக்கிருன் என்ருள்.

தானுபாய் மனமின்றி எழுந்து குழந்தையைத் தூக்கிக் கொண்டு வெளியே சென்ருன். இப்ராகிமை அவனுக்குப் பிடிக்காதுதான். ஆனல் விருந்தினனுகத் தன் வீட்டுக்கு வந்தவனைத் தக்க மரியாதையுடன் வரவேற்காமல் இருக்கலாமா? இப்ராகிமை அவனுக்குப் பிடிக்காமல் போனதற்குக் காரணம் என்ன? அவனுக்கே இதன் காரணம் தெளிவாகத் தெரியாது. ஏனைய பலரையும் போலல்லாது இப்ராகிம் இனிய சுபாவமுடையவனுகவே தோன்றினன். ஆனல் இன்னதென்று கூற முடியாத ஏதோ ஒன்று

அவனிடம் இருந்தது. முக்கியமானது என்ன வெனில் இப்ராகிம் வேலை செய்யாமலே காலத்தை ஓட்டி வந்தான். கணக்கேட்டில் எண்களைக் குறித்துக் கொள்வதுதான் நாளெல் லாம் அவன் செய்த வேலை. மந்தைகளை வள மாக்க எதுவும் செய்யப்படவில்லை. அந்தந்த மந்தைக்காரனும் தானே தனக்கு ஆக வேண்டி யதைத் செய்து கொள்ள வேண்டியிருந்தது. கட்சிக் கூட்டங்களில் தானுபாய் இதைப் பற்றி அடிக்கடி பேசினுன். அவன் கூறியதை எல் லோரும் உடனே ஒத்துக் கொண்டனர். இப்ரா கிமும் ஒத்துக் கொண்டு ஆக்க வழிப்பட்ட விமர்சனத்துக்காகத் தானுபாய்க்கு நன்றி தெரி வித்தான். ஆனுல் எந்த மாற்றமும் ஏற்பட வில்லை. நல்ல வேளையாக மந்தைக்காரர்கள் நல்ல பாட்டாளிகள். சோரோவால் மிகச் சிறந்தோராய்ப் பொறுக்கியெடுக்கப்பட்டு நிய மிக்கப் பட்டிருந்தவர்கள்.

இப்ராகிம் குதிரையிலிருந்து இறங்கிக் கை களை விரிய விரித்து வணக்கம் தெரிவித் தான்.

''அஸ்ஸலாம் அலேகும்!'' என்ருன்.

''அஸ்ஸலாம் அலேகும்!'' என்று தானுபாய் அடித்தொண்டையில் கூறி அவர்களுடன் கை குலுக்கினுன்.

''தானுபாய், என்ன சேதி? எப்படி இருக் கிருய்? குதிரைகள் எல்லாம் எப்படி இருக்கின் றன?'' வழக்கமான கேள்விகளை இப்ராகிம் அடுக்கிக் கொண்டு போனுன். வழக்கமான

புன்னகை அவனுடைய தடித்த முகவாயில் நெளிந்தது.

''எல்லாம் நன்ருகத்தான் இருக்கின்றன.''

''அல்லா வாழ்க! உன்ஞல் எனக்கு எந்தக் கவலையும் இல்லை.''

''உள்ளே வாங்க.''

விருந்தினர்களுக்காக ஜெய்தார் புதிய கம் பளத்தை விரித்து அதன் மேல் ஆட்டுத் தோல் களை அடுக்கி ஆசனங்கள் அமைத்தாள். இப்ரா கிமின் கவனம் இப்பொழுது அவளிடம் திரும் பிற்று.

''ஜெய்தார், எப்படி இருக்கிருய்? சுகம் தானே? கணவனை நல்லபடியாய்க் கவனித்துக் கொள்கிருய் அல்லவா?''

''வாங்க, வணக்கம். உட்காருங்கள்.''

எல்லோரும் உட்கார்ந்தனர்.

''குமிஸ் கொண்டு வாயேன்'' என்ருன் தாஞ பாய் தன் மனைவியிடம்.

அவர்கள் குமிஸைக் குடித்துவிட்டுப் பல விவகாரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந் தனர்.

''கால்நடை வளர்ப்பு ஒன்றுதான் இக்காலத் தில் நம்பிக்கைக்குரிய வேலை'' என்ருன் இப்ரா கிம். ''கோடையில் பாலும் இறைச்சியுமாவது கிடைக்கும் என்று நம்பலாம். ஆஞல் சாகுபடி வேலைகளிலும் மற்ற வேலைகளிலும் எதுவுமே கிடைப்பதில்லை. ஆகவே மந்தைக்காரஞக வேலை செய்வதுதான் நல்லது. இல்லையா, ஜெய்தார்?''

ஜெய்தார் தலையை ஆட்டிக் கொண்டாள்,

ஆனால் தானுபாய் பேசாமல் மௌனமாயிருந் தான். இப்ராகிம் கூறியது அவன் அறிந்தது தான். அவன் எத்தனையோ தரம் இப்ராகிம் இதைக் கூறக் கேட்டிருப்பான். மந்தைக்காரனாக வேலை செய்பவன் பாக்கியசாலி என்று இப்ராகிம் வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் தவ றாமல் கூறி வந்தான். பாலும் இறைச்சியும் தந்த வசதியான வேலைகளில் ஒட்டிக் கொண் டிருந்து பயனில்லை என்று தானுபாய் சொல்ல விரும்பினான். ஏனையோரின் நிலை ஏன் இப்படி இருக்க வேண்டும்? இன்னும் எவ்வளவு காலத் துக்குத்தான் மக்கள் பயன் ஏதுமின்றி வேலை செய்து கொண்டிருப்பதாம்? யுத்தத்துக்கு முன்பு இப்படியா இருந்தது? அந்நாட்களில் இலையுதிர் காலத்தில் ஒவ்வொரு வீட்டுக்கும் இரண்டு மூன்று வண்டி தானியம் கிடைக்குமே. இன்று எல்லாரும் காலிச் சாக்குகளைத் தூக்கிக் கொண்டு அலைகிறார்களே. கோதுமை பயிரிடுகிறவர்கள் இவர்கள், ஆனால் இவர்களுக்குத் தானியம் இல்லை. நிலைமை இப்படி ஆகலாமா? கூட்டங் கள் கூட்டி வாக்குறுதிகள் அளித்தால் மட்டும் போதுமா? பாடுபட்டு வேலை செய்தோருக்குச் சோரோவால் இதமான சொற்களைத் தவிர வேறு எதுவும் கொடுக்க முடியாமற் போன தால் தானே அவனுக்கு இருதயக் கோளாறு வந்தது? ஆனால் தானுபாயின் நெஞ்சைப் பெருஞ் சுமையாய் வருத்திய இவற்றையெல் லாம் இப்ராகிமிடம் சொல்லிப் பயனில்லை. அது மட்டுமின்றி நீண்ட விவாதம் எதையும்

துவக்க அவன் விரும்பவில்லை. வந்தவர்களைச் சீக்கிரமாகவே அனுப்பி விட்டுக் குலுங்கா நடையானுக்குச் சேணம் பூட்டி நகருக்குப் புறப்பட்டாக வேண்டும்; அப்பொழுதுதான் அங்கிருந்து சீக்கிரமாகத் திரும்பி வந்து சேர முடியும். இவர்கள் வந்த காரணம் என்ன? கேட்பது மரியாதையல்ல.

''உன்னை அடையாளம் தெரியவில்லையே'' என்று இப்ராகிமுடன் வந்திருந்த வாய் பேசாத இளைஞனைப் பார்த்துத் தானுபாய் கேட்டான். ''அபாலாக்கின் மகன் மாதிரி தெரிகிறதே'' என்றான்.

''ஆமாம்.''

''காலம் எவ்வளவு வேகமாகப் பறக்கிறது! மந்தைகளைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறாயா?''

''இல்லை, நாங்கள்...''

''என்னுடன்கூட வந்தான்'' என்று இப்ராகிம் இடைமறித்துக் கூறினான். ''வேலையாக வந்திருக் கிறோம். ஆனால் அவசரமில்லை, அதைப் பற்றி பிற்பாடு பேசலாம். ஜெய்தார், உன்னுடைய குமிஸ் அற்புதமாயிருக்கிறது. வாசனை மணக் கிறது! எனக்கு இன்னொரு கப் ஊற்றுகிறாயா?''

மீண்டும் அவர்கள் எதையெதை எல்லாம் பற்றியோ பேசினர். ஏதோ க்ாரியமாய்த்தான் இப்ராகிம் தன் கூடாரத்துக்கு வந்திருக்கிறான் என்பது தானுபாய்க்குத் தெரிந்தது. ஆனால் அது என்னவென்று அவனால் ஊகிக்க முடிய வில்லை. முடிவில் இப்ராகிம் தன்னுடைய சட் டைப் பைக்குள்ளிருந்து ஒரு காகிதத்தை

வெளியே எடுத்தான்.

''தானுபாய், நாங்கள் வந்த காரியம், இது தான். இதோ இருக்கிறது காகிதம். படித்துப் பார்.''

தானுபாய் தன் கண்களையே நம்ப முடியாத வகைத் மெள்ள மனதுக்குள் படித்தான். அந்தக் காகிதத்தில் கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது:

''ஓர் உத்தரவு.
மந்தைக்காரர் பக்காசவுக்கு.
குலுங்கா நடையாளுன குல்சாரி சவாரிக் குதிரையாக உபயோகிக்கப்படுவதற்காக லாயத் துக்கு மாற்றப்படுகிறது.

ஒப்பம்: கூட்டுப் பண்ணையின் தலைவர் (கையெழுத்து புரியவில்லை). 1950, மார்ச் 5.''

எதிர்பாராத இந்தத் திருப்பத்தால் துணுக் குற்றுவிட்ட தானுபாய் பேசாமல் காகிதத்தை நான்காக மடித்துத் தனது பழைய பட்டாளத் துச் சட்டையின் மேல் பைக்குள் வைத்து விட்டுச் சற்று நேரம் கண்களைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் நெஞ்சுக் குள் ஒரு மாதிரியாக இருந்தது. உண்மையில் அவன் திகைக்கக் காரணமே இல்லை. குதிரை களை வளர்த்து அவற்றை வேலைக் குதிரைகளா கவோ சவாரிக் குதிரைகளாகவோ பிறரிடம் ஒப்படைப்பதுதான் அவனுடைய வேலை. எத் தனையோ குதிரைகளைக் கடந்த ஆண்டுகளில் இவ்விதம் அவன் பல்வேறு வேலைக்குழுக்களிடம் ஒப்படைத்திருந்தான். ஆனல் குல்சாரியையும்

இவ்விதம் கைவிட்டுவிடுவதா? அதற்கு ஒரு நாளும் அவன் மனம் ஒப்ப மாட்டான். குலுங்கா நடையான் தன்னை விட்டகன்றுவிடாதபடிச் செய்வதற்கு வழி என்ன என்று ஆவேசமாகச் சிந்திக்கலானான். எல்லாவற்றையும் அவன் கணக்கில் எடுத்துக் கொண்டாக வேண்டும். உறுதி குலைந்துவிடக் கூடாது. இப்ராகிமுக்கு இருப்புக் கொள்ளவில்லை.

''நாங்கள் இங்கு வந்த காரியம் இதுதான், தானுபாய்'' என்று அவன் எச்சரிக்கையுடன் குறிப்பிட்டான்.

''நல்லது'' என்று அமைதியாக அவனைப் பார்த்தவாறு தானுபாய் பதிலளித்தான். ''நீ வந்த காரியம் ஓடிவிடாது. இன்னும் கொஞ்சம் குமிஸ் குடித்துவிட்டுச் சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாம்.''

''ஓ, அதற்கென்ன, பேசுவோம். தானுபாய், நீ எல்லாம் அறிந்தவன், நியாயமாய் நடந்து கொள்பவன்.''

''ஆமாம்! உன்னுடைய நரிப் பேச்சில் மயங்கி விடுவேன் என்று நினைக்காதே!'' — தானுபாய் ஆத்திரமாகத் தன் மனத்துள் கூறிக் கொண்டான்.

அவர்கள் மீண்டும் அற்ப விவகாரங்கள் குறித்துப் பேச முற்பட்டனர். இனி அவசரம் வேண்டியதில்லை.

தானுபாய் இவ்வாறுதான் கூட்டுப் பண்ணையின் புதிய தலைவரை, இல்லை அவருடைய புரியாத கையெழுத்தைத் தெரிந்து கொண்

டான். இன்னும் ஆளை நேரில் அவன் பார்த்த தில்லை. சோரோவின் பதவியில் புதிய தலைவர் அமர்ந்தது குளிர் காலத்தில்; அப்பொழுது தானுபாய் மலைகளில் இருந்தான். ஆள் கண்டிப் பானவர், இதற்கு முன்பு எங்கோ உயர் பதவி யில் இருந்தவர் என்பதாகச் சொன்னார்கள். பின்னிலையில் தங்குவோரிடம் கடுமையாக இருக்கப் போவதாகவும், ஏற்ற பங்கை நிறை வேற்றாதவர்கள் எல்லோரையும் நீதி மன்றத்துக்கு இழுத்துச் செல்லப் போவதாகவும் முதலாவது கூட்டத்திலேயே அவர் எல்லோரையும் எச் சரித்தார். கூட்டுப் பண்ணை மிகவும் சிறியதாக இருக்கிறது, பண்ணையின் எல்லாத் தொல்லை களுக்கும் இதுவே காரணம், ஆனால் விரைவில் பண்ணை பெரிதாக்கப்பட்டுவிடும், பிறகு யாவும் மேம்பாடு அடைந்துவிடும் என்றார். இதற்காகத் தான் தன்னை இப்பண்ணையின் தலைவனாக நியமித்தார்கள், நவீனச் சாகுபடி, கால்நடை நுட்பத்தின் விதிகளுக்கு ஏற்பப் பண்ணையை நடத்துவதே தனது கடமை என்றார். சாகுபடி, கால்நடை நுட்பப் பயிற்சி வகுப்புகளில் எல்லோரும் சேர்ந்து பயின்றாக வேண்டுமென் பதே இதன் அர்த்தம்.

இந்தப் பயிற்சிகள் விரைவில் துவக்கப்பட்டு விட்டன. சுவரொட்டிகள் ஆங்காங்கே ஒட்டப் பட்டன, வகுப்புகள் ஆரம்பமாயின. ஆனால் வகுப்புகளில் மந்தைக்காரர்களும் மேய்ச்சல் காரர்களும் தூங்கி விழுந்தால் அது அவர்கள் பாடு...

''தானுபாய், நேரமாகிறது. நாங்கள் புறப்பட வேண்டும்'' என்ருன் இப்ராகிம். ஆவலோடு தானுபாயை உற்று நோக்கிஞன். பிறகு பூட்சு களைப் போட்டுக் கொண்டு நரித் தோல் தொப் பியை ஆட்டிச் சரி செய்யத் தொடங்கிஞன்.

''குதிரைப் பிரிவின் தலைவனே, இதைக் கேள். குல்சாரியை நான் கொடுக்கப் போவ தில்லை. இதைப் பண்ணைத் தலைவரிடம் சொல்லி விடு. அது என் மந்தையின் பொலிகுதிரை. மந்தையில் போதிய பொலிகுதிரைகள் இருக்க வேண்டும்.''

''தானுபாய், குல்சாரிக்குப் பதில் உனக்கு ஐந்து பொலிகுதிரைகள் தருகிருேம். மந்தை யிலுள்ள பெண் குதிரைகளுக்கு அவை போதும். இது ஒரு பிரச்சினையல்ல'' என்று இப்ராகிம் வியப்புடன் கூறிஞன். இது வரை யாவும் ஒழுங்காக நடைபெறுவதாய் நினைத்து மகிழ்ந் திருந்தான், ஆனல் திடீரென்று... தானுபாய் இல்லாமல் வேறு யாராக இருந்தாலும் எளிதில் விவகாரத்தை முடித்திருப்பான். ஆனல் தானு பாய் ஆயிற்றே, சொந்தச் சகோதரனையும் விடாதவன் ஆயிற்றே, அவனிடம் எச்சரிக் கையுடன்தான் நடந்து கொள்ள வேண்டும். அமைதியாகத்தான் அணுக வேண்டும்.

''உன்னுடைய ஐந்து பொலிகுதிரைகள் வேண் டாம் எனக்கு'' என்று ஈர நெற்றியைத் துடைத்துக் கொண்டு தானுபாய் கூறிஞன். கணப் பொழுது மௌனமாயிருந்த பின் தன் மனத்திலுள்ளதைக் கூறிவிடுவதென்று முடிவு

செய்து கொண்டான். ''உன்னுடைய தலைவர் சவாரி செய்வதற்குக் குதிரை இல்லாமலா போய்விட்டது—லாயத்தில் குதிரைகள் இல்லையா, என்ன? ஏன் குல்சாரி வேண்டும் என்கிறார்?''

''இது தெரியவில்லையா உனக்கு? கூட்டுப் பண்ணைத் தலைவர் நம் எல்லோருக்கும் தலைவர், எல்லோராலும் மதிக்கப்பட வேண்டியவர். அடிக்கடி வட்டாரத் தலைமையிடத்துக்குப் போய் வருகிறார், அவரைப் பார்ப்பதற்குப் பலரும் இங்கு வருகின்றனர். பண்ணைத் தலைவர் மக்களின் பார்வையிலே இருப்பவர், முன்னால் நிற்கிறவர்...''

''நிற்கட்டுமே, அதனால் என்ன? வேறொரு குதிரையில் போனால் அவர் யாரென்று தெரியா மலா போய்விடும்? மக்களின் பார்வையிலே இருப்பவர், குலுங்கா நடையான் மீதுதான் போக வேண்டுமென்று அவசியமில்லையே.''

''அவசியமா இல்லையா என்பதல்ல கேள்வி. எப்படி இருக்க வேண்டுமென்பதே கேள்வி. யுத்த காலத்தில் நீ படையில் இருந்தவன். உன் ஜெனரல் லாரியிலே போய்க் கொண் டிருக்க நீ காரிலா சென்று வந்தாய்? இல்லை. ஜெனரலாக இருப்பவருக்கு ஜெனரலுக்கு ஏற்றது, படையாளாக இருப்பவருக்குப் படை யாளுக்கு ஏற்றது. அதுதானே முறை?''

''இங்கே நிலைமை வேறு, அது இங்கே பொருந் தாது'' என்று தயங்கியவாறு தானுபாய் மறுத்துப் பேசினன். ஆனல் ஏன் பொருந்தாதென்பதை அவன் விளக்கவில்லை, அவனல் விளக்கவும்

முடிந்திருக்காது. குலுங்கா நடையான் மீது சுருக்கு கயிறு இறுகிச் செல்வதை உணர்ந்து ஆத்திரம் தொனிக்கக் கூறினான்: ''குல்சாரியை நான் கொடுக்கப் போவதில்லை. என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால், கொல்லுப் பட்டறைக்கு என்னை மாற்றிவிடலாம். அங்கே என்னுடைய சம்மட்டியை என்னிடமிருந்து உங்களால் பிடுங்கிக் கொள்ள முடியாது.''

''தானபாய், நீ இப்படிப் பேசக் கூடாது. நாங்கள் உன்மீது தனி மதிப்பு வைத்திருக்கிறோம், உன்னுடைய சேவையைப் போற்றுகிறோம். ஆனால் நீ சிறு பிள்ளைத்தனமாகப் பேசுகிறாய், இது உனக்கு அழகல்ல.'' இப்ராகிம் அமைதியிழக்கலானான். தான் சிக்கலில் மாட்டிக் கொண்டுவிட்டதாக நினைத்தான். அவன் பெரிதாக வாக்குறுதியளித்துவிட்டுப் புறப்பட்டு, வந்தான், இந்தத் திட்டத்துக்கு அவன் தான் மூலகர்த்தாவாக இருந்து வேலை செய்தான், தானே இதைச் செய்வதாக முன் வந்தான் —ஆனால் இந்தப் பிடிவாதக்காரன் எல்லாவற்றையும் கெடுத்துவிடுவான் போலிருக்கிறதே.

இப்ராகிம் பெருமூச்செறிந்தவாறு ஜெய்தாரின் பக்கம் திரும்பினான்.

''ஜெய்தார், நீயே சொல்லு. ஒரேயொரு குதிரை இல்லையேல் என்னவாம்? அது குலுங்கா நடையானாகவே தான் இருக்கட்டுமே, என்னவாம், சொல்லு. மந்தையில் எத்தனையோ வகையான குதிரைகள் இருக்கின்றன, நல்லதாய் வேறொன்றைப் பொறுக்கிக் கொள்ளலாமே.

கூட்டுப் பண்ணைத் தலைவர் புதிதாக வந்திருக்கிறார். இப்பொழுதுதான் நியமனமாகி வந்திருக்கிறார்...''

''உனக்கு ஏன் இதில் இவ்வளவு அக்கறை?'' என்று ஜெய்தார் கேட்டாள்.

இப்ராகிம் சற்றுத் திணறித் தயங்கிவிட்டுத் தோள்களை உலுக்கிக் கொண்டான்.

''எனக்கு இதில் ஒன்றுமில்லை, கட்டளையை நிறைவேற்றுகிறேன். நான் சிறு மனிதன். செய்யச் சொன்னார்கள். செய்கிறேன்—அவ்வளவுதான். கழுதையிலே சவாரி செய்ய வேண்டுமானாலும் செய்வேன். இதோ அபாலாக்கின் மகனை வேண்டுமானால் கேட்டுப் பார், சொல்வான். குலுங்கா நடையானை ஓட்டி வருவதற்காக இவனை என்னுடன் அனுப்பினார்கள்.''

இளைஞன் தலையை ஆட்டிக் கொண்டான்.

''பார்ப்பவர்களுக்கு நன்றாக இருக்காது'' என்று தொடர்ந்து இப்ராகிம் பேசினான். ''பண்ணைக்குப் புதிய தலைவரை நியமித்திருக்கிறார்கள். அவர் நமது விருந்தினர். நமது கிராமத்தால் அவருக்கு ஒரு நல்ல குதிரைகூட கொடுக்க முடியாவிட்டால் எப்படி இருக்கும்? மக்களுக்கு இது தெரிந்தால் என்ன சொல்வார்கள்? கிர்கீஸியர்கள் இப்படியா செய்வது என்றல்லவா கேட்பார்கள்?''

''சரி கிராம மக்கள் எல்லோருக்கும் தெரியட்டும். நான் சோரோவிடம் போய்க் கேட்கிறேன். யார் சரி என்று அவன் சொல்லட்டும்'' என்றான் தானபாய்.

''குதிரையை நீ கொடுக்க வேண்டாமென்று சோரோ சொல்வானென்று எதிர்பார்க்கிறாய்? ஏற்கனவே சோரோ ஒத்துக் கொண்டுவிட்டானே.

நீ போய் கேட்பதால் அவனுக்குச்சங்கட நிலைமை தான் ஏற்படும். சீர்குலைவு செய்வது போன்றதாகிவிடும். பண்ணையின் புதிய தலைவரை மதிக்காமல் பழைய தலைவனிடம் போய் முறையிடுவது போலிருக்கும். சோரோ உடல் நலமில்லாதவன். புதிய தலைவருடன் அவனுக்குள்ள உறவைக் கெடுப்பது சரியா? சோரோ கட்சி நிறுவகனாய் இருக்கப் போகிறான், பண்ணைத் தலைவருடன் அவன் இணைந்து வேலை செய்தாக வேண்டும். நீ போய் ஊறு விளைவிக்கலாமா?..''

சோரோவைப் பற்றிப் பேச்சுத் திரும்பியதும் தானுபாய் ஒன்றும் சொல்லவில்லை. எல்லோருமே மௌனமாகிவிட்டனர். ஜெய்தார் பெருமூச்செறிந்தாள்.

''கொடுத்துவிடு, வந்தவர்களைக் காத்திருக்கச் செய்ய வேண்டாம்'' என்று அவள் தன் கணவனிடம் சொன்னாள்.

''அப்படிச் சொல்லு! அது அல்லவா சரி. முன்பே நீ இதைச் சொல்லியிருக்க வேண்டும். ஜெய்தார், உனக்கு நன்றி.''

இப்ராகிம் இவ்வளவு சிரமப்பட்டது வீணாகி விடவில்லை. குதிரைப் பிரிவின் முதல்வனாயிருந்தவன் இதன்பின் சிறிது காலத்துக்கெல்லாம் கால்நடைத் துறை அனைத்துக்கும் பொறுப்

பான துணைத் தலைவனாகப் பதவி உயர்வு பெற்றான்...

தானாபாய் குனிந்த தலை நிமிராது குதிரை மீது உட்கார்ந்திருந்தான். தலை நிமிரவில்லை என்றாலும் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டுதான் இருந்தான். குல்சாரி பிடிக்கப்பட்டதையும் அதற்குப் புதிய கடிவாளம் போடப்பட்டதையும் பார்த்தபடி அமர்ந்திருந்தான். தனது கடிவாளத்தை ஒரு நாளும் தானாபாய் அவர்களிடம் கொடுக்க இசைந்திருக்க மாட்டான். மந்தையிலிருந்து தான் பிடித்திழுக்கப்படுவதை எதிர்த்துக் குல்சாரி போராடியதையும், அபாலாக்கின் மகன் பிடித்திருந்த லகானை முண்டிக் கொண்டு இழுத்ததையும், இப்ராகிம் இடது பக்கமாகவும் பிறகு வலது பக்கமாகவும் மாறி மாறிக் குதிரையிலே நெருங்கி வந்துதன் சவுக்கை நன்றாக வீசிச் சுழற்றிக் குல்சாரியை நையப் புடைத்ததையும் பார்த்துக் கொண்டிருந்தான். குலுங்கா நடையானின் கண்களையும், இந்த அந்நியர்கள் ஏன் தன்னைப் பெண் குதிரைகளிடமிருந்தும் குட்டிகளிடமிருந்தும் தன் எஜமானனிடமிருந்தும் பிரித்திழுத்துச் செல்கிறார்கள் என்று புரியாத தவிப்பு அவற்றில் தெரிந்ததையும் பார்த்துக் கொண்டிருந்தான். குதிரை கனைத்த போது அதன் திறந்த வாயிலிருந்து எழுந்த ஆவியைக் கண்ணுற்றான். அதன் பிடரி முடிகளையும் தோள் முகட்டையும் துடையையும் சவுக்கடிபட்டு முதுகிலும் விலாவிலும் தெரிந்த

தடிப்புகளையும் கண்ணுற்றான். அதன் வலது முன்னங்காலில் காற் குழைச்சுக்கு மேலிருந்த சிறு காய்ப்பு அடங்கலாய் ஒவ்வொரு சிறு விவரத்தையும் குதிரையின் நடையையும் குளம்புத் தடங்களையும் அதன் பொன்னிறப் பிடரியின் ஒவ்வொரு முடி வரையிலுமான அனைத்தையும் கண்ணுற்றான். கண்ணுற்று உதட்டைக் கடித் தவாறு மௌனமாகத் துயருற்றான். முடிவில் அவன் தலையை உயர்த்தியபோது, குல்சாரியை ஓட்டிச் செல்ல வந்திருந்தோர் மேட்டுக்குப் பின்னால் மறைந்து கொண்டிருந்தனர். தானு பாய் கூச்சலிட்டுக் கத்திவிட்டு அவர்களை நோக்கிக் குதிரையைத் தட்டிவிட்டான்.

''நில்! போகாதே, நின்றுவிடு'' என்று கூச்ச லிட்டுக் கொண்டு கூடாரத்திலிருந்து ஜெய்தார் வெளியே ஓடிவந்தாள்.

ஒரு பயங்கர எண்ணம் திடீரென்று அவன் உள்ளத்தில் உதித்தது: அந்த இரவுகளுக்காகத் தன் மனைவி குலுங்கா நடையான்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்கிறாளோ என்று நினைத்தான். வெடுக்கெனக் குதிரையைத் திருப்பி அதைச் சவுக்கால் அடித்து வேகமாக ஓடச் செய்தான். கூடாரத்தின் பக்கத்தில் நிறுத்திக் கீழே குதித்துத் தன் மனைவியிடம் ஓடினான். அவன் முகம் வெளிறிக் கோபத்தால் உருமாறியிருந்தது.

''நீ ஏன் அப்படிச் சொன்னாய்? அவர்களிடம் கொடுத்துவிடும்படி ஏன் சொன்னாய்?'' என்று அவளை வெறிக்கப் பார்த்தபடி உறுமினான்.

''கூச்சல் போடாதே. கையைக் கீழே போடு''

என்று அவள் கலக்கம் சிறிதுமின்றி எப்பொழுதும் போன்ற அமைதியான குரலில் கூறினுள். ''நான் சொல்வதைக் கேள். குல்சாரி உன்னுடைய குதிரையா? உன்னுடைய சொந்த சொத்தா அது? உனக்குச் சொந்தமானது எது? நம்மிடம் இருப்பதெல்லாம் பண்ணையிலுள்ள நம் எல்லோருக்கும் சொந்தமானவை. இதுவே நமது வாழ்க்கை முறை. குல்சாரியும் கூட கூட்டுப் பண்ணைக்குச் சொந்தமானதே. கூட்டுப் பண்ணைத் தலைவர் தான் கூட்டுப் பண்ணைக்குப் பொறுப்பானவர். அவர் சொல்வதுதான் ஏற்கப்பட வேண்டியது. நான் கொடுக்கச் சொன்னதற்கு இது ஒன்றுதான் காரணம். என்னைப் பொறுத்தவரை எப்பொழுது வேண்டுமானுலும் நீ போகலாம். என்னை விட அவள் நன்ருக இருக்கிருள், இளையவள், அழகானவள். அவள் ரொம்ப நல்லவள். நானும் அவளைப் போல விதவையாகியிருப்பேன், ஆனுல் நீ திரும்பி வந்தாய். உனக்காக நான் தவியாய்த் தவித்தேன், காத்துக் கொண்டிருந்தேன். ஆனுல் இப்பொழுது அதைப் பற்றிப் பேச வேண்டியதில்லை. உனக்கு மூன்று குழந்தைகள் இருக்கிருர்கள். நான் அவர்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது? பிற்பாடு நீ அவர்களிடம் என்ன சொல்வாய்? அவர்கள் என்ன சொல்வார்கள்? நான் அவர்களிடம் என்ன சொல்வேன்? இதெல்லாம் பற்றி ஆலோசித்து நீயே தீர்மானம் செய்து கொள்...''

தானுபாய் குதிரையில் ஸ்தெப்பியினுள் சென்

ளுன். மாலை வரை மந்தையுடனே இருந்தான். அவனால் அமைதியடைய முடியவில்லை. மந்தையே அனாதையாகிவிட்டது போல் தோன்றியது. அவனுடைய ஆத்மாவே அனாதையாகி விட்டது போலிருந்தது. குலுங்கா நடையான் தன்னுடன் யாவற்றையும் எடுத்துச் சென்று விட்டது. எதுவும் இனி முன்பு போலில்லை. கதிரவன் முன்பு போலில்லை, வானம் முன்பு போலில்லை, தானுங்கூட மாற்றமடைந்துவிட்ட தாக நினைத்தான்.

அவன் திரும்பி வருகையில் நன்ருக இருட்டி விட்டது. மௌனமாகக் கூடாரத்தினுள் நுழைந்தான், அவன் முகம் விகாரமடைந்திருந்தது. பெண் குழந்தைகள் இருவரும் தூங்கிக் கொண்டிருந்தனர். கணப்படுப்பில் தீ எரிந்து கொண்டிருந்தனர். அவன் மனைவி அவன் கைகளில் தண்ணீர் ஊற்றிக் கழுவிக் கொள்ளச் சொல்லிவிட்டு அவனுக்கு இரவு சாப்பாட்டை எடுத்து வைத்தாள்.

''நான் சாப்பிட விரும்பவில்லை'' என்ருன் தானபாய். பிறகு அவளிடம் ''உன்னுடைய தெமிர்-கொமுஸில்° 'ஒட்டகத்தின் புலம்பலை' வாசித்துக் காட்டேன்'' என்ருன்.

ஜெய்தார் இந்த இசைக் கருவியைத் தன் உதடுகளில் வைத்து அதன் மெல்லிய உருக்கு நாக்கை விரல்களால் துடைத்துவிட்டு ஊதி ஆழமாய் மூச்சை உள்ளுக்கிழுத்தாள். நாடோடி

° தெமிர்-கொமுஸ் — மோர்சிங் போன்ற இசைக் கருவி. — ப-ர்.

மக்களின் பண்டைய இசை கூடாரத்தினுள் பொங்கியெழுந்தது. தனது சின்னஞ்சிறு வெள் ளைக் குட்டியை இழந்துவிட்ட தாய் ஒட்டகத் தைப் பற்றிய ஒரு பாடல் அது.. தனது குட்டி யைத் தேடிக் கொண்டு பல நாட்களாகப் பாலைவனத்தில் தேடியலைந்தது. குட்டியைக் கூப்பிட்டபடி திரிந்தது. இனி எந்நாளும் தன் குட்டியை அந்தி வேளையின் மெல்லொளியில் மலைப் பிளவிலோ, வைகறைப் பொழுதில் சமவெளியிலோ அழைத்துச் செல்ல முடியாதே; இருவருமாகச் சேர்ந்து இலைகளைக் கொறிக் கவோ, இடம்பெயரும் மணல் மேடுகளைக் கடக்கவோ, வசந்தத்தில் வயல்களில் திரியவோ முடியாதே; எந்நாளும் இனி அதற்குத் தனது தூய வெண்ணிறப் பாலை ஊட்ட முடியாதே என்று தாய் ஒட்டகம் புலம்புகிறது. கருவிழிக் குட்டியே, எங்கே சென்ருய் நீ? பதில் சொல் லாயோ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது, அதன் கால் களில் வழிந்தோடுகிறது. எங்கே நீ? பதில் சொல்லாயோ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது. தூய வெண்ணிறப் பால்...

ஜெய்தார் அற்புதமாக வாசித்தாள். மிகப் பல ஆண்டுகளுக்கு முன்பு இளம் பெண்ணுக இருந்த ஜெய்தார் இப்பாடலை வாசித்த போது தாளுபாய் தன் இதயத்தை அவளிடம் பறி கொடுத்துவிட்டான்.

அவன் மார்பில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு

பாட்டைக் கேட்டான். நிமிர்ந்து பார்க்கவில்லை என்றாலும் திரும்பவும் அவன் எல்லாவற்றையும் கண்ணுற்றான். பல ஆண்டுகளாக வெயிலிலும் குளிரிலும் வேலை செய்து முரடாகிவிட்ட அவளுடைய கைகளையும், அவள் கூந்தலில் கலந்திருந்த நரையையும், இப்பொழுது அவள் கழுத்திலும் வாயின் இரு முனைகளிலும் கண்களைச் சுற்றிலும் வளையமிட்டிருந்த சுருக்கங்களையும் கண்ணுற்றான். மறைந்து போன இளமை அந்தச் சுருக்கங்களில் மீண்டும் உருவாகி வெளித் தோன்றியது. முதுகில் சடைகள் தொங்கும் தளிர் மேனிப் பெண்ணாக அவளும் இளைஞனாக அவனும் மாறிவிட, இருவரிடையிலும் அன்று மலர்ந்த உணர்ச்சி மிக்க நெருக்கமும் அவன் கண்ணெதிரே தெரியலாயிற்று. இப்பொழுது ஜெய்தார் அவன் தன்னருகே இருக்கிறான் என்ற உணர்வில்லாதவளாக இசையில் ஒன்றித் தன் சொந்த சிந்தனைகளிலே மூழ்கியிருந்தாள் என்பதைக் கண்டான். தனது இன்னல்களிலும் துயரங்களிலும் ஒரு பாதி அவளிடம் புதைந்திருக்கக் கண்டான். என்றென்றைக்குமாய் அவள் அவற்றைத் தன்னுள் கொண்டிருந்தாள்.

...தாய் ஒட்டகம் பல நாட்களாகத் தன் குட்டியைத் தேடி அலைந்தது. அதைக் கூப்பிட்டபடி திரிந்தது. கருவிழிக் குட்டியே, எங்கே சென்றாய் நீ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது, அதன் கால்களில் வடிந்தோடுகிறது. எங்கே நீ? பதில் சொல்லாயோ? அதன் மடியிலிருந்து,

நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டு கிறது. தூய வெண்ணிறப் பால்...

பெண் குழந்தைகள் இருவரும் கைகளால் ஒருவரையொருவர் அணைத்துக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தனர். ஸ்தெப்பி வெளி, இரவின் இருட்டில் ஊடுருவ முடியாததாயிருந்த அந்தப் பெருவெளி, கூடாரத்துக்கு வெளியே விரிந் திருந்தது.

அதே நேரத்தில் பண்ணை லாயத்தில் குல்சாரி கொடுஞ் சீற்றமுற்று அட்டகாசம் செய்து கொண்டிருந்தது, லாயக்காரர்களைத் தூங்க விடவில்லை. குதிரைகளின் சிறைக்கூடமான லாயத்திலே அது அடைக்கப்பட்டது அதுவே முதல் முறை.

## 8

காலையில் மந்தையில் தன் குலுங்கா நடை யானும் இருக்கக் கண்டு தானபாய் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டான். அது சேணமிடப்பட் டிருந்தது, தோற்பட்டை வார்களில் ஒன்று பிய்ந்து விலாப் புறத்தில் தொங்கிற்று.

''குல்சாரி! திரும்பி வந்துவிட்டாயா நீ!'' என்று அதனிடம் தாவியோடி தானபாய் கூச்சலிட்டான். அருகில் சென்று பார்த்த போது புதியகடிவாளமும் கனமான அங்கவடி களைக் கொண்ட தடித்த சேணமும் அதன் மேல் பூட்டப்பட்டிருந்தது தெரிந்தது. சேணத்துடன்

இணைக்கப்பட்டிருந்த வெல்வெட் திண்டைக் கண்டதும் அவனுக்கு ஆத்திரம் தாங்க முடிய வில்லை—இதில் சவாரி செய்வது ஆடவனா அல்லது அகன்ற அடிப்புறம் கொண்ட பெண்ணா?

தானபாய் அருவருப்புடன் காரித் துப்பினான். குதிரையைப் பிடித்து இந்த அசட்டுச் சேணத்தை அதனிடமிருந்து கழற்றியெறிய விரும்பினான், ஆனால் குல்சாரி அவன் கையில் அகப்படவில்லை. குல்சாரி இப்பொழுது அவனுடன் நேரம் செல விடும் நிலையில் இல்லை. அது பெண் குதிரை களின் பின்னால் ஓடிற்று. இத்தனை நேரமாக இவற்றை விட்டுப் பிரிந்திருந்த குறையைத் தீர்த்துக் கொள்ளும் வேட்கை கொண்டிருந்த குல்சாரி தன்னுடைய பழைய எஜமானனைக் கண்டு கொள்ளவே இல்லை.

''தப்பி ஓடி வந்து விட்டாயா? கட்டுத் தறியைப் பிய்த்துக் கொண்டு வந்துவிட்டாயா? சாமர்த்தியசாலி! போய், ஆசை தீர விளையாடு. நான் எதையும் கண்டு கொள்ளாதவனாக என் வேலையைப் பார்க்கிறேன்'' என்று தானபாய் தன்னுள் கூறிக் கொண்டான். மந்தைக்குக் கொஞ்சம் ஓட்டப் பயிற்சி அளிப்பதென்று தீர்மானம் செய்தான். குல்சாரியை விரட்டி வருவோர் நெடுந் தொலைவிலே இருக்கும் நேரத்தில் அது இஷ்டத்துக்கு ஓடியாட வேண் டுமென்று விரும்பினான்.

''ஏய்-ஏய்-ஏய்!'' என்று கூவினான். அங்க வடியில் உந்தி நின்று சவுக்கைச் சொடக்கி மந்தையை விரட்டிச் சென்றான்.

பாலூட்டிக் கொண்டு நின்ற தாய்க் குதிரைகள் தம் குட்டிகளைக் கனைத்து அழைத்தவாறு நகர முற்பட்டன. இளங் கன்றுகள் துள்ளிக் குதித்துவிட்டு ஓடத் தலைப்பட்டன. அவற்றின் பிடரி முடிகள் காற்றிலே பறந்தாடின. பச்சை வெளி வெய்யிலில் பளிச்சிட்டு மின்னிற்று. குல்சாரி உடம்பைக் குலுக்கிக் கொண்டது; கழுத்தை வில்போல் வளைத்துக் கொண்டு ஆடம்பரமாக ஓடிற்று. புதிய பொலிகுதிரையைப் பின் வரிசைகளுக்குத் தள்ளிவிட்டு மந்தைக்கு அது தலைமை ஏற்று முன்னிலையிலே வீறு நடை போட்டது. கனைத்து எகிறிக் குதித்தது; முதலில் ஒரு பக்கத்திலும் பிறகு மற்றொன்றிலுமாகச் சுற்றியோடி வந்தது. குதிரைப் பாலின் மணம், குட்டிகளின் மணம், காஞ்சிரை மகரந்தம் மிதந்த காற்றின் மணம் ஆகிய பல்வேறு மணங்களும் அதன் தலையைக் கிறுகிறுக்கச் செய்தன. தன் மீதிருந்த அசட்டுச் சேணத்தையும் அசட்டு வெல்வெட் திண்டையும் விலாப்புறங்களில் மோதிய அங்கவடிகளையும் அது சிறிதும் பொருட்படுத்தவில்லை. நேற்று வட்டாரத் தலைமையிடத்தின் பெரிய கம்பத்தில் தான் கட்டப் பட்டிருந்ததையும் கடிவாள இரும்பை நெறுநெறுவெனக் கடித்ததையும் இரைந்தோடி வந்த லாரிகளைக் கண்டு மிரண்டதையும் அது மறந்துவிட்டது. பிறகு துர்நாற்றம் வீசிய சாராயக் கடையின் பக்கத்தில் சகதியில் அது நிற்க வேண்டியிருந்தது; அதன் புதிய எஜமானர் நண்பர்கள் புடை சூழ வெளியே

வந்தபோது அவர்கள் எல்லோரிடத்தும் குப் பென்று அதே நாற்றம் வீசிற்று — இவையெல்லாம் இப்பொழுது அதன் நினைவில் இல்லை. அதன் புதிய எஜமானர் ஏப்பமிட்டு முக்கித் திணறிக் கொண்டு தத்தித் தடுமாறிச் சேணத்தில் ஏறி உட்கார்ந்தார். திரும்பி வரும்போது மண் சாலையில் நடைபெற்ற பித்துக்குளி ஓட்டப் பந்தயத்தையும் அது மறந்துவிட்டது. புதிய எஜமானரைச் சுமந்து கொண்டு ஓடோடி வந்தது. சேணத்தில் அமர்ந்திருந்த ஆள் தக்குப்புக்கென்று எம்பி விழுந்து கொண்டிருந்தார், பிறகு கடிவாளத்தை வெடுக்குவெடுக்கென்று இழுத்து குல்சாரியின் தலையில் சாட்டையால் அடித்துக் கொண்டிருந்தார்.

குலுங்கா நடையான் யாவற்றையும் மறந்துவிட்டது. குதிரைப் பாலின் மணம், குட்டிகளின் மணம், காஞ்சிரை மகரந்தம் மிதந்த காற்றின் மணம் ஆகிய பலவும் அதன் தலையைக் கிறுகிறுக்கச் செய்தன... தன்னைத் தேடிக் கொண்டு ஆட்கள் ஓடி வருவதை அறியாது குல்சாரி கவலையின்றிப் பறந்தோடிற்று.

தானுபாய் மந்தையைத் திருப்பி ஓட்டி வந்ததும் சற்று நேரத்துக்கெல்லாம் கிராமத்திலிருந்து லாயக்காரர்கள் இருவர் வந்து சேர்ந்தனர். குல்சாரியைத் திரும்பவும் மந்தையிலிருந்து பிடித்திழுத்துப் பண்ணை லாயத்துக்கு ஓட்டிச் சென்றனர்.

ஆனால் விரைவில் அது மறுபடியும் மந்தைக்கு ஓடி வந்துவிட்டது. இம்முறை அதனிடம் கடி

வாளமோ சேணமோ இருக்கவில்லை. இரவில் கடிவாளத்தை எப்படியோ உதறியெறிந்து விட்டு சேணத்திலிருந்து விடுபட்டு ஓடி வந்து விட்டது. அதைப் பார்த்ததும் தானபாய் வாய்விட்டுச் சிரித்துக் கொண்டான். பிறகு சிரிப்பை நிறுத்திக் கொண்டு சற்று நேரம் சிந்தித்தபின் தனது சுருக்குக் கயிற்றைக் குலுங்கா நடையானின் கழுத்திலே வீசினன். இம்முறை அவனே அதைப் பிடித்திழுத்துக் கடிவாளக் கயிற்றைக் கழுத்திலே மாட்டி கிராமத்துக்குத் திருப்பியழைத்துச் சென்றன். பக்கத்து முகாம் ஒன்றைச் சேர்ந்த இளம் மந்தைக்காரனைக் குலுங்கா நடையானின் பின்ன லிருந்து அதை ஓட்டச் சொன்னன். தப்பித்து ஓடிவந்த குதிரையைத் தேடிக் கொண்டு வந்த லாயக்காரர்களை வழியில் சந்தித்தனர். அவர் களிடம் குல்சாரியை ஒப்படைத்தபோது தான பாய் அவர்களைக் கடிந்து கொண்டான்:

''உங்களுக்குக் கைகள் இல்லையா, என்ன? பண்ணைத் தலைவரின் குதிரையைக் கவனித்துக் கொள்ள முடியவில்லையே! இனி கெட்டியாகக் கட்டிப்போட்டு ஓடி வராமல் பார்த்துக் கொள் ளுங்கள்.''

மூன்ரும் முறையாக குல்சாரி ஓடிவந்தபோது தானபாய் கோபமாய்க் கூறினன்:

''அசட்டுக் குதிரையே, ஏன் இந்த வேலை உனக்கு? எந்த சைத்தான் உன்னை இப்படி இங்கே ஓடி வரச் செய்கிறது? உனக்குக் கிறுக்குத் தான் பிடித்திருக்கு!'' சுருக்குக் கயிற்றை

வீசியவாறு தாஞுபாய் கடிந்து கொண்டான். திரும்பவும் குலுங்கா நடையானைப் பிடித் திழுத்துச் சென்ருன், திரும்பவும் லாயக்காரர் களை ஏசிஞன்.

ஆஞல் குல்சாரிக்குப் புத்தி வரவில்லை. வாய்ப்புக் கிடைத்தபோது திரும்பத் திரும்ப ஓடி வந்து கொண்டிருந்தது. லாயக்காரர்கள் அலுத்துப் போய்விட்டனர், தாஞுபாயும் அலுத்துப் போய்விட்டான்.

...அந்த இரவில் தாஞுபாய் நேரம் கழித்துப் படுக்கச் சென்ருன். மேய்ச்சல் வெளியிலிருந்து திரும்பி வர நெடு நேரமாகிவிட்டது. முன்னெச் சரிக்கையாக மந்தையைத் தன் கூடாரத்துக்கு அருகே கொண்டு வந்து நிறுத்திவிட்டுப் படுத்துக் கொண்டான். அவஞல் நன்ருகத் தூங்க முடிய வில்லை. இடையிடையே விழித்துக் கொண்டபடி படுத்திருந்தான். அன்றைய வேலைகளால்களைத்துப் போயிருந்தான். விபரீதக் கனவு ஒன்று கண் டான். திரும்பவும் போர் முனையிலே இருக் கிருேமா, அல்லது கசாப்புச் சாலையில் இருக் கிருேமா என்பது விளங்கவில்லை. எங்கும் இரத்தக் காடாக இருந்தது. அவன் கைகளில் இரத்தம் பிசுபிசுத்தது. ''கனவில் இரத்தத் தைக் காண்பது நல்லதல்லவே'' என்று தூக்கத் தில் தனக்குத் தானே கூறிக் கொண்டான். கைகளைக் கழுவிக் கொள்ள விரும்பிஞன். ஆஞல் எல்லோரும் அவனைப் பிடித்துத் தள்ளிச் சிரித்துக் கூச்சலிட்டனர். அவர்கள் யார் என்று தெரியவில்லை. ''தாஞுபாய், இரத்தத்திலே

கை கழுவுகிருயே. இங்கு தண்ணீர் இல்லே, இரத்தம் மட்டும் தான் இருக்கிறது. ஆம், இரத்தம் மட்டும்தான்! ஹா-ஹா-ஹா! ஹோ-ஹோ-ஹோ! ஹி-ஹி-ஹி-!..''

''தானுபாய்! தானுபாய்!'' அவன் மனைவி அவனே எழுப்பினுள். ''எழுந்திரு!''

''என்ன ஆயிற்று?''

''மந்தையிடமிருந்து வரும் சப்தம் காதில் விழவில்லேயா? பொலிகுதிரைகள் சண்டை போடுகின்றன. குல்சாரி திரும்பி ஓடி வந்திருக்க வேண்டும்.''

''நாசமாய்ப் போக! நம்மை விட்டுத் தொலேக் காதா இது!'' அவன் அவசரமாக உடுத்திக் கொண்டு சுருக்குக் கோலே எடுத்துக் கொண்டு இரைச்சல் கேட்ட திடலே நோக்கி ஓடினுன். வெளியே வெளிச்சமாயிருந்தது.

அங்கே சென்றதும் குல்சாரி இருப்பதைக் கண்டான். ஆனல் இது என்ன? குலுங்கா நடையான் நொண்டிக் குதித்துக் கொண்டிருந்தது, கால்களில் இரும்புச் சங்கிலிப் பிணைப்பு போடப்பட்டிருந்தது. சங்கிலிகள் மோதியடித்துக் கொண்டன. குல்சாரி சுற்றிச் சுழன்று எகிறியது, வலி தாங்காது முனகிக் கத்திற்று. அசட்டுக் கழுதையான மந்தையின் புதிய பொலிகுதிரை இரக்கம் சிறிதுமின்றி அதை உதைத்தும் கடித்தும் தாக்கிக் கொண்டிருந்தது.

''நாயே!'' என்று ஏசியவாறு தானுபாய் ஓடிச் சென்று புத்தி கெட்ட கழுதையான அந்தக் குதிரையை அடித்த அடியில் அவனு

டைய கோல் இரண்டாக உடைந்துவிட்டது. பொலிகுதிரையை அங்கிருந்து விரட்டியடித் தான். தானுபாயின் கண்களில் கண்ணீர் துளிர்த்திருந்தன. ''குல்சாரி, என்ன கொடுமை இது! உன் காலில் சங்கிலிப் பிணைப்பு போடு வார்களா? யார் செய்த வேலை இது? அசடே, ஏன் இங்கே மறுபடியும் திரும்பி வந்தாய்?..''

என்ன அநியாயம்! கால்களைச் சங்கிலியி னுல் கட்டியிருந்தும் நொண்டிக் கொண்டு இவ்வளவு தூரம் வந்துவிட்டதே! ஆற்றைக் கடந்து, குன்றுகளையும் குழிகளையும் தாண்டி மந்தைக்குத் திரும்பி வந்துவிட்டதே! சங்கிலி கள் மோதியடிக்க, தப்பித்து ஓடும் கைதியைப் போல இரவில் தன்னந் தனியே நொண்டிக் கொண்டு இவ்வளவு தூரம் வந்துவிட்டதே!

''என்ன அநியாயம்!'' என்று சொல்லி, தானுபாய் தலையை ஆட்டிக் கொண்டான். குலுங்கா நடையானைத் தடவிக் கொடுத்தான். அதன் உதடுகளில் தன் முகத்தை ஒட்டிக் கொண்டான். குல்சாரி தன் உதடுகளால் அவனை வருடிற்று, அவன் முகத்தை முகர்ந்து இன்பமுற்றுக் கண்களை மூடிக் கொண்டது.

''குல்சாரி, நாம் என்ன செய்வது? இங்கு ஓடி வருகிற புத்தியை என்றைக்கு விடப் போகிறுய்? உனக்குக் கேடுதான் ஏற்படும். அசடே, சிக்கிக் கொண்டுவிடுவாய். இதெல்லாம் உனக்குப் புரியவில்லையா?..''

தானுபாய் குதிரையைப் பரிசீலித்தான். சண்டையின்போது பட்ட காயங்கள் ஆறி

விடும். சங்கிலிகள் உரசிக் காற்குழைச்சுகளிலும் மயிர்க் குச்சப் பகுதிகளிலும் புண்ணாகியிருந்தது. குளம்புக் கொண்டைகளில் இரத்தம் கசிந்தது. சங்கிலியின் கம்பளி உறை செல்லரிக்கப்பட்டு இற்றுப் போய்விட்டது. குதிரை நொண்டிக் கொண்டு ஆற்றைக் கடந்தபோது கம்பளி உறை பிய்ந்து இரும்பு வெளிப்பட்டுவிட்டது. இந்த இரும்பு உராய்ந்து குதிரையின் கால்களைப் புண்படுத்தியிருந்தது. ''இந்தச் சங்கிலியை இப்ராகிம் யாராவது கிழவர் ஒருவரிடம் வாங்கி வந்திருக்க வேண்டும். அவன் செய்த வேலையாகத்தான் இருக்கும்'' என்று தானுபாய் கோபப் பட்டுக் கொண்டான். அவனையன்றி வேறு யாராக இருக்க முடியும்? கால்களுக்கு உறையிட்ட சங்கிலிப் பிணைப்பு போடுவது பண்டைக் காலத்திய பழக்கம். ஒவ்வொரு சங்கிலிப் பிணைப்பிலும் இரகசியப் பூட்டு இருக்கும். அதற்குரிய சாவி இல்லாமல் அதைக் கழற்ற முடியாது. பழங் காலத்தில் குதிரைத் திருடர்கள் மேய்ச்சல் வெளிகளிலிருந்து கடத்திச் சென்று விடாதபடி சிறந்த குதிரைகளுக்கு உறையிட்ட இந்தச் சங்கிலிகளைக் கொண்டு காற்பிணைப்புகள் போடுவது வழக்கம். கயிற்றுப் பிணைப்பைக் கத்தியால் சுலபமாய் அறுத்து விடலாம், ஆனால் சங்கிலிப் பிணைப்பிடப்பட்ட குதிரையைத் திருடிச் செல்வது முடியாத காரியம். அது பண்டைக் கால சரித்திரம், இன்று சங்கிலிப் பிணைப்புகளைக் காண்பது அரிது. கடந்த காலச் சின்னமாக யாராவது

கிழவர் இது போன்ற சங்கிலி ஒன்றைப் பத்தி ரப்படுத்தி வைத்திருந்தால் உண்டு. கிராம மேய்ச்சல் வெளியிலிருந்து ஓடிவிடாத படி குலுங்கா நடையானுக்கு அவர்கள் சங்கிலிப் பிணைப்புப் பூட்டி விட்டனர். அப்படியும் அது தப்பித்துக் கொண்டு ஓடி வந்துவிட்டது...

குல்சாரியின் கால்களிலிருந்து சங்கிலியைக் கழற்றியெடுக்கக் குடும்பத்தினர் எல்லோரு மாகச் சேர்ந்து வேலை செய்தனர். ஜெய்தார் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு குலுங்கா நடையானின் கண்களை மூடிக் கொண்டாள். பெண் குழந்தைகள் இருவரும் அருகில் விளை யாடிக் கொண்டிருந்தார்கள். தானுபாய் தனது கனத்த பட்டறைக் கருவிப் பெட்டியை வைத் துக் கொண்டு வேலை செய்தான். பூட்டுக்குத் தக்கதோர் மூலத் திறவு கோலைத் தெரிந் தெடுத்துத் தயாரிப்பதற்குள் அவனுக்கு வியர்த்து விருவிருத்துப் போய்விட்டது. அவனுடைய கொல்லுப் பட்டறை அனுபவம் இப்பொழுது அவனுக்கு மிகவும் உதவியாயிருந்தது. மிகவும் பாடுபட்டு வேலை செய்ய வேண்டியிருந்தது, கைகளைக் காயப்படுத்திக் கொண்டுவிட்டான். முடிவில் ஒருவாறு பூட்டைத் திறந்தான்.

தானுபாய் சங்கிலியைத் தூர விட்டெறிந்தான். குலுங்கா நடையானின் காயங்களில் மருந்து தட வினன். ஜெய்தார் அதைக் கட்டுக் கம்பத்துக்கு அழைத்துச் சென்றுள். மூத்த மகள் இளை யவளைத் தன் முதுகில் தூக்கிக் கொண்டாள். மூவருமாகக் கூடாரத்துக்குப் புறப்பட்டனர்.

தாளுபாய் களைத்துப் போய் அங்கேயே தரையில் உட்கார்ந்திருந்தான். பிறகு கருவிகளை எடுத்து வைத்துக் கொண்டு முன்பு அவன் வீசியெறிந்த சங்கிலியையும் எடுத்துக் கொண்டான். அதை அவன் திருப்பித் தந்தாக வேண்டும், இல்லையேல் சும்மா விட மாட்டார்கள். துருப்பிடித்த அந்தச் சங்கிலியை எடுத்து ஆராய்ந்து பார்த்துவிட்டு அதைத் தயாரித்த கொல்லனின் கைத்திறனை மெச்சிக் கொண்டான். தேர்ந்த முறையில் நேர்த்தியாகச் செய்யப்பட்டிருந்த அது பண்டைய கிர்கீஸ் கொல்லர்களின் படைப்பாகும். இந்த அரிய கைத்திறன் இப்பொழுது மறக்கப்பட்டுவிட்டது, மறைந்துவிட்டது. சங்கிலிப் பிணைப்புகள் தேவையற்றுப் போய்விட்டன. இன்னும் பலவுங்கூட இதே வழியில் மறைந்து போய்விட்டது பரிதாபத்துக்குரியதாகும். அந்தக் காலத்தில் எவ்வளவு அழகான அணிகலன்கள் செய்வார்கள்! வெள்ளி, செம்பு, மரம், தோல் முதலியவற்றைக் கொண்டு பாத்திரங்களும் பண்டங்களும் தயாரிப்பார்கள்! அதிகச் செலவின்றித் தயாரிக்கப்பட்டவையே என்றாலும் எவ்வளவு அழகானவை! ஒவ்வொன்றும் தனி எழில்! அம்மாதிரி எல்லாம் இப்பொழுது செய்யப்படுவதில்லை. இன்று எல்லாமே அலுமினியத்தில் செய்யப்பட்டு விடுகின்றன. கோப்பைகள், கிண்ணங்கள், கரண்டிகள், தட்டுகள், காதணிகள் எல்லாமே அலுமினியம்தான். எங்கே போய் யாரைப் பார்த்தாலும் எல்லாமே ஒரே மாதிரி இருக்கின்றன.

சலிப்பூட்டுவதாக உள்ளன. பெயர் பெற்ற சேணத் தயாரிப்பாளர்களில் கடைசியாக எஞ்சியுள்ளோரும் தமது இறுதிக் காலத்தை நெருங்கி விட்டனர். அந்தக் காலத்தில் எவ்வளவு அரிய சேணங்கள் தயாரிக்கப்பட்டன! ஒவ்வொன்றுக்கும் ஒரு தனி வரலாறு இருக்கும்: அதைச் செய்தது யார், எப்பொழுது செய்யப் பட்டது, யாருக்காக, செய்தவருக்குக் கிடைத்த சன்மானம் என்ன என்ற விவரங்கள் தெரிந் திருக்கும். ஐரோப்பாவில் போவது போலவே இங்கும் சீக்கிரத்தில் எல்லோரும் கார்களில் போக ஆரம்பித்துவிடுவார்கள். இந்தக் கார்களை அவற்றின் பதிவு எண்களைக் கொண்டுதான் வேறுபடுத்தி அடையாளம் கண்டு கொள்ள வேண்டியிருக்கும். மக்கள் தமது பாட்டன் மார்களது கைத்திறன்களை மறந்து வருகிறார் கள். பழைய கைத்தொழில்களைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டார்கள். ஆனால் கைகள்தான் ஒருவனின் ஆன்மாவும் கண் களும்...

தானபாய் சில நேரங்களில் இது போன்ற சிந்தனைகளில் ஈடுபட்டுக் கிராமியக் கைத் தொழிற்கலைகளைப் பற்றிய தத்துவ விசாரங் களில் இறங்கி விடுவான். அவனுக்குக் கோபம் பொங்கும். ஆனால் கைத்தொழில்கள் மறைந்து வந்ததற்கு யாரைக் குற்றங் கூறுவதென்று அவ னுக்குப் புரியாது. இளைஞனாக இருக்கையில் அவனும் பழைய முறைகளுக்குக் குழி தோண்டி யோரில் ஒருவனாக இருந்தவன்தான். நாடோடி

வாழ்க்கைக்குரிய கூடாரங்கள் ஒழிக்கப்பட வேண்டுமென்று முன்பு காம்சொமோல் கூட்டம் ஒன்றில் பேசியவன்தான் அவன். நாடோடிகளின் கூடாரம் புரட்சிக்கு முற்பட்ட காலத்துக்குரிய இல்லமாகும், அதை ஒழித்துவிட வேண்டுமென்று அவன் கூறக் கேட்டிருந்தான். ''கூடாரங்கள் ஒழிக! கடந்த காலத்தில் வாழ நாங்கள் விரும்பவில்லை!'' என்று முழக்கமிட்டான்.

இவ்விதம் கூடாரம் பழங் காலத்துக்குரியதாகக் கழிக்கப்பட்டுவிட்டது. கூடாரங்களைக் கிழித்தெறிந்துவிட்டு வீடுகள் கட்ட முற்பட்டனர். கூடாரங்களுக்கான ஒட்டுக் கம்பளித் துணிகள் வெட்டப்பட்டுப் பல்வேறு வீட்டுத் தேவைகளுக்காகப் பயன்படுத்தப்பட்டன. மரச் சட்டங்கள் வேலிகளுக்காகவும் படல்களுக்காகவும் உபயோகிக்கப்பட்டன, விறகாகவுங்கூட எரிக்கப்பட்டன...

ஆனால் மலைகளில் மந்தைகளை மேய்ப்பது கூடாரங்களின்றி இயலாத காரியம் என்பது தெரிந்தது. நாடோடிகளுக்குக் கூடாரத்தைக் காட்டிலும் சிறந்த ஒன்று கண்டு பிடிக்கப்படவில்லை என்பது தெரியாமல் அதைப் போய் அப்படி அசட்டுத்தனமாகக் கண்டனம் செய்தோமே என்று தானுபாய் இப்பொழுது குறைபட்டுக் கொண்டான். கூடாரம் தனது மக்களின் அதியற்புத கண்டுபிடிப்பு, அதன் ஒவ்வொரு சிறு உறுப்பும் பல நூற்றுண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டுச் சிறப்புடையது என்று மெய்ப்பிக்

கப்பட்டிருக்கிறது—இதைத் தான் உணரத் தவறியது எப்படி?

கிழவர் தொர்கோய் அவனுக்கு விட்டுச் சென்றிருந்த புகையேறிக் கருகிப்போன கிழிந்த கூடாரத்தில் இப்பொழுது அவன் வசித்து வந்தான். அது மிகப் பழையது, இன்னும் அது இற்றுப் போகாமல் இருந்ததென்ருல், ஜெய்தார் அலுக்காது அவ்வப்பொழுது செய்து வந்த வேலைகளே அதற்குக் காரணம். அவள் நாட்கணக்காகப் பாடுபட்டு அதைச் சரிசெய்தாள், கிழிசல்களைத் தைத்து ஒழுங்காக்கிஞள். ஆனல் இரண்டொரு வாரங்களில் திரும்பவும் அந்தப் பழைய கம்பளி கிழியத் தொடங்கி புதிய ஓட்டைகள் தோன்றி காற்றும் வெண் பனியும் மழையும் அவற்றின் வழியே உள்ளே வரும். மறுபடியும் அவன் மனைவி ஒட்டுகள் போட்டுத்தைக்க ஆரம்பித்துவிடுவாள். இதற்கு ஒரு முடிவே இருக்காது.

''இன்னும் எவ்வளவு காலத்துக்குத்தான் இதை வைத்துக் கொண்டு உயிரை விடுவது?'' என்று அவள் முறையிட்டாள். ''இது ஒட்டுக் கம்பளியல்ல, மக்கிய சருகு, கை பட்டதும் தூளாகிவிடுகிறது. கூடாரச் சட்டங்கள் இருக்கும் நிலையைப் பாரேன். இவற்றை இனிச் சட்டங் களென்று சொல்லலாமா? புதிதாய் நமக்குக் கொஞ்சம் ஒட்டுக் கம்பளி தரச் சொல்லி வாங்கி வர முடியவில்லையே உன்ஞல். இல்லாத தலைவஞ நீ? மனிதர்களாக வாழ நமக்கு உரிமை இல்லையா?..''

தானுபாய் அவளைச் சாந்தப்படுத்தினான், உடனே ஆவன செய்வதாக வாக்குறுதியளித்தான். ஆனால் தனக்குப் புதிய கூடாரம் வேண்டுமென்று பண்ணை அலுவலகத்தில் அவன் கூறியதும், முதுபெரும் கூடாரத் தயாரிப்பாளர்கள் எல்லோரும் மாண்டு மறைந்துவிட்டனர், இளைஞர்களில் யாருக்கும் கூடாரம் எப்படித் தயாரிப்பதென்றே தெரியவில்லை என்பதாகக் கூறினார்கள். அதோடு பண்ணையில் கூடாரத்துக்கு வேண்டிய ஒட்டுக் கம்பளியும் இல்லை என்றனர்.

''சரி ஒட்டுக் கம்பளி வேண்டாம், ஆட்டு உரோமம் கொடுங்கள், நாங்களே ஒட்டுக் கம்பளி செய்து கொள்கிறோம்'' என்றான் தானுபாய்.

''ஆட்டு உரோமமா? உனக்கு என்ன கிறுக்கா பிடித்துவிட்டது? நாம் உற்பத்தி செய்யும் உரோமம் பூராவும் திட்டத்தின்படி விற்கப்பட்டுவிடுகிறது. பண்ணையில் ஒரு கொத்துகூட இல்லாதபடி நாம் அனைத்தையும் விற்க வேண்டியிருக்கிறது...'' என்று அவனிடம் சொன்னார்கள். கான்வஸ் கூடாரம் வேண்டுமானால் தருவதாகக் கூறினர்.

ஆனால் ஜெய்தார் வேண்டவே வேண்டாம் என்று சொல்லிவிட்டாள்.

''கான்வஸ் கூடாரத்தைவிட நாராகக் கிழிந்த பழைய ஒட்டுக் கம்பளிக் கூடாரமே தேவலை'' என்றாள்.

பல மந்தைக்காரர்கள் அந்நாட்களில் கான்

வஸ் கூடாரங்களில் வசிக்க வேண்டியதாயிற்று. வசிக்க ஏற்றவையா அவை? நிற்கவும் முடியாது, நகரவும் முடியாது, கணப்படுப்புக்கும் வழி யில்லை. கோடையில் கொதிக்கும், குளிர் காலத்தில் உறைந்து விடுவது போலக் கொடுங் குளிராகிவிடும். எந்தச் சாமானுக்கும் இடம் இருக்காது, சமையற் கட்டுக்கு ஒரு மூலை கிடையாது. உள்ளே வந்தால் இல்லமாய் இராது. யாரும் வந்துவிட்டால் அவர்களை எங்கே இருக்கச் சொல்வதென்று தெரியாமல் விழிக்க வேண்டியதுதான்.

''வேண்டவே வேண்டாம்!'' என்றுள் ஜெய்தார். ''நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள், நான் கான்வஸ் கூடாரத்தில் இருக்கவே மாட்டேன். தனி ஆட்கள் வெண்டுமானுல் அவற்றில் இருக்கலாம், அவர்களுங்கூட தற்காலிகமாகச் சிறிது காலத்துக்கே இருக்கலாம். நாம் குடித்தனமாக இருப்பவர்கள், நமக்குக் குழந்தைகள் இருக்கிறுர்கள். அவர்களைக் குளிப்பாட்ட வேண்டும், கவனித்துக் கொள்ள வேண்டும்.''

இதன்பின் சில நாட்களுக்கெல்லாம் தாஞுபாய் சோரோவைச் சிந்தித்தபோது அவனிடம் தனது தொல்லைகளைச் சொன்ஞன்.

''தலைவனே, இப்படியிருக்கக் காரணம் என்ன?''

சோரோ சோகமாய்த் தலையை ஆட்டிக் கொண்டான்.

''காலத்தில் ஆலோசித்து ஆவன செய்யத் தவறிவிட்டனர்'' என்று பதிலளித்தான்.

''மேலிடத்தாரும் தவறிவிட்டனர். கடிதங்கள் எழுதி என்ன பதில் வருமோ என்று காத்திருப்பதைத் தவிர இனி வேறொன்றும் செய்வதற்கில்லை. உரோமம் விலையுயர்ந்த பண்டம் என்கிறார்கள். அது பற்றாக்குறையாக இருப்பதால், எல்லாம் ஏற்றுமதி செய்யப்பட்டு விடுகிறது. நமக்கு அதைப் பயன்படுத்திக் கொள்வது லாபகரமானதல்ல என்கிறார்கள்.''

இதன்பின் தானுபாய் ஒன்றும் சொல்லவில்லை. இந்த நிலைமைக்கு அவனும் ஓரளவு பொறுப்பானவன் அல்லவா? தனது முட்டாள்தனம் குறித்து உள்ளுக்குள் நிராசையுடன் சிரித்துக் கொண்டான். ''லாபகரமானதல்ல! ஹா-ஹா! ஆம், லாபகரமானதல்ல!''

இந்தக் கடுஞ் சொற்களை நெடுநேரம் அவனால் மறக்க முடியவில்லை.

ஆகவே கிழிந்து ஓட்டையாகிவிட்ட கூடாரத்திலேயே தொடர்ந்து அவர்கள் வசித்து வந்தனர். சாதாரண ரோமம் சிறிதளவு கிடைத்தால் போதும், அதைச் சரி செய்துவிடலாம். பண்ணை ஆடுகளிலிருந்து டன் கணக்கில் கிடைக்கும் உரோமத்தில் சிறிதளவு இருந்தால் போதும்...

சங்கிலியைக் கூடாரத்துக்கு எடுத்துக் கொண்டு வந்தான். கூடாரத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. தன்மீதும், குலுங்கா நடையானின் கால்களைக் காயப்படுத்திய அந்தச் சங்கிலிமீதும், எல்லாவற்றின்மீதும் அவனுக்கு ஆத்திரம் குமுறிக் கொண்டு வந்தது. பற்களை நரநரவென்று

கடித்துக் கொண்டான். இந்தத் தவறான நேரத்தில் குல்சாரியைத் தேடிக் கொண்டு லாயக்காரர்கள் குதிரைகளில் பாய்ந்தோடி வந்தனர்.

''சரி, அழைத்துக் கொண்டு போய்ச் சேருங்கள்!'' என்று தானபாய் கத்தினான். அவன் உதடுகள் ஆத்திரத்தால் துடித்தன. ''பண்ணைத் தலைவரிடம் இந்தச் சங்கிலியைக் கொடுங்கள். இன்னொரு முறை குலுங்கா நடையானுக்கு அவர் சங்கிலிப் பிணைப்பு போடத் துணிந்தாரானால், அந்தச் சங்கிலியினாலேயே அவருடைய மண்டையைப் பிளந்துவிடுவேன் என்று சொல்லுங்கள்! மறந்து விடாமல் சொல்லுங்கள்!''

அவன் அதைச் சொல்லியிருக்கக் கூடாது. கூடவே கூடாது! அவன் ஆத்திரக்காரன், எதையும் மறைக்காமல் பேசும் சுபாவமுடையவன்—இவற்றுக்காக எப்பொழுதுமே அவன் கடுமையான விலை கொடுத்து வந்தான்...

## 9

கதிரவன் காய்ந்தான், குதூகலமாயிருந்தது. பகலவன் ஒளியில் வசந்தம் கண் சிமிட்ட, சுருள் சுருளாகப் புது இலைகள் தளிர்த்தன: வயல் வெளிகளில் ஆவி எழுந்தது; நடைபாதைகளில் காலுக்கடியில் பசும் புல் முகம் காட்டிற்று.

லாயத்துக்கு அருகே சிறுவர்கள் கிட்டிப்புள்

விளையாடினர். சிறுவன் ஒருவன் கில்லியை மேலே எறிந்து கிட்டியால் அதை ஓங்கி அடித்துச் சாலையிலே துள்ளியோடச் செய்தான். பிறகு தனது கிட்டியால் அந்தத் தூரத்தை அளந்தான்: ஒன்று, இரண்டு, மூன்று... ஏழு... பத்து... பதினைந்து... அவன் ஏமாற்றாமல் சரியாய் அளக்கிறானா என்று பார்த்துக் கொண்டு நடுவர்கள் அவன் பின்னால் சென் றனர். இருபத்திரண்டு கிட்டித் தொலைவு.

''எழுபத்தெட்டும் இருபத்திரண்டும்'' என்று கூட்டிக் கணக்கிட்டு ''நூறாகிவிட்டது! நூறு கிட்டி அடித்துவிட்டேன்!'' என்று ஆனந்தக் கூச்சலிட்டான்.

''ஐய்யா! நூறு அடித்துவிட்டான்!'' என்று ஏனையோரும் கூச்சலிட்டனர்.

நூறு அடித்தான் என்றால் வெற்றி பெற்றா னென்று அர்த்தம். தோற்றவன் இனி ''ஊளை யிட்டாக வேண்டும்''. வெற்றியாளன் துவக்கக் கோட்டுக்குத் திரும்பி வந்து மறுபடியும் கில்லியை மேலே எறிந்து பலமாக ஓங்கி அடித்தான். கில்லி விழுந்த இடத்துக்கு எல்லோரும் ஓடினர். அங்கிருந்து மேலும் இரு முறை அவன் கில் லியை அடிப்பான். தோற்றவன் அழாக் குறையாய்ப் பார்த்துக் கொண்டு நின்றான். மூச்சு விடாமல் அவ்வளவு தூரம் அவன் ''ஊளை யிட்டுச்'' சென்றாக வேண்டும்! ஆட்டத்தின் கடுமையான விதி அது. ''ஏன் அங்கே நிற் கிறாய்? வந்து 'ஊளையிட' ஆரம்பி!'' தோற்ற வன் பலமாக மூச்சை உள்ளுக்கு இழுத்து

விட்டு ஓட முற்பட்டான், ஓடும் போதே மூச்சு இழுக்காமல் ராகம் பாடினுன்:

அக்பாய், கக்பாய்,
விடாதே கன்றுக் குட்டியை.
விட்டேன்று போச்சு எல்லாம்,
எல்லாம் போச்சு-இம்-ம்-ம்-ம்!..

அவனுக்கு மண்டை வெடித்துவிடும் போலாகி விட்டது, மூச்சு இழுக்காமல் ராகம் பாடியாக வேண்டும். அவனுல் முடியவில்லை. திரும்பவும் தொடக்கத்திலிருந்து ஆரம்பித்தாக வேண்டும். இரண்டாவது முறையும் அவனுல் முடியவில்லை. வெற்றியாளன் மகிழ்ந்து கொண்டான். ''உன்னுல் முடியவில்லை! இனி உன்மீது ஏறிக் குதிரை ஓட்டுவேன்!'' என்று கூச்சலிட்டு அவன் முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டான். தோற்றவன் அவனை ஏற்றிக் கொண்டு கழுதை மாதிரிப் போய் வர வேண்டும்.

''போ, வேகமாசு ஓடு!'' என்று அதட்டிக் கால்களால் தோற்றவனுடைய விலாப் புறத்தில் தட்டினுன். ''இதைப் பாருங்கள்! என் குல்சாரியைப் பாருங்கள்! குலுங்கா நடையானைப் பாருங்கள்!..''

இதற்கிடையில் வேலியின் மறுபுறத்தில் லாயத்தினுள் குல்சாரி நின்று கொண்டிருந்தது. அது கடுப்புற்று வந்தது. அன்று காலை அதற்குச் சேணம் பூட்டப்படவில்லை. தீனியும் போடப்பட வில்லை, தண்ணீரும் காட்டப்படவில்லை. யாரும்

அதைக் கவனிக்கவில்லே. லாயம் காலியாக இருந்தது. எல்லா வண்டிகளும் குதிரைகளும் வெளியே சென்றுவிட்டன, குல்சாரி மட்டும் தனியே நின்று கொண்டிருந்தது...

லாயக்காரர்கள் கொட்டில்களைச் சுத்தம் செய்து கொண்டிருந்தனர். வெளியே சிறுவர்கள் விளையாடினார்கள். தான் ஸ்தெப்பியில் மந்தைகளுடன் இருக்க வேண்டுமென்று குல்சாரி ஏங்கித்துடித்தது. திறந்த வெளிகள் அதன் மனக் கண்முன் தெரிந்தன; புல் பரப்புகளில் மந்தைகள் மேய்வது தெரிந்தது. சிறகடித்து மேலே வானத்தில் பறந்த தாராக்கள் வெளியே வாவெனத் தன்னைக் கூப்பிடுவது போல் அதற்குத் தோன்றியது...

குல்சாரி தலையைக் குலுக்கிற்று. தறியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றது. அதன் கடிவாளத்துடன் இணைக்கப்பட்ட இரு சங்கிலிகள் அதை இழுத்துப் பிடித்து நிறுத்தின. அதன் குரல் மந்தைக்குக் கேட்காதா? உத்திரங்களுக்கு அடியிலிருந்த சன்னலுக்குத் தலையை உயர்த்திக் கொண்டு காய்ந்த புற்களில் கால்களை மாற்றி வைத்து நின்று பலத்த, நீண்ட கனைப்புக் கனைத்தது: ''எங்கே இருக்கிறீர்கள்? எங்கே?''

''சைத்தானே, சும்மாயிரு!'' என்று லாயக்காரர்களில் ஒருவன் ஓடிவந்து கையிலிருந்த மண் வெட்டியை வீசிக் காட்டியவாறு கூறினான். பிறகு கதவுக்கு வெளியே இருந்த யாரையோ அழைத்து ''வெளியே கொண்டு வரட்டுமா?'' என்றான்.

''கொண்டு வா!'' என்று பதில் வந்தது.

இரு லாயக்காரர்கள் குலுங்கா நடையானை வெளியே முற்றத்துக்குக் கொண்டு வந்தனர். ஒரே வெளிச்சம்! தூய்மையான காற்று! குலுங்கா நடையானின் நுண்ணுணர்வு படைத்த நாசிகள் துடித்தன. வசந்தத்தின் மயக்கம் தரும் காற்றை அது உள்ளுக்கு இழுத்தது. இலைகளின் கசப்பான கந்தமும் களிமண்ணின் வீச்சமும் மூக்கினுள் சென்றன. அதன் நாளங்களினுள் இரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது. ஓட்டமாக ஓடினால் எப்படியிருக்கும்! குல்சாரி துள்ளிக் குதித்து உதைத்தது.

''சும்மாயிரு!'' — பல பேர் சேர்ந்து ஒரே குரலில் கூவினர்.

இன்று ஏன் இத்தனை பேர் தன்னைச் சுற்றிலும் நிற்கிறார்கள்? அவர்கள் சட்டைக் கைகளைச் சுருட்டி மடக்கிக் கொண்டு முடிகளுடைய முரட்டுக் கரங்கள் வெளியே தெரிய நின்றனர். சாம்பல் நிற அங்கி அணிந்த ஒரு ஆள் வெள்ளைத் துணியின் மீது பளபளப்பான உலோகக் கருவிகளை எடுத்து வைத்தான். குல்சாரிக்குக் கண் கூசும்படி அவை வெயிலில் பளிச்சிட்டன. ஏனையோர் கயிறுகளை வைத்துக் கொண்டு நின்றனர். அதோ அதன் புதிய எஜமானன்! கட்டை குட்டையாயிருந்த கால்களை விரியப் பரப்பி ஆடம்பரமாய் நின்று கொண்டிருந்தார். எல்லோரையும் போல அவரும் முகத்தைச் சுளித்துக் கொண்டுதான் நின்றார். ஒரேயொரு வித்தியாசம் என்னவென்றால் அவருடைய சட்டை

யின் கைகள் சுருட்டி மடக்கப்படவில்லை. ஒரு கையை இடுப்பில் வைத்திருந்தார்; மற்றொரு கையால் சட்டையின் பொத்தானைத் திருப்பிக் கொண்டு நின்றார். இதற்கு முன்தினம் அடித்த அந்தக் கெட்ட வீச்சம் திரும்பவும் அவரிடம் வீசிற்று.

''சரி, ஏன் சும்மா நிற்கிறீர்கள்? வேலையைப் பாருங்கள்! ஜொரொக்குல் அல்தாஷெவிச், நாங் கள் தொடங்கலாமல்லவா?'' என்று இப்ராகிம் பணிவுடன் பண்ணைத் தலைவரைக் கேட் டான். பண்ணைத் தலைவர் தலையை ஆட்டினார்.

''சரி, எல்லோரும் தயாராகுங்கள்!'' என்று கூறி இப்ராகிம் பரபரப்பாக வேலை செய்தான். தனது நரித் தோல் தொப்பியை லாயக் கதவின் ஆணி ஒன்றில் அவசரமாக மாட்டினான். தொப்பி கீழே இருந்த சாணிக் குவியலின்மீது விழுந்தது. இப்ராகிம் அதை எடுத்து மூக்கைச் சுளித்துக் கொண்டு தட்டிவிட்டுத் திரும்பவும் மாட்டினான். ''ஜொரொக்குல் அல்தாஷெவிச், நீங்கள் ஒரு ஓரமாகப் போய்விடுங்கள். சொல்ல முடியாது, உதைத்தாலும் உதைக்கும்'' என்றான். ''குதிரை அசட்டுப் பிராணி, என்ன செய்யு மென்று சொல்ல முடியாது.''

குதிரைமுடிச் சுருக்குக் கயிறு குல்சாரியின் கழுத்தில் பட்டதும் அதற்குக் கழுத்துத் தோல் படபடத்தது. கயிறு சுருக்கெனக் குத்திற்று. குதிரையின் மார்பில் சுருக்கை இழுத்துக் கட்டி யபின் இன்னொரு முனையைப் பின் பக்கப் விட்டெறிந்தனர். என்ன செய்கிறார்கள்? கயிற்

றின் முனையை ஏன் அதன் பின்னங்காலின் பக்கம் இழுக்கிறார்கள்? கால்களில் பிணைப்பு போடு கிறார்களே, ஏன்? குல்சாரி கலக்கமடைந்துவிட் டது. கனைத்துக் கொண்டு கண்களை உருட்டிற்று. என்ன செய்கிறார்கள்?

''சீக்கிரம்!'' என்று இப்ராகிம் கத்தினான். பிறகு கீச்சுக் குரலில் ''கீழே தள்ளுங்கள்!'' என்றான்.

வலுமிக்க இரு ஜோடிக் கரங்கள் கயிற்றை வெடுக்கென இழுத்தன. குல்சாரி தொப்பெனத் தரையிலே விழுந்தது. கதிரவன் கரணமடித் தான். குல்சாரி கீழே விழுந்த வேகத்தில் தரை அதிர்ந்தது. என்ன ஆயிற்று? ஏன் அது பக்க வாட்டில் படுத்துக் கிடக்கிறது? இந்த ஆட் களின் முகங்கள் ஏன் இப்படி விநோதமாக நீண்டுவிட்டன? மரங்கள் வானத்துக்குள் குத்திக் கொண்டல்லவா நிற்கின்றன? ஏன் அது இப்படி அவந்தரையாகப் படுத்துக் கிடக்கிறது? இல்லை, இது சரியல்ல.

குல்சாரி தலையை உலுக்கித் தன் உடம்பின் ஒவ்வொரு தசையையும் முறுக்கேறச் செய்தது. கயிறுகள் கொதிக்கும் இரும்பு வடங்களாக அதன் உடலை இறுக்கி நெருக்கின. அதன் கால் கள் அதன் வயிற்றுடன் ஒட்டிவிடும்படிச் சேர்த் திழுக்கப்பட்டன. குலுங்கா நடையான் பலமாக உலுக்கி உதறிற்று, இழுத்துக் கட்டப்படாமல் இருந்த ஒரு பின்னங்காலால் தாறுமாறாக உதைக்கத் தொடங்கிற்று. கயிறு விறைப்பாகி இற்றுவிடும் போலாகிவிட்டது.

''விடாதீர்கள்! மேலே ஏறி அழுத்துங்கள்! கெட்டியாகப் பிடித்து அழுத்துங்கள்!'' என்று பீதியுற்றுவிட்ட இப்ராகிம் கூச்சலிட்டான்.

அவர்கள் குதிரைமீது பாய்ந்து முழங்காலை வைத்து அழுத்தினர்.

''தலையைத் தரையோடு தரையாய் அழுத்திப் பிடியுங்கள்! கால்களில் கயிற்றைச் சுற்றி இழுங்கள்! அப்படித்தான்! சீக்கிரம், இன்னொரு தரம் சுற்றிக் கொண்டுவந்து இழுங்கள்! பலமாய் இழுங்கள்! இன்னொரு தரம்! இனி முடி போடுங்கள்!'' இப்ராகிம் ஓயாமல் கீச்சுக் குரலில் கத்திக் கொண்டிருந்தான்.

குலுங்கா நடையானின் கால்களைச் சுற்றிக் கயிறு மேலும் மேலும் இறுகிச் சென்றது. நான்கு கால்களும் கெட்டியாகச் சேர்த்துக் கட்டப் பெற்று விட்டன. குல்சாரி முனகியபடி கயிற்றின் உடும்புப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் திரும்பத் திரும்பப் பெரு முயற்சி செய்தது. அதன் கழுத்தையும் தலையையும் பிடித்து அழுத்தியவர்களைத் தூக்கியெறிந்து கொண்டிருந்தது. ஆனால் அவர்கள் திரும்பத் திரும்ப அதன்மீது ஏறி முழங்காலை வைத்து அழுத்திக் கொண்டனர். குலுங்கா நடையானுக்கு வியர்த்து வழிந்தது, உடல் உதறி நடுங்கிற்று. கால்கள் மரத்துவிட்டன. அது சரணடைந்து விட்டது.

''அப்பாடா, அடங்கிவிட்டது!''

''நல்ல வலுவான குதிரை, சந்தேகமில்லை!''

''இனி அசைய முடியாது, லாரியின் பலமுடைய

தாக இருந்தாலுங்கூட இனி ஒன்றும் பலிக்காது.''

கீழே கிடந்த குதிரையிடம் அதன் புதிய எஜமானர் ஓடி வந்து அதன் தலையருகே குத்துக்காலிட்டு உட்கார்ந்தார். நேற்று குடித்த வோத்காவின் வீச்சம் வெளிவர வெற்றிச் சிரிப்புச் சிரித்துக் கொண்டார். தரையிலே கிடந்ததைக் குதிரையென்று நினைக்காமல் தனது ஜன்மப் பகைவனை மனிதனைக் கருதியது போல ஆத்திரமும் வெறுப்பும் ஒளிவு மறைவின்றி வெளிப்படும்படிச் சிரித்துக் கொண்டார்.

இப்ராகிமுக்கு வியர்வை கொட்டிற்று. முகத்தைத் துடைத்துக் கொண்டு பண்ணைத் தலைவரின் பக்கத்தில் அவன் குத்துக்காலிட்டு உட்கார்ந்தான். இருவரும் இவ்விதம் அருகருகே உட்கார்ந்து கொண்டு இனி நடைபேறப் போவது குறித்து ஆவலுடன் சிந்தித்தவாறு சிகரெட்டைப் பற்ற வைத்தனர்.

வேலிக்கு அப்பால் சிறுவர்கள் கிட்டிப்புள் விளையாடிக் கொண்டிருந்தனர்.

அக்பாய், கக்பாய்,
விடாதே கன்றுக் குட்டியை.
விட்டேன்னு போச்சு எல்லாம்,
எல்லாம் போச்சு-இம்-ம்-ம்-ம்!

கதிரவன் எப்பொழுதும் போலப் பிரகாசமாக ஒளி வீசினன். குல்சாரி விரிந்து பரந்த ஸ்தெப்பியைக் கடைசி முறையாக மனக்

கண்ணுல் பார்த்துக் கொண்டது. மந்தைகள் அங்கே புல்வெளிகளில் மேய்வதைக் கண்டது. சிறகடித்துக் கொண்டு தலைக்கு மேலே பறந்த தாராக்கள் அதை வெளியே வாவெனக் கூப்பிட்டன... அதன் தலையில் ஈக்கள் உட்கார்ந்தன, அவற்றை அதனுல் விரட்ட முடியவில்லை.

''ஜொரொாக்குல் அல்தாஜெவிச், வேலையைத் தொடங்கலாமா?'' என்று இப்ராகிம் திரும்பவும் கேட்டான்.

பண்ணைத் தலைவர் தலையை ஆட்டிக் கொண்டார். இப்ராகிம் எழுந்தான்.

எல்லோரும் எழுந்து வேலை செய்தனர். கட்டுண்டு கிடந்த குதிரையின்மீது முழங்கால்களையும் உடல்களையும் வைத்தழுத்தினர். அதன் தலையை இன்னும் பலமாகத் தரையோடு அழுத்திப் பிடித்துக் கொண்டனர். குலுங்கா நடையான் தன் கவட்டியிலே யாரோ கையை விடுவதை உணர்ந்தது.

சிறுவர்கள் வேலியின் மேல் ஏறிச் சிட்டுக் குருவிகளைப் போல அதில் அமர்ந்திருந்தனர்.

''அதோ பார்! அவர்கள் என்ன செய்கிறுர்கள் பார்!''

''குலுங்கா நடையானின் குளம்புகளைச் சுத்தம் செய்கிறுர்கள்.''

''நீ நினைக்கிறுய் அப்படி! ஆனுல் அவர்கள் செய்வது அதுவல்ல.''

''ஏய் பசங்களா, இங்கே என்ன வேலை உங்களுக்கு? போங்க அந்தப் பக்கம்!'' என்று இப்ராகிம் அவர்களைப் பார்த்துக் கைகளை

ஆட்டிக் காட்டி இரைந்தான். ''போங்க, வேறு எங்காவது போய் விளையாடுங்கள். இது உங்களுக்கு ஏற்ற இடமல்ல.''

சிறுவர்கள் வேலியிலிருந்து தொபுதொபு வெனக் குதித்தோடினர்.

எல்லாம் அமைதியாகிவிட்டன.

ஏதோ குலுங்கி குல்சாரியின்மீது பட்டு ஜில்லிட்டது. குதிரை அதிர்ந்து நடுங்கிற்று. அதன் முன்னுல் குத்துக் காலிட்டு உட்கார்ந் திருந்த அதன் புதிய எஜமானர் ஆவலுடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். திடீ ரென்று பயங்கரமாக வலித்தது, உலகமே வெடித்துச் சிதறுவது போலிருந்தது. பளிச்சிடும் செந்தீ அதைச் சுட்டெரித்தது. பிறகு யாவும் இருண்டுவிட்டன...

எல்லாம் முடிவுற்ற பிறகும் குல்சாரி கட் டுண்டு தரையில் கிடந்தது. இரத்தம் நிற்பதற் காக அவர்கள் காத்திருந்தனர்.

''அவ்வளவுதான், ஜொரொக்குல் அல்தானெ விச், இனி எல்லாம் சரியாகிவிடும்'' என்று கூறி இப்ராகிம் கைகளைத் தேய்த்துக் கொண் டான். ''இனி ஒருநாளும் அங்கே ஓடாது. தானுபாய் கிடக்கிருன், நீங்கள் அவன் பேச் சைப் பொருட்படுத்தாதீர்கள். எப்பொழுதுமே அவன் அப்படித்தான். சொந்த அண்ணனைக் கூட விட்டு வைக்காதவன். அண்ணனுடைய உடைமைகளைப் பறித்து ஆளை சைபீரியாவுக்கு அனுப்பி வைத்துவிட்டான். யாரிடத்தும் சிறிதும் பாசமில்லாதவன்...''

தான் செய்த வேலை குறித்து மனம் மகிழ்ந்த வஞ்சக ஆணியிலிருந்த தனது நரித் தோல் தொப்பியை எடுத்து ஆட்டிக் குலுக்கிவிட்டு அதன் உரோமத்தைத் தடவிப் படியச் செய்து வியர்த்து வழிந்த தன் தலையிலே வைத்துக் கொண்டான்.

சிறுவர்கள் கிட்டிப்புள் விளையாடிக் கொண்டிருந்தனர்:

அக்பாய், கக்பாய்
விடாதே கன்றுக் குட்டியை.
விட்டேன்னு போச்சு எல்லாம்,
எல்லாம் போச்சு-இம்-ம்-ம்-ம்!

''உன்னால் முடியவில்லை. இனி நீ என்னை முதுகில் ஏற்றிக் கொண்டு குதிரை மாதிரி ஓடியாக வேண்டும். குல்சாரி, புறப்படு போவோம்! இதோ பாருங்கள், என் குல்சாரி யைப் பாருங்கள்!''

கதிரவன் காய்ந்தான், குதூகலமாயிருந்தது...

## 10

இரவு, நள்ளிரவு. ஒரு கிழவனும் ஒரு கிழக் குதிரையும் இருந்தனர். மலைப்பிளவின் ஓரத்தில் கணப்புத் தீ எரிந்தது. தீ தணிந்து காற்றில் படபடத்தது...

குளிர்ந்திருந்த கெட்டியான தரை குதிரை

யின் உடலை உறையச் செய்வதாயிருந்தது. பின்னந் தலையில் ஏதோ இரும்புக் குண்டு அழுத்திக் கொண்டிருப்பது போலிருந்தது. நெடுங் காலத்துக்கு முன்பு கால்களில் சங்கிலிப் பிணைப்பு போடப்பட்டிருந்த போது மந்தைக்கு அது நொண்டிச் செல்கையில் அதன் தலை ஆடியாடி அயர்ந்து போனதைப் போலவே இப்பொழுதும் ஆடியாடி அயர்ந்துவிட்டது. அப்பொழுது போலவே இப்பொழுதும் குல்சாரி யால் தன்னைக் கட்டிய பிணைப்பை உடைத் தெறிந்துவிட்டு ஓட முடியவில்லை. கால்களைத் தடங்கலின்றி எடுத்து வைத்து ஓட விரும்பிற்று. குளம்புகள் சூடேறும்படி உலகின் குறுக்கே பறந்தோட வேண்டுமென்று நினைத்தது. மூச்சை நன்ருக உள்ளே இழுத்துக் கொண்டு புல்வெளிக்கு ஓடிச் சென்று மந்தையைக் கனைத்து அழைக்க விரும்பிற்று. காஞ்சிரை மகரந்தம் மிதக்கும் ஸ்தெப்பியில் பெண் குதிரைகளும் குட்டிகளும் தன்னுடன் ஓடி வர வேண்டுமென்று ஆசைப்பட்டது. ஆனல் சங்கிலிப் பிணைப்பு அதை ஓட முடியாமல் தடுத்தது. சங்கிலி அடித்து மோதிக் கொள்ள தப்பியோடும் தண்டனைக் கைதி போல நொண்டித் தாவி தன்னந்தனியே சென்றது. யாவும் இருண்டு வெறிச்சோடிப் போய் இருந்தன. நிலா வெளித் தோன்றியது, பிறகு காற்று ஓங்கி வீசிய வானத்தின் உயரத்தில் மறைந்துவிட்டது. நொண்டித் தாவுகையில் அது தலையைப் பின்புறம் கவிழ்த்துக் கொண்ட போது அது மீண்டும் வெளித்தோன்றியது,

பிறகு தலையைக் குனிந்து கொண்டபோது சரிந்து விழுந்தது.

மாறிமாறி வெளிச்சமாகவும் இருட்டாக வும் இருந்தது... அதற்குக் கண்கள் கூசின.

சங்கிலி கணீரென்று ஒலித்தது. காற்குழைச்சி லும் மயிர்க்குச்சப் பகுதியிலும் சங்கிலி உராய்ந்து புண்ணாகிவிட்டது. நொண்டி நொண்டித் தாவிச் சென்றது. யாவும் இருண்டு வெறிச்சோடிப் போயிருந்தன. கால்களில் சங்கிலிப் பிணைப்பு பூட்டப்பட்டிருந்த போது சாலை முடிவின்றி நீண்டு சென்றது. நொண்டி நொண்டிச் செல்ல எவ்வளவு கடினமாயிருந்தது.

மலையிடுக்கின் ஓரத்திலே கணப்புத் தீ எரிந் தது. குளிர்ந்திருந்த கெட்டியான தரை குதிரை யின் உடலை உறையச் செய்வதாயிருந்தது...

## 11

இன்னும் இரண்டு வாரங்களில் திரும்பவும் அவர்கள் மலைகளுக்கு, புதிய மேய்ச்சல் வெளி களுக்குக் குடி பெயர்ந்து சென்றாக வேண்டும். கோடை, இலையுதிர் காலம், குளிர் காலம் பூராவும் மலைகளில் இருந்துவிட்டு வசந்தத்தில் தான் திரும்புவார்கள். ஜாகை மாறுதல் பெருங் களே பரம்தான். நம்மிடம் இத்தனை சாமான் கள், இவ்வளவு அடைசல்கள் சேர்ந்தது எப்படி யென்று ஆச்சரியமாயிருக்கும். தம்மை ஏழை யென நினைப்போர் வீட்டை மாற்றிப் பார்த்தால்

தெரியும் என்று கிர்கீஸ் முதுமொழி ஒன்று கூறுவதற்கு இதுதானே காரணம்?

தயார் செய்தாக வேண்டும். ஏராளமான வேலைகள் இருந்தன. தாஞபாய் மாவு ஆலைக்குப் போக வேண்டும், கடைகளுக்குச் சென்று சாமான்கள் வாங்க வேண்டும், போர்டிங் பள்ளிக்குச் சென்று மகனைப் பார்த்து வர வேண்டும்... ஆனால் தாஞபாய் எதிலும் நாட்டமில்லாதவனாக சோகமே உருவாக இருந்தான். அவன் மனைவிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. பொழுது விடிந்ததும் வாய் திறந்து அவள் ஒரு வார்த்தை பேசக்கூட அவகாசமளிக்காதபடி அவசரமாகப் புறப்பட்டு மந்தையிடம் போய்விடுவான். பிறகு நண்பகலில் திரும்பி வருகையில் அவன் முகத்தில் ஈ ஆடாது, கடுகடு என்று இருப்பான். எதையோ எதிர் பார்த்துக் கலங்குகிறவனாகத் தோன்றினான்.

''ஏன் இப்படி இருக்கிறாய்?'' என்று ஜெய்தார் அவனைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவன் பதில் சொல்லாமலே மௌனமாக இருந்தான். பிறகு ஒருநாள், ''சில நாட்களுக்கு முன்பு நான் கெட்ட கனவு ஒன்று கண்டேன்'' என்றான்.

''நான் உன்னைக் கேள்வி கேட்காமல் இருக்க வேண்டுமென்று இப்படிப் பதில் சொல்கிறாயா?''

''இல்லை, மெய்யாகவே கனவு கண்டேன். அது என் மனதை விட்டுப் போக மாட்டேங்கிறது.''

''இப்படியா ஆகணும் நீ? இந்தக் கிராமத்தில்

நீதானே முதலாவது நாத்திகன். பாட்டிமார்கள் எல்லோரும் அன்று உன்னைச் சபிக்கவில்லையா? தாறுபாய், உனக்கு வயதாகிவிட்டது, கிழவனாகி வருகிறாய், அதனால்தான் இந்த நிலைமை. முழு நேரமும் மந்தையுடன் இருந்துவிடுகிறாய். வீட்டைப் பற்றி நீ நினைத்துப் பார்ப்பதில்லை. குழந்தைகளை வைத்துக் கொண்டு நான் ஒருத்தி என்ன செய்ய முடியும்? நீ சோரோவையாவது போய்ப் பார்த்து வரக் கூடாதா? ஊரை விட்டுக் கிளம்புகிறவர்கள் உடல் நலமின்றிப் படுத்திருப்போரைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டாமா?''

''அதற்கென்ன அவசரம்? பிறபாடு போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்.''

''பிற்பாடு என்றால் எப்பொழுது? ஏன், கிராமத்துக்குப் போய் வருவதற்கு உனக்கு பயமாகவா இருக்கிறது? நானும் வருகிறேன், நாளைக்குப் புறப்பட்டுப் போகலாம். குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு போவோம். எனக்கும் கிராமத்தில் வேலை இருக்கிறது.''

மறுநாள் பக்கத்து மந்தையைச் சேர்ந்த இளைஞன் ஒருவனிடம் தமது மந்தையையும் பார்த்துக் கொள்ளும்படிச் சொல்லிவிட்டு எல்லோருமாகக் குதிரைகளில் புறப்பட்டனர். ஜெய்தார் தன் கடைசிப் பெண்ணைக் குதிரையில் தனக்கு முன்னால் உட்கார வைத்துக் கொண்டாள். தாறுபாய் மூத்த பெண்ணைத் தன் குதிரையில் ஏற்றிக் கொண்டான். அவர்கள் வருவோர் போவோருக்கு வணக்கம் கூறியபடிக்

கிராமத் தெருக்களின் வழியே சென்றனர். கொல்லுப் பட்டறை வந்ததும் தாஞபாய் தன் குதிரையை இழுத்துப் பிடித்து நிறுத்திஞன்.

''கொஞ்சம் இரு'' என்று மனைவியிடம் கூறிவிட்டுக் கீழே இறங்கிஞன். பிறகு மூத்த மகளைத் தூக்கிச் சென்று அவளுடைய குதிரையின் பின் முதுகில் உட்கார வைத்தான்.

''ஏன்? நீ எங்கே போகிருய்?''

''நான் இதோ வந்துவிடுகிறேன், நீ முன்ஞல் போ. இதோ வந்து கொண்டிருக்கிறேன் என்று சோரோவிடம் சொல்லு. மதிய உண்டிக் காகப் பண்ணை அலுவலகம் மூடுமுன் அங்கே எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. பட்டரைக்கும் போய் மேற்கொண்டு கொஞ்சம் லாடங்கள் வாங்கி வர வேண்டும்.''

''நான் தனியே போவது நன்ருயிராது.''

''கவலைப்படாதே, நான் இதோ ஓடிவந்து விடுகிறேன்.''

தாஞபாய் பண்ணை அலுவலகத்துக்குப் போக வில்லை, பட்டறைக்கும் போகவில்லை. நேரே லாயத்துக்குச் சென்ருன்.

கீழே இறங்கி, யாருக்கும் தெரிய வேண் டாமென்று சப்தமின்றி உள்ளே சென்ருன். உள்ளே நிலவிய இருட்டில் பார்வை தெரிவதற் காகக் காத்திருக்கையில் அவனுக்கு வாய் வறண்டுவிட்டது. லாயம் காலியாக, நிசப்த மாக இருந்தது. எல்லாக் குதிரைகளும் வெளியே போய்விட்டன. தாஞபாய் சுற்றிலும் பார்த்து விட்டு நிம்மதியடைந்தவஞகப் பெருமூச்சு விட்

டான். லாயக்காரர்கள் ஒருவரையும் காணோமே என்று தேடிக் கொண்டு பக்கவாட்டுக் கதவு வழியே முற்றத்தினுள் சென்றான். இத்தனை நாட்களாக அவன் பீதியுடன் எதிர்பார்த்ததை அப்படியே அங்கு கண்ணெதிரே கண்டான்.

''எனக்குத் தெரியும். படுபாவிகள் ஆயிற்றே!'' என்று விரல்களை இறுக மூடிக் கொண்டு வாய்க்குள் முனகிக் கொண்டான்.

திறந்த கொட்டில் ஒன்றில் குல்சாரி நின்று கொண்டிருந்தது. துணி சுற்றப்பட்ட அதன் வால் அதன் கழுத்துடன் இணைக்கப்பட்ட கயிற்றுடன் உயர்த்தி இழுத்துக் கட்டப்பட்டிருந்தது. அகல விலகிய அதன் பின்னங் கால்களுக்கு இடையே ஒரு சொம்பு அளவுக்குப் பெரிய வீக்கம் இருந்தது தெரிந்தது. தொட்டியின் முன்னால் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு ஆடாது அசையாது குதிரை நின்று கொண்டிருந்தது. தானபாயிடமிருந்து ஒரு முனகல் வெளிப்பட்டது, அவன் உதட்டைக் கடித்துக் கொண்டு நின்றான். குதிரையிடம் போக விரும்பினான், ஆனால் துணிச்சல் இல்லை. உறைந்து போய் ஜில்லிட்ட விரல்களால் அவன் இதயம் கசக்கிப் பிழியப்படுவது போலிருந்தது. காலி லாயம், காலி முற்றம், விரையடிக்கப்பட்டு அங்கே தன்னந்தனியாக நின்ற குலுங்கா நடையான்—இந்தக் காட்சி அவனைக் கதி கலங்கச் செய்துவிட்டது. தட்டுத் தடுமாறியபடி வெளியே நடந்தான். இனி யாரும் எதுவும் செய்வதற்கில்லை.

அவர்கள் தமது கூடாரத்துக்குத் திரும்பியதும் அன்று மாலை தானுபாய் துக்கம் தொனித்த குரலில் தன் மனைவியிடம் கூறினுன்:

''நான் கண்ட கெட்ட கனவு மெய்யாகவே நடந்துவிட்டது.''

''என்ன நடந்தது?''

''அங்கே இருக்கையில் நான் இதைப் பற்றிச் சொல்ல விரும்பவில்லை. குல்சாரி இனி ஓடி வரவே வராது. அதற்கு என்ன செய்தார்கள் தெரியுமா? பாவிப் பசங்கள், விரையடித்து விட்டனர்.''

''எனக்குத் தெரியும். அதனுல்தான் நீ கிராமத்துக்குப் போய் வர வேண்டும் என்றேன். போய்த் தெரிந்து கொள்ள உனக்குப் பயமாயிருந்தது, இல்லையா? பயப்பட என்ன இருக்கிறது? சிறு குழந்தையா நீ. குதிரைக்கு விரையடிப்பது இது முதல் தடவையுமல்ல, கடைசித் தடவையுமல்ல. ஆண்டாண்டுக் காலமாக நடைபெற்றிருப்பதுதான்.''

தானுபாய் பதில் கூருமலே இருந்துவிட்டுப் பிறகு சொன்னுன்:

''நமது பண்ணையின் புதிய தலைவர் மோசமான ஆளாக இருப்பார் போல் தெரிகிறது. நான் அப்படித்தான் நினைக்கிறேன்.''

''தானுபாய், நீ இம்மாதிரிப் பேசக் கூடாது. உன்னுடைய குதிரைக்கு விரையடித்துவிட்டார்கள் என்ருல் பண்ணைத் தலைவர் மோசமானவர் என்ரு அர்த்தம்? அது சரியல்ல. அவர் இங்கு புதிதாக வந்தவர். பண்ணை பெரியது, வேலை

சுலபமானதல்ல. இனி யாவற்றையும் சரி செய்துவிடுவார்கள், பண்ணைகளுக்கு உதவி நிறைய கிடைக்கப் போகிறது என்று சோரோ சொல்லவில்லையா? புதிய திட்டம் ஒன்று வகுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இதெல்லாம் தெரிந்து கொள்ளாமலே நீ முடிவுக்கு வந்துவிடுகிறாயே. நமக்குத் தெரியாதவை எவ்வளவோ இருக்கின்றன...''

இரவுச் சாப்பாடு முடிந்ததும் தானபாய் மந்தையிடம் சென்றான். இரவு நெடுநேரம் வரை அங்கேயே இருந்தான். தன்னைத் தானே சபித்துக் கொண்டான். மறந்துவிட முயற்சி செய்தான், ஆனால் லாயத்தில் அவன் கண்ட காட்சி அவன் கண்களை விட்டு விலகாது அவனைத் துன்புறுத்தியது. மந்தையை ஒன்று திரட்டிய போது அவன் தனக்குத் தானே கூறிக் கொண்டான்: ''இதற்காக ஓர் ஆளைப் பற்றி இப்படி ஒரு முடிவுக்கு வருவது சரியா? முட்டாள்தனமானதுதான் இது. கிழவனாகி வருகிறேன், நாள் முழுதும் மந்தையுடன் இருந்து கொண்டிருக்கிறேன்—அதனால் வரும் விளைவே இது. நான் யாரையும் சந்திப்பதில்லை, என்ன நடைபெறுகிறது என்று தெரிந்து கொள்வதில்லை. ஆனால் இன்னும் எவ்வளவு காலத்துக்குத்தான் நாம் இப்படிப் போராட வேண்டும்?.. சொற்பொழிவுகளைக் கேட்டால் எல்லாம் சிறப்பாகத் தான் இருக்கிறது. சரி, நான் நினைப்பது தவறாக இருந்தால் நல்லதுதானே. தவறாகவே இருக்க வேண்டுமென்று தெய்வத்தை வேண்டுகிறேன்.

ஆனல் மற்றவர்களும் நான் நினைக்கிற மாதிரி தானே நினைக்கிருர்கள்...''

தானுபாய் இப்படி மனதில் நினைத்தவாறு ஸ்தெப்பி வெளியைச் சுற்றி வந்தான். ஆனல் அவனுள் எழுந்த சந்தேகங்களுக்குத் தீர்வு காண முடியவில்லை. நெடுங் காலத்துக்குமுன் கூட்டுப் பண்ணையை அவர்கள் அமைத்ததையும் இன்ப வாழ்வு கிட்டுமென்று. மக்களுக்கு வாக் குறுதி அளித்ததையும் நினைத்துப் பார்த்தான். அன்று அவர்கள் கண்ட கனவுகளும் கொண் டிருந்த நம்பிக்கைகளும் நினைவுக்கு வந்தன. அந்தக் கனவுகளுக்காக எத்தனை ஆர்வமுடன் போராடினர்கள். எல்லாவற்றையும் தலைகீழே புரட்டினர், பழைய வாழ்க்கை முறையைத் தகர்த்தனர். இதையடுத்து ஆரம்பத்தில் வாழ்க்கை மேம்பாடு அடைந்தது மெய்தான். பாழாய்ப் போன யுத்தம் வந்திராவிடில் இன்னும் எவ்வளவோ மேம்பாடு அடைந்திருக்கலாம். இப்பொழுது நிலைமை என்ன? யுத்தம் முடிந்து எத்தனையோ ஆண்டுகளாகிவிட்டன, இன்னமும் அவர்கள் பழைய கூடாரத்தில் ஒட்டுப் போடு வது போல ஒட்டுப் போட்டுக் கொண்டிருந் தனர். ஒரு ஓட்டையைத் தைத்துச் சரி செய் ததும் வேருெரு இடத்தில் கிழிய ஆரம்பித்தது. ஏன் இப்படி? முன்பு போல அவன் கூட்டுப் பண்ணை தன்னுடையதெனக் கருதாமல் வேறு யாரோ ஒருவருடைய விவகாரமென நினைக்கத் தொடங்கியது ஏன்? முன்பெல்லாம் கூட்டம் நடத்தி என்ன முடிவு ஏற்கப்பட்டாலும் உடனே

அது சட்டமாகக் கருதப்படும். நாமே ஏற்றுக் கொண்ட சட்டம், ஆகவே நாமே இதைச் செயல்படுத்த வேண்டுமென்று நினைத்தனர். ஆனால் இப்பொழுது நடைபெறும் கூட்டங்களில் பயனற்ற பேச்சுக்கள்தான் பேசப்படுகின்றன. நீ என்ன சொல்கிறாய் என்பது குறித்து இப்பொ ழுது யாரும் கவலைப்படுவதில்லை. கூட்டுப் பண்ணை கூட்டுப் பண்ணை விவசாயிகளால் நிர்வகிக்கப்படாமல் எங்கிருந்தோ வந்த வேறு யாராலோ நிர்வகிக்கப்படுவது போலாகிவிட் டது. என்ன செய்ய வேண்டும், மேலும் சிறப்பாக வேலை செய்வது எப்படி, பண்ணையை எப்படி நிர்வகிக்க வேண்டும் என்பதெல்லாம் இங்கே இருப்போரைக் காட்டிலும் எங்கிருந்தோ வந்த வேறு யாருக்கோதான் இன்னும் நன்றாகத் தெரியும் என்பது போலாகிவிட்டது. இப்படி யும் அப்படியுமாக விவகாரங்களைப் புரட்டிப் பேசினர், எந்த நன்மையும் ஏற்படவில்லை. ப ங்களைச் சந்தித்துப் பேசவே தானுபாய்க்குப் பயமாயிருந்தது. இதோ பார், நீ கட்சி உறுப் பினன், பண்ணையின் நிறுவகர்களில் ஒருவன், ஏகமாய்க் கூச்சல் போட்டவன், என்ன நடை பெறுகிறதென்று நீதான் கொஞ்சம் சொல்லேன் என்று யாரும் தன்னைக் கேட்டால் என்ன பதில் சொல்ல முடியும் என்று அவன் அஞ்சினான். கூட்டத்தைக் கூட்டி நிலைமையை எல்லோருக்கும் விளக்கிச் சொல்வார்களானால் எவ்வளவு நன்றா யிருக்கும்? அவரவருக்குமுள்ள தொல்லை என்ன, எதைப் பற்றிக் கவலைப்படுகிறார், என்ன நினைக்

கிறூர் என்று கேட்டால் என்னவாம்? இல்லே, வட்டாரத் தலைமையிடத்திலிருந்து வரும் அதிகாரிகள் முன்பெல்லாம் வருகிறவர்களைப் போல இல்லே. முன்பெல்லாம் இங்கு வருவோர் நேரே மக்களிடையே போய்ப் பேசுவார்கள், யாரும் அவர்களிடம் சென்று விவாதிக்க முடியும். ஆனல் இப்பொழுது இவர்கள் நேரே பண்ணே அலுவலகத்துக்குப் போய்விடுகிறூர்கள், பண்ணைத் தலைவரைப் பார்த்துக் கத்துகிறூர்கள், கிராம சோவியத்தில் இருப்போரைச் சந்தித்துப் பேச வேண்டுமென்று நினைப்பதே இல்லே. கட்சிக் கூட்டத்தில் பேசும் அதிகாரி சர்வதேச நிலைமை குறித்துத்தான் பெரும் பகுதி நேரம் பேசிக் கொண்டிருப்பார்—பண்ணையின் நிலைமை முக்கியமல்ல, அற்ப விவகாரம் என்பது போல. எல்லோரும் பாடுபட்டு வேலை செய்யுங்கள், திட்டத்தை நிறைவேற்றுங்கள் என்பதுடன் நிறுத்திக் கொண்டுவிடுகிறூர்.

அண்மையில் பண்ணைக்கு வந்திருந்த இத்தகைய ஓர் அதிகாரியைப் பற்றித் தானுபாய்க்கு நினைவு வந்தது. எல்லாவற்றையும் விட்டுவிட்டு அவர் மொழியியலைப் பற்றிப் பேசிவிட்டுச் சென்றூர். பண்ணையின் நிலைமைகளைப் பற்றி தானுபாய் விவாதிக்க முயன்றதும் ஆட்சேபிக்கும் தோரணையில் அவர் அவனைப் பார்த்தார். தானுபாய் கூறியவை ஐயப்பாட்டுக்குரியவை என்றூர். அவரால் அங்கீகரிக்கப்பட்டவையல்ல அவை. நடைபெறுவது என்ன, தெரியவில்லையே.

''சோரோவுக்கு உடம்பு சரியாகட்டும், என்

னிடம் உண்மையைச் சொல்லிவிடும்படி அவனைக் கேட்கப் போகிறேன்'' என்று தானுபாய் முடிவு செய்து கொண்டான். ''என் மனத்தில் இருப் பதை அவனிடம் சொல்லப் போகிறேன். நான் நினைப்பது தவறுனல் அவன் சொல்லட்டும். தவறில்லையானுல், செய்ய வேண்டியது என்ன?.. இல்லை, நான் நினைப்பது தவருகத்தான் இருக்கும். குழப்ப மடைந்துவிட்டேன், அதனுல்தான் இப் படியெல்லாம் தோன்றுகிறது. எனக்கு என்ன தெரியும்? நான் யார்? சாதாரண மந்தைக் காரன், கால்நடை மேய்ப்பவன். ஆனுல் மேலே இருப்பவர்கள் விஷயம் அறிந்தவர்கள்...''

தானுபாய் தன் கூடாரத்துக்குத் திரும்பி வந்தான். ஆனுல் அவனுல் தூங்க முடியவில்லை. எங்கே தவறு நேர்ந்தது? இனியும் அவனுக்கு விடை கிடைக்கவில்லை.

சோரோவுடன் பேச அவனுக்கு நேரமில்லா மலே போய்விட்டது. குடி பெயர்ந்து செல்லு முன் அவனுக்கு வேலைகள் ஏராளமாக இருந்தன.

மீண்டும் முகாமினர் மலைகளுக்குப் புறப் பட்டுச் சென்றனர். கோடை காலம், இலையுதிர் காலம், குளிர் காலம் யாவற்றையும் மலைகளிலே கழித்துவிட்டு வசந்தத்தில்தான் திரும்பி வரு வார்கள். மீண்டும் மந்தை மந்தையாகக் குதிரை களும் ஆடுகளும் ஆற்று ஓரமாக வெள்ளக்காடு களைக் கடந்து சென்றன. வரிசையாகப் பொதிக் குதிரைகள் சென்றன. பேச்சுக்குரல்களும் கூச்சல் களும் கால் நடைகளின் இரைச்சலும் நிறைந்து விட்டன. பெண்களின் வண்ணச் சால்வை

ஆடைகளும் கண்குளிரக் காட்சியளித்தன. மங்கையர் பாட்டுகள் பாடி வழியனுப்பினர்.

தானுபாய் தன் மந்தையைப் பெரிய புல்வெளி வழியே குன்றுகளையும் கிராமத்தையும் கடந்து ஓட்டிச் சென்றான். அவன் அடிக்கடி போய் வந்த அந்த வீடும் முற்றமும் கிராமத்தின் ஓரத்தில்தான் இருந்தன. அவனுக்கு நெஞ்சு குமுறியது. அந்தப் பெண்ணையும் குலுங்கா நடையான் குல்சாரியையும் இழந்துவிட்டான். இருவரும் அவனுக்குக் கடந்த காலத்துக்கு, வசந்தத்தில் பறந்து செல்லும் தாராக்களைப் போல சிறகடித்துச் சென்றுவிட்ட கடந்த காலத்துக்குரியவர்களாகிவிட்டனர்...

...தாய் ஒட்டகம் பல நாட்களாகத் தன் குட்டியைத் தேடி அலைந்தது. அதைக் கூப்பிட்ட படித் திரிந்தது. கருவிழிக் குட்டியே, எங்கே சென்றாய் நீ? பதில் சொல்லாயோ? அதன் மடி யிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது, அதன் கால்களில் வடிந் தோடுகிறது. எங்கே நீ? பதில் சொல்லாயோ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடி யிலிருந்து பால் சொட்டுகிறது. தூய வெண் ணிறப் பால்...

## 12

அவ்வருடத்தின் இலையுதிர் காலத்தில் தானு பாய் பக்காசவின் வாழ்வில் திடீர் மாற்றம் ஏற்பட்டது.

அவன் கணவாயைக் கடந்தபின் மலையடி வாரத்தில் இலையுதிர் கால மேய்ச்சல் வெளிகளில் சில நாட்கள் தங்கியிருந்தான். குளிர் காலத்தைக் கழிக்க மந்தையை மலைகளுக்கு ஓட்டிச் செல்லலாமென்று காத்திருந்தான்.

அங்கே இருக்கையில் கூட்டுப் பண்ணையிலிருந்து ஓர் ஆள் வந்து சேர்ந்தான்.

''சோரோதான் என்னை இங்கு வந்து உன்னிடம் இத்தகவலைக் கூறும்படிச் சொல்லியது'' என்றான் அவன். ''நாளைக்கு நீ கிராமத்துக்கு வர வேண்டுமாம். வட்டாரத் தலைமையிடத்தில் நடைபெறும் கூட்டத்துக்கு நீயும் சோரோவும் போக வேண்டுமாம்.''

மறு தினம் தானபாய் குதிரையிலே கூட்டுப் பண்ணை அலுவலகத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே கட்சி நிறுவன அறையில் சோரோ இருந்தான். வசந்தத்தில் இருந்ததைக் காட்டிலும் தெம்பாகத் தோன்றினன். ஆயினும் நோய் அவன் உடலை விட்டு அகன்றுவிடவில்லை. அவனுடைய நீல உதடுகளும் மெல்லிய உருவமும் இதை அறிவித்தன. ஆனல் அவன் உற்சாக மிக்கவனகை விளங்கினன். மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தான். பலரும் கூட்டமாக அவனைச் சூழ்ந்து கொண்டு நின்றனர். தானபாய் தன் நண்பனின் நிலையைக் கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டான். அவனுடைய நண்பன் நோய்ப்படுக்கையை விட்டெழுந்து வந்துவிட்டான், மீண்டும் மும்முரமாக வேலை செய்ய முற்பட்டுவிட்டான்.

இருவரும் இறுதியில் தனியே விடப்பட்டதும் சோரேரா சூரான கட்டை முடிகளையுடைய குழி விழுந்த தன் கன்னங்களைத் தேய்த்துக் கொண்டு மகிழ்ச்சிப் புன்னகை புரிந்த வண்ணம் தானுபா யைப் பார்த்தான்.

''தானுபாய், நீ மாற்றம் சிறிதுமின்றி அப்படியே இருந்து வருகிருய். உன்னைப் பார்த் தால் வயதாகிக் கொண்டிருப்பதாகத் தெரி யவே இல்லை. வசந்தத்துக்குப் பிற்பாடு இப் பொழுதுதான் சந்திக்கிறேம், இல்லையா? குமிசும் மலைக் காற்றும் தான் உனது இந்த நிலைக்குக் காரணம்... ஆனுல் நான் சிறுகச் சிறுகக் கரைந்து கொண்டிருக்கிறேன், எனக்குக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்று நினைக் கிறேன்...'' சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டு உடனடி வேலையைப் பற்றிப் பேச முற்பட்டான். ''தானுபாய், ஓயாமல் உன்னை நான் உபத்திரவம் செய்வதாக நினைக்கக் கூடாது. திரும்பவும் நீதான் உதவி செய்தாக வேண்டும். நாளைக்கு நாம் கால்நடை வளர்ப்பாளர்களின் கூட்டத்துக்குப் போகிறேம். கால்நடைத் துறை யில் நிலைமை மோசமாயிருக்கிறது. முக்கியமாக ஆடு வளர்ப்புத் துறையில், அதிலும் இங்கே நம்முடைய பண்ணையில் நிலைமை மிகமிக மோசமாகிவிட்டது. என்றுமே நிலைமை இவ் வளவு மோசமாக இருந்ததில்லை. ஆட்டு மந்தை களில் மிகவும் பிற்பட்ட நிலையில் இருப்பவற்றில் சேர்ந்து அவற்றை முன்னுக்குக் கொண்டுவர உதவும்படி வட்டாரக் கட்சிக் கமிட்டி எல்லா

கம்யூனிஸ்டுகளுக்கும் காம்சொமோல் உறுப் பினர்களுக்கும் வேண்டுகோள் விடுத்திருக்கிறது. நீ மறுக்காமல் உதவி செய்ய வேண்டும். முன்பு நீ குதிரை மந்தைக்குப் பொறுப்பேற்று எங் களுக்கு உதவினாய். அதை மறக்க முடியாது, உனக்கு நாங்கள் கடமைப் பட்டவர்கள். இப்பொழுதும் கூட நீதான் எங்களுக்கு உதவி யாக வேண்டும். ஆட்டு மந்தைக்கு நீ பொறுப்பேற்றுக் கொண்டாக வேண்டும். நீ ஆடுமேய்ச்சல்காரனாகி விட வேண் டும்.''

''சோரோ, அவசரப்படாதே, கொஞ்சம் அவகாசம் கொடு!'' என்றான் தானபாய். தன்னுள் சிந்திக்கலானான்: ''குதிரைகளுடன் வேலை செய்து எனக்குப் பழக்கமாகிவிட்டது. ஆடுகளைப் பராமரிப்பது சலிப்பூட்டும் வேலை யாக இருக்கும். என்னால் அதைத் திறம்படச் செய்ய முடியுமோ, என்னமோ.''

''தானபாய், மறுக்காமல் நீ இதைச் செய் தாக வேண்டும். வேறு வழியில்லை. சிந்திப் பதற்கு ஒன்றுமில்லை, கட்சி அளித்திடும் பணி இது. நீ கோபித்துக் கொள்ளக் கூடாது. இதனால் கெடுதல் நேர்ந்தால், எல்லாம் என் னால் வந்தது என்று பிற்பாடு என்னை எவ்வ ளவு வேண்டுமானாலும் ஏசு, நான் பொறு ப்பு!..''

''ஏசமாட்டேன் என்று நினைக்காதே. எனக் குக் கொஞ்சம் அவகாசம் கொடு'' என்று கூறித் தானபாய் சிரித்துக் கொண்டான்.

எல்லாவற்றுக்கும் சோரோதான் காரணம் என்று அவன் ஆத்திரப்படப் போகும் காலம் தொலைவில் இல்லை என்பதைச் சிறிதும் எதிர் பாராதவனாகச் சிரித்துக் கொண்டான். ''ஆடு மேய்ச்சல்காரனவது குறித்து நான் சிந்தித்தாக வேண்டும். என் மனைவியுடன் பேச வேண்டும்...''

''சரி, சிந்தித்து முடிவு செய். நாளை காலைக்குள் தீர்மானம் செய்துவிடு. நாளைக்குக் கூட்டத்தில் நாம் அறிவித்தாக வேண்டும். பிற்பாடு ஜெய்தாருடன் பேசிக் கொள்ளலாம். யாவற்றையும் அவளுக்கு விளக்கிக் கூறலாம். சந்தர்ப்பம் கிடைக்குமானல் நான் அவளிடம் சென்று இதைப் பற்றிச் சொல்கிறேன். அவள் கெட்டிக்காரி, நிலைமையைப் புரிந்து கொள்வாள். அவள் இல்லாவிட்டால், எங்காவது சிக்கலில் சிக்கி எப்பொழுதோ நீ கழுத்தை முறித்துக் கொண்டிருந்திருப்பாய்'' என்று சோரோ தன் நண்பனைக் கேலி செய்தான். ''நலமாக இருக்கிறாளா? குழந்தைகள் எப்படி இருக்கிறார்கள்?'' என்று விசாரித்தான்.

பிறகு தமது குடும்பங்கள், உடல் நலக் குறைவுகள், மற்றும் இதரவை குறித்துப் பேசிக் கொண்டனர். தானபாய் தன்னை மிகவும் வருத்தி வந்த விவகாரங்கள் குறித்துப் பேச விரும்பினன். ஆனல் மலைகளிலிருந்து வரச் சொல்லி அழைக்கப்பட்டிருந்த மேய்ச்சல்காரர்கள் வந்து சேரத் தொடங்கினர். சோரோ தனது கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்

டான், அவன் அவசரப்படுகிறுன் என்று தெரிந்தது.

''சரி, உன் குதிரையை லாயத்திலே விட்டு வை. நாளை காலையில் எல்லோரும் லாரியில் புறப்படுகிறுர்கள். பண்ணைக்கு இப்பொழுது ஒரு லாரி கிடைத்திருக்கிறது, தெரியுமா உனக்கு? விரைவில் இரண்டாவது லாரியும் வந்துவிடும். நல்ல காலம் வருகிறது! நான் புறப்பட வேண்டும், ஏழு மணிக்கெல்லாம் வட்டாரக் கமிட்டி அலுவலகத்தில் இருக்க வேண்டும். பண்ணைத் தலைவர் ஏற்கெனவே அங்கே இருக்கிறுர். குலுங்கா நடையான் மாலைக் குள் என்னை அங்கே கொண்டு போய்ச் சேர்த்து விடும். மோட்டாரில் போவது போலப் போய்ச் சேர்ந்துவிடலாம்.''

''நீ குல்சாரி மீதா போய் வருகிறுய்? தெரி யாதே எனக்கு!'' என்று தானுபாய் வியந்து கொண்டான். ''உன்மீது பண்ணைத் தலைவர் நிறைய மதிப்பு வைத்திருக்கிறுர் என்று சொல்.''

''மதிப்பு வைத்திருக்கிறுரோ இல்லையோ தெரியாது எனக்கு. ஆனுல் குல்சாரியை என் னிடம் தந்துவிட்டார். என்ன ஆயிற்று தெரி யுமா?'' என்று சோரோ கைகளை விரித்துச் சிரித்துக் கொண்டான். ''குல்சாரிக்கும் பண் ணைத் தலைவருக்கும் ஒத்து வரவில்லை. என்னமோ தெரியவில்லை. அவர் ஏறியதும் அது அமைதி யிழந்துவிடுகிறது, அடங்குவதில்லை. அவரை அதற்குப் பிடிக்கவில்லை. ஆனுல் நான் ஏறிச் சென்றுல் ரொம்ப நல்லபடியாகப் போகிறது.

அருமையான குதிரை, நீ அற்புதமாக அதைப் பழக்கி வைத்திருக்கிறாய். எனக்குச் சில நேரங் களில் நெஞ்சு வலி கடுமையாகிவிடுவது உனக்குத் தெரியும். ஆனால் குல்சாரி மீது ஏறி உட்கார்ந்ததும் வலி மறைந்துவிடுகிறது. இது ஒன்றுக்காக மட்டுமாவது நான் வாழ் வெல்லாம் கட்சி நிறுவகனுகை வேலை செய்ய வேண்டும். குல்சாரி மீது போய்வருவது என் நோய்க்கு நல்ல மருந்தாக இருந்து வருகிறது!'' என்று கூறி சோரோ சிரித்துக் கொண்டான்.

தானபாய் சிரிக்கவில்லை.

''எனக்கும் பிடிக்கவில்லைதான்'' என்றான்.

''யாரை?'' என்று கேட்டான் சோரோ.

''பண்ணைத் தலைவரை.''

சோரோவின் முகத்திலிருந்து வேடிக்கையும் சிரிப்பும் மறைந்துவிட்டன.

''அவரை ஏன் பிடிக்கவில்லை என்கிறாய்?''

''ஏனென்று தெரியவில்லை. ஆள் அசடராக வும் அற்பராகவும் இருப்பார் போலத் தெரி கிறது.''

''தானபாய், உன்னைத் திருப்தி செய்வது மிகவும் கடினம். நான் கண்டிப்பாக இல்லை என்று எப்பொழுதும் என்னை நீ கண்டித்து வந்தாய். இப்பொழுது அவரையும் பிடிக்க வில்லை என்கிறாய்... என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. இப்பொழுதுதான் நான் திரும்பவும் வேலை செய்ய ஆரம்பித்திருக் கிறேன். இன்னும் எனக்கு அவரைப் பற்றி அதிகம் தெரியாது.''

இருவரும் மௌனமாகிவிட்டனர். குல்சாரி யின் கால்களில் சங்கிலிப் பிணைப்பு போடப்பட் டது பற்றியும், அதற்கு விரையடிக்கப்பட்டது பற்றியும் தானபாய் சோரோவிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தான். ஆனால் அதை யெல்லாம் சொல்வது பொருத்தமாகவோ, பயனுள்ளதாகவோ இருக்காதென்று தோன்றி யது. பேச்சு தடைபட்டு நின்றுவிடாதிருக்க வேண்டுமென்று விரும்பினான். ஆகவே சோரோ அவனிடம் தெரிவித்த இனிய செய்திகளைப் பற்றிப் பேசினான்.

''நமக்கு லாரி கிடைத்திருப்பது கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். இனி கூட்டுப் பண்ணை களுக்கு லாரிகள் வந்துவிடும். லாரிகள் மிகவும் அவசியம். நெடுநாட்களுக்கு முன்பே வந்திருக்க வேண்டும். யுத்தத்துக்கு முன்பு முதன்முதல் நமக்கு ஒரு சிறு லாரி கிடைத்ததே நினைவிருக் கிறதா? கூட்டமாக வந்து வேடிக்கை பார்த்தார் களே. சொந்தத்தில் நமக்கு லாரி கிடைத்து விட்டதென்று எப்படிக் கொண்டாடினோம். லாரியில் ஏறி நின்று கொண்டு 'தோழர்களே, சோஷலிசத்தால் கிடைக்கும் பயனைப் பாருங் கள்' என்று கூறினோம். பிறகு அதை இராணுவத் துக்காக எடுத்துக் கொண்டுவிட்டார்கள்...''

ஆம், உற்சாகமான காலம் அது... அரு ணோதயக் காலத்தைப் போலிருந்தது. லாரி என்ன? சூய்ஸ்கி கால்வாயின் நிர்மாண வேலை களை முடித்துவிட்டுத் திரும்பியவர்கள் நமது கிராமத்துக்கு இசைப் பெட்டிகள் கொண்டு

வந்தார்களே. இசைப் பெட்டி உடைமை யாளர்களின் வீடுகளில் பெருங்கூட்டம் கூடி விடும். பெட்டியை வெளியே கொண்டு வந்து வைத்து இசைத் தட்டைச் சுற்ற விடுவார்கள். தலையில் சிவப்புக்குட்டை கட்டிக் கொண்டு எல்லோரையும்விடச் சிறப்பாக வேலை செய்த பெண்ணைப் பற்றிய அந்தப் பாட்டைத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந் தார்கள். அவர்களுக்கு இவையும் சோஷலிசத் தால் கிட்டிய பலன்கள்தான்...

''சோரோ, உனக்கு ஞாபகம் இருக்கிறதா? கூட்டம் முடிவுற்றதும் எல்லோரும் வரிசை யாக லாரியில் ஏறிக் கொண்டோம். விழா நாள் மாதிரி நான் செங் கொடியைப் பிடித்துக் கொண்டு கூண்டுக்கு அருகே நின்றேன். லாரி யில் சவாரி செய்ய வேண்டுமென்று ரயிலடிக்கு லாரியில் சென்றோம். அங்கிருந்து ரயில் பாதை ஓரமாக அடுத்த ரயில் நிலையமான கஸாக்ஸ் தானுக்குப் போனோம். அங்கே பூங்காவுக்குச் சென்று பீர் குடித்தோம். வழி நெடுகப் பாடிக் கொண்டே போய் வந்தோம். அன்று நம்முடன் வந்த இளைஞர்களில் மிகப் பலர் இப்பொழுது இல்லை. யுத்தத்தில் உயிரிழந்து விட்டனர். ஆம்... நல்ல இரவிலுங்கூட நான் செங் கொடியைத் தணிக்கவில்லை. நள்ளிரவில் நம்முடைய கொடியைப் பார்க்க அங்கு யாருமே இல்லை எனினும் நான் அதை ஏந்திப் பிடித்து வந்தேன். தொண்டை கம்மிப் போகும் வரை பாடிக் கொண்டிருந்தேன்... சோரோ, ஏன்

அது போல இன்று நாம் பாடுவதில்லை?''

''தானுபாய், நமக்கு வயதாகிவிட்டதே. பாடிக் கொண்டு போகும் வயதிலா இருக்கிறோம்?..''

''நான் அதைச் சொல்லவில்லை. நாம் பாடும் வயதைக் கடந்துவிட்டோம் என்பது மெய் தான். ஆனால் இளம் வயதினர் என்ன செய்கிறார்கள்? என் மகனைப் பார்ப்பதற்கு போர்டிங் பள்ளிக்குச் சென்றிருந்தேன். அவன் எப்படிப்பட்டவனாக வளரப் போகிறானோ கடவுளுக்குத்தான் தெரியும். ஏற்கெனவே அவன் அதிகாரிகளைத் திருப்தி செய்யத் தெரிந்து கொண்டுவிட்டான். முடியும் போதெல்லாம் நான் தலைமை ஆசிரியருக்குக் குமிஸ் கொண்டு வர வேண்டும் என்றான். எதற்காக? மோசமான மாணவன் அல்ல அவன்... அவர்கள் எப்படிப் பாடுகிறார்கள் என்று நினைக்கிறாய்? நான் சிறு பையனாக அலெக்சாந்திரவ்காவில் எப்ரெமோவிடம் பண்ணைக் கூலியாளாக வேலை செய்த போது ஈஸ்டர் திருநாளில் என்னை அவர் கோயிலுக்கு அழைத்துச் சென்றிருந்தார். இங்கே பள்ளியில் நமது சிறுவர்களும் சிறுமிகளும் கைகளை விலாவோடு ஒட்டி வைத்துக் கொண்டு முகங்கள் மரத்தாலானவை போல் தோன்ற மேடையில் நின்று பாடினர், ருஷ்யக் கோயில்களில் பாடுவது போலப் பாடினர். எல்லாப் பாட்டுகளும் ஒரே மாதிரியே இருக்கின்றன... இவை எனக்குப் பிடிக்கவே இல்லை. இன்று நடப்பவை பலவற்றிலும் என்னால் புரிந்து கொள்ள முடி

யாதவை நிறைய இருக்கின்றன. உன்னுடன் இவற்றையெல்லாம் பற்றிப் பேச விரும்புகிறேன்... நான் பின்னடைந்து வருவதாகத் தோன்றுகிறது. பலவும் எனக்குப் புரியவில்லை.''

''சரி, இருவரும் ஆர அமர உட்கார்ந்து இதைப் பற்றிப் பேசலாம்'' என்று சொல்லிச் சோரோ தனது கைப் பைக்குள் காகிதங்களை எடுத்து வைத்தான். ''நீ கவலைப்படக் கூடாது, மனம் தளர வேண்டியதில்லை. என்னைப் பொறுத்தவரை நான் முழு நம்பிக்கை கொண்டிருக்கிறேன். காலம் எவ்வளவுதான் கடினமாயிருந்தாலும், நாம் எல்லாவற்றையும் சமாளிப்போம், முன்னேறிச் சென்றுவிடுவோம் என்று திடமாக நம்புகிறேன். நமது கனவுகள் நனவாவதை நிச்சயமாகக் காண்போம்...''

சோரோ வாயிற்படியருகே சென்றதும் திரும்பி நின்று பேலும் கூறினன்: ''தானுபாய், உன்னுடைய தெரு வழியே குதிரையில் போய்க் கொண்டிருந்தேன். உன் வீடு பார்க்கச் சகிக்காத நிலையில் இருக்கிறது. நீ அதைக் கவனியாது விட்டுவிட்டாய். அங்கே மலைகளிலேயே இருந்துவிடுகிறாய், உன் வீடு கவனிப்பார் யாருமின்றி வீணாகி வருகிறது. யுத்த காலத்தில் ஜெய்தார் தனியே இருந்தபோது அதை அவள் இப்போழுது இருப்பதைவிட எவ்வளவோ நல்ல நிலையில் வைத்திருந்தாள். நீ அதைப் போய்ப் பார். உனக்கு என்ன வேண்டுமென்று சொல்லு. வசந்தத்தில் அதைப் பழுது பார்த்துச் சரி செய்ய உனக்கு வேண்டிய உதவியைச் செய்

கிறேம். என் மகன் சமான்சுர் கோடை விடு முறையின்போது இங்கு வந்திருந்தான். உன்னுடைய வீடு இருந்த நிலையை அவனால் சகிக்க முடியவில்லை. புல் அரிவாளை எடுத்துச் சென்றான். அங்கே போய் வெளி முற்றத்தில் புற் பூண்டுகளை அகற்றப் போகிறேன் என்றான். காரை பாளம்பாளமாகப் பிய்ந்து விழுகின்றது, சன்னல்கள் உடைந்து விட்டன, போரடிக் களத்திலே பறப்பது போல உள்ளே சிட்டுக் குருவிகள் பறந்து கொண்டிருக்கின்றன என்றான்.''

''ஆமாம், எனக்குத் தெரியும். சமான்சுருக்கு என் நன்றியைத் தெரிவி. பையன் எப்படி இருக்கிறான்?''

''கல்லூரியில் இது அவனுக்கு இரண்டாவது ஆண்டு. நன்றாகப் படிக்கிறான். இளந் தலைமுறையைப் பற்றி நீ குறைபட்டுக் கொண்டாய். ஆனால் என் மகனைக் கொண்டு பார்க்கையில், இன்றைய இளைஞர்கள் நீ நினைக்கிற மாதிரி ஒன்றும் மோசமல்ல. மகன் சொல்வதைக் கேட்டால், அவன் கல்லூரியில் படிக்கும் இளைஞர்களும் யுவதிகளும் மெச்சத் தக்கவர்களாக வளர்ந்து வருவது தெரிகிறது. எப்படியும் காலம் இதைத் தெளிவு படுத்தும். இவர்கள் கல்வியறிவுடையவர்கள். தாமே சிந்தித்து ஆவன செய்யக் கூடியவர்கள்...''

சோரோ லாயத்துக்குச் செல்ல, தானுபாய் தன் வீட்டைப் பார்த்துவிட்டு வரலாமென்று புறப்பட்டான். முற்றத்தினுள் சென்று வீட்டைச் சுற்றி வந்தான். சோரோவின் மகனை

மாணவன் கோடையில் வெட்டிய புற்பூண்டு களின் காய்ந்த குச்சிகளும் சருகுகளும் காலில் மிதிபட்டுச் சடசடத்தன. வீட்டை இப்படிச் சீரழிய விட்டுவிட்டோமே என்று வருத்தப் பட்டுக் கொண்டான். ஏனைய மந்தைக்காரர் கள் உறவினர்களைத் தமது வீட்டில் இருந்து கவனித்துக் கொள்ளச் சொல்லியிருந்தனர், அல்லது வீட்டைப் பார்த்துக் கொள்ள அவர் களுக்கு வேறு யாராவது இருந்தனர். ஆனால் தானுபாயின் இரு சகோதரிகளும் வேறு கிராமங்களில் வசித்து வந்தனர், சகோதரன் குலுபாயுடன் அவனுக்குப் பேச்சுவார்த்தை இல்லை. ஜெய்தாருக்கு நெருங்கிய உறவினர்கள் யாருமே கிடையாது. ஆதலால்தான் அவ னுடைய வீடு கவனிப்பார் யாருமின்றி வீணாகி வந்தது. திரும்பவும் இப்பொழுது மந்தை களுடன் மலைகளுக்குப் போய் விடுவான். இம்முறை ஆடு மேய்ச்சல்காரனாகச் செல்வான். இது பற்றி தானுபாய் இன்னும் இறுதி முடி வுக்கு வந்தாகவில்லை, ஆனால் சோரோ இறு தியில் தன்னை இதற்குச் சம்மதிக்கும்படிச் செய்துவிடுவான், அவன் வார்த்தையைத் தட்ட முடியாமல் எப்பொழுதும் போல உடன்பட வேண்டியிருக்கும் என்பது தானுபாய்க்கு உள் ளுக்குள் தெரிந்ததுதான்.

மறுநாள் காலை எல்லோரும் லாரியில் ஏறி வட்டாரத் தலைமையிடத்துக்குப் புறப்பட்டனர். புதிய மூன்று டன் GAZ லாரியை எல்லோ

ருக்கும் பிடித்திருந்தது. ''ராஜா மாதிரியல்லவா போகிறோம்'' என்று மேய்ச்சல்காரர்கள் கூறிக் கொண்டனர். தாஜுபாய்க்கும் மகிழ்ச்சியாகவே இருந்தது. லாரியில் அவன் சென்று எத்தனையோ ஆண்டுகளாகிவிட்டன, யுத்த காலத்தில் சென்றதுதான். அப்பொழுது அவன் அமெரிக்க 'ஸ்டுடிபேக்கர்' லாரிகளில் ஸ்லோவாகியா, ஆஸ்திரியா எங்கும் போயிருந்தான். அவை மூன்று அச்சுகளைக் கொண்டவை, சக்தி வாய்ந்தவை. ''இது போன்ற லாரிகள் நமக்குக் கிடைத்தால் எப்படி இருக்கும்!'' என்று அப்பொழுது தாஜுபாய் மனதுக்குள் கூறிக் கொள்வான். ''மலை அடிவாரங்களிலிருந்து தானியத்தைக் கொண்டு வந்து சேர்க்க எவ்வளவு வசதியாயிருக்கும். இவை எந்தச் சகதியிலும் சிக்காமல் வந்து சேருமே.'' யுத்தம் முடிவடைந்ததும் தமக்கும் இத்தகைய லாரிகள் நிச்சயம் கிடைக்குமென்று நம்பினான். யுத்தத்தில் வெற்றி பெற்றதும் யாவும் தமக்குக் கிடைக்குமென்று இருந்தான்...

அந்தத் திறந்த லாரியில் முகங்களில் பலமாக வீசிய காற்றில் அவர்களால் அதிகம் பேச முடியவில்லை. பெரும் பகுதி நேரம் மௌனமாகவே போய்க் கொண்டிருந்தனர். முடிவில் அங்கிருந்த இளைஞர்களைப் பார்த்துத் தாஜுபாய் சொன்னான்:

''பாட்டுப் பாடாமல் ஏன் மௌனமாக வருகிறீர்கள்? நாங்கள் வயது முதிர்ந்தவர்கள், எங்களை எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டாம்.

நீங்கள் பாடுங்கள், நாங்கள் கேட்கிறோம்.''

இளைஞர்கள் பாட ஆரம்பித்தனர். முதலில் அவ்வளவு நன்றாக இல்லை, ஆனால் சிறிது நேர மானதும் சூடு பிடித்துவிட்டது. எல்லோருக்கும் உற்சாகம் பிறந்தது. ''அப்படியல்லவா பாட வேண்டும்'' என்று தானுபாய் தன் மனத்துள் நினைத்துக் கொண்டான். ''இப்பொழுது எவ் வளவு நன்றாக இருக்கிறது பாருங்கள்! ஆனால் இன்னும் மகிழ்ச்சிக்குரியது என்னவென்றால் முடி வில் நாம் எல்லோரும் கூடிப் பேசப் போ கிறோம். என்ன நடைபெறுகிறது, பண்ணையில் செய்ய வேண்டியது என்ன என்பதை விளக்கிச் சொல்வார்கள். மேலிடத்தில் இருப்பவர்கள் நம்மைக் காட்டிலும் அதிகம் தெரிந்தவர்கள். நமது பண்ணையில் நடை பெறுவதைத் தவிர நமக்கு வேறு ஒன்றும் தெரியாது. நமக்கு அவர் கள் நல்ல ஆலோசனைகள் கூறுவார்கள். விரை வில் நாம் நன்றாக வேலை செய்ய முடியும்...''

வட்டாரத் தலைமையிடத்தில் கூட்டமாகவும் இரைச்சலாகவும் இருந்தது. மன்றக் கட்டிடத் துக்கு எதிரே சதுக்கத்தில் வாரிகளும் வண்டி களும் சேணம் பூட்டிய குதிரைகளும் நிறையக் காணப்பட்டன. ஆங்காங்கே பலரும் ஷாஷ்லீக்கு களும் தேநீரும் விற்றுக் கொண்டிருந்தனர்; புகையும் ஆவியும் இரைச்சலுமாக இருந்தது.

சோரோ காத்துக்கொண்டிருந்தான்.

''நேரமாகிவிட்டது, வாங்க போகலாம்'' என்றான். ''உள்ளே போய் உட்காருங்கள்,

---

**ஷாஷ்லீக்** — சூடான கொத்திறைச்சி. — ப-ர்.

கூட்டம் ஆரம்பிக்கப் போகிறது. தாணுபாய், நீ எங்கே போகிறாய்?''

''இதோ வந்துவிட்டேன்'' என்று சொல்லி விட்டு, தாணுபாய் குதிரைகளிடையே சென்றான். லாரியில் நிற்கையில் அவன் தனது குல்சாரி அங்கே இருப்பதைக் கண்டுவிட்டான். இப்பொழுது நேரே அதனிடம் சென்றான். வசந்தத்துக்குப் பிறகு அவன் குல்சாரியைப் பார்க்கவில்லை அல்லவா?

சேணமிட்டிருந்த குலுங்கா நடையான் அங்கே ஏனைய குதிரைகளிடையே நின்று கொண்டிருந்தது. அதன் பொன்னிறப் பிடரியும் செக்கர் மேனியும் உறுதி வாய்ந்த அகன்ற பிட்டமும் வளைந்த மூக்கும் கறுப்பு விழிகளும் அதை மற்ற குதிரைகளிடமிருந்து தனியே பிரித்துக் காட்டின.

''குல்சாரி! தம்பி! எப்படி அப்பா இருக்கிறாய்?'' என்று தாணுபாய் இடுக்கில் புகுந்து அதனிடம் சென்று இரகசியக் குரலில் கேட்டான்.

குல்சாரி தலையைச் சாய்த்து அவனைப் பார்த்தது. தனது பழைய எஜமானன் என்பதைக் கண்டதும் கனைத்துக் கொண்டு காலை மாற்றி வைத்து நின்றது.

''குல்சாரி, நீ நல்லாத்தான் இருக்கிறாய். உன் மார்பு எவ்வளவு அகலமாக இருக்கிறது பார். நிறைய ஓடுகிறாய் என்று தெரிகிறது. அப்பொழுது நீ சங்கடத்தில் மாட்டிக் கொண்டாய் இல்லையா? தெரியும் எனக்கு... நல்ல வேளை, இப்பொழுது நல்ல ஆள் ஒருவனிடம்

வந்துவிட்டாய், நல்லபடியாக இரு, யாவும் சரியாகிவிடும்'' என்று சொல்லி சேணத்துப் பையில் எஞ்சியிருந்த ஓட்ஸ் தீனியை விரல் களால் நெருடிப் பார்த்தான். சோரோ அதற்கு நன்ருகத் தீனி போட்டு வந்தான். ''சரி, வரு கிறேன், குல்சாரி. நான் போக வேண்டும்.''

மன்றத்தின் வாயிலுக்குமேல் சுவர்களில் கோஷங்கள் பொறிக்கப்பட்ட சிகப்புப் பதா கைகள் இருந்தன. ''கம்யூனிஸ்டுகள் முன்வரி சையில்!'', ''காம்சொமோல்தான் சோவியத் இளைஞர்தம் முன்னணிப் படை!'' என்று அவை முழங்கின.

மக்கள் மண்டபத்திற்குள் திரள் திரளாக வந்து கொண்டிருந்தனர். தானுபாய் முன்கத வைத் தாண்டிச் செல்கையில் சோரோவும் கூட்டுப் பண்ணைத் தலைவரான அல்தானெவும் அவனைக் கூப்பிட்டனர்.

''தானுபாய், ஒரு நிமிடம் இப்படி வா'' என்ருர் அல்தானெவ். ''ஏற்கனவே உன் பெயரைப் பதிவு செய்திருக்கிருேம். இந்தா இந்த நோட்டுப் புத்தகத்தை வைத்துக் கொள். நீ பேச வேண்டும். நீ கட்சி உறுப்பினன், எங்களுடைய சிறந்த மந்தைக்காரன்.''

''நான் எதைப் பற்றிப் பேச வேண்டும்?''

''கம்யூனிஸ்டாகிய நீ பின்தங்கிய நிலையிலுள்ள பிரிவு ஒன்றுக்கு மாற்றும்படி கேட்பதென்று முடிவு செய்திருப்பதாகச் சொல்லு. ஆட்டு மந்தை ஒன்றுக்குப் பொறுப்பேற்க விரும்பு வதாகக் கூறு.''

''அவ்வளவுதானே?''

''இல்லே, இல்லே! பிறகு உன்னுடைய வாக்குறுதியை அளி. நூற்றுப் பத்து சதவீதம் குட்டிப் பேறு கிடைக்கச் செய்யப் போவதாகவும் மந்தையில் ஆடு ஒன்றுக்கு 3 கிலோ உரோமம் வெட்டித் தரப்போவதாகவும் கட்சிக்கும் மக்களுக்கும் வாக்குறுதி அளிக்கிறேன் என்று சொல்லு.''

''ஆடுகளே இன்னும் நான் பார்க்கக்கூட இல்லே, எப்படி இவ்வாறு வாக்குறுதி அளிப்பேன்?''

''கவலேப்படாதே. நீ விரும்பும் ஆடுகளேப் பொறுக்கியெடுத்துக் கொள்ளலாம்'' என்று சோரோ இதமான குரலில் சொன்னுன். ''ஆம், காம்சொமோல் உறுப்பினர்களான இளம் மேய்ச்சல்காரர்கள் இருவருக்கு உதவி புரிய முன்வருவதாகக் கூறு.''

''எந்த இருவர்?''

இடித்துத் தள்ளியபடி பலரும் உள்ளே போய்க் கொண்டிருந்தார்கள். சோரோ தனது பட்டியலேப் பரிசீலித்தான்.

''எஷீம் பொலத்பேக்கவும் பெக்தாய் ஸர்லீக்கவும்.''

''ஆனுல் அவர்களுடன் இது பற்றி நான் பேசவில்லேயே. அவர்கள் என்ன சொல்கிறுர்களோ?''

''திரும்பவும் அதையே சொல்கிறுயே!'' என்று பண்ணேத் தலேவர் அலுத்துக் கொண்டார். ''நீ விபரீதமான ஆளப்பா. அவர்களுடன்

பேசினால் தான் முடிவு செய்ய முடியுமா? என்ன வித்தியாசம், சொல்லு? எப்படியும் முடிவு செய்வது அவர்களல்ல. அவர்களுக்கு உன்னைப் பொறுப்பாளனாக நாங்கள் நியமித்திருக்கிறோம். எல்லாம் ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டவை.''

''ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டவை என்றால் என்னுடன் பேசுவதில் என்ன பயன்?'' என்று சொல்லிவிட்டுத் தானுபாய் உள்ளே போவதற்காகத் திரும்பினான்.

''இரு, இரு'' என்று சோரேரா அவனைக் கூப்பிட்டான். ''எல்லாம் விளங்குகிறதா?''

''நன்றாக விளங்குகிறது'' என்று தானுபாய் கடுப்புடன் கூறிவிட்டு நடந்தான்.

## 13

கூட்டம் மாலை வரை நடைபெற்றது. அதன் பின் சிறிது நேரத்துக்கெல்லாம் வட்டாரத் தலைமையிடம் காலியாகிவிட்டது. சிலர் மலைகளுக்குத் தமது மந்தைகளிடமும், ஏனையோர் பண்ணைகளுக்கும் கிராமங்களுக்கும் நகரங்களுக்குமாகப் பிரிந்து சென்றுவிட்டனர்.

தானுபாய் ஏனையோருடன் லாரியில் திரும்பிச் சென்றான். அலெக்சாந்திரவ்கா ஏற்றத்தின் மீது சென்று ஸ்தெப்பி மேட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். இருட்டிவிட்டது, காற்று ஜில்லிட்டது. இலையுதிர் காலம் வந்து

விட்டது. தானுபாய் தனக்கு ஒரு மூலையைப் பிடித்துக்கொண்டான். காலரைத் தூக்கிவிட்டுக் கொண்டு அங்கே பதுங்கித் தனது சிந்தனை களில் மூழ்கிவிட்டான். சரி, கூட்டம் நடந்து முடிந்துவிட்டது. குறிப்பிடத்தக்கதாக அவன் ஒன்றும் சொல்லிவிடவில்லை, ஆனால் மற்றவர் கள் பேசுவதைக் கேட்க அவனுக்கு வாய்ப்புக் கிடைத்தது. மேம்பாடு அடைய இன்னும் செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருக் கின்றன. மூக்குக் கண்ணாடி போட்டிருந்த பிராந்தியக் கமிட்டிச் செயலாளர் ''நாம் முன்னேறிச் செல்ல யாரும் நமக்குத் தயாராகச் சாலைகள் போட்டு வைத்திருக்கவில்லை, நாமே தான் நமது சொந்த முயற்சிகளைக் கொண்டு சாலைகள் போட வேண்டும்'' என்று கூறியது முற்றிலும் உண்மை. ஏன், அக்காலத்தில், முப்பதாம் ஆண்டுகளிலேயே இதே போன்ற நிலைமைதானே இருந்தது: மேலே சென்றோம், பிறகு கீழே சரிந்து விட்டோம், பாடுபட்டுக் குன்றின்மீது ஏறினோம், பிறகு ஏதோ திரும் பவும் கீழே இழுத்துவிட்டது... கூட்டுப் பண் ணையை நிர்வகிப்பது எளிய காரியமல்ல. ஏற் கனவே பாதித் தலை நரைத்துவிட்டது, இளமைப் பருவம் மறைந்தோடிவிட்டது, எவ்வளவோ கண்டுவிட்டான், எவ்வளவோ செய்தும் விட் டான். முட்டாள்தனமான தவறுகளும் செய்யப் பட்டன. ஆனால் இதோ வந்துவிட்டோம், குறிக்கோளை நெருங்கிவிட்டோம் என்று தான் எப்பொழுதுமே நினைத்து வந்தான். ஆயினும்

இன்னல்களுக்கு ஒரு முடிவே இல்லையென்று தெரிந்தது...

சரி, பாடுபட வேண்டுமெனில் பாடுபடத் தயாராகவே இருக்கிறோம். செயலாளர் கூறியது முற்றிலும் உண்மை: யுத்தத்துக்குப் பிற்பாடு வாழ்க்கை தானாகவே உருண்டோடும் என்று அவர்கள் நினைத்தது போல அது ஓடவில்லை. வாழ்நாள் முழுதும் அதைப் பிடித்துத் தள்ளிக் கொண்டுதான் சென்றாக வேண்டும்... சக்கரத்திலே தோளை வைத்து அழுத்தும் தோறும் கூர் முனை குத்துகிறது. தோளெல்லாம் புண் பட்டுத் தழும்பேறித் தடித்துவிட்டது. ஆனால் நாம் செய்வது குறித்தும் ஏனையோர் செய்வது குறித்தும் நமக்கு மன நிறைவு ஏற்படும்வரை, நமது உழைப்பால் மகிழ்ச்சி கிட்டும் வரை இந்தத் தழும்புகளை யாரும் பொருட்படுத்தப் போவதில்லை... ஆட்டு மந்தையை எப்படி அவன் நிர்வகித்துச் சமாளிக்கப் போகிறான்? ஜெய்தார் என்ன சொல்வாள்? கடைக்குப் போய் குழந்தைகளுக்கு மிட்டாய் வாங்குவதற்குக்கூட அவனுக்குச் சந்தர்ப்பம் இல்லாமற் போய்விட்டது. பிரமாதமாக வாக்குறுதிகள் அளித்துவிட்டான். பெண் ஆடுகளில் நூற்றுக்கு நூற்றுப் பத்து வீதம் குட்டிப் பேறு கிடைக்கச் செய்வேன், ஆடு ஒன்றுக்கு மூன்று கிலோ வீதம் உரோமம் வெட்டித் தருவேன் என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். ஒவ்வொரு குட்டியும் பிறந்தாக வேண்டும், தொடக்கத்திலிருந்தே அதை எதிர்த்து நிற்கும் காற்று, மழை, குளிர்

இவை யாவற்றிடமிருந்தும் தப்பித்து உயிர் பிழைத்தாக வேண்டும். உரோமம் எங்கிருந்து கிடைக்கப் போகிறது? உரோமத்தில் ஓரிழையை எடுத்து வெறுங் கண்ணுல் பார்த்தால் அது பார்வையில் படுவதுகூடக் கடினம். ஊதிஞல் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்துவிடும். இதைக் கிலோ கணக்கில் பெறுவது எப்படி? அது தங்கத்துக்கு ஒப்பான மதிப்புடையது என்பது உண்மையே. இவ்வளவு உரோமமும் எங்கிருந்து வருகிறது என்பதைக் கூட அறியா தோர் பலரும் இருப்பார்கள்...

சோரோதான் அவனை இப்படி உறுதி கூறும் படிச் செய்து விட்டான்... ''நீ பேச வேண்டும். சுருக்கமாகப் பேசு, உன்னுடைய வாக்குறுதி யைப் பற்றி மட்டும் பேசு. அதற்கு மேல் ஒன்றும் பேசாதே. நான் சொல்வதைக் கேள்'' என்று கூறிஞன். அவன் சொன்னதைத் தாஞ பாய் அப்படியே கேட்டு விட்டான். மேடை ஏறி நின்றதும் திடீரென்று துணிவு இழந்துவிட்டான். தன் மனத்துள் தன்னை வருத்தி வந்த பல விஷயங்களையும் பற்றி ஒன்றுமே பேசாதிருந்து விட்டான். தனது வாக்குறுதியை மட்டும் முணு முணுத்துவிட்டு இறங்கி வந்து தனது இருக் கையில் அமர்ந்து கொண்டுவிட்டான். அதைப் பற்றி நினைக்கவே அவனுக்கு வெட்கமாயிருந் தது. ஆஞல் சோரோவுக்குப் பரம திருப்தி. ஏன் இப்படி அவன் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளத் தொடங்கிவிட்டான்? அவனுடைய நோயால் வந்த விளைவா? அல்லது முன்பு

போல இப்பொழுது அவன் பண்ணையின் தலை மையான ஆளாக இல்லை என்பதாலா? தானு பாயை அவன் ஏன் அப்படி எச்சரிக்க வேண்டும்? ஆள் கொஞ்சம் மாறித்தான் விட்டான், முன்பு போல இல்லை. பண்ணையின் தலைவனாக இருந்து, பண்ணை சீர் குலைந்து விடாதபடி நடத்தி வர வாழ்வெல்லாம் படாத பாடு பட்டு மேலிருப் போரின் தாக்குதலுக்கு வாழ்வெல்லாம் இலக் காகி வந்தானே, அதனால் இப்படி ஆகியிருக் குமோ? மேலிடத்தாருக்கு ஒத்து ஊதப் பழகிக் கொண்டுவிட்டானோ?..

''நண்பனே, இரு இரு. இருவரும் தனியாக இருக்கும்போது உன்னுடன் பேசித் தீர்த்துக் கொள்கிறேன்...'' என்று தானுபாய் தன்னுள் கூறிக் கொண்டு தனது ஆட்டுத் தோல் கோட்டை மேலும் இறுக்கமாய் இழுத்துவிட்டுக் கொண்டான். குளிரடித்தது, காற்று ஜில் லெனக் குத்திற்று. வீடு போய்ச் சேர இன்னும் நெடுந் தொலைவு இருந்தது. அங்கே அவன் காணப் போவது என்ன?..

சோரோ குலுங்கா நடையான் மீது ஏறிப் புறப்பட்டான். அவன் தனியே கிளம்பினான், வழித் துணையாக யாரும் வரும்வரைக் காத் திருக்கவில்லை. சீக்கிரமாக வீட்டுக்குப் போய்ச் சேர விரும்பினான், அவனுக்கு நெஞ்சு வலி வந்துவிட்டது. குதிரையை அதன் போக்கிலே விட்டான். பகல் முழுதும் வேலையின்றிச் சும்மாயிருந்த குல்சாரி முறையான வேக நடை

போட்டு ஓடிற்று. மாலைப் பொழுதில் அதன் குளம்புகள் சாலையிலே தட்டிய தாளம் இயந் திரத்தின் ஒரே சீரான தடதடப்புப் போல இருந்தது. பழைய குல்சாரியிடம் இப்பொழுது எஞ்சியிருந்ததெல்லாம் ஓட்டத்தில் இருந்த மோகம்தான். மற்ற யாவும் முன்பே அதனிடம் மடிந்துவிட்டன. சேணத்தையும் சாலையையும் தவிர்த்து வேறு எதையும் அது அறிந்திருக்கக் கூடாதென்று ஏனைய யாவும் அதனிடமிருந்து அகற்றப்பட்டுவிட்டன. ஓட்டம் ஓட்டமாக ஓடுவதற்கென்றே குல்சாரி வாழ்ந்து வந்தது. முயற்சியின்றி, களைப்பின்றி அது ஓடிற்று. மனிதர்கள் அதனிடமிருந்து அகற்றிவிட்டவற்றை எட்டிப் பிடிக்க முயலுவது போல ஓடிற்று. ஆனால் எவ்வளவு ஓடியும் அதனால் அவற்றை எட்டிப்பிடிக்க முடியவில்லை.

காற்றும் குலுங்கா நடையான் மீதான சவாரியும் சோரோவுக்கு நிவாரணமளித்தன. நெஞ்சு வலி தணிந்துவிட்டது. மொத்தத்தில் இந்தக் கூட்டம் குறித்து அவன் திருப்தியடைந் திருந்தான். முக்கியமாகப் பிராந்தியக் கமிட்டிச் செயலாளரின் சொற்பொழிவு அவனுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. இந்த ஆளைப் பற்றி நிறையக் கேட்டிருந்தான், ஆனால் அவரை அவன் நேரில் பார்த்தது இதுவே முதல் முறை. ஆயினும் கட்சி நிறுவகன் சோரோ உண்மையில் அமைதி இழந்திருந்தான். மனச்சாட்சி அவனைத் துன்புறுத்திற்று. அவன் தானபாய்க்கு நன்மை செய்யவே விரும்பினான். இந்தக் கூட்டங்களும்

மாநாடுகளும் அவன் நன்கு அறிந்தவையே. என்ன சொல்லவேண்டும், எப்பொழுது சொல்ல வேண்டும், எதைச் சொல்லக் கூடாது என்று அறிந்தவன் அவன். கடினமான வழியில் பலவும் கற்றுத் தெரிந்து கொண்டவன். சோரேரோவின் ஆலோசனைப்படிதான் தானுபாய் நடந்து கொண்டான். என்றாலும், அதைப் புரிந்து கொள்ள மறுத்துவிட்டான். கூட்டத்துக்குப் பிற்பாடு சோரேரோவுடன் அவன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. எல்லோருடனும் லாரியில் ஏறிக் கொண்டு திரும்பிப் போய்விட்டான். அவனுக்குக் கோபம். தானுபாய், தானுபாய்! நீ அறியாப் பிள்ளையாகவே இருக்கிறாயே. வாழ்க்கை உனக்கு எதையும் கற்றுத் தந்ததாகத் தெரியவில்லை. என்ன நடக்கிறதென்று தெரியவில்லை உனக்கு. எதையும் பார்க்க மாட்டேன் என்கிறாய். இளைஞனாக இருந்தபோது எப்படி இருந்தாயோ அப்படியேதான் இப்பொழுதும் இருக்கிறாய். நேர் வழியில் நிமிர்ந்து செல்லவே விரும்புகிறாய், எப்பொழுதும் அதுதான் உன் வழி. ஆனால் காலம் மாறிவிட்டது. எதையும் நீ எவ்விதம் சொல்கிறாய், யாரிடம் சொல்கிறாய் என்பதுதான் இன்று மிகவும் முக்கியமானது. காலத்தின் மனப் போக்கைப் பிரதிபலிப்பதாக இருக்கும்படி, ஏனையோர் கூறுவதிலிருந்து வித்தியாசமாகவோ எடுப்பாகவோ தட்டுத் தடங்குவதாகவோ இல்லாமல் பட்டுப் போல வழவழப்பாக இருக்கும்படிப் பார்த்துக் கொள்வது மிகவும் அவசியம். அப்படிச் செய்

தால்தான் யாவும் நல்லபடியாக நடந்தேறும். தானுபாய், உன் வழியில் உன்னை நான் போக விட்டிருந்தால் நீ எதையாவது சொல்லி வைத்து எல்லோரையும் சங்கடத்தில் சிக்க வைத்திருப் பாய். ''உங்களுடைய நிறுவனத்தின் உறுப் பினர்களுக்கு என்ன போதனையும் பயிற்சியும் அளித்திருக்கிறீர்கள், பாருங்கள்?'' என்பார் கள். ''கட்டுப்பாடு என்ன ஆயிற்று?'' என்று கேட்பார்கள். தானுபாய். தானுபாய், நீ புரிந்து கொள்ள மறுக்கிறாயே...

## 14

இரவு இன்னும் கழியவில்லை. சாலையிலே கிழவனையும் கிழக் குதிரையையும் திண்டாட வைத்த அதே இரவுதான். மலைப் பிளவின் ஓரத்திலே கணப்புத் தீ எரிந்தது. தானுபாய் எழுந்து சென்று இறந்து கொண்டிருந்த குல்சா ரியின் மீது தனது ஆட்டுத் தோல் கோட்டைத் திரும்பவும் சரியாக இழுத்து மூடிச் செரு கினான்.

திரும்பவும் குல்சாரியின் தலைமாட்டில் உட்கார்ந்து கொண்டான். அவனுடைய வாழ்க் கையின் நிகழ்ச்சிகள் திரையில் ஓடுவது போல அவன் கண்ணெதிரே ஓடின. குல்சாரியின் பிறழாத குலுங்கா நடையைப் போல ஒரே சீராக ஒவ்வொரு ஆண்டாகக் கழிந்து ஓடிற்று. அவன் ஆட்டு மந்தையைப் பராமரித்து வந்த

அந்த ஆண்டின் இலையுதிர் காலப் பிற்பகுதியி லும் குளிர் காலத் தொடக்கத்திலும் நடந்தது என்ன?..

## 15

மலைகளில் அக்டோபர் மாதம் மழையின்றித் தங்க மேனியொடு திகழ்ந்தது. மாதத் துவக்கத் தில் இரண்டு நாட்களில் மட்டும்தான் மழைபெய்து மூடுபனியும் குளிருமாய் இருந்தது. ஆனல் இரண் டாம் நாள் இரவிலேயே மப்பும் மந்தாரமும் நீங்கிவிட்டன. மறுநாள் காலையில் தானுபாய் தன் கூடாரத்தை விட்டு வெளியே வந்ததும் பிரமித்து நின்றுவிட்டான்: புதுப் பனி மூடிய சிகரங் களுடன் மலைகள் தன்னை நோக்கி இடம் பெயர்ந்து அருகே வந்துவிட்டன என்றே நினைத்தான். வெண்பனி முடிகள் இம்மலைகளுக்கு எவ்வளவு பாங்காக அமைந்து எழிலுருத் தந்தன! இம்மலை கள் ஒளியும் நிழலும் கலந்து இப்பொழுது தான் படைக்கப்பட்டவை என்று நினைக்கும்படியான தெளிவும் பொலிவும் மிக்க உருவரை கொண்டு புதிய தூய வெண் சிகரங்களை உயர்த்தி விண் ணைத் தொடுமாறு உயர்ந்து நின்றன. வெண் பனி மூடியிருந்த முகடுகளிலிருந்து தொடங்கிய நீலப் பெருவெளி எல்லையின்றி விரிந்து சென்றது. இந்தப் பிரபஞ்சத்தின் முடிவிலா விந்தையெல் லாம் இந்தப் பெருவெளியின் அடியாழத்தில், இந்த நீலத் தொலைவில் அடங்கியிருப்பதாகத் தோன்றிற்று. ஒளியும் புத்தம் புதிய காற்றும்

அபரிமிதமாக இருக்கக் கண்டு தானுபாய்க்கு அங்கமெலாம் சிலிர்த்துவிட்டது. அதேபோதில் அவன் நெஞ்சினுள் துயரம் துடித்தெழுந்தது. குல்சாரியின் மீது சென்று அடிக்கடி அவன் சந்தித்து வந்த அந்தப் பெண்ணை மீண்டும் நினைத்துக் கொண்டான். குலுங்கா நடையான் இப்பொழுது அவன் அருகே இருந்திருந்தால் அப்படியே தாவி அதன் சேணத்தின்மேல் அமர்ந்து மகிழ்ச்சியும் இன்பமும் பொங்கும் குரலெழுப்பி ஓடோடிச் சென்று இந்தக் காலைப் பொழுதின் வெண்பனி போல அவள் எதிரே நின்றிருப்பான்...

இது வெறுங் கனவுதான் என்பது அவனுக்குத் தெரியும்... ஆம், பாதி வாழ்வைக் கனவுகளிலே அல்லவா கழிக்கிறோம். வாழ்க்கை இத்தனை இனிமையாக இருக்க இதுதான் காரணமோ? நாம் காணும் கனவுகள் எல்லாம் நனவாவதில்லை என்பதால்தான் வாழ்க்கை நமக்கு உயிருக்கு உயிரானதாகி விடுகிறதோ? மலைகளையும் வானத்தையும் பார்த்தபடி நின்ற அவன் எல்லோரும் ஒருங்கே ஒரே அளவுக்கு இன்புறுவது சாத்தியமல்ல என்று நினைத்தான். அவனவனுக்கும் தனியொரு விதி உண்டு. மலையில் ஒளியும் நிழலும் அடுத்தடுத்து இருப்பது போல இன்பமும் துன்பமும் கலந்தது அது. வாழ்க்கை பூரணத்துவம் பெறுவது இதனால் தான்...

''இனி எனக்காக அவள் காத்திருப்பாளென்று நான் நினைக்கவில்லை. ஆனால் மலைகளில் முதன் முதல் தெரியும் இந்த வெண்பனியைக் காணும்

போது அவள் என்னைப் பற்றி நினைக்கக் கூடும்...''

மனிதன் மூப்படைகிறான், ஆனால் அவன் ஆன்மா அதற்குப் பணிந்து அடங்கிவிட விரும்பவில்லை. அவ்வப்பொழுது அது துடித்தெழுந்து குரல் கொடுக்கவே செய்கிறது.

தானபாய் தன் குதிரைக்குச் சேணமிட்டு ஆட்டுப் பட்டியின் அடைப்பைத் திறந்தான். கூடாரத்தினுள் இருந்த தன் மனைவியிடம் கூறினான்:

''ஜெய்தார், நான் கிடையை ஓட்டிச் செல்கிறேன். காலை உண்டி தயாராவதற்குள் திரும்பி வந்துவிடுவேன்.''

ஆடுகள் வேகமாக நடை போட்டன. வரிசை வரிசையாகத் தலைகளும் முதுகுகளுமாய் மலைச் சரிவின்மீது நகர்ந்தன. ஏனைய மேய்ச்சல்காரர்களும் தமது கிடைகளை இதே போல ஓட்டிச் சென்றனர். ஆங்காங்கே சரிவுகளிலும் திடல்களிலும் பூமி ஓயாது வழங்கும் கொடையான பசும் புல்லை மந்தைகள் மேய்ந்தவாறு சென்றன. இலையுதிர் கால மலைகளில் கறுப்பும் பழுப்பும் கலந்த மேய்ச்சல் இடங்களில் சாம்பல் நிறத் திட்டுகளாய் அவை நகர்ந்து கொண்டிருந்தன.

இதுகாறும் இடரின்றி யாவும் ஒழுங்காகவே நடைபெற்றன. தானபாயின் மந்தை தரமான நல்ல மந்தைதான். தாய் ஆடுகள் யாவும் ஏற்கெனவே குட்டிகள் போட்டவை, சில இரு முறை ஈன்றவை. அவனிடம் ஐந்நூறு ஆடுகள் இருந்தன. கவலைக்கும் தொல்லைக்குமான ஐந்நூறு ஆதாரங்கள். குட்டிகள் ஈன்ற

பின் எண்ணிக்கை இரு மடங்காகிவிடும். ஆனால் மேய்ச்சல்காரர்களின் சோதனைக் காலமான பேறுப் பருவம் வர இன்னும் அதிக நாட்கள் இருந்தன.

குதிரைகளை மேய்ப்பதைவிட ஆடுகளை மேய்ப்பது சுலபம்தான். ஆனால் ஆடுகளுடன் இருந்து பழகிக் கொள்ள தானபாய்க்குச் சிறிது காலமாயிற்று. குதிரைகளைக் காட்டிலும் சிறப்பானவை எதுவுமில்லை. ஆனால் குதிரை வளர்ப்பு இப்பொழுது முக்கியத்துவம் இழந்துவிட்டதென்று கூறுகிறார்கள். இன்று லாரிகளும் பண்ணை இயந்திரங்களும் வந்துவிட்டன. ஆகவே குதிரைகள் முன்பு போல லாபகரமாயில்லை. ஆடு வளர்ப்பு, உரோமம், இறைச்சி, ஆட்டுத் தோல்கள் இவைதான் அதிக லாபம் தருபவை. உணர்ச்சியற்ற இத்தகைய கணக்குகளின் அடிப்படையிலான வாதம் தானபாய்க்குக் கோபத்தையே உண்டாக்கிற்று. ஆயினும் இதுதான் தர்க்க நியாயமுடைய வாதம் என்பதை அவனால் மறுக்க முடியவில்லை.

நல்ல பொலிகுதிரையைக் கொண்ட நல்ல குதிரை மந்தையாய் இருந்தால் சில நேரங்களில் பாதி நாளும் அதற்கு மேலுங்கூட மந்தையைத் தனியே விட்டுச் சென்று சொந்த வேலைகளைக் கவனித்து விட்டு வரலாம். ஆனால் ஆட்டுக் கிடையைச் சிறிது நேரங்கூட தனியே விட்டுச் செல்ல முடியாது. பகல் முழுதும் ஒவ்வொரு நிமிடமும் ஆடுகளுடன் இருந்தாக வேண்டும், பிறகு இரவு பூராவும் அவற்

றுடன் தங்கிக் காவல் காத்தாக வேண்டும். மேய்ச்சல்காரரர் ஒவ்வொருவருக்கும் ஓர் உதவி யாளன் உண்டுதான். ஆனால் உதவியாளனாக வேலை செய்ய ஆள் கிடைக்கவில்லை. ஆகவே அவனுக்குப் பதிலாகப் பொறுப்பேற்றுக் கொள்ள யாருமில்லை. இராப் பகலாக ஓய்வின்றி அவன் வேலை செய்ய வேண்டியிருந்தது. ஜெய்தார் இரவு நேரக் காவலாளியாகக் குறிக்கப்பட்டு சம்பளப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருந்தாள். சில சமயங்களில் அவள் பகற் பொழுதில் குழந்தைகளையும் தன்னுடன் அழைத்து வந்து ஆடுகளைப் பராமரிப்பாள். தினமும் இரவில் பன்னிரண்டு மணி வரை கையில் துப்பாக் கியை வைத்துக் கொண்டு காவல் காப்பாள். நள்ளிரவுக்குப் பிறகு தானபாய் திரும்பி வந்து அவளைக் கூடாரத்துக்கு அனுப்புவான். இப்பொ ழுது பண்ணையின் கால் நடைப் பிரிவுகள் யாவற்றுக்கும் பொறுப்பாளனாகிவிட்ட இப் ராகிம் எதுவாயிருந்தாலும் தயங்காது உடனே பதிலளிக்கத் தக்க பதில்களைத் தயாராக வைத் திருந்தான்.

''தானபாய், எங்கே போய் நான் ஓர் உதவி யாளனைத் தேடி வருவது?'' என்று துயரமே உருவெடுத்தாற் போல நின்று கொண்டு அவன் பதிலளிப்பான். ''நிலைமை உனக்குத் தெரியாத தல்ல. இளைஞர்கள் எல்லோரும் படிக்கப் போய் விடுகிறார்கள். அப்படிப் போகாமல் இருப்பவர் கள் ஆடு மேய்க்கும் வேலை என்றதும் காத தூரம் ஓடிவிடுகிறார்கள். நகருக்குச் சென்று ரயில்வே

யில் வேலைக்குப் போகிறார்கள், அல்லது எங்காவது சுரங்கங்களில் வேலை செய்கிறார்கள். என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. நீ ஒரேயொரு கிடைக்குப் பொறுப்பேற்றிருக்கிறாய், இதற்கே இப்படி முறையிடுகிறாய். ஆனால் பண்ணையின் கால்நடைப் பிரிவுகள் எல்லாவற்றுக்குமே பொறுப்பாளியான நான் படுகிற பாடு எப்படி இருக்கும், சொல்லு? சிறையில் அடைபட நேருமோ என்று எந்நேரமும் பயந்து கொண்டிருக்கிறேன். இந்த வேலையை நான் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடாது. உன்னுடைய பெக்தாய் இருக்கிறானே, அவனைப் போன்ற ஆட்களுடன் நீ கொஞ்சம் வேலை செய்து பார் தெரியும். அவனுக்கு வானொலிப்பெட்டி, திரைப் படக் காட்சிகள், செய்தி ஏடுகள், ஒரு புதிய கூடாரம், வாராவாரம் மலைகளுக்கு வந்து செல்லக் கூடிய பெரிய லாரியில் அமைந்த கடை இவ்வளவும் நான் ஏற்பாடு செய்து தர வேண்டும், இது என் கடமை என்று சொல்கிறான். நான் இதைச் செய்யத் தவறினால், வேறு வேலையைத் தேடிக் கொண்டு போய் விடுவேன் என்கிறான். அப்படியே செய்தும் விடுவான், மூட்டையைக் கட்டிக் கொண்டு ஓடிவிடுவான். தானபாய், நீதான் அவனுடன் பேசி அவனைத் திருத்த முயல வேண்டும்!..''

இப்ராகிம் சொன்னது மெய்தான். அதிகமாக ஆசைப்பட்டுவிட்டோமே என்று இப்பொழுது அவன் வருத்தப்பட்டுக் கொண்டான். பெக்தாயைப் பற்றி அவன் சொன்னதுங்கூட உண்மை

தான். தானுபாய் தான் உதவி புரிவதாக வாக்களித்த அவ்விரு இளம் மேய்ச்சல்காரர் களை நேரம் கிடைத்தபோது போய்ப் பார்த்துக் கொண்டு தான் இருந்தான். எஷீம் பொலத் பேக்கவ் அவ்வளவாகத் திறம்பட வேலை செய் கிறவனல்ல, ஆனால் அவனைச் சமாளிப்பது சுலபமாகவே இருந்தது. பெக்தாய் வாட்டசாட்ட மானவன், வடிவழகன், ஆனால் அவனுடைய கரு விழிகளில் சினம் பளிச்சிட்டது. தானுபா யைக் கண்டதும் அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு கடுப்புடன் சொல்வான்:

''தானுபாய், நீ இப்படி உயிரை விடத் தேவையில்லை. வீட்டுக்குப் போய்க் குழந்தை களுடன் சிறிது நேரம் இருந்து ஓய்வெடுத்துக் கொள். ஏற்கெனவே போதுமான பேர் இங்கு வந்து என்னைக் கண்காணித்துச் செல்கிறார் கள்.''

''போகட்டுமே, நானும் வருவதால் உனக்கு என்ன கஷ்டம்?''

''கஷ்டம் ஒன்றுமில்லை. உன்னைப் போன்ற வர்களை எனக்குப் பிடிக்காது. ஏன்தான் இப்படி உயிரை விடுகிறாயோ, தெரியவில்லை. என்ன துடிப்பு, என்ன ஆர்வம்! ஓடியாடி வேலை செய்து என்ன கண்டுவிட்டாய்? நீயும் நல்லபடி யாக வாழ மாட்டாய், பிறத்தியாரையும் வாழ விட மாட்டாய்.''

''பையனே, நீ அதிகமாகத்தான் பேசுகிறாய்'' என்று பல்லைக் கடித்தபடி தானுபாய் ஆத்திர மாக முணுமுணுத்தான். ''இது உன் விவ

காரமல்லவே. வேலை செய்து உயிரை விட்டது நாங்களே அன்றி நீ அல்லவே. நாங்கள் பட்ட பாடு நாங்கள் ஒன்றும் வருத்தப்படவில்லை. உன்னைப் போன்றோருக்காக வேண்டியே அப்படி உயிரை விட்டோம். நாங்கள் அவ்விதம் பாடுபட் டிராவிடில் இன்று உன் நிலை இப்படியா இருக் கும்? செய்தி ஏடுகள் படிப்பதும் திரைப்படங் கள் பார்ப்பதும் போகட்டும், உன் பெயரைக் கூடக் கேட்டறியாதவனாக அல்லவா இருந்திருப் பாய். அடிமையைக் குறிக்கும் 'குல்' என்ற பெயரைச் சொல்லியல்லவா உன்னைக் கூப்பிட் டிருப்பார்கள்!..''

தானுபாய்க்கு பெக்தாயைப் பிடிக்கவில்லை தான். ஆயினும் அவனுடைய நேர்மைக்காக அவனை மதித்துப் போற்றினான். வலிவும் உறுதி யும் கொண்டவன், துணிவு படைத்தவன், இப்படி வீணாகி வருகிறானே, இளைஞன் தவறான பாதையிலே செல்கிறானே என்று தானுபாய் வருந்தினான்... பிற்பாடு இருவரும் இரு வேறு பாதைகளில் பிரிந்து சென்றதும் நகரில் தற்செய லாய் நேருக்கு நேர் சந்திக்க நேர்ந்தபோது அவனிடம் தானுபாய் எதுவும் சொல்லவுமில்லை, பெக்தாய் ஏதாவது சொல்கிறானா என்று பார்ப் பதற்காக நிற்கவுமில்லை.

அவ்வருடம் குளிர் காலம் முன்னதாகவே வந்து விட்டது...

அதன் மூர்க்கமான வெள்ளை ஒட்டகத்திலே அது இடி முழக்கமிட்டு வந்து மேய்ச்சல்காரர்



16 539

கள் கவனமின்றி இருந்ததற்காகச் சவுக்கடி கொடுத்தது.

அக்டோபர் மாதம் மழையின்றித் தங்க மேனி கொண்டிருந்தது. பிறகு நவம்பரில் திடுமெனக் குளிர் காலம் வந்துவிட்டது.

தானுபாய் அன்று மாலே ஆட்டுக் கிடை யைத் திருப்பியழைத்து வந்து பட்டியில் அடைத் தான். எல்லாம் ஒழுங்காக இருப்பதாகத் தோன்றியது. நள்ளிரவில் அவன் மனேவி அவனே எழுப்பினுள்.

''தானுபாய் எழுந்திரு. குளிர் தாங்க முடிய வில்லே. வெண்பனி பெய்கிறது.''

அவளுடைய கைகள் ஜில்லிட்டன. உருகிய பனியின் மணம் அவளிடம் வீசிற்று. துப்பாக்கி நனேந்து குளிர்ந்திருந்தது.

வெளியே இரவு பால் போல் வெண்மையா யிருந்தது. கனத்த வெண்பனி பெய்தது. பட்டியில் ஆடுகள் அமைதியற்று அப்படியும் இப்படியும் தலேயை ஆட்டிக் கொண்டும் இருமிக் கொண்டும் வெண்பனியை உடம்பிலிருந்து உலுக்கிக் கொண்டும் படுத்துக் கிடந்தன. ஆனுல் அவை உதற உதறத் தொடர்ந்து வெண்பனி மேலே விழுந்த வண்ணமிருந்தது. ''இம்முறை குளிர்காலம் கடுமையாகவே இருக்கும் போலத் தெரிகிறது'' என்று நினேத்தவாறு தானுபாய் தனது ஆட்டுத் தோல் கோட்டைக் கெட்டியாக இழுத்து மூடிக் கொண்டான். ''குளிரே, இவ் வருடம் நீ முன்னதாகவே வந்துவிட்டாய். இது நல்லதுக்குத்தானே இல்லேயோ தெரிய

வில்லை. இறுதியில் கொஞ்சம் சாந்தமடைந்து தயை காட்டுவாயென்று நம்பலாமா? எப்படியோ குட்டிப் பேறுக் காலத்துக்குள் விடை பெற்றுக் கொண்டு விட்டாயானல் போதும். உன்னை நாங்கள் அதற்குமேல் அதிகம் கேட்க வில்லை. அது வரை நீ செய்ய வேண்டியதை எல்லாம் செய். அது உன் உரிமை, யாரிடமும் நீ அனுமதி பெறத் தேவையில்லை...''

புதிதாகப் பிறந்த குளிர் ஓசையின்றி வேலை செய்தது. இரவின் இருட்டில் தன் கைவரிசையைக் காட்டிக் காலையில் எல்லோரையும் திகைக்க வைத்து ஓடிச் சென்று கொண்டிருந்தது.

மலைகள் குளிர்ந்து உயர்ந்து இரவில் கரும் பாறை முகடுகளாய்க் காட்சியளித்து நின்றன. குளிர் காலம் வந்தது குறித்து அவற்றுக்குக் கவலை ஏதும் இல்லை. மேய்ச்சல்காரர்களும் அவர்களுடைய கிடைகளும்தான் மோசமான பருவம் வருகிறதே என்று அஞ்ச வேண்டும். மலைகள் எப்பொழுதும் போல வானளாவ உயர்ந்து கவலையின்றி நிற்கும்.

மறக்க முடியாத அந்தக் குளிர் காலம் இவ்வாறுதான் ஆரம்பித்தது. தமக்கு என்னவெல்லாம் வரவிருந்ததென யாரும் அறிந்தாரில்லை.

தரை முழுதும் வெண்பனி மூடிவிட்டது. சில நாட்கள் கழித்து மீண்டும் பெய்தது. மறுபடியும் மறுபடியும் பெய்து முடிவில் மேய்ச்சல்காரர்களை இலையுதிர் கால மேய்ச்சல் இடங்களிலிருந்து விரட்டிற்று. கிடைகள் மலையிடுக்கு

களையும் வெண்பனி அதிகமில்லாத ஒதுக்கிடங் களையும் தேடி அலைந்து திரிந்தன. மேய்ச்சல் காரர்கள் சாமான்யமானவர்களல்லவே. தமது தொன்மைக் காலத்திறமையை இப்பொழுது முழு அளவுக்கு வெளிப்படுத்திக் காட்டினர். வெண்பனியைத் தவிர வேறு எதுவுமில்லை யென்று முடிவு செய்து ஏனையோர் செயலற்றுச் சும்மாயிருக்கக் கூடிய இடங்களில் அவர்கள் தமது கிடைகளுக்குப் புல்லைத் தேடிப் பிடித் தனர்... இடையிடையே பண்ணை அதிகாரிகளில் ஒருவர் வந்து செல்வார். அவசரமாக நிலைமை யைப் பார்வையிட வரும் இவர்கள் கேள்வி மேல் கேள்வி கேட்பார்கள், பிரமாதமான வாக்குறுதிகளை அளிப்பார்கள், பிறகு மனித நாகரிகம் நிலவும் இடங்களுக்கு அவசர அவசர மாகத் திரும்பிச் சென்றுவிடுவார்கள். மீண்டும் மேய்ச்சல்காரர்கள் குளிர் காலத்தைத் தாமே தனிமையில் எதிர் நோக்கும்படி விடப்பட்டு விடுவார்கள்.

தானுபாய் தனக்கு எப்பொழுது நேரம் கிடைக்கும், கூட்டுப் பண்ணைக்குப் போய்க் குட்டிப் பேறுக் காலத்துக்கு என்ன திட்டங்கள் வகுத்திருக்கிறார்கள், வேண்டிய தளவாடங்கள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளனவா, யாவும் தயார்தானா என்று பார்த்துவிட்டு வர வேண்டு மென இருந்தான். இது வீண் பிரயத்தனம், மூச்சு விடுவதற்குக் கூட அவனுக்கு நேரமில்லை. போர்டிங் பள்ளியில் இருந்த தனது சிறுவனைப் பார்ப்பதற்காக ஜெய்தார் ஒரு தரம் போயிருந்

தாள். அங்கே அவள் அதிக நேரம் தங்கவில்லை. தானுபாயால் தனியே சமாளிக்க முடியாதென்று அவளுக்குத் தெரியும். இரு பெண் குழந்தைகளையும் தானுபாய் தன்னுடன் கிடைக்கு அழைத்துச் செல்ல வேண்டியிருந்தது. சிறியவளைச் சேணத்தின்மீது முன்னால் தன் கோட்டுக்குள் உட்கார வைத்துக் கொண்டான். அவளுக்கு அடக்கமாக இருந்தது, நல்லபடியாகவே உட்கார்ந்திருந்தாள். ஆனால் மூத்தவள் தந்தைக்குப் பின்னால் இருந்தாள், அவளுக்குக் குளிர் தாங்க முடியவில்லை. கூடாரத்துக்குத் திரும்பிய பிறகும் கணப்படுப்பில் தீ வழக்கமாய் இருப்பது போலல்லாது வேறு மாதிரியாய், தனிமையின் சோகத்தை உணர்த்துவதாய் இருந்தது.

மறுநாள் தாய் திரும்பியதும் எவ்வளவு கொண்டாட்டமாக இருந்தது! குழந்தைகள் இருவரும் தாயின் கழுத்தைக் கெட்டியாகக் கட்டிப் பிடித்துக் கொண்டுவிட்டனர், கீழே இழுத்துவிட வேண்டியிருந்தது. தகப்பன் வேறு, தாய் வேறுதான்; ஒரு நாளும் தகப்பனால் தாயாகிவிட முடியாது.

நாட்கள் ஓடின. குளிர் காலம் ஒரு நிலையில் இல்லை. கொடுங் குளிராய் இருக்கும், பிறகு குளிர் குறைந்து விடும், இரு முறை வெண்பனிப் புயல்கள் சீறின, அவற்றைத் தொடர்ந்து பனிக் கட்டி உருகத் தொடங்கிற்று. நிலையற்ற இந்நிலையைக் கண்டு தானுபாய் கவலைப்பட்டான். வெதுவெதுப்பான இடைக்

காலங்களில் ஒன்றுடன் குட்டிப் பேறுக் காலம் ஒத்து இணையுமாயின் நல்லது தான், இல்லாவிட்டால் என்ன செய்வது?

தாய் ஆடுகளின் வயிறுகள் பெருத்து வந்தன. பெரிய குட்டி அல்லது இரட்டைக் குட்டிகளைக் கொண்ட ஆடுகளின் விலா எலும்புகள் துருத்திக் கொண்டு தெரிந்தன. சினையாடுகள் தள்ளாடி மெதுவாக, எச்சரிக்கையாக நடந்தன; அவை மிகவும் மெலிந்துவிட்டன. முதுகெலும்புகள் முட்டிக் கொண்டு தெரிந்தன. துரும்பு துரும்பாய்ப் புல்லை வெண்பனிக்கு அடியிலிருந்து தேடிப் பிடிக்க வேண்டியிருந்த நேரத்தில் தாய் ஆடுகளின் பலத்தையும் சத்தையும் அவற்றின் வயிற்றிலிருந்த குட்டிகள் அல்லவா உட்கொண்டு வளர்ந்து பெருத்து வந்தன? இந்தத் தாய் ஆடுகளுக்குக் காலையிலும் மாலையிலும் மேய்ச்சல்காரர்கள் தீனிபோட்டிருக்க வேண்டும், தானியம் மலைகளுக்குக் கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும், ஆனால் கூட்டுப் பண்ணையின் களஞ்சியங்கள் காலியாக இருந்தன. விதைக்காக ஒதுக்கப்பட்டிருந்த தானியத்தையும் வேலைக் குதிரைகளுக்கு வேண்டிய ஓட்சையும் தவிர்த்து வேறு கையிருப்பு எதுவும் இல்லை.

ஒவ்வொரு நாளும் காலையில் தானுபாய் தனது கிடையைப் பட்டியிலிருந்து வெளியே விட்டபோது தாய் ஆடுகளைப் பரிசீலித்தான். அவற்றின் வயிறுகளையும் மடிகளையும் தொட்டுப் பார்த்தான். எல்லாம் ஒழுங்காக நடந்துவிட்

டால் குட்டிப் பேறு குறித்து அவன் அளித்த வாக்குறுதியை நிறை. வேற்றிவிடலாம், ஆனல் உரோமம் குறைந்துவிடும் போல் இருந்தது. குளிர் காலத்தில் உரோமம் அதிகம் வளர்வதில்லை, தீனி இல்லாமல் சில ஆடுகள் உரோமத்தை உதிர்க்கத் தொடங்கிவிட்டன. தானுபாய் வாய் திறக்காமல் கடுகடுப்பாக இருந்து வந்தான். அவனுல் ஒன்றும் செய்வதற்கில்லை. சோரோவின் பேச்சைக் கேட்டு அப்படி வாக்குறுதிகளை அளித்துவிட்டோமே என்று தன்னைத் தானே சபித்துக் கொண்டான். எவ்வளவு பிரமாதமான ஆள், முன்னணியில் நிற்கும் வீரன்! கட்சிக்கும் நாட்டுக்கும் பெரிய வாக்குறுதி அளித்துவிட்டான்! வாயை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கக் கூடாதா? எல்லோருக்கும் முன்னுல் வாக்குறுதியல்லவா அளித்தான்! கட்சிக்கும் நாட்டுக்கும் என்ன சம்பந்தம் இதில்? சாதாரணப் பண்ணை விவகாரமல்லவா இது?.. இல்லை, அப்படித்தான் இணைத்துச் சொல்ல வேண்டுமாம், அதுதான் முறையாம். ஏன் இப்படி எல்லோரும் எந்நேரமும் இச்சொற்களை அள்ளி வீசுகிருர்கள்?..

ஆனல் குற்றம் அவனுடையதுதானே, ஏனையோரைச் சொல்லி என்ன பயன்? அவன்தான் சிந்திக்காமலே இப்படிச் செய்துவிட்டான். சொந்த சிந்தனை இல்லாமலே வேெருருவன் சொற்படி வாழ்ந்து வந்தான். அவர்களுக்கு என்ன கவலை? அவர்கள் தப்பித்துக் கொண்டு விடுவார்கள். ஆனல் சோரோவை நினைத்த

போது தாஞுபாய்க்கு வருத்தமாய் இருந்தது. பாவம் சோரோ, அதிர்ஷ்டம் இல்லாதவன். நல்லபடியாய் எழுந்து ஒரு நாள் வேலை செய்ததும் திரும்பவும் இரண்டு நாட்களுக்குப் படுத்த படுக்கையாகிவிடுகிருன். வாழ்நாள் முழுதும் ஓயாத கவலையிலும், மக்களேச் சமாதானப் படுத்துவதிலும், வாக்குறுதிகள் அளிப்பதிலும் கழித்துவிட்டான். என்ன பயன்? இப்பொழுது சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள முற்பட்டுவிட்டான், வார்த்தைகளே எடை போட்டு அளந்து பேசுகிருன். நோய் வாய்ப்பட்டவன் என்ருல், பென்ஷனில் ஓய்வு பெற்று விலகிக் கொள்ளட்டுமே!..

இதற்கிடையில் குளிர் காலம் தொடர்ந்து அதன் வழியில் சென்று கொண்டிருந்தது. முதலில் நம்பிக்கை தருவதாயிருந்தது, ஆனுல் பிற்பாடு மேய்ச்சல்காரர்களே அச்சுறுத்த முற்பட்டுவிட்டது. தாஞுபாயின் கிடையில் இரு தாய் ஆடுகள் பட்டினியால் மடிந்தன. தாஞுபாய் உதவி செய்வதற்கு ஒத்துக் கொண்ட இளம் மேய்ச்சல்காரர்கள் இருவரும் இதே போல சில ஆடுகளே இழக்க நேர்ந்தது. இது எதிர்பாராத ஒன்றல்ல இது. குளிர் காலத்தில் பத்து ஆடுகளே இழக்க நேர்வது சகஜம்தான். பிரதான போராட்டம் இனிமேல்தான், வசந்தம் அருகாமையில் வருகையில்தான் நடை பெறும்.

பிறகு திடுமென்று பனி உருகத் தொடங்கிற்று. தாய் ஆடுகளின் மடிகள் உடனே உப்பிப் பருக்கலாயின. ஆடுகள் எலும்பும் தோலுமாக,

வயிற்றைத் தூக்கச் சக்தியற்றனவாக நின்றன. ஆயினும் அவற்றின் காம்புகள் சிவந்து புடைத்துப் பெருத்து வந்தன. இந்த வலிவு அவற்றுக்கு எங்கிருந்துதான் கிடைத்ததோ? இன்னொரு கிடையில் சில ஆடுகள் ஏற்கனவே குட்டி போட்டு விட்டதாகத் தகவல் கிடைத்தது. பிணைக் காலத்தில் கவனக் குறைவாக இருந்து விட்டதன் விளைவு. வருவதைக் கூறும் முன்னறிவிப்பு அது. இன்னும் இரண்டொரு வாரத்தில் மரத்திலிருந்து பேரிக் காய் விழுகிற மாதிரி குட்டிகள் விழத் தொடங்கிவிடும். அவசர அவசரமாக வேலை செய்து எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டாக வேண்டும். ஆடு மேய்ச்சல்காரனின் பயங்கரக் காலம் அது! ஒவ்வொரு குட்டியையும் வைத்துக் கொண்டு அவன் உயிரைவிட வேண்டியிருக்கும். என்ன பாவம் செய்தேனோ, மேய்ச்சல்காரனானேன் என்று அவன் நொந்து கொள்வான். குட்டிகளைச் சாகவிடாது காப்பாற்றிவிட்டால், குட்டிகள் எழுந்து நின்று குளிர் காலத்தைக் கேலி செய்வது போல வாலை ஆட்டிவிட்டால், அவனுடைய ஆனந்தத்துக்கு அளவே இருக்காது.

எப்படியோ எல்லாம் நன்றாக நடந்தேறிவிட வேண்டும்! தானுபாய் வெட்கித் தலை குனிய வேண்டியிராதபடி நடந்தேறிவிட வேண்டும்!..

கூட்டுப் பண்ணையிலிருந்து அவனுக்கு இரு உதவியாளர்களை அனுப்பினர். இந்தப் பருவக் கால உதவியாளர்கள் வழக்கமாக வயதான அல்லது குழந்தைகள் இல்லாத பெண்களாகவே

இருப்பார்கள். இத்தகையோரை மட்டும்தான் கிராமத்தை விட்டுக் குட்டிப் பேறுக் காலத்தில் மலைகளுக்குச் செல்லும்படி சம்மதிக்க வைக்க முடியும். தாஹுபாய்க்கு அனுப்பி வைக்கப்பட்ட இரு பெண்களும் தமது படுக்கைகளையும் பிற உடைமைகளையும் கான்வஸ் கூடாரத்தையும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தனர். நிலைமை நம்பிக்கையளிப்பதாகி வந்தது. உண்மையில் தாஹுபாய்க்குக் குறைந்தது ஏழு உதவியாளர்களாவது வேண்டியிருக்கும். கிடைகள் ஐந்து மரப் பள்ளத்தாக்கில் இருந்த பேறுக் கொட்டகைக்குப் போய்ச் சேர்ந்ததும் நிச்சயம் ஏழு பேர் வந்துவிடுவார்கள், ஆனால் தற்போதைக்கு இரண்டு பேர் போதும் என்று இப்ராகிம் கூறினான்.

மலையடிவாரங்களில் இருந்த பேறுக் கொட்டகைகளுக்குக் கிடைகள் புறப்பட்டுச் செல்லத் தொடங்கின. பெண்கள் சாமான்களை எடுத்துச் சென்று தமது புதிய முகாமில் கூடாரம் அமைத்துக் கொள்ள உதவும்படி எஷீம் பொலத் பேக்கவை அவர்களுடன் அனுப்பி வைத்து விட்டுத் தாஹுபாய் தன் கிடையை அங்கே ஓட்டிச் சென்றான். அதிகாலையிலேயே மூட்டை முடிச்சுகளுடன் பயணக் குழுவாக அவர்களை அங்கு அனுப்பி வைத்தான். பிறகு கிடையை ஒன்று சேர்த்து சினை ஆடுகள் களைத்துவிடாதிருக்கும் பொருட்டு அவசரமின்றி மெள்ள ஓட்டிச் சென்றான். ஐந்து மரப்பள்ளத்தாக்கிற்குச் சென்ற இதே பாதையில் அவன் மேலும்

இரு முறை சென்று தனது இரு இளம் மேய்ச் சல்காரர்களின் கிடைகளும் வந்து சேர உதவி செய்ய வேண்டும்.

ஆடுகள் மெள்ள நகர்ந்தன. தானுபாய் அவற்றை அவசரப்படுத்தவில்லை. அவனுடைய நாய் அலுப்படைந்து தன் சொந்த அலுவல்களை மேற்கொண்டு பக்கவாட்டில் பிய்த்துக் கொண்டு ஓடிவிட்டு வர முற்பட்டது.

கதிரவன் மறைந்து கொண்டிருந்தான், ஆயினும் வெதுவெதுப்பாகவே இருந்தது. மேலும் மேலும் கீழே மலையடிவாரங்களுக்குக் கிடை இறங்கிச் செல்லச் செல்ல இன்னும் வெது வெதுப்பு அதிகமாகி வந்தது. வெய்யில் பட்ட இடங்களில் புதுப் புல் இருந்தது.

சினை ஆடு ஒன்று குட்டி போடவே கிடை நடுவழியில் நிற்க வேண்டியதாயிற்று. அதற்குள் குட்டி போட்டிருக்கக் கூடாது. என்ன ஆகுமோ என்று கலங்கிய தானுபாய் புதிதாகப் பிறந்த குட்டியின் மூக்கிலிருந்தும் காதிலிருந்தும் சளியை ஊதியெடுத்தான். ஒரு வாரத்துக்குப் பிறகே குட்டிகள் பிறக்கத் தொடங்கியிருக்க வேண்டும். ஆனால் இப்பொழுதே முதற் குட்டி பிறந்துவிட்டது!

போகிற வழியில் ஆடுகள் குட்டி போட ஆரம்பித்துவிட்டால் என்ன செய்வது? ஏனைய சினை ஆடுகளை அவன் பரிசீலித்து நிலைமை எப்படி இருக்கிறது என்று பார்த்தான். அப்படி ஒன்றும் ஆகாதென்பது தெரிந்தது. அவன் அமைதி யடைந்தான், உற்சாகம் கொண்டான். முத

லாவது குட்டியைப் பார்த்து குழந்தைகள் இரு வரும் ஆனந்தமடைவர். முதற் குட்டிதான் மிகவும் இனிமை பயப்பது. கரிய இமை முடி களும் சின்னஞ் சிறு கறுப்புக் குளம்புகளும கொண்டு அழகான வெள்ளைக் குட்டியாய் இருந்தது அது. கிடையில் முரட்டு உரோம ஆடுகள் சில இருந்தன. இவற்றில் ஒன்றுதான் இக்குட்டியை ஈன்றது. இந்தக் குட்டிகள் சாதாரணமாக வலுவுடையதாகவும் நிறைய உரோமமுடையதாகவும் இருக்கும். ஆனல் மெல்லிய உரோம ஆடுகளின் குட்டிகள் அனேக மாய் உரோமமின்றி அம்மணமாகவே பிறக் கும்.

''சரி, இவ்வளவு அவசரப்பட்டுக் கொண்டு பிறந்தாயே, உலகம் எப்படி இருக்கிறதென்று பார் நன்ருக'' என்று தாளுபாய் அருமையாக அதனிடம் கூறினன். ''உன்னல் எங்களுக்கு அதிர்ஷ்டம் வரட்டும். உன்னைப் போல பல குட்டிகள் பிறக்கட்டும். எங்களுக்கு நடமாட இடமின்றி, உங்களுடைய குரலொலி எங் கள் காதைத் துளைக்கும்படி அத்தனை குட்டிகள் பிறக்கட்டும். எல்லாக் குட்டிகளும் உயிர் பிழைத்து வளர நீ உதவி செய்!'' என்று சொல் லிக் குட்டியைத் தலைக்கு மேல் உயர்த்தினன். ''இதோ இருக்கிறது முதற் குட்டி! ஆட்டுக் குட்டிகளின் தேவனே! எங்களை நீ காப் பாற்று!'' என்ருன்.

மலைகள் சுற்றிலும் கூட்டமாக, மௌனமாக நின்றன.

குட்டியைத் தாஜுபாய் தன் கோட்டினுள் வைத்து அடக்கிக் கொண்டு கிடையை ஓட்டிச் சென்றான். தாய் ஆடு பரபரப்பாகக் கத்திக் கொண்டு அவனைப் பின்தொடர்ந்தது.

''வா, வா! குட்டி இங்கே பத்திரமாக இருக் கிறது வா!'' என்று தாஜுபாய் தாய் ஆட்டிடம் சொன்னான். குட்டி உலர்ந்து தாஜுபாயின் கோட்டுக்குள் கதகதப்பாக இருந்தது.

கிடையை ஓட்டிக் கொண்டு தாஜுபாய் அந்திப் பொழுதில் குட்டிப் பேறு நிலையத்துக்கு வந்து சேர்ந்தான்.

புதிய இடத்தில் முகாமிட்டுவிட்டனர். பெரிய கூடாரத்திலிருந்து புகைச் சுருள் எழுந்தது. உதவியாளர்களாக வந்த இரு பெண்களும் தமது கான்வஸ் கூடாரத்துக்கு வெளியே ஏதோ வேலை செய்து கொண்டிருந்தனர். எல்லாம் ஒழுங்காக நடைபெறுகின்றன என்பது தெரிந் தது. எஷீமை அங்கு காணவில்லை. பொதி சுமக்கும் ஒட்டகத்தை அழைத்துக் கொண்டு அவன் தன் கிடைக்குத் திரும்பிப் போயிருப் பான். மறு நாள் அவன் கிடையுடன் புதிய இடத்துக்குக் குடி பெயர்ந்து வந்தாக வேண்டும். எல்லாம் முறையாக நடை பெறுகின்றன.

ஆனால் சில கணங்களுக்குப் பிற்பாடு தாஜு பாயின் கண்ணில் பட்ட காட்சி அவனைத் துணுக்குறச் செய்துவிட்டது. குட்டிப் பேறுக் கொட்டகை குறித்து அவனுக்குப் பிரமைகள் இருந்ததில்லை. ஆயினும் கொட்டகையின் நாணற் கூரை இப்படி மக்கி மடித்துப் போய்த் தகர்ந்து

கிடக்கும் என்றோ, சுவர்களின் வாயில்களும் சன்னல்களும் இப்படிக் கதவுகளின்றி பொந்துகளாய் இருக்குமென்றோ உள்ளே காற்று வீரிட்டுக் கொண்டிருக்குமென்றோ அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. வெளியே தரையில் வெண்பனி காணப்படவில்லை, ஆனால் கொட்டகையினுள் பெருங் குவியல்களாகக் குவிந்து கிடந்தது.

ஆட்டுப் பட்டி ஆதியில் கற்களாலானது, இப்பொழுது உருத் தெரியாது இடிந்து கிடந்தது. தானபாய் கதி கலங்கிப் போய்விட்டான். புதிதாகப் பிறந்த ஆட்டுக் குட்டியைப் பார்த்துவிட்டு தன் குழந்தைகள் இரண்டும் ஆனந்தக் கூச்சலிட்டதைக் கூட அவன் கண்டு கொள்ளவில்லை. குட்டியை அவர்கள் கையில் போட்டுவிட்டு ஏனையவற்றைப் பார்வையிடச் சென்றான். எங்கு பார்க்கினும் நம்ப முடியாத அலங்கோலத்தையே கண்டான். யுத்தத்துக்குப் பிற்பாடு இங்கு எதுவுமே சரி செய்யப்படாதது போன்ற காட்சியே அவன் கண்ணில் பட்டது. ஒவ்வொரு ஆண்டும் மேய்ச்சல்காரர்கள் குட்டிப் பேறுக் காலத்தை எப்படியோ சமாளித்துவிட்டுப் பிறகு யாவற்றையும் போட்டது போட்டபடி காற்றிலும் மழையிலும் கிடந்து அழியும்படி விட்டுச் சென்றுவிட்டனர். மடித்துப் போன காய்ந்த புல் கட்டு ஒன்று தலைகீழாகக் கவிழ்ந்து கிடந்தது. கூரைமீது வைக்கோல் குத்துக் குத்தாய்ச் சிதறிக் கிடந்தது. இவைதாம் கிடையின் குட்டிகளுக்கும் மறிகளுக்கும் இங்

கிருந்த உணவும் படுக்கை வசதியும். இவை தவிர ஒரு மூலையில் இரு சாக்குகளில் பாதியளவு எஞ்சிய பார்லி மாவும் ஒரு பெட்டி உப்பும் இருந்தன. உடைந்த கண்ணாடிகளையுடைய சில விளக்குகளும் துருப்பிடித்த மண்ணெண்ணை டின்னும் இரண்டு மண்வெட்டிகளும் உடைந்த கவர்க்கோலும் அதே மூலையில் கிடந்தன. அந்த மண்ணெண்ணையை எடுத்து எங்கும் தெளித்து நெருப்பு வைத்துக் கொட்டகையை எரித்து விட்டுப் போக வேண்டும் போலிருந் தது...

கடந்த ஆண்டின் புழுக்கையும் வெண்பனியும் சேர்ந்து உறைந்து போன குவியல்கள் காலில் தட்டி இடறின. பித்துப் பிடித்தவனைப் போல ''இப்படியா செய்வார்கள்?.. இப்படியா செய் வார்கள்?..'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். அதற்கு மேல் பேச அவனுக்குச் சொற்கள் வரவில்லை.

கொட்டகையிலிருந்து வெளியே ஓடிவந்து தன் சேணத்தை அவசரமாக எடுத்தான். அவன் கைகள் நடுங்கி ஆட குதிரைக்குச் சேணமிட் டான். உடனே பறந்தோடிச் சென்று நள்ளிர வில் கூச்சலிட்டு எல்லோரையும் எழுப்புவான், பிறகு அவர்களை என்ன செய்வானோ அவனுக்கே தெரியாது! இப்ராகிமின் கழுத்தைப் பிடித்து நெரிப்பான், பண்ணைத் தலைவரான அந்த அல்தானௌவையும் சோரோவையும் சும்மா விட மாட்டான். யாருக்கும் ஈவிரக்கம் காட்ட மாட்டான்! அவர்கள் தனக்குச் செய்ததை

அப்படியே தானும் அவர்களுக்குச் செய்து காட்ட வேண்டும்! பொறுக்க முடியாது இனி!..

''இரு, இரு!'' என்று கத்தியபடி ஜெய்தார் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டாள். ''எங்கே போகிறாய்? வேண்டாம், இறங்கு கீழே! காதில் விழுகிறதா, இறங்கு கீழே!''

பயனில்லை. தானுபாயை யாராலும் நிறுத்த முடியுமா?

''விடு, விடு!'' என்று கூச்சலிட்டு லகானை அவள் கையிலிருந்து இழுத்தான். அவளைத் தள்ளிக் கொண்டு செல்லும்படிக் குதிரையைச் சாட்டையால் அடித்தான். ''நீ விட்டுவிடு! அவர்களைக் கொல்லாமல் விட மாட்டேன்! ஒழித்துவிட்டுத்தான் மறு வேலை!''

''நான் உன்னைப் போக விட மாட்டேன்! யாரையாவது கொல்லத்தானே விரும்புகிறாய்? கொல்லு என்னை!''

உதவியாளர்களான இரு பெண்களும் ஜெய்தாருக்கு உதவ ஓடி வந்தனர். குழந்தைகள் இருவரும் ஓடி வந்து அழுது புலம்பத் தொடங்கின.

''அப்பா, வேண்டாம்! வேண்டாம்!''

தானுபாய்க்குக் கோபம் தணிந்தது. ஆயினும் தொடர்ந்து அவன் குதிரையைப் புறப்படச் செய்ய முயன்றான்.

''என்னைத் தடுக்காதே! இது எப்படி இருக்கிறது, தெரியவில்லையா உனக்கு? சினை ஆடுகள் நிற்பது கண் தெரியவில்லையா? நாளைக்குக்

குட்டிகளை எங்கே வைத்துப் பாதுகாப்பது? கூரை எங்கே? தானியம் எங்கே இருக்கிறது? எல்லாம் செத்துப் போய்விடும். யார் பொறுப்பு ஏற்பது? விடு என்னை!''

''இரு, நான் சொல்வதைக் கேள். அங்கே போய்க் கூச்சலிடுவாய், சண்டை போடுவாய். அதனுல் என்ன பலன்? இதுவரை எதுவும் செய்ய முடியாதவர்கள் இனி என்ன செய்து விட முடியுமாம்? மரம் இருந்திருந்தால் பண்ணை புதிய கொட்டகை போட்டிருக்காதா?''

''கூரையைச் சரி செய்திருக்கலாம் அல்லவா? கதவுகள் எங்கே? சன்னல்கள் எங்கே? கொட்ட கை தகர்ந்து கிடக்கிறது, எங்கே பார்த்தாலும் பனியும் குப்பையுமாக இருக்கிறது. வருடக் கணக்காகச் சுத்தம் செய்யப்படவில்லை, ஒரே அலங்கோலம்! மடித்துப் போன இந்த உலர் புல் எத்தனை நாளைக்கு வரும்? குட்டிகளுக்கு இதையா கொடுப்பார்கள்? குட்டிகளைப் படுக்கப் போட வைக்கோலுக்கு எங்கே போவது? குட்டி கள் எல்லாம் சகதியிலே சாக வேண்டியதுதானு? இதைத் தான் நீ விரும்புகிருயா? விடு என்னை!''

''போதும், தானுபாய். மற்றவர்களைக் காட் டிலும் நீ மேலானவன் என்று நினைக்கிருய்? எல்லாரையும் போல நாமும் சமாளிக்க வேண் டியது தான். ஆளைப் பார்!'' என்று அவன் மனைவி அவனை ஏசினுள். ''நேரமாகிறது, செய்ய வேண்டிய வேலையைப் பார். அவர்கள் கிடக்கிருர்கள். இது நம்முடைய பொறுப்பு, நாம்தான் ஆவன செய்ய வேண்டும். வெளியே

திடலுக்கு அருகே காட்டு ரோஜாப் புதர்கள் மண்டிக் கிடக்கின்றன. முட்களாய் இருப்பினும் வெட்டி வந்து கூரையில் போட்டு சாணத்தைக் கொண்டு மூடிச்சரி செய்துவிடலாம். பூண்டுகளை வெட்டிக் கொண்டு வந்து போட்டு அவற்றின்மீது குட்டிகளைப் படுக்க வைக்கலாம். பருவம் இதே மாதிரி நீடிக்குமானல் எப்படியோ நாம் சமாளித்து விடலாம்...''

உதவியாளர்களான இரு பெண்களும் தானுபாயை மனைவியின் சொல்லைக் கேட்கும்படி வற்புறுத்தினர். முடிவில் அவன் பணிந்து சேணத்திலிருந்து கீழே சரிந்து கூடாரத்துக்குள் சென்முன். நெடுநாட்கள் நோய்ப் படுக்கையில் இருந்துவிட்டு எழுந்தவனைப் போல தலையைக் கவிழ்த்துக் கொண்டு சோர்ந்து போய் உட்கார்ந்தான்.

எல்லோரும் அமைதியாக இருந்தனர். அவர்களுக்குப் பேசுவதற்கே பயம். ஜெய்தார் நெருப்பிலிருந்து கெட்டிலை எடுத்துத் தேநீர் தயாரித்தாள். தன் கணவன் கை கழுவத் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தாள். சுத்தமான துணியை விரித்து எங்கிருந்தோ தேடியெடுத்து வந்த சில இனிப்புகளையும் மஞ்சள் வெண்ணைக் கீற்றுகளையும் ஒரு தட்டில் வைத்தாள். இரு பெண்களையும் தம்முடன் சேர்ந்து கொள்ளுமாறு அழைத்தாள். எல்லோரும் தேநீர் அருந்த உட்கார்ந்தனர். அந்தப் பெண்கள் தேநீர் விருந்து நடப்பது போல தமது கோப்பைகளிலிருந்து தேநீரைச் சுவைத்தபடி இனி

மையாக ஏதேதோ பேசினர். தாஞபாய் வாய் திறக்கவில்லை. தேநீரைக் குடித்துவிட்டு வெளியே சென்று அவன் ஆட்டுப் பட்டியின் சிதறிக் கிடந்த கற்களை எடுத்து அடுக்கிச் சரி செய்ய ஆரம்பித்தான். செய்யப்பட வேண்டிய வேலைகளை நினைக்கவே பயங்கரமாயிருந்தது. இரவில் ஆடுகள் தங்க இடம் வேண்டுமே. பெண்களும் அவனுடன் சேர்ந்து கொண்டனர். குழந்தைகள்கூட கற்களைக் கொண்டு வந்து கொடுத்து உதவ முயன்றனர்.

''நீங்கள் இருவரும் கூடாரத்துக்குப் போய்ச் சேருங்கள்'' என்று சொல்லித் தாஞபாய் அவர்களை அனுப்பிவிட்டான்.

அவனுக்கு வெட்கமாயிருந்தது. கண்களை உயர்த்தாமலே வேலை செய்து கொண்டிருந்தான். சோரோ சொன்னது மெய்தான்: ஜெய்தார் மட்டும் இல்லாதிருந்தால் தாஞபாய் தனது மூர்க்கத்தனம் காரணமாக நெடுங் காலத்துக்கு முன்பே கழுத்தை முறித்துக் கொண்டிருப்பான்...

## 16

மறுநாள் தாஞபாய் தனது இரு இளம் மேய்ச்சல்காரர்களும் தமது கிடைகளைக் கொண்டு வந்து சேர்ப்பதற்கு உதவி புரியச் சென்றிருந்தான். பிறகு வாரம் பூராவும் ஓய்வின்றி வேலை செய்து ஓய்ந்து விழுந்துவிடும் நிலையை அடைந்

துவிட்டான். இதன் முன் என்றுமே இவ்வளவு கடுமையாக வேலை செய்ததாக அவனுக்கு நினைவில்லை. போர் முனையிலே இருபத்திநான்கு மணி நேரமும் தொடர்ந்து அகழ்வுகள் வெட்டினார்களே அதை வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் அப்பொழுது ஒரு முழுப் பட்டாளம். ஒரு டிவிஷன், ஒரு பெருஞ்சேனையே முனைந்து வேலை செய்து அரண்கள் அமைத்துக் கொண்டிருந்தது. இங்கே தானுபாயும் அவன் மனைவியும் உதவியாளர்களாக வந்திருந்த இருவரில் ஒரு பெண்ணும் சேர்ந்து எல்லாவற்றையும் செய்ய வேண்டியிருந்தது. இன்னொரு பெண் பக்கத்துக் கிடைக்குச் சென்றிருந்தாள்.

புழுக்கையும் சகதியும் மண்டியிருந்த கொட்டகையைச் சுத்தப்படுத்துவதும் காட்டு ரோஜாப் புதர்களை வெட்டியெடுத்து வருவதும்தான் எல்லாவற்றிலும் கடுமையான வேலைகளாக இருந்தன. புதர்களில் முட்கள்தான் அதிகமிருந்தன. அவற்றினிடையே தானுபாய் தனது பூட்சுகளைக் கிழித்துக் கொண்டுவிட்டான், அவனுடைய பழைய பட்டாளத்து மேல்கோட்டு இனி கோட்டு என்று சொல்ல முடியாதபடி கிழிந்து நாராகத் தொங்கிற்று. புதர்களைப் பெருங்கட்டுகளாகக் கட்டி கொட்டகைக்கு இழுத்து வந்தனர். தூக்கியோ குதிரைமீதோ எடுத்து வர முடியாதபடி அப்படி முள்ளாயிருந்தது. தானுபாய் ஐந்து மரச் சமவெளியைச் சபித்தபடி முட்களை வெட்டிச் சேகரித்தான். சமவெளியின் பெயருக்குக் காரணமான அம்மரங்களின் காய்ந்த

அடிக் கட்டைகளைக்கூடக் காண முடியவில்லை. பாழாய்ப்போன அந்த முட்களைத் தரையோடு தரையாகக் குனிந்து இழுத்து வருவதற்குள் அவர்களுக்கு வியர்த்து வழிந்தோடிற்று. பெண்களை இப்படிக் கஷ்டப்படுத்த வேண்டியிருக்கிறதே என்று அவன் வேதனைப்பட்டான். ஆனால் ஒன்றும் செய்வதற்கில்லை. நெருக்கடி நிலைமை, மூச்சைப் பிடித்துக் கொண்டு வேலை செய்தான். ஒவ்வொரு நிமிடமும் மதிப்பிடற்கரியது. வானத்தைப் பார்த்துக் கொண்டு வேலை செய்தான். ஏதாவது மாற்றம் தெரிகிறதா? வெண்பனி ஆரம்பிக்குமானால் அவர்களுடைய வேலைகள் வீண்தான். ஆடுகள் குட்டி போட ஆரம்பித்து விட்டனவா என்று இடையிடையே மூத்த மகளைக் கிடைக்குச் சென்று பார்த்து வரச் சொன்னான்.

கொட்டகையைச் சுத்தம் செய்வது இதனிலும் கடுமையான வேலையாக இருந்தது. புழுக்கையை வெளியே கொண்டு போய்ச் சேர்க்க ஓராண்டு ஆகிவிடும் போலிருந்தது. நல்ல கூரையின் பாதுகாப்பில் காய்ந்து கெட்டியாகிவிட்ட ஆட்டுப் புழுக்கையாக இருந்தால் அதை அகற்றிடுவது மகிழ்ச்சிக்குரிய எளிய வேலை. கோடரியைக் கொண்டு அதைப் பெரும் பாளங்களாய்ப் பிளந்து வெளியே எடுத்துச் சென்று காய வைக்கலாம். ஆட்டுப் புழுக்கையை எரித்தால் கிடைக்கும் கதகதப்பு சுகமாக இருக்கும். மேய்ச்சல்காரர்கள் இதைக் குளிர் காலத்தில் எரிபொருளாக உபயோகித்துக் கொள்வார்கள். ஆனால்

புழுக்கை மழையிலும் பனியிலும் கிடந்து நனைந்துவிட்டால் அதை வெளியே கொண்டு போய்ச் சேர்ப்பதைப் போன்ற படுமோசமான வேலை வேறு எதுவும் இருக்க முடியாது. முதுகு ஒடிந்துவிடும்படியான வேலை அது. ஆனால் நேரம் நிற்காமல் ஓடிக் கொண்டிருந்தது. இரவு முழுவதும் விளக்குகளின் வெளிச்சத்தைக் கொண்டு வேலை செய்தனர், மரப் பலகையில் அந்தக் குளிர்ந்த கனமான, கொளகொளப்பான சகதியை எடுத்துச் சென்று வெளியே கொட்டினர். தொடர்ந்து இரு பகல்களும் இரு இரவுகளும் இவ்வேலையைச் செய்து கொண்டிருந்தனர்.

கொட்டகைக்கு வெளியே பின்புறத்தில் ஒரு பெரிய சாணிக் குன்று எழுந்துவிட்டது. அப்படியும் வேலை முடிவை நெருங்குவதாயில்லை. பிறக்கப் போகும் குட்டிகளுக்காக ஒரு மூலையை யாவது சுத்தம் செய்து வைக்க முயற்சி செய்து கொண்டிருந்தனர். நாள் ஒன்றுக்கு இருபதிலிருந்து முப்பது குட்டிகள் வரை பிறக்கும்! இவையும் இவற்றின் தாய் ஆடுகளும் தங்கியிருக்க அந்தப் பெரிய கொட்டகையே போதாது. இந்நிலையில் ஒரு மூலையை வைத்துக் கொண்டு ''என்ன செய்வது?'' ''எப்படிச் சமாளிக்கப் போகிறோம்?'' இந்த ஒரு கேள்விதான் தாஞபாயின் மனதில் எந்நேரமும் ஓயாது எழுந்து கொண்டிருந்தது. பலகை மீது சாணத்தைக் குவிப்பதும், அதை வெளியே தூக்கிச் செல்ல உதவிவிட்டுத் திரும்பி வருவதுமாக ஓயாது நள்ளிரவு வரை, பொழுது விடியும் வரை

வேலை செய்தான். அவனுக்குத் தலை சுற்றியது, கைகள் மரத்துவிட்டன. இது போதாதென்று காற்று வீசி விளக்குகளை அணைத்துக் கொண்டிருந்தது. நல்ல வேளையாக அவனுடைய இரு உதவியாளர்கள் முறையிடவே இல்லை. தாஞபாயையும் ஜெய்தாரையும் போலவே அவர்களும் அயராது வேலை செய்தனர்.

ஒரு பகலும் இரவும் கழிந்தன, பிறகு மேலும் ஒன்று, இன்னொன்று. சாணத்தை வெளியே எடுத்துச் சென்றனர், .சுவர்களிலும் கூரையிலும் பொந்துகளை அடைத்தனர். பிறகு ஓர் இரவு தாஞபாய் சாணத்தைச் சுமந்து செல்கையில் கிடையில் ஆட்டுக் குட்டியின் குரலும் அதன் தாய் தரையைத் தட்டிவிட்டு பதில் குரல் கொடுத்ததும் காதில் விழுந்தன. ''ஆரம்பமாகிவிட்டது!'' அவனுக்குப் பகீரென்றது.

''காதில் விழுந்ததா உனக்கு?'' என்று தன் மனைவியின் பக்கம் திரும்பிக் கேட்டான்.

சாணத்தைச் சுமந்து சென்ற பலகையை அவர்கள் கீழே போட்டுவிட்டு விளக்குகளை எடுத்துக் கொண்டு ஆட்டுப் பட்டிக்கு ஓடினர்.

அவர்கள் படபடத்த விளக்குகளை அங்கே அப்படியும் இப்படியுமாக ஆட்டிச் சுற்றிலும் பார்த்தனர். எங்கே அந்தக் குட்டி? அதோ அந்த மூலையில்! பிறந்த குட்டியின் நடுநடுங்கும் சின்னஞ்சிறு உடலைத் தாய் ஆடு நக்கிக் கொண்டிருந்தது. ஜெய்தார் அதை எடுத்துத் தனது ஆடையின் முனையில் வைத்துச் சுற்றிக் கொண்டாள். நல்ல வேளை அவர்கள் தக்க தருணத்தில்

வந்து சேர்ந்தனர். இல்லையேல் திறந்த இடத்தில் குளிர் தாங்காமல் அது செத்துப் போயிருக்கும். அருகாமையில் இன்னொரு ஆடும் குட்டி போட்டிருந்தது. இரட்டைக் குட்டிகள். தாணுபாய் அவற்றைத் தனது மழைக் கோட்டு முனையில் வைத்து மூடிக் கொண்டான். மேலும் ஐந்து ஆடுகள் குட்டி போடும் தருணத்தை நெருங்கிவிட்டன. மெள்ள அவை கனைத்துக் கொண்டிருந்தன. ஆம், ஆரம்பித்துவிட்டது. விடிவதற்குள் இந்த ஐந்தும் குட்டி போட்டு விடும். உதவியாளர்களைக் கூப்பிட்டனர். குட்டி போட்ட ஆடுகளைக் கிடையிலிருந்து அழைத்து வந்து கொட்டகையில் அவர்கள் சுத்தம் செய்து வைத்திருந்த மூலையில் விட்டனர்.

தாணுபாய் சுவர் ஓரமாக வைக்கோலைப் போட்டு அதன்மேல் குட்டிகளை வைத்து சாக்கினால் மூடினான். குளிராயிருந்தது. தாய் ஆடுகளை அவற்றிடம் அழைத்துச் சென்று விட்டான். என்ன செய்வதென்று உதடுகளைக் கடித்தபடி சிந்தனை செய்தான். சிந்தித்துப் பயன் என்ன? ஆபத்தில்லாமல் முடிந்துவிடுமென்று நம்பிக்கை கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இன்னும் செய்ய வேண்டியவையும் பார்க்க வேண்டியவையும் நிறைய இருந்தன... வைக்கோலாவது போதிய அளவு இருக்கிறதா? இல்லை. இப்ராகிம் இதற்கும் உடனே தயாராக பதில் சொல்லிவிடுவான். ''சேறும் சகதியும் உள்ள சாலைகளில் மலைகளுக்கு வைக்கோல் கொண்டு வர நீ முயன்று பார் தெரியும்'' என்பான்.

சரி, நடக்கிறபடி நடக்கட்டும், வேலையைப் பார்க்கலாம்! கூடாரத்துக்குள் சென்று மசிப் பெட்டியுடன் திரும்பி வந்தான். ஒரு குட்டியின் முதுகில் ''2'' என்று இலக்கமிட்டான், இரட்டைக் குட்டிகள் ஒவ்வொன்றின் மீதும் ''3'' என்று இலக்கமிட்டான். பிறகு இவற்றின் தாய் ஆடுகளின் முதுகிலும் இதே இலக்கங்களை இட்டான். நூற்றுக் கணக்கில் குட்டிகளும் மறிகளும் முண்டியடித்துக் கொண்டிருக்கையில் இலக்கங்களின்றி எந்தக் குட்டி எதனுடையது என்று தெரியவே தெரியாது. சோதனை நேரம் வந்துவிட்டது, மேய்ச்சல்காரனின் தலை வெடிக்கும்படியான நேரம்!

மிகக் கொடிய முறையில் ஈவிரக்கம் சிறிதுமின்றி நேரம் தொடங்கிவிட்டது. போர் முனையில் பாதுகாப்பு எதுவுமின்றி நிற்கையில் திடீரென்று எதிரியின் டாங்கிகள் முன்னேறி வந்து தாக்குதல் தொடுத்தால் எப்படியோ அப்படி ஆகிவிட்டது. என்ன செய்ய முடியும்? பின் வாங்கிச் செல்ல இடமில்லையாதலால் அகழ் குழியில் அப்படியே இருக்க வேண்டியதுதான். எப்படியோ அதிசயமாக இந்தப் போரிலிருந்து உயிர் பிழைத்து மீள்வது அல்லது அதில் உயிர் நீப்பது—வேறு வழி எதுவும் இல்லை.

காலையில் கிடையை மேய்க்க அழைத்துச் செல்லுமுன் தானுபாய் தனது நிலைகளைப் பார்வையிடுபவனைப் போல ஒரு மேட்டின்மீது நின்று மௌனமாகச் சுற்றிலும் பார்த்தான். அவனுடைய பாதுகாப்பு அரண் சிதைந்து

போய் எதற்கும் உதவாத நிலையில் இருந்தது. ஆயினும் அவன் உறுதியுடன் நின்ருக வேண்டும். பின்வாங்க இடமில்லை. வளைந்து நெளிந்து சென்ற பள்ளத்தாக்கு ஆழமில்லாத அருவியுடன் இரு குன்றுகளுக்கிடையே விரிந்து கிடந்தது. அந்தக் குன்றுகளுக்குப் பின்னல் உயரமான மலைகள் நின்றன. அவற்றுக்கும் பின்னல் பனி மூடிய சிகரங்கள் தெரிந்தன. வெண்ணிறச் சரிவுகளுக்குமேல் கொடு முகடுகள் கறுத்து எழுந்தன. பனி உறைந்த உச்சிவரைகளில் குளிர் காலம் காட்சியளித்தது. அது கல்லெறியும் தொலைவிலேதான் இருந்தது. அது சற்றே அசைந்தால் போதும், மேகங்களைக் கொஞ்சம் தள்ளினல் போதும், கீழே அமைந்த சிறிய பள்ளத்தாக்கு உலகின் கண்ணுக்குத் தெரியாமல் இருட்டிலே மூழ்கிப் போய்விடும்.

வானம் குளிர்ந்த மூடுபனியால் சூழப்பட்டு மங்கலாக இருந்தது. நிலக் காற்று வீசியடித்தது. யாவும் சோகத் தோற்றம் பூண்டிருந்தன. மலைகளால் யாவும் சுற்றி வளைக்கப்பட்டிருந்தன, என்ன ஆகுமோ என்ற கவலை தானுபாயின் இதயத்தை நச்சரித்தது. புதிதாகப் பிறந்த குட்டிகள் ஓட்டைக் கொட்டகையினுள் கத்திக் கொண்டிருந்தன. மேலும் பத்து மறிகளைச் சற்று முன்புதான் அவன் கிடையிலிருந்து பிரித்துத் தனியே விட்டிருந்தான். அவை குட்டி போடும் நிலையில் இருந்தன.

அற்ப சொற்பமாயிருந்த புல்லைத் தேடியவாறு கிடை மெள்ள நகர்ந்து சென்றது. சரிவு

களில் கணப் பொழுதுகூட ஆடுகளைத் தனியே விட்டு வைக்க முடியாது. எங்காவது புதருக்குப் பின்னுல் சினை ஆடு கீழே படுத்து எச்சரிக்கை அளிக்காமலே குட்டி போட்டுவிடும். யாரும் கவனிக்கவில்லை என்ருல் ஈரத் தரையிலே குட்டி குளிரால் தாக்கப்பட்டுவிடும். பிறகு அது பிழைப்பது அரிதுதான்.

தாணுபாய் ஏன் இவ்வளவு நேரம் மேட்டின் மேல் நிற்கிருன்? நின்று பயன் ஒன்றும் இல்லையே. அவன் கீழே இறங்கிக் கொட்டகைக்குச் சென்ருன். வேலைகள் நிறைய இருந்தன. எவ்வளவு முடியுமோ அவ்வளவையும் சுணங்காது செய்து முடித்தாக வேண்டும்.

சற்று நேரத்துக்கெல்லாம் இப்ராகிம் வந்து சேர்ந்தான். கொஞ்சம் மாவு கொண்டு வந்திருந்தான்... வெட்கங் கெட்டவன், வாய் கூசாமல் ''உனக்கு நான் ஒரு மாளிகையா கட்டித் தர முடியுமென்று நினைக்கிருய்?'' என்ருன். ''இவை தான் பண்ணையிடம் உள்ள குட்டிப்பேறுக் கொட்டகைகள். இதற்கு மேல் ஒன்றுமில்லை. அதற்குள்ளாகவே கம்யூனிசம் வந்துவிட்டதாக நினைக்காதே.''

தாணுபாய்க்கு அப்படியே அவனை அடித்துப் போட வேண்டும் போலிருந்தது. சிரமப்பட்டுத் தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டான்.

''தமாஷ் பேச்சா பேசுகிருய்? இதுவல்ல நேரம். உடனே ஏதாவது செய்தாக வேண்டும். நான் பொறுப்புக் கூறியாக வேண்டும், தெரியுமா?''

''எனக்கு மட்டும் கவலை இல்லை என்று நினைக்

கிறாய்? உன்னுடைய கிடைக்கு மட்டும்தான் நீ பொறுப்பு. நான் எல்லாவற்றுக்கும் பொறுப்பு— உன்னுடைய கிடை, ஏனையோரது கிடைகள், இன்னும் பண்ணையிடமுள்ள கால்நடைகள் எல்லாவற்றுக்கும் நான் பொறுப்புக் கூறியாக வேண்டும். இது எளிய காரியம் என்று நினைக் கிறாய்?'' பிறகு தானபாய் திகைத்துவிடும்படி அந்தத் தந்திரக்காரன் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு கண்ணீர் விட்டு அழுது புலம் பினான்: ''என்னைச் சிறையிலே தான் தள்ளப் போகிறார்கள்! ஆமாம், என் கதை அப்படித் தான் முடியப் போகிறது! எந்த வேலையும் ஒழுங்காக நடைபெறுவதில்லை, யாரும் தற்கா லிகமாகக்கூட இங்கு உதவிக்கு வர விரும்ப வில்லை. சரி, என்னைக் கொன்று போடு, பியத் தெறி. நான் இதற்கு மேல் ஒன்றும் செய்வதற் கில்லை. வேறு எதுவும் என்னிடமிருந்து எதிர் பார்க்காதே. நான் இந்த வேலையை ஏன் ஏற்றுக் கொண்டேனோ!..''

அப்பாவியான தானபாய் பரிதாபத்துடன் பார்த்துக் கொண்டு நிற்க இப்ராகிம் குதிரையில் ஏறிப் போய்ச் சேர்ந்தான். அவ்வளவுதான், அதன்பின் குட்டிப் பேறுக் கொட்டகையின் பக்கம் அவன் வரவே இல்லை.

நூறு மறிகள் வரை குட்டி போட்டுவிட்டன. எஷீம், பெக்தாய் இவர்களது கிடைகள் பள்ளத் தாக்கின் மேல்மட்டங்களில் இருந்தன. அந்தக் கிடைகளில் ஆடுகள் இன்னும் குட்டி போட

ஆரம்பிக்கவில்லை. ஆனால் விரைவில் அவர்களுக்கு ஏற்படவிருந்த பயங்கர நிலைமையைத் தானு பாய் ஊகித்துப் பார்த்தான். அவனுக்கு உதவி யாக வந்திருந்த கிழவி எந்நேரமும் வெளியே கிடையுடன் இருக்க வேண்டியிருந்தது. எஞ்சி யிருந்த மூன்று முதியோரும் ஆறு வயதான மூத்த பெண்ணும் சேர்ந்து ஓயாது வேலை செய்தனர். பிறந்த குட்டிகளை எடுத்துத் துடைத்து விட்டுத் தாய் ஆடுகளிடம் விட்டுக் கைக்குக் கிடைத்ததைக் கொண்டு அவற்றை மூடிக் கதகதப்பாக்க முயன்றனர். சாணத்தை வெளியே எடுத்துச் சென்று கொட்டிவிட்டு, குட்டிகள் படுப்பதற்காகக் காய்ந்த சருகுகளையும் பூண்டு களையும் உள்ளே கொண்டுவந்தனர். குட்டிகள் பசி தாங்காமல் கத்தின. அவற்றுக்குப் போதிய பால் இல்லை. தாய் ஆடுகள் வற்றிப் போய் விட்டன. தீனி போட தானியம் இருந்தால் தானே. இனி என்ன நடக்கும்?

இரவு பகலாகத் தலை கிறுகிறுக்க வேலை செய்தனர். குட்டிகள் வேகம் வேகமாகப் பிறக்கத் தொடங்கின. அவர்களுக்கு மூச்சு விட நேரமில்லை.

முந்திய நாள் வானிலையில் ஏற்பட்ட மாற்றம் அவர்களை பீதியுறச் செய்தது. திடுமெனக் குளிர் கடுமையாகிவிட்டது, வானத்தைக் கரு மேகங் கள் மூடிக் கொண்டன. கெட்டியான தூள்ப் பனி அவர்கள் மீது கொட்டிற்று. யாவும் சதசதவென்ருகிவிட்டன. எங்கும் இருள் சூழ்ந்து விட்டது...

ஆனல் சிறிது நேரத்தில் மேகங்கள் கலைந் தோடக் கதகதப்பு திரும்பிற்று. வசந்தத்தின், நைப்பின் மணம் காற்றிலே கலந்து வீசிற்று. ''வசந்தம் நிலைத்துவிட்டதாகத் தெரிகிறதே. மாற்றமின்றி இப்படியே இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! ஓயாத மாற்றத்தைப் போல் மோசமானது ஒன்றுமில்லை'' என்று நினைத்த வாறு தானபாய் நனைந்த வைக்கோல் வாறு கோல்களில் நஞ்சுக் கொடிகளை அள்ளி வெளியே எடுத்துச் சென்றான்.

பிறகு வசந்தம் வந்தது. ஆனல் தானபாய் நினைத்ததைப் போல அமைதியாக வரவில்லை. திடீரென்று இரவில் வந்து சேர்ந்து எல்லோ ரையும் திக்குமுக்காடச் செய்தது. மூடுபனியும் மழையும் வெண் பனியும் அதைத் தூக்கி வந்து விட்டன. கொட்டகை, கூடாரம், ஆட்டுப் பட்டி அனைத்தும் அதிர குளிரும் நீரில் எல்லா வற்றையும் நனைத்துத் திடுமென வந்து தாக் கிற்று. உறைந்தும் உருகிச் சதசதத்தும் போயி ருந்த நிலத்தை பெருக்கெடுத்தோடிய நீரிலும் சகதியிலும் மூழ்கடித்தது. மடித்து மக்கிவிட்ட கூரை வழியே கசிந்து சுவர்களில் வழிந்து கொட் டகையினுள் பெருகியோடத் தொடங்கிற்று. உள்ளே இருந்தோரைக் குளிரால் நடுங்கச் செய்தது. எல்லோரையும் எழுந்து நிற்கச் செய்துவிட்டது. குட்டிகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு நீரில் நின்றன. மறிகள் கலக்கமுற்றுக் கத்திக் கொண்டு நின்றபடியே குட்டிகளை ஈன்றன. புதிய பிறவிகளை வசந்தம்

குளிர்ந்த நீரில் முழுக் காட்டிற்று.

மழைக் கோட்டு அணிந்து மூவரும் விளக்குகளைத் தூக்கிக் கொண்டு அங்குமிங்கும் ஓடினர். தானுபாய் ஒரே நேரத்தில் எல்லா இடங்களிலும் வேலை செய்ய முயன்முன். இருட்டில் முண்டியடித்து ஓடுகின்ற மிருகங்களைப் போல அவனுடைய இரண்டு பெரிய பூட்சுகளும் சகதியில், குட்டைகளில், சாணத்தில் பாய்ந்தோடிக் கொண்டிருந்தன. அவனுடைய மழைக் கோட்டின் முனைகள் காயமுற்ற பறவையின் இறக்கைகளைப் போல் படபடத்து அடித்துக் கொண்டன. தொண்டை கம்மிப் போய்க் கரகரப்பான குரலில் கூச்சல் போட்டான்:

''கடப்பாரையைக் கொடு! மண்வெட்டி எங்கே, கொண்டு வா! சாணத்தை இங்கே குவித்துப் போடு! நீரை அங்கே போக விடாதே!''

கொட்டகைக்குள் பெருக்கெடுத்தோடிய நீரை அவன் திருப்பிவிட வேண்டியிருந்தது. உறைந்து கெட்டியாயிருந்த தரையை வெட்டிக் குழிகள் தோண்டினுன்.

''விளக்கை இப்படிக் காட்டு! இங்கே, இங்கே! ஏன் அங்கே போய் நிற்கிறுய்?''

மூடுபனி இரவையே திணறடித்தது. வெண் பனியும் மழையும் சேர்ந்து கொட்டிற்று. ஓயாமல் கொட்டிக் கொண்டே இருந்தது.

தானுபாய் கூடாரத்துக்குள் ஓடினுன். விளக்கைத் தூண்டிவிட்டான். எங்கும் பனி சொட்டிக் கொண்டிருந்தது. ஆனுல் கொட்டகையில் இருந்

தது போல இங்கு அவ்வளவு மோசமாயில்லே. குழந்தைகள் இரண்டும் தூங்கிக் கொண்டிருந் தன. போர்வை நனேந்திருந்தது. தாஞெய் அவர்களே மெத்தையுடன் சேர்த்துத் தூக்கி ஒரு மூலேயில் படுக்க வைத்துக் கூடாரத்தினுள் கூடுமான அளவு காலி இடம் கிடைக்கச் செய் தான். குழந்தைகளின் மேல் ஒட்டுக் கம்பளித் துண்டு ஒன்றைப் போட்டு அவர்களுடைய போர்வை நனேயாதபடி மூடிஞன். பிறகு வெளியே ஓடி வந்து கொட்டகையினுள் வேலே செய்து கொண்டிருந்த பெண்களின் காதில் விழும்படி, ''குட்டிகளே இங்கே கூடாரத்துக்குக் கொண்டு வாங்க!'' என்று கத்திக் கொண்டு அவர்களுக்கு உதவுவதற்காகக் கொட்டகை யினுள் ஓடிஞன்.

கூடாரத்தில் எத்தனே குட்டிகளுக்கு இடம் இருக்கும்? முப்பது, முப்பத்தைந்து குட்டிகளேக் கொண்டு வந்து போடலாம். மற்றவை என்ன வது? எப்படியாவது குட்டிகளேப் பாதுகாத்தாக வேண்டும்...

பொழுது புலர்ந்துவிட்டது. மழையும் பனியும் இன்னும் ஓயவில்லே. சிறிது நேரம் குறைவதும், மறுபடியும் மழை அல்லது வெண்பனி அல்லது இரண்டும் பெய்வதுமாக இருந்தது...

கூடாரத்துக்குள் ஆட்டுக் குட்டிகள் அடை சலாகக் கிடந்தன. எல்லாம் கத்திக் கொண் டிருந்தன. நாற்றம் சகிக்க முடியவில்லே. அவர் கள் தமது உடைமைகளேக் குவித்துக் கான் வசைப் போட்டு மூடிவிட்டுத் தமது இரு

உதவியாளர்களின் கூடாரத்துக்குச் சென்று விட்டனர். குழந்தைகள் இருவரும் கான்வஸ் கூடாரத்தில் குளிர் தாங்காமல் பரிதாபமாக முனகிக் கொண்டிருந்தனர்.

மேய்ச்சல்காரனைப் பாடாகப் படுத்தும் கொடிய நாட்கள் இப்பொழுது அவர்களைத் திக்குமுக் காடச் செய்தன. தானுபாய் தன் தலைவிதியை நொந்து கொண்டான். எல்லோரையும் எல்லா வற்றையும் சபித்தான். தூக்கமோ, உணவோ இன்றித் துடிதுடித்து வேலை செய்தான். நனைந்து போன ஆடுகளிடையே, குளிரில் நடுங்கிய குட்டி களிடையே ஓயாது வேலை செய்தான். கொட்ட கையினுள் கொடுங் குளிர் குட்டிகளைக் கொன்று கொண்டிருந்தது. எளிதில் அது உள்ளே நுழைய முடிந்தது. கொட்டகையில் பொந்துகளும் ஓட் டைகளும் நிறைய இருந்தன. உளுத்துப் போன கூரை, கதவில்லாத சன்னல்கள், வாயில்கள் இவை யாவற்றின் மூலமும் தாராளமாக உள்ளே வர முடிந்தது. உள்ளே நுழைந்து ஆட்டுக் குட்டிகளையும் எலும்பாக மெலிந்து விட்ட தாய் ஆடுகளையும் தாக்கி அவற்றின் உயிரைக் குடித்தது. இறந்த குட்டிகளின் சின்னஞ் சிறு உடல்களை அவன் கை நிறைய அள்ளிச் சென்று அந்தக் கொட்டகைக்குப் பின்னால் குவித்தான்.

வெளியே திறந்த ஆட்டுப் பட்டியில் பருத்த வயிறுகளுடன் மழையிலும் வெண்பனியிலும் அடிபட்டு சினை ஆடுகள் நின்றன. விரைவில் குட்டி போடப் போகிறவை அவை. மழை

அவற்றின்மீது கொட்டிற்று. குளிரில் அவற்றின் தாடைகள் இறுகிவிட்டன. நனைந்த உரோமம் நீர் சொட்டும் கொத்துகளாகத் தொங்கிற்று...

ஆடுகள் பட்டியை விட்டு வெளியே வர மறுத்தன. இந்தக் குளிரிலும் மழையிலும் அவை எங்கே போய் மேய்வது? உதவியாளராக வந்திருந்த கிழவி தலையில் சாக்குப் பையைப் போட்டு மூடிக் கொண்டு ஆடுகளை வெளியே விரட்டினாள். ஆனால் ஆட்டுப் பட்டிதான் தமக்குச் சொர்க்க லோகம் என்பது போல அவை திரும்பவும் உள்ளே ஓடிவந்தன. கிழவிக்கு அழுகை வந்துவிட்டது. திரும்பவும் ஆடுகளை ஒன்று சேர்த்து வெளியே விரட்டினாள். திரும்பவும் அவை உள்ளே ஓடிச் சென்றன. தானபாய் சீற்றம் கொண்டு ஓடினான். அந்த அசட்டு ஆடுகளின் முதுகில் அவன் தடி கொண்டு அடித்திருப்பான், ஆனால் அவை சினை ஆடுகள். ஆகவே ஏனைய பெண்களையும் வரச் சொல்லிக் கூப்பிட்டான். எல்லோருமாகச் சேர்ந்து கிடையை வெளியே கொண்டுவந்து மேய்ச்சல் இடங்களுக்கு அனுப்பி வைத்தனர்.

அபாய நிலைமை ஏற்பட்டது முதலாகத் தானபாய் நேரம் போவதே தெரியாதவனாகிவிட்டான். அதே போல அவனைச் சுற்றிலும் மடிந்து வந்த ஆட்டுக் குட்டிகளின் எண்ணிக்கை குறித்தும் உணர்விழந்து வந்தான். அவற்றில் பல இரட்டைக் குட்டிகளும் முக்குட்டிகளாகவுங் கூடப் பிறந்தவை. அத்தனை செல்வமும் பாழாகி விட்டது. அவர்களுடைய உழைப்பு விரயமாகி

வந்தது. குட்டிகள் பிறந்த நாளன்றே அந்தச் சகதியிலும் சாணத்திலும் இறந்துவிட்டன. உயிர் தப்பியவை இருமி இருமி மூச்சுத் திண றின, வயிற்றுப்போக்கு ஏற்பட்டு ஒன்றை யொன்று அசுத்தமாக்கிக் கொண்டன. குட்டி களை இழந்த மறிகள் கத்தியபடி அங்குமிங்கும் ஓடி ஒன்றோடொன்று இடித்துக் கொண்டும் குட்டி போடுகிறவற்றை மிதித்துக் கொண்டும் இருந்தன. இதில் இயற்கைக்கு விரோதமான, பேய்த்தனமான ஏதோ ஒன்று செயல்படுவது போலத் தோன்றியது. குட்டிகள் பிறக்கும் வேகம் சற்று குறையக் கூடாதா என்று தாஞ பாய் ஏங்கிஞன்...

ஆஞல் மறிகள் ஒன்று சேர்ந்து கொண்டு சதி செய்தாற் போல ஒன்றன்பின் ஒன்ருக வேகம் வேகமாகக் குட்டி போட்டுக் கொண் டிருந்தன!..

அவனுள் பயங்கரமான கரிய அலே போல ஆத்திரம் பொங்கியெழுந்தது. உயர்ந்தெழுந்து காட்டுத்தனமான வெறுப்பாக அவன் கண் களில் நிரம்பிற்று; அங்கு நடைபெற்றவை மீதும் உளுத்துப் போன அந்தக் கொட்டகை மீதும், அந்த ஆடுகள் மீதும், தன்மீதும், தனது வாழ்க்கை மீதும், உயிரை விட்டு அவன் பாடு பட்டு வந்தவை எல்லாவற்றின் மீதுமான வெறுப் பாக நிரம்பிற்று. அவனுடைய உணர்ச்சிகள் மங்கிவிட்டன. அவன் சிந்தனேகள் அவனேப் பிணி போல வருத்தின. அவற்றை விரட்ட முயன்ருன். ஆஞல் அவை பின்வாங்கிச் செல்ல

மறுத்தன. அவன் உள்ளத்தில், மூளையில் ஊடுருவிச் சென்று வருத்தின. ''ஏன் இப்படி ஆக வேண்டும்? ஏன்? ஆடுகளைக்காக்க முடியாதவர்கள் ஏன் ஆடுகளை வளர்க்க வேண்டும்? யாருடைய குற்றம் இது? குற்றவாளி யார்? உன்னையும் உன்னைப் போன்ற வாய்வீச்சுக்காரர்களும்தான். யாவும் முன்னேறிவிடும், நாம் எட்டிப் பிடித்து விடுவோம் என்கிறோம், வாக்குறுதிகள் அளிக்கிறோம். ஆம், மெச்சிக் கொள்ள வேண்டியதுதான்! சரி, போய் இறந்து போன குட்டிகளை வெளியே கொண்டு போய்ப் போடு. அங்கே சகதியில் மடிந்து போய்க் கிடக்கும் மறியை இழுத்துச் செல். நீ எவ்வளவு பெரிய ஆள் என்பதைக் காட்டு...''

இரவில் முழங்கால் அளவுக்குச் சாணத்திலும் மூத்திரத்திலும் நடக்கையில் தானுபாய் நெஞ்சைச் சுட்டெரிக்கும் இந்தக் கொடிய சிந்தனைகளால் முன்னிலும் அதிகமாக வதைக்கப்பட்டான். குட்டிப் பேறுக் காலத்தின் அந்த உறக்கமில்லா இரவுகள் கொடுமையிலும் கொடுமையானவை! காலுக்கடியில் சாணச் சகதி, மேலே கூரையிலிருந்து கொட்டும் மழை, வயல் வெளியில் வீசுவது போல கொட்டகையினுள் ஆவேசமாக வீசி விளக்குகளை அணைத்துச் சென்ற காற்று. தானுபாய் தட்டித் தடவிக் கொண்டும் தடுமாறி விழுந்தும் புதிதாகப் பிறந்த ஆட்டுக் குட்டிகளை மிதித்து விடாதிருக்கும் பொருட்டுக் கால்களையும் கைகளையும் கொண்டு தவழ்ந்து சென்று விளக்கைத் தேடிப்

பிடித்து ஏற்றினுன். அவனுடைய வீங்கிய கைகளில் அழுக்கும் சகதியும் இரத்தமும் அப்பியிருந்தது விளக்கு வெளிச்சத்தில் தெரிந்தது.

அவன் தன்னைக் கண்ணுடியில் பார்த்து எத்தனையோ நாட்களாகிவிட்டன. அவன் மிகவும் நரைத்துப் போய் மூப்படைந்திருந்தது அவனுக்குத் தெரியாது. இனி என்றென்றும் தன்னை எல்லோரும் கிழவன் என்றே அழைப்பார்கள் என்பதும் அவனுக்குத் தெரியாது. இவற்றைக் குறித்து அவன் கவலைப்படுகிற நிலையில் இல்லை. தன்னைப் பற்றி நினைக்கவோ, உணவருந்தவோ, முகம் கழுவவோ அவனுக்கு நேரமில்லை. ஓயாது வேலை செய்தான், இரக்கம் சிறிதுமின்றி பெண்களையும் ஓயாது வேலை வாங்கினுன். யாவும் அறவே பாழ்பட்டுவிடும் நிலை வந்ததும் அவன் தனது இரு உதவியாளர்களில் இளையவளைத் தன் குதிரைக்குச் சேணமிடும்படிச் சொன்னுன்.

''நீ போய் சோரோவைப் பார்த்துவிட்டு வா. உடனே அவனை இங்கே வரச் சொல். அவன் வராவிடில் திரும்பவும் அவனை நான் பார்க்க விரும்ப மாட்டேன் என்று சொல்லு!''

அவள் அங்கிருந்து அந்திப் பொழுதில் திரும்பி வந்து குதிரையிலிருந்து கீழே இறங்கினுள். முற்றிலும் நனைந்து போய்க் குளிரில் நீலமாக மாறியிருந்தாள்.

''சோரோ உடல் நலமின்றிப் படுத்திருக்கிறுன். இன்னும் இரண்டொரு நாளில் வரு

வதாகச் சொன்னான். வழியில் உயிரிழக்க நேர்ந் தாலும் நிச்சயமாக வருவேன் என்று சொல்லச் சொன்னான்.''

''நாசமாய்ப் போக! அவன் நோய்ப் படுக்கை யிலிருந்து எழுந்திருக்காமலே போகட்டும்'' என்று தாளுபாய் சீறினான்.

ஜெய்தார் அவன் பேச்சைத் தடுக்க விரும்பி னாள். ஆனால் அவளுக்குத் துணிவு வரவில்லை, அவனுடன் பேசாமல் இருப்பதே மேல் என்று சும்மாயிருந்துவிட்டாள்.

மூன்றும் நாளன்று வானம் தெளிவடையத் தொடங்கிற்று. மேகங்கள் தயங்கியவாறு கலைந்து சென்றன. மூடுபனி மேலும் மேலும் உயரமாக மலைமீது ஏறிச் சென்றது. காற்று நின்றுவிட் டது. ஆயினும் வசந்தம் வருவதாயில்லை. சினை ஆடுகள் பார்க்கப் பயங்கரமாக மெலிந்துவிட் டன. நடமாடும் எலும்புக் கூடுகளாக நின்றன. வயிறு மட்டும் புடைத்திருந்தது. அவற்றால் எப்படி குட்டிகளுக்குப் பால் தர முடியப் போகிறது? குட்டிகள் உயிர் தப்பினாலும், இவற்றை ஈன்ற மறிகள் கோடை வரையில் உயிர் பிழைக்க வேண்டுமே! கோடையில் புல் கிடைத்த பிற்பாடுதானே வலுவடைய முடியும்? நோய் ஏற்பட்டு சாகப் போகிறவை எத்தனை? அப்படியே நோயில்லாமல் தப்பித்துக் கொண்டாலுங் கூட அவற்றிடமிருந்து உரோ மமோ இறைச்சியோ எதிர்பார்க்க முடியுமா?

வானம் தெளிவடைந்ததுதான் தாமதம், மேய்ச்சல்காரர்களை மற்றொரு துர்ப்பாக்கியம்

அச்சுறுத்திற்று. தரை உறையத் தொடங்கிற்று. விரைவில் பனிக்கட்டிப் படலம் மூடிக் கொண்டு விடுமென்று அஞ்சினர். நல்ல வேளை நண்ப கலுக்குள் உருகத் தொடங்கிற்று. தாணுபாய் சற்று அச்சம் தெளிந்து பெருமூச்சு விட்டான். கிடையில் ஒரு பகுதியைப் பாதுகாத்துவிடலாம் என்ற நம்பிக்கை பிறந்தது. திரும்பவும் அவர் கள் மண்வெட்டிகளும் கவர்க்கோல்களும் மரப் பலகையும் கொண்டு கொட்டகையினுள் வேலே செய்யத் தொடங்கினர். உள்ளே அவர்கள் பாதைகள் அமைத்தாக வேண்டியிருந்தது, சகதிப் பெருக்கு சகிக்க முடியாததாகிவிட்டது. ஆனால் இதற்கு நேரம் ஏது? தாய் ஆடுகளை இழந்த குட்டிகளை எடுத்து வந்து குட்டிகளை இழந்த மறிகளுடன் இணைத்திட வேண்டியிருந்தது. ஆனால் மறிகள் முட்டித் தள்ளின, தாம் அறி யாத அந்நியக் குட்டிகளுக்கு அவை பால் கொடுக்க மறுத்தன. பாலுக்காகக் குட்டிகள் பரிதாபமாகக் கத்தின. குளிர்ந்த சின்னஞ்சிறு வாய் ஒவ்வொன்றும் சப்புவதற்குக் காம்பைத் தேடித் தவித்தது, தூக்கியவர்களின் கைவிரல் களைக் கவ்விக் கொண்டு சப்பிற்று. விரலை இழுத்துக் கொண்டு குட்டியைக் கீழே போட் டதும் மழைக்கோட்டுகளின் அழுக்குப் பிடித்த முனைகளைச் சப்பிற்று. குட்டிகள் பசியால் கத்திக் கொண்டு ஒன்றையொன்று இடித்துக் கொண்டு காலுக்குப் பின்னால் ஓடி வந்தன.

தாணுபாய்க்கு வாய் விட்டுக் கதற வேண்டும் போலிருந்தது, பித்துப் பிடித்து விடும் போலிருந்

தது. இந்தப் பெண்களேயும் தன் மகளேயும் இன்னும் எவ்வளவு தான் அவன் வேலே வாங்கி வதைப்பது? அவர்கள் ஓய்ந்து போய்க்கீழே விழுகிற நிலேயில் இருந்தனர். அவர்களுடைய நனேந்த மழைக் கோட்டுகள் நாட்கணக்காகக் காயவே இல்லே, அப்படி ஓயாமல் வேலே செய் தனர். தானுபாய் வாய் திறக்கவில்லே. ஒரே யொரு தரம்தான் அவன் தன்னேயும் மீறி ஆத்திரமடைந்துவிட்டான். கிழவி முன்னதா கவே வந்து தானுபாய்க்கு உதவியாக வேலே செய்யலாமென நினேத்து நண்பகலிலேயே கிடை யைப் பட்டிக்குத் திருப்பி ஓட்டி வந்தாள். ஆடுகளேச் சரிபார்ப்பதற்காகத் தானுபாய் வெளியே ஓடி வந்தான். அவற்றை அவன் ஒரு கணம் பார்த்ததுமே இரத்தம் அவன் தலேக் கேறியது. ஆடுகள் ஒன்று மற்ருென்றின் உரோ மத்தைக் கடித்துத்தின்று கொண்டிருந்தன. அவை பட்டினியால் சாகும் நேரம் நெருங்கி விட்டதன் அறிகுறி அது. கிழவியைப் பார்த்துக் கோபமாகக் கூச்சலிட்டான்:

''என்ன இது? கண் தெரியவில்லேயா உனக்கு? ஆடுகள் என்ன செய்கின்றன என்று பார்! ஏன் ஊமை மாதிரி நிற்கிருய்? போ! அவற்றை நிற்க விடாதே, ஓட்டிக் கொண்டு போ! உரோ மத்தைத் தின்ன விடாதே! நிற்க விடாமல் ஓட்டிக் கொண்டிரு, ஒரு நிமிடம் கூட நிற்கக் கூடாது! நின்ருல் உன்னேக் கொன்று விடு வேன்!''

பிறகு இன்னெரு இடியும் விழுந்தது. தாய்

ஆடு ஒன்று தான் ஈன்ற இரட்டைக் குட்டிகளை நிராகரித்துவிட்டது. அவற்றை முட்டித் தள்ளிற்று, பால் குடிக்கத் தன்னை நெருங்க விடாமல் உதைத்து விரட்டிற்று. குட்டிகள் மீண்டும் மீண்டும் தாயிடம் ஓடின, கீழே விழுந்தன, பரிதாபமாகக் கத்தின. உயிரின் தற்காப்பெனும் கொடிய விதி செயல்பட முற்படுகையில் இப்படித்தான் நடைபெறும். தாய் ஆடு இன்னொரு உயிருக்கு ஊட்ட மளிக்கும் தெம்பற்றதாகியதும் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற உள்ளுணர்ச்சியால் உந்தப் பட்டுத் தனது குட்டிகளுக்குப் பாலூட்ட மறுத்து அவற்றை நிராகரிக்கிறது. தொத்து நோய் போல் இந்த நடத்தை கிடை முழுதும் தொத்திப் பரவுகிறது. ஒரு மறி இதைச் செய்ததும் உடனே ஏனையவையும் அதைப் பின் தொடர்ந்து தம் குட்டிகளை நிராகரிக்கின்றன. தானுபாய் பீதியடைந்துவிட்டான். பசியால் வெறி கொண்டுவிட்ட மறியையும் அதன் குட்டிகளையும் அவனும் அவன் மகளுமாய்ச் சேர்ந்து வெளியே ஆட்டுப்பட்டிக்கு முன்னுலிருந்த முற்றத்துக்கு இழுத்து வந்தனர். அங்கே அவர்கள் அதைக் கட்டாயப்படுத்திக் குட்டிகளுக்குப் பாலூட்டச் செய்ய முயன்றனர். தானுபாய் மறியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான், அவன் மகள் குட்டிகளைத் தூக்கி அதன் காம்புகளைச் சப்பவிட்டாள். ஆனால் மறி முண்டித் துடித்துத் தலையைத் திருப்பிக் குட்டிகளை முட்டித் தள்ளிற்று. சிறுமியால் சமாளிக்க முடியவில்லை.

''அப்பா, குட்டிகளால் சப்ப முடியவில்லை.''

''எல்லாம் முடியும், நீ அசடு, குட்டிகளுக்கு உதவி செய்யத் தெரியவில்லை உனக்கு.''

''இல்லை, இதோ பார். குட்டிகள் வாயை வைக்கவே முடியவில்லை.'' குழந்தைக்கு அழுகை வந்துவிட்டது.

''நீ ஆட்டைப் பிடித்துக் கொள், நான் செய்து காட்டுகிறேன்.''

குழந்தையால் ஆட்டைப் பிடித்துக் கொள்ள முடியுமா? குட்டிகளை அவன் சப்பவிட்ட மறு கணமே மறி துள்ளிக் குதித்துக் குழந்தையைக் கீழே தள்ளிவிட்டு ஓடிற்று. தாஞபாய்க்கு வந்த ஆத்திரத்தில் அவன் என்ன செய்கிறோம் என்பது அறியாது தன் மகளின் கன்னத்தில் அறைந்தான். இது வரை அவன் குழந்தைகளை அடித்ததே இல்லை, ஆத்திரம் இப்பொழுது அவனை நிலைகுலையச் செய்துவிட்டது. சிறுமி வீரிட்டு அழுதாள். தாஞபாய் அங்கிருந்து வேகமாக விலகினான். உலகத்தையே சபித்தபடி நடந்தான்.

நடந்து ஆத்திரம் அடங்கியதும் தன் மகளிடம் எப்படி மன்னிப்புக் கேட்பதென்று தெரியாமல் கலங்கிய வண்ணம் திரும்பி வந்தான். ஆனால் சிறுமி அதற்குள் தானே அவனிடம் ஓடி வந்தாள்.

''அப்பா, குட்டிகளுக்கு அது பால் கொடுக்கிறது. அம்மாவும் நானும் சேர்ந்து குட்டிகளைச் சப்பவிட்டோம். முட்டித் தள்ளாமல் இப்பொழுது பால் கொடுக்கிறது'' என்றாள் ஆனந்தமாக.

''அப்படியா? நீ சமர்த்துப் பெண்!''

அவனுக்கு உற்சாகம் திரும்பிற்று. நிலைமை அப்படி ஒன்றும் மோசமாகிவிடவில்லை. கிடையில் ஒரு பகுதியைப் பாதுகாத்துவிடலாம், வாய்ப்பு இருக்கிறது என்ற நம்பிக்கை பிறந்தது. வானத்தைப் பாரேன்! தெளிந்து வருகிறதே! வசந்தம் நிலைத்துவிடும் போல் தோன்றிற்று. மேய்ச்சல்காரர்களின் பொல்லாத நாட்கள் முடிந்துவிட்டனவா, என்ன? நல்லது, திரும்பவும் வேலையில் இறங்குவோமெனக் கிளம்பினான். அயராமல் பாடுபடுவோம், அது ஒன்றுதான் மீட்சிக்குரிய ஒரே வழி...

குதிரையிலே இளைஞன் ஒருவன் வந்திறங்கினான். பண்ணை அலுவலகத்திலிருந்து வந்திருந்தான். எல்லாம் எப்படி நடைபெறுகின்றன என்று விசாரித்தான். நாசமாய்ப் போ என்று அவனைத் திட்ட வாயைத் திறந்த தானபாய் வேண்டாமென்று கட்டுப்படுத்திக் கொண்டான். அந்தச் சிறுவனைப் போய்த் திட்டி என்ன பயன்?

''இது வரை என்ன செய்தாயாம்? இப்பொழுது வந்து நிற்கிறாயே?''

''கிடைகளை எல்லாம் சரி பார்த்துக் கணக்கு எழுதிக் கொண்டிருந்தேன். தனி ஆள் நான், என்ன செய்வேன்?''

''மற்ற கிடைகளில் நிலைமை எப்படி இருக்கிறது?''

''ரொம்ப மோசம். இந்த மூன்று நாளில் எத்தனையோ ஆடுகள் செத்துப் போய்விட்டன.''

''மேய்ச்சல்காரர்கள் என்ன சொல்கிறார்கள்?''

''சபித்துக் கொண்டிருக்கிறார்கள். சில பேர் என்னுடன் பேசக்கூட மறுத்துவிட்டார்கள். பெத்தாய் என்னைக் கிட்ட வராதே என்று விரட்டினான். என்னால் கிட்டப் போக முடிய வில்லை, அப்படி ஆவேசமாக ஆடினான்.''

''எனக்கு ஒரு நிமிடம் கூட நேரமில்லை, அவனிடம் போய் வர முடியவில்லை. எப்படி யாவது போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டும். நீ போய் அவனுக்கு உதவக் கூடாதா?''

''நானா? இவ்வளவு கணக்கையும் நான் எழுதி முடித்தாக வேண்டுமே.''

''உதவி ஏதாவது அனுப்பப் போகிறார் களா?''

''வந்து கொண்டிருக்கிறது. சோரோ திரும்ப வும் வேலைக்கு வந்துவிட்டதாகச் சொல்கிறார் கள். வைக்கோலும் உலர் புல்லும் வைத்து வரிசையாகப் பல வண்டிகளைச் சோரோ அனுப் பியதாகக் கேட்டேன். லாயத்திலே குதிரையே இல்லையாம். குதிரைகள் செத்தாலும் பரவா யில்லை. புல்லும் வைக்கோலும் போய்ச் சேர்ந்து விட வேண்டுமென்று சோரோ எல்லாவற் றையும் அனுப்பியதாகச் சொல்கிறார்கள். ஆனால் வண்டிகள் சேற்றில் சிக்கிக் கொண்டு நிற் கின்றனவாம். சாலை எல்லாம் ரொம்ப மோச மாக இருக்கிறது.''

''சாலை மோசமாகத்தான் இருக்கும்! ஏன் முன்பே இது பற்றி சிந்திக்கவில்லையாம்? எப்பொ ழுதுமே இப்படித்தானே. சாலை சேறாகிப்போன பிறகு இப்பொழுது வண்டிகளை அனுப்பி என்ன

பயன்? இவர்களை எல்லாம் சும்மா விடக் கூடாது!'' என்று தாஜுபாய் இரைந்தான்.

''சரி, என்னை எதுவும் கேட்காதே நீ. போய் நீயே பார்த்து ஆடுகளை எண்ணிக் கணக் கெடுத்துக் கொள். கணக்குச் சொல்ல எனக்கு நேரமில்லை.'' தாஜுபாய் அவசரமாகக் கொட் டகைக்கு ஓடி புதிய குட்டிகளைக் கவனிக்க முற்பட்டான். மேற்கொண்டு பதினைந்து ஆடு கள் குட்டி போட்டுக் கொண்டிருந்தன.

தாஜுபாய் அங்குமிங்கும் ஓடிப் பிறந்த குட்டி களை எடுத்து வேலை செய்து கொண்டிருக்கையில் அந்த இளைஞன் திரும்பவும் அவனிடம் வந்து ஒரு காகிதத்தை நீட்டினன்.

''கிடைக்கு ஏற்பட்டுள்ள சேதங்களைப் பற்றிய கணக்குகள். கையெழுத்துப் போடுங்கள்'' என்றான்.

தாஜுபாய் அதைப் படித்துப் பார்க்காமலே கையெழுத்துப் போட்டான். அவன் ஆத்திர மாகப் பென்சிலை அழுத்திப் பிடித்து எழுதிய கடுமையில் அதன் கூர் ஒடிந்துவிட்டது.

''தாஜுபாய், போய் வருகிறேன். அங்கே போய் நான் சொல்ல வேண்டிய செய்தி ஏதாவது இருக்கிறதா?''

''ஒன்றும் இல்லை.'' ஆனால் இளைஞன் புறப் பட்டதும் அவனைத் திருப்பியழைத்து ''வழியில் பெக்தாயிடம் சென்று நாளைக்கு நண்பகலுக்குள் நான் அவனிடம் வருகிறேன் என்று சொல்லி விட்டுப் போ.''

பெக்தாயிடம் போவது குறித்து தாஜுபாய்

கவலைப்பட்டிருக்க வேண்டியதில்லை. பெக்தாய் முந்திக் கொண்டு அவனே தானுபாயிடம் வந்தான். சிறிதும் எதிர்பாராத விதத்தில் வந்து சேர்ந்தான்...

அன்று இரவு மறுபடியும் காற்று அடித்தது, வெண்பனி பெய்ய ஆரம்பித்தது. அதிகம் பெய்யவில்லை என்றாலும் காலைக்குள் தரை முழுதும் வெள்ளைமயமாவதற்குப் போதிய அளவு கொட்டிற்று. ஆட்டுப் பட்டியில் ஆடுகள்மீது வெள்ளையாகப் படிந்தது. இரவு முழுவதும் அவை நின்று கொண்டே இருந்தன. ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு ஆடாமல் உயிரற்றனவாக நின்றன. அவை பல நாட்களாகப் பட்டினி கிடந்தவை. வசந்தம் குளிர் காலத்தை எதிர்த்துப் போராடி நிலை பெறுவதற்கு அளவுக்கு மீறி அதிகக் காலமாகிவிட்டது.

கொட்டகைக்குள்ளும் குளிர்தான். மழையால் கூரையில் ஏற்பட்ட ஓட்டைகளின் வழியே வெண்பனித் திவலைகள் உள்ளே மிதந்து விளக்குகளின் மங்கிய ஒளியில் சுற்றி வட்டமிட்டுக் குளிரால் ஒடுங்கியிருந்த மறிகள்மீதும் குட்டிகள்மீதும் மெதுவாகப் படிந்தன. தானுபாய் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தான். போர்க் களத்தில் படுகொலைக்குப் பிற்பாடு சவ அடக்கம் செய்யும் படைப் பிரிவைச் சேர்ந்த வீரனைப் போல தன் கடமைகளை நிறைவேற்றினான். அச்சம் தரும் சிந்தனைகள் இப்பொழுது அவனுக்குப் பழக்கப் பட்டவை ஆகிவிட்டன. அவனுடைய ஆத்திரம் ஆவேச

மில்லாத மௌனமான கோபமாக மாறிவிட்டது. அவனுடைய ஆன்மாவை வதைத்து வேதனை உண்டாக்கிற்று. அவனுடைய பூட்சுக் கால்கள் சகதியில் சதக்கிட்டுச் செல்ல நீண்ட இராப் பொழுது முழுதும் ஓயாது அவன் வேலை செய்து கொண்டிருக்கையில் கடந்த காலத்தின் நிகழ்ச்சிகள் இடையிடையே அவன் மனத் திரையில் தெரிந்தன...

அவன் சிறுவனாக இருந்தபொழுது மேய்ச்சல் காரனாக வேலை செய்து வந்தான். அவனும் அவன் அண்ணன் குலுபாயுமாய்ச் சேர்ந்து உறவினர் ஒருவரது கிடையை மேய்த்துவந்தனர். ஆனால் ஆண்டு முடிவுற்றதும் அவர்கள் தமக்குக் கிடைத்த சாப்பாட்டுக்கு மேல் ஊதியம் ஒன்றும் இல்லை என்பதைக் கண்டனர். அவர்களுடைய எஜமானன் அவர்களைச் சம்பளமின்றியே வேலை வாங்கிவிட்டான் என்பது தெரிந்தது. இது பற்றி எஜமானன் அவர்களுடன் பேசவே மறுத்துவிட்டான். ஆகவே இருவரும் வெறுங் கையுடன் அவனிடமிருந்து பிரிந்தனர். கிழிந்த செருப்புகளை மாட்டிக் கொண்டு அற்ப சொற்ப உடைமைகளைச் சிறு மூட்டையாகக் கட்டி முதுகில் தொங்க விட்டுக் கொண்டு இருவரும் புறப்பட்டனர். பிரியுமுன் தானபாய் ''எனக்கு வயதாகட்டும், உன்னை ஒரு கை பார்த்துக் கொள்கிறேன்'' என்று அந்த ஆளைக் கடிந்து கொண்டான். குலுபாய் ஒன்றும் சொல்லவில்லை. தானபாயைவிட அவன் ஐந்து வயது மூத்தவன். வார்த்தைகளைக் கொண்டு எஜமானனை

மிரட்டிவிட முடியாது என்று அவனுக்குத் தெரியும். நீயே ஓர் எஜமானனுகிக் கிடைக்கும் நிலத்துக்கும் சொந்தக்காரனுகிவிடப் பார்க்க வேண்டும் என்முன். ''எனக்குச் சொந்த நிலம் கிடைத்தால் நான் என் வேலையாட்களை ஏமாற்ற மாட்டேன்'' என்று குலுபாய் அந்நாட்களிலேயே கூறிக் கொண்டான். சகோதரர்கள் இருவரும் அவ்வருடத்தில் இவ்வாறுதான் பிரிந்து சென்றனர். குலுபாய் மற்ருெரு பணக்கார நிலச்சுவான்தாரிடம் மேய்ச்சல் வேலைக்கமர்ந்தான். தானுபாய் அலெக்சாந்திரவ்காவுக்குச் சென்று எப்ரேமொவ் என்ருெரு ருஷ்யக் குடியேற்றத்தவரிடம் கூலியாளாக வேலை செய்தான். அவர் பெரிய பணக்கார விவசாயியல்ல, ஒரு ஜோடி மாடுகளும் இரண்டு குதிரைகளும் கோதுமை பயிரிடப்பட்ட சொந்த வயலும்தான் இருந்தன. அறுவடையான கோதுமையை அவர் ஔலியே-அத்தா நகரிலிருந்த மாவு ஆலேக்கு எடுத்துச் செல்வார். விடிகாலை முதல் அந்தி வரை அயராது வேலை செய்வார். மாடுகளையும் குதிரைகளையும் கவனித்துக் கொள்வது தான் தானுபாயின் வேலை. எப்ரேமொவ் கண்டிப்பானவர், ஆனல் நேர்மையான ஆள் என்பதை மறுக்க முடியாது. ஒத்துக் கொண்ட கூலியைக் கொடுத்து வந்தார். அந்நாட்களில் கிர்கீஸிய ஏழைகள் சொந்த இனத்தோரிடம் வேலைக்கு அமர்ந்து அவர்களால் கடுமையாகக் கசக்கிப் பிழியப்படுவதைக் காட்டிலும் ருஷ்யக் குடியேற்றத்தவர்களிடம் வேலை செய்வதே

மேலெனக் கருதினர். தானுபாய் ருஷ்ய மொழி பேசத் தெரிந்து கொண்டான். வண்டிக்காரனுக வேலே செய்த அவன் ஒளிலியே-அத்தா நகரைத் தெரிந்து கொண்டான். வாழ்க்கை அனுபவம் சிறிது கிடைத்தது. பிறகு புரட்சி வந்தது. எல்லாம் தலேகீழாயின. தானுபாய் போன்ருேருக்குரிய காலம் பிறந்தது.

தானுபாய் சொந்த கிராமத்துக்குத் திரும்பி வந்தான். புது வாழ்வு தொடங்கிற்று. அது அவனே அப்படியே தூக்கித் தன்னுடன் இழுத்துச் சென்றது, அவனுக்குத் தலே சுற்றிற்று. நிலம், சுதந்திரம், குடி உரிமைகள் ஆகிய யாவும் அவனுக்கு ஒரே நொடியில் கிடைத்தன. கிராம ஏழை விவசாயிகளின் குழுவுக்கு அவன் தேர்ந் தெடுக்கப் பட்டான். அப்பொழுதுதான் சோரோ வைச் சந்தித்தான். சோரோ எழுத்தறிவுடை யவன், ஏனைய இளம் மக்களுக்கு அவன் எழுதப் படிக்கக் கற்றுத் தந்தான். தானுபாயும் கற்றுக் கொண்டான், குழு உறுப்பினன் ஆயிற்றே. காம்சொமோலில் சேர்ந்து கொண் டான். இங்கும் அவன் சோரொவுடன் சேர்ந்து வேலே செய்தான். பிறகு இருவரும் ஒரே நேரத்தில் கட்சியில் சேர்ந்து கொண்டனர். எல்லாம் மிக வேகமாக மாறிச் சென்றன. ஏழைகள் மேல் நிலேக்கு வந்து கொண்டிருந் தனர். கூட்டுப் பண்ணேகள் அமைப்பதற்கான இயக்கம் துவங்கியதும் தானுபாய் முழு மூச்சு டன் அதில் ஈடுபட்டான். விவசாயியின் புது வாழ்வுக்காக, யாவற்றையும்—நிலம், ஆடுமாடு

கள், தமது முயற்சிகள், கனவுகள் ஆகிய யாவற்றையும்—அனைவருக்கும் உரித்தான பொதுவுடைமை ஆக்குவதற்காகப் போராடுவோரில் அவன் முதல் வரிசையில் நிற்க வேண்டாமா? குலாக்குகள் ஒழிக! கடுமையான நடவடிக்கைகளுக்குரிய காலம் அது. கடுங் காற்றுகள் வீசின. நாள் முழுதும் குதிரைமீது அங்கும் இங்கும் ஓடோடிச் சென்று வேலை செய்தான். கூட்டங்களும் மாநாடுகளும் இரவு நெடுநேரம் வரை நடைபெற்றன. குலாக்குகளின் பட்டியல்களைத் தயாரித்தனர். நிலச்சுவான்தார்கள், முல்லாக்கள், செல்வந்தர்கள் இவர்கள் எல்லோரும் நிலத்திலிருந்து களை பிடுங்கப்படுவது போல வேரோடு பிடுங்கியெறியப்பட வேண்டும். புதிய பயிர்களுக்காக நிலத்தைத் தயார் செய்தாக வேண்டும். கூட்டங்களுக்காகவும் மாநாடுகளுக்காகவும் தானுபாய் குதிரையின் மீது அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருக்கையில் அவனுடைய அண்ணன் தன் சொந்த வழியில் வாழ்க்கையில் முன்னேறிக் கொண்டிருந்தான். ஒரு விதவையை மணம் புரிந்து கொண்டான், சொந்த வீட்டைப் பெற்றுக் கொண்டான். ஒரு பசு, சில ஆடுகள், இரு குதிரைகள், கறவைக் குதிரை, அதன் குட்டி இவ்வாறு அவனிடம் கால்நடைகளும் சில இருந்தன. கலப்பையும் பரம்படிக் கருவிகளும் மற்றும் சில கருவிகளும் அவனிடம் இருந்தன. அறுவடைக் காலத்தில் கூலிக்கு ஆட்களை அமர்த்திக் கொண்டான். அவனைப் பணக்காரன் என்று

சொல்லமுடியாது. ஆனால் அவன் ஏழையுமல்ல. நன்றாக வாழ்ந்தான், கடுமையாக உழைத்தான்.

கிராம சோவியத்தின் கூட்டம் ஒன்றில் குலுபாய் குறித்து விவாதம் தொடங்கியபோது சோரோ கூறினான்:

''தோழர்களே, இங்கு நம்முன்னே ஒரு பிரச்சினை எழுகிறது. குலுபாயை உடைமை நீக்கம் செய்வதா, இல்லையா என்பதே பிரச்சினை. குலுபாய் போன்றவர்களைக் கூட்டுப் பண்ணை பயன்படுத்திக் கொள்ள முடியும். இந்த ஆள் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன், சோவியத் அரசாங்கத்தின் எதிரியாக இருந்தவனல்ல.''

அங்கே பல்வேறு அபிப்பிராயங்கள் கூறப்பட்டன. சிலர் ஒத்துக் கொண்டனர், சிலர் ஒத்துக் கொள்ளவில்லை. தானபாய் ஒருவன் மட்டும் இன்னும் ஒன்றும் சொல்லாமலிருந்தான். மௌனமாக உட்கார்ந்திருந்தான். ஒன்றுவிட்ட அண்ணன் என்றாலும் குலுபாய் அவன் அண்ணன் தான். சமீபகாலத்தில் இருவரும் அதிகமாக சந்திப்பதில்லைதான். இருவரும் தம் சொந்த விவகாரங்களில் மூழ்கியிருந்தனர். ஆயினும் இருவருக்கிடையிலும் நல்லுறவு நிலவிற்று.

''குலுபாய்மீது கைவைக்கக் கூடாது'' என்று தானபாய் சொல்லிவிடலாம். ஆனால் ஏனையோரைப் பற்றி அவர்கள் எப்படி முடிவு செய்வது? ஒவ்வொரு ஆளுக்கும் பரிந்து பேச உறவினன் ஒருவன் கிடைத்து விடுவானே. ''நீங்களே முடிவு செய்யுங்கள்'' என்று சொல்லலாம்.

ஆனால் தான் ஒரு கோழை என்றல்லவா நினைப் பார்கள்?

தானுபாய் பேசுவதற்காக அவர்கள் காத்திருந் தனர். தன் அபிப்பிராயத்துக்காகக் காத்திருக் கிறார்கள் என்பதைக் கண்டு அவன் பரபரப் படையலானான்.

''சோரோ, எப்பொழுதுமே நீ இப்படித் தான்'' என்று தானுபாய் எழுந்து நின்று கூறினான். ''படித்தவர்களைப் பற்றி செய்தியேடு களில் எழுதுகிறார்களே, அவர்களை என்ன பெயர் சொல்லிக் குறிப்பிடுகிறார்கள்—ஆம், அறிவுத் துறையாளர்கள். நீயும் அறிவுத் துறையாளன் தான். உன்னால் ஒருபோதும் உறுதியான முடிவுக்கு வர முடியாது. தப்பாகிவிடுமோ என்று எப்பொழுதும் உனக்குப் பயம். இங்கே சஞ்சலத்துக்கு இடம் ஏது? பட்டியலில் குலு பாயின் பெயர் இருக்கிறது, ஆகவே அவன் குலாக் குதான், சந்தேகமில்லை. கருணைக்கு இடமில்லை! சோவியத் ஆட்சியதிகாரத்தைப் பாதுகாக்கும் பொருட்டு நான் என் தந்தையைக்கூட சும்மா விட மாட்டேன். அவன் என் அண்ணன் என்று தயங்க வேண்டாம். உன்னால் முடியாவிடில், நானே அவனை உடைமை நீக்கம் செய்கிறேன்.''

மறுநாள் குலுபாய் அவனிடம் வந்தான். தானுபாய் அவனைத் தனது அண்ணனாகவே பாவிக்கவில்லை, கை குலுக்குவதற்குக்கூட கை நீட்டவில்லை.

''என்னை உடைமை நீக்கம் செய்ய விரும்பு கிறாயாமே, ஏன்? நாம் இருவரும் கூலியாட்

களாக வேலை செய்யவில்லையா? நிலச்சுவான் தார் நம்மை ஏமாற்றி இருவரையும் துரத்த வில்லையா?''

''அதெல்லாம் அந்தக் காலம். இப்பொழுது நீயே பணக்கார நிலச்சுவான்தாராகிவிட்டாய்.''

''நான் ஒன்றும் பணக்காரனல்ல. எல்லாம் பாடுபட்டு உழைத்துச் சம்பாதித்தது. இருப் பதைக் கொடுத்துவிடுகிறேன். எல்லாவற்றையும் எடுத்துக் கொள். ஆனால் என்னை ஏன் ஒரு குலாக் ஆக்கப் பார்க்கிறாய்? தானுபாய், உனக்கு மனச்சாட்சி இல்லையா?''

''அதெல்லாம் உதவாது. நீ பகை வர்க்கத்த வன். கூட்டுப் பண்ணையை அமைக்க உன்னை நாங்கள் ஒழித்தாக வேண்டும். நீ எங்கள் பாதை யில் குறுக்கே நிற்கிறாய், உன்னை அகற்றியாக வேண்டும்...''

அது அவர்கள் கடைசி முறையாகப் பேசியது. அதன்பின் கடந்த இருபது ஆண்டுகளில் அவர் கள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. குலுபாய் சைபீரியாவுக்குக் கடத்தப்பட்டபோது கிராமம் பூராவிலும் பேசப்பட்ட பேச்சுக்கும் அடிபட்ட வதந்திகளுக்கும் அளவே இருக்காது.

மக்கள் இதைப் பற்றி ஆளுக்கொரு விதமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். இரண்டு பாது காப்புப் படையினர் குலுபாயை கிராமத்திலி ருந்து கூட்டிச் சென்றபொழுது அவன் குனிந்த தலை நிமிராமல், எதையுமே பார்க்காமல் யாரிடமும் விடைபெற்றுக் கொள்ளாமல் போன தாகப் பேசிக் கொண்டார்கள். அவர்கள்

கிராமத்துக்கு வெளியே வயல்கள் இருக்கும் பாதையில் சென்றபொழுது குலுபாய் வயல் களைப் பார்த்தான். கூட்டுப் பண்ணையில் முதல் தடவை குளிர்கால விவசாயம் நடைபெற் றிருக்கிறது. அந்த இளம் கோதுமைக் கதிர்கள் செழுமையாக வளர்ந்திருந்தன. அவன் அந்த கோதுமைக் கதிர்கள் மீது குதித்தான். அவற்றை வேரோடு பிடுங்கிக் காலின் கீழே போட்டு மிதித்தான். பொறியில் அகப்பட்ட பிராணி யைப் போல அந்த இடத்தில் குதித்தான். அவனை அங்கேயிருந்து இழுத்துக் கொண்டு பிரயாணத்தைத் தொடர்வது பாதுகாப்புப் படையினருக்குப் பெரும்பாடாக இருந்தது. அவன் போகும் பொழுது வெறியோடு கத்தினன், 'தாஹுபாய் நாசமாய்ப் போக!' என்று சபித் தான் என்று மக்கள் பேசிக் கொண்டார் கள்.

தாஹுபாய் இதை அவ்வளவு சுலபமாக நம்பிவிடவில்லை. ''எதிரிகளுடைய பிரச்சாரம். எனக்குப் பைத்தியம் பிடிக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். இந்த வீண் பேச் செல்லாம் நாசமாய்ப் போகட்டும்!'' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

தாஹுபாய் அறுவடைக்குச் சிறிது முன்பாக குதிரை மீது உட்கார்ந்து கொண்டு அதே வயல்களைச் சுற்றி வந்தான். அந்த வருடத்தில் கோதுமைப் பயிர் நன்கு வளர்ந்து முற்றி யிருந்தது. ஒவ்வொரு கதிரிலும் ஏராளமான

தானியங்கள் இருந்தன. குலுபாய் இளம் கோதுமைக் கதிர்களைப் பிடுங்கிக் காலின் கீழே போட்டு மிதித்து வெறியுடன் கத்திய இடத்துக்கு அவன் வந்துவிட்டான். அந்த இடத்தைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் கோதுமைப் பயிர் கற்சுவரைப் போல உறுதியாக நின்று கொண்டிருந்தது. ஆனால் அங்கே மாடுகள் மிதித்து நசுக்கியதைப் போல கோதுமைப் பயிர் காய்ந்து களை மண்டிக் கிடந்தது. அதைப் பார்த்த தானுபாய் உடனே குதிரையை நிறுத்தினான்.

''கொலைகாரப் பாவியே!'' என்று அவன் ஆத்திரத்தோடு கத்தினன். ''கூட்டுப் பண்ணையின் கோதுமைப் பயிருக்கு எதிராகப் புலம்பினையே. அப்படியானல் நீ குலாக்குதான். சந்தேகமே வேண்டாம். உனக்கு வேறு பெயர் கிடையாது...''

அவன் குதிரை மீது உட்கார்ந்தபடியே அமைதியாகக் கவலையோடு அந்த இடத்தில் நெடு. நேரம் இருந்தான். அவன் இதயத்தில் கனத்த சிந்தனைகள். அவன் திடீரென்று புறப்பட்டான். அந்த இடத்தைத் திரும்பியே பார்க்கவில்லை. கோதுமைப் பயிர் அறுவடை செய்யப்பட்டு அரிதாள் மாடுகளின் குளம்புகளில் அரைபட்டு மண்ணோடு மண்ணாகச் சேருகின்ற வரையிலும் அவன் அந்த இடத்துக்கு மறுபடியும் வரவில்லை.

அன்று மிகச் சிலர்தான் தானுபாயை ஆதரித்துப் பேசினர். மிகப் பெரும்பாலோர் அவனைக்

கண்டித்தனர். ''அவனைப் போன்ற சகோதரன் ஒருவன் வாய்க்கக் கூடாதென்று கடவுளை வேண்டிக் கொள்கிறேன். அதைவிட உறவினன் யாருமே இல்லாமற் போவதுதான் நல்லது.'' சிலர் இதை அவன் எதிரிலேயே கூறினர். ஆம், மக்கள் அன்று தானுபாயை பகிஷ்கரித்தனர். பகிரங்கமாக அப்படிச் செய்யவில்லைதான். ஆனால் மீண்டும் தேர்ந்தெடுக்க வேண்டிய நேரம் வந்ததும் ஒதுங்கி நின்றுவிட்டனர். இவ்விதம் தானுபாய் படிப்படியாக எல்லாப் பதவியிலிருந்தும் நீக்கப்பட்டான். குலாக்குகள் கூட்டுப் பண்ணைகளைத் தீக்கு இறையாக்கினர், விவசாயிகளைக் கொலை புரிந்தனர் என்று கூறி தனது செயல்கள் நியாயமே என்று தனக்குத் தானே அவன் கூறிக் கொண்டான். இன்னும் முக்கியமாகக் கூட்டுப் பண்ணை பலமடைந்து சென்றது, நிலைமை ஆண்டுக்கு ஆண்டு மேம்பட்டு வந்ததென்று நியாயம் கூறிக் கொண்டான். கிராமத்தில் வேறொரு வாழ்க்கை முறை நிலை பெற்றுவிட்டது. தாம் செய்தது எதுவும் வீணாகிவிடவில்லை.

ஒரு சிறு விவரமும் பாக்கியின்றி இவை அனைத்தும் தானுபாயின் நினைவிலே தெரிந்தன. கூட்டுப் பண்ணைகள் நிறுவப் பெற்று பலமடைந்து வந்த அந்த அரும் பெரும் காலத்திலே அவனுக்குத் தன் வாழ்வு அனைத்துமே அடங்கிவிட்டதாகத் தோன்றியது. அக்காலத்திய பாட்டுகளும், பண்ணைக்கு முதன் முதலாகக் கிடைத்த சிறிய லாரியும், அதில் அவன் இரவிலே செங்

கொடியை ஏந்திப் பிடித்து நின்றதும் மீண்டும் அவன் நினைவுக்கு வந்தன.

தானுபாய் அன்று இரவு கொட்டகையினுள் தனது சோகச் சிந்தனைகளில் மூழ்கித் தனது சோக வேலைகளைச் செய்த வண்ணம் தட்டுத் தடுமாறிக் கொண்டு அங்குமிங்கும் விரைந்து கொண்டிருந்தான். இன்று யாவும் குலைந்து போகக் காரணம் என்ன? ஒருவேளை தவறு செய்துவிட்டார்களோ? தவருன பாதையில் சென்றுவிட்டார்களோ? இல்லை, அப்படி இருக்க முடியாது, முடியவே முடியாது! பாதை சரியானதுதான். அப்படியென்றால் தவறு என்னவாம்? வழி தவறிவிட்டார்களா? விலகியா போய் விட்டார்கள்? எப்பொழுது, எப்படி நடை பெற்றது அது? வேலைகளைப் பற்றிய வாக்குறுதிகளை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாமே. அவற்றை ஒரு புத்தகத்தில் எழுதிக் கொள் கிருர்கள்—இன்று செய்யப்படுவது அவ்வளவு தான். வாக்குறுதி கொடுத்தவன் அதை நிறைவேற்றுவது குறித்து யாரும் கவலைப் படுவதாகக் காணும். அன்றெல்லாம் சிவப்புச் செய்திப் பலகை ஒன்றும் கறுப்புச் செய்திப் பலகை ஒன்றும் இருக்கும். யார் யார் கறுப்புப் பலகையில் குறிக்கப்பட்டிருக்கிருர்கள், யார் யார் சிவப்புப் பலகையில் குறிக்கப்பட்டிருக் கிருர்கள் என்று அன்ருடம் எல்லோரும் பேசுவார்கள், வாக்குவாதம் புரிவார்கள். அன்று அது முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. இப்பொழுது அதெல்லாம் பழங் கால வரலாறு

என்கிறார்கள். அதற்குப் பதிலாக இப்பொழுது அளிக்கப்படுவது என்ன? வெற்றுப் பேச்சுகளும் வாக்குறுதிகளும் தவிர வேறு ஒன்றும் இல்லை. மெய்யானது ஒன்றும் இல்லை. ஏன் இப்படி? குற்றம் யாருடையது?

சோர்வூட்டிய இந்தச் சிந்தனைகள் அவனை ஓய்ந்து ஒடுங்கச் செய்தன. களைப்புற்றுப் போய் அக்கறையின்மையாலும் செயலற்ற அசதியாலும் அவன் பீடிக்கப்பட்டான். எதிலும் அவன் நாட்டங்கொண்டு ஈடுபட முடியவில்லை. தலை வலித்தது. தூங்க விரும்பினான். தனது உதவியாளான இளம் பெண் சுவரில் சாய்ந்து கொண்டதைக் கண்டான். சுரந்து போன அவளது கண்ணிமைகள் தூங்கக் கூடாதென அவள் செய்த முயற்சியையும் மீறி மூடிக் கொண்டு விட்டன. பிறகு மெள்ளக்கீழே நழுவி முடிவில் தரையில் அமர்ந்து முழங்காலில் தலையைச் சாய்த்துக் கொண்டு தூங்கிவிட்டாள். அவளை அவன் எழுப்பவில்லை. அவனும் சுவரில் சாய்ந்து கொண்டான். அவனும் மெள்ளக் கீழே நழுவிச் செல்லத் தலைப்பட்டான். அவனால் எதிர்த்து நிற்க முடியவில்லை, அவன் தோள்களை அழுத்தி மேலும் மேலும் அவனை நழுவச் செய்த அந்தப் பெருஞ் சுமையை அவனால் உலுக்கி உதற முடியவில்லை...

அடித் தொண்டையிலிருந்து எழுந்த ஒரு கூச்சலையும் பலத்த தொப்பென்ற ஓசையையும் கேட்டு அவன் விழித்துக் கொண்டான். ஆடுகள் பீதியுடன் அவன் கால்கள் மீது விழுந்தடித்துச்

சிதறியோடின. பொறி கலங்கிய நிலையில் அவன் குதித்தெழுந்தான். பிறகு பார்வை தெளிவடையலாயிற்று.

''தானுபாய்! தானுபாய்! தூக்கி விடு!'' என்று அவன் மனைவி கத்தினாள்.

இரு உதவியாளர்களும் அவளிடம் ஓடினர். தானுபாயும் ஓடினான். உத்திரம் கீழே விழுந்து அதற்கடியில் ஜெய்தார் கிடந்தாள். தகர்ந்து வந்த சுவரிலிருந்து அதன் முனை நழுவிவிட்டது. மடித்துப் போன கூரையின் கனம் தாங்காமல் உத்திரம் கீழே விழுந்துவிட்டது. அவனுக்குத் தூக்கம் பறந்தோடிவிட்டது.

''ஜெய்தார்!'' என்று கத்தினான். தோளை உத்திரத்துக்கு அடியில் கொடுத்து வெடுக்கென்று தூக்கினான்.

ஜெய்தார் அதனடியிலிருந்து வெளியே ஊர்ந்து வந்து வலி பொறுக்க மாட்டாமல் முனகினாள். பெண்கள் இருவரும் அவள்மீது கவிழ்ந்து கொண்டு புலம்பினர். எலும்புகளைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தனர். தானுபாய் அரண்டு விட்டான், இருவரையும் தள்ளிவிட்டு நடுங்கும் கைகளால் ஸ்வெட்டருக்கு அடியில் தன் மனைவியின் உடம்பைத் தடவிப் பார்த்தான்.

''என்ன ஆயிற்று? எங்கே வலிக்கிறது?''

''முதுகில்! ஐயோ, முதுகு, முதுகு!''

''தூக்குங்கள்!'' என்று சொல்லித் தனது மழைக் கோட்டைக் கிழித்துப் போட்டான். அதன் மேல் ஜெய்தாரைத் தூக்கி வைத்து அவளைக் கொட்டகையிலிருந்து வெளியே தூக்கிச் சென்றனர்.

கூடாரத்துக்குள் கொண்டு போய் எங்கே காயம் என்று பரிசோதனை செய்தனர். கண்ணுக்குத் தெரியும்படியான காயங்கள் இல்லை. ஆனால் கடுமையான அடி பட்டிருந்தது. அவளால் அசைய முடியவில்லை.

ஜெய்தார் அழத் தொடங்கிவிட்டாள்.

''இனி நீ என்ன செய்வாய்? இந்த நேரம் பார்த்து எனக்கு இப்படி ஆகிவிட்டதே. நீ எப்படிச் சமாளிப்பாய்?''

''அட தெய்வமே! உயிர் பிழைத்தோமே என்று மகிழாது எதைப் பற்றியோ கவலைப் படுகிறளே!'' என்று தாஞபாய் தனக்குள் கூறிக் கொண்டான். ''எல்லாம் தகர்ந்து விழுந்து நாசமாய்ப் போனலும் கவலை இல்லை! ஜெய்தார், நீ மட்டும் நல்லபடி ஆகிவிட்டால் போதும்!..''

''ஜெய்தார், அதெல்லாம் கவலைப்படாதே, நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்'' என்று அவள் கூந்தலை வருடியபடி அவளிடம் கூறினன். ''நீ நல்லபடி ஆகணும், அது ஒன்றுதான் கவலை!.. வேறு எதுவும் முக்கியமல்ல, நீ கவலைப் படாதே! நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்.''

முதல் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டதும் மூவருமாகச் சேர்ந்து ஜெய்தாருக்கு ஆறுதல் கூற முயன்றனர். அவர்கள் கூறியதைக் கேட்டு அவள் தெம்படைந்து கண்ணீரின் ஊடே சிரித்துக் கொண்டாள்.

''சரி, என்மேல் கோபப்படாதே. அதிக நாள் படுக்கையில் இருக்க மாட்டேன். இரண்

டொரு நாளில் எழுந்து வந்துவிடுகிறேன்'' என்றாள்.

பெண்கள் இருவரும் அவளுக்குப் படுக்கை தயாரித்து அவளைப் படுக்க வைத்துவிட்டுக் கணப்படுப்பில் தீ மூட்டினர். தாணுபாய் பெரிய விபத்திலிருந்து மயிரிழையில் தப்பினோ மென்பதை இன்னமும் நம்ப முடியாதவனாய்க் கொட்டகைக்குத் திரும்பினான்.

வெண்ணிறக் காலை அது. யாவும் பொச பொசப்பான புதிய வெண்பனியால் மூடப்பட் டிருந்தன. கொட்டகையில் ஓர் உத்திரத்துக் கடியில் மறி ஒன்று நசுங்கிச் செத்துக் கிடந் ததைக் கண்டான். முன்பு பரபரப்பிலும் திகிலிலும் யார் கண்ணிலும் இது படவில்லை. இறந்த போன ஆட்டின் மடியில் அதன் குட்டி முட்டி முகர்ந்து கொண்டிருந்தது. தாணு பாய் மேலும் பீதியுற்றான், அதேபோதில் தன் மனைவி தப்பினாளே என்று மேலும் ஆறுத லடைந்தான். தாயை இழந்த குட்டியைத் தூக்கிக் கொண்டு அதற்குப் பால் தரக் கூடிய வேறொரு தாய் ஆட்டைத் தேடி நடந்தான். பிற்பாடு தன் மனைவி எப்படி இருக்கிறாளென்று போய்ப் பார்த்து விட்டு வர வேண்டுமென்று நினைத்தவாறு உத்திரத்தைத் தூக்கி அதற் கடியில் உதைகால் கொடுத்து நிறுத்தினான்; சுவருக்கும் அண்டைக் கொடுத்தான்.

'கொட்டகையிலிருந்து வெளியே வந்ததும் மெதுவாக வெண்பனிப் பரப்பு வழியே ஆட்டுக் கிடை ஒன்று வருவதைப் பார்த்தான். மேய்ச்

சல்காரன் ஒருவன் அதைத் தன்னை நோக்கி ஓட்டி வரக் கண்டான். யாருடைய கிடை? அதை ஏன் இங்கே ஓட்டி வருகிறான்? இரண்டு கிடைகளின் ஆடுகளும் கலந்து போய்விடுமே. ஏன் இப்படிச் செய்கிறான்? இன்னொருவன் பிரதேசத்துக்குள் கிடையைக் கொண்டு வராதே என்று வந்து கொண்டிருந்த ஆளை எச்சரிப்பதற் காக அவனிடம் நடந்தான்.

அருகே சென்றதும் பெக்தாய் என்பது தெரிந் தது.

''யார், பெக்தாயா?'' என்று கத்தினான்.

பதில் இல்லை. பெக்தாய் வாய் பேசாமல் கம்பால் ஆடுகளின் முதுகில் அடித்து கிடை யைத் தானபாயை நோக்கி ஓட்டி வந்தான். ''பித்தா பிடித்துவிட்டது? சினை ஆடுகளை அடிக்கிறானே!'' தானபாய் திகைத்துப் போய் விட்டான்.

''வணக்கம், எங்கிருந்து வருகிறாய்? எங்கே போகிறாய்?'' என்று கேட்டான்.

''இனி எந்நாளும் நீ என்னை எங்கே காண முடியாதோ அங்கிருந்து வருகிறேன். எங்கே போகிறேன் என்பதை நீயே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்'' என்று சொல்லி பெக்தாய் நெருங்கி வந்தான். அவன் இடுப்பில் இறுகக் கயிறு கட்டப்பட்டிருந்தது. மழைக் கோட்டி னுள் கையுறைகளைச் சொருகி வைத்திருந்தான்.

கம்பை முதுகுக்குப் பின்னால் வைத்துக் கொண்டு தானபாயின் எதிரே வந்து நின்றான். கோபமாகத் துப்பிவிட்டு, துப்பியதைக் காழ்ப்

புடன் காலால் மிதித்து வெண்பனிக்குள் அழுத்தினுன். தலையைப் பின்புறம் சாய்த்துக் கொண்டு நின்ருன். அவனுடைய முகம் கரிய தாடியால் கறுத்துத் தோன்றியது. இளைஞனின் அழகான முகத்தில் அந்தத் தாடி ஒட்டி வைக்கப்பட்ட மாதிரி இருந்தது. அவன் கண்களில் வெறுப்பும் சவாலும் பளிச்சிட்டன. மீண்டும் காறித்துப்பி விட்டு கிடையை நோக்கிக் கோலை ஆட்டினுன்.

''இதோ இருக்கிறது. உன்னுடையது இது. வேண்டுமானுல் எண்ணிப் பார்த்துக் கொள். முன்னூற்று எண்பத்தைந்து ஆடுகள் இருக்கின்றன.''

''என்ன இதெல்லாம்?''

''நான் போகிறேன்.''

''போகிருயா? எங்கே?''

''தெரியாது எனக்கு.''

''ஏன் கிடையை என்னிடம் கொண்டுவந்து விடுகிருய்?''

''நீதானே எனக்குப் பொறுப்பேற்றுக் கொண்ட ஆள், அதனுல்தான்.''

''அதனுல் என்னவாம்? இரு, இரு! எங்கே போகிருய்?'' இப்பொழுதுதான் தானுபாய்க்கு நிலைமை புரிந்தது. இரத்தம் அவன் தலைக்கேறியது, உடம்பெல்லாம் சுட்டது, அவனுல் பேச முடியவில்லை. ''இதை எப்படிச் செய்யலாம் நீ?'' என்று பரிதாபமான குரலில் முணுமுணுத்தான்.

''போதும் இது! இந்த அசட்டு வாழ்க்கை வேண்டாம் எனக்கு.''

''நீ என்ன சொல்கிறாய் என்பது உனக்கு விளங்குகிறதா? உன் ஆடுகள் இரண்டொரு நாட்களில் குட்டி போட ஆரம்பித்துவிடும். எப்படி நீ இவற்றை விட்டுவிட்டுப் போகலாம்?''

''நம்மை அவர்கள் இவ்வாறு நடத்தினால் நாமும் அவர்களிடம் இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும். போய் வருகிறேன்!''—பெக்தாய் தனது கோலைத் தலைக்குமேல் சுழற்றித் தொலைவிலே வீசியெறிந்துவிட்டு நடந்தான்.

தானுபாய் கல்லாய்ச் சமைந்து விட்டான். பேச்சு வரவில்லை. பெக்தாய் திரும்பிப் பார்க்காமலே நடந்து போய்க் கொண்டிருந்தான்.

''பெக்தாய், இரு, இரு!'' தானுபாய் அவன் பின்னால் ஓடினான். ''நீ போகக் கூடாது. நீயே சிந்தித்துப் பார், இது சரியல்ல! நான் சொல்வது காதில் விழுகிறதா?''

''என்னைப் போக விடு!'' பெக்தாய் வெடுக்கென்று திரும்பினான். ''நீ சிந்தித்துக் கொள், வேண்டிய மட்டும். நான் ஏனையோரைப் போல வாழ விரும்புகிறேன். அவர்களைவிட நான் எவ்வகையிலும் சப்பை இல்லை. நானும் நகருக்குப் போய் வேலை செய்ய முடியும். சம்பளம் கிடைக்கும். இந்த ஆடுகளுடன் இருந்து நான் ஏன் என் வாழ்வை வீணாக்க வேண்டும்? தானியம் இல்லை, கொட்டகை இல்லை, ஒட்டுக் கம்பளிக் கூடாரம் இல்லை. நான் போகிறேன். நீ இந்தச் சாணிக் குழியில் மூழ்கி உயிரை விடு. போய் உன்னையே நீ பார்த்துக் கொள், எப்படி இருக்

கிறாய் என்று போய்ப் பார். இங்கேயே நீ மடியப் போகிறாய். அப்போதும் புத்தி வராது உனக்கு. தொடர்ந்து கோஷங்களை முழங்கிக் கொண்டிருப்பாய். உன்னை ஏனையோரும் பின் தொடர வேண்டும் என்கிறாய். இந்தப் பைய னிடம் பலிக்காது அது! போதும், நான் பட்டது போதும்!'' அவன் காலைத் தட்டி அழுத்தி நடந்தான். தூய புதிய வெண்பனியில் ஆழப் பதிந்த அவன் காலடிச் சுவடுகளில் உடனே நீர் நிறைந்து கறுத்துவிடும்படி அப்படி ஆவேச மாக அழுத்தி நடந்தான்...

''பெக்தாய்! நான் சொல்வதைக் கேள்!'' என்று கூறித் தானுபாய் அவனிடம் ஓடினான். ''விளக்கிச் சொல்கிறேன் கேள்.''

''உன்னுடைய விளக்கத்தை வேறு யாரிட மாவது போய்ச் சொல்லு. காது கொடுத்துக் கேட்க முட்டாள்கள் யாராவது இருப்பார்கள்!''

''நில், பெக்தாய்! உன்னுடன் நான் பேச வேண்டும்.''

ஆனால் பெக்தாய் நிற்காமல் நடந்து கொண் டிருந்தான்.

''நீ சிறையில் தள்ளப்படுவாய்!''

''இது போல வாழ்வதைவிட சிறைக்குச் செல்வது எவ்வளவோ நல்லது!'' என்று கூறிய படி பெக்தாய் திரும்பாமலே நடந்தான்.

''நீ ஓடுகாலி!''

பெக்தாய் நடந்து கொண்டே இருந்தான்.

''போர் முனையிலே உன்னைப் போன்ற ஓடு காலிகள் சுடப்பட்டனர்!''

அவன் நிற்கவில்லை.

''நில்! காதில் விழுகிறதா?'' தானுபாய் அவன் கோட்டின் கையைப் பிடித்துக் கொண்டான்.

பெக்தாய் உதறித் தள்ளிவிட்டுத் தொடர்ந்து நடந்தான்.

''நான் உன்னைப் போக விட மாட்டேன். போக உனக்கு உரிமை இல்லை!'' என்று சொல்லித் தானுபாய் அவன் தோளைக் கெட்டியாகப் பிடித்து ஆளைத் திருப்பினான். பனி மூடிய சிகரங்கள் திடுமென அதிர்ந்தாடி இருளில் கலந்துவிட்டன. எதிர்பாராத வகையில் தாடையில் விழுந்த குத்து தானுபாயை வீழ்த்திவிட்டது.

கிறுகிறுத்துச் சுழன்ற தலையைத் தானுபாய் உயர்த்திப் பார்த்தபோது பெக்தாய் மேட்டுக்குப் பின்னால் மறைந்துவிட்டான்.

சோகத் தோற்றமளித்த கரிய சுவடுகள் அவனைப் பின்தொடர்ந்து தொலைவினுள் சென்றன.

''இவன் என்ன ஆவான், தெரியவில்லையே?'' என்று முனகியவாறு கால்களையும் கைகளையும் ஊன்றித் தானுபாய் எழுந்து நின்றான். அவன் கைகளில் மண்ணும் வெண்பனியும் ஒட்டிக் கொண்டிருந்தன.

அவன் மூச்சை இழுத்துவிட்டு பெக்தாயின் கிடையை ஒன்று திரட்டி, சோர்ந்து போய் அதை ஆட்டுப்பட்டியை நோக்கி ஓட்டிச் சென்றான்.

# 17

குதிரைகளில் இருவர் கிராமத்திலிருந்து புறப்பட்டு மலைகளை நோக்கிப் போய்க் கொண்டிருந்தனர். ஒருவர் பொன்னிறப் பிடரி கொண்ட செக்கர் மேனிக் குதிரையிலும் மற்றவர் கருஞ்சிவப்புக் குதிரையிலும் சென்றனர். நெடுந்தூரப் பயணமாதலால் குதிரைகளின் வால்கள் கட்டி முடி போடப்பட்டிருந்தன. குதிரைகளின் குளம்புகளுக்கு அடியிலிருந்து மண்ணும் வெண்பனியும் சிதறியோடின.

குல்சாரியின் லகான் இழுத்துப் பிடிக்கப்பட்டிருந்தது. அது மிடுக்குடன் குலுங்கா நடை போட்டு விரைந்து சென்று கொண்டிருந்தது. எஜமானன் உட ல் நலமடைந்து படுக்கையை விட்டு எழுந்து வருவதற்காக லாயத்தில் பல நாட்களாகக் காத்துக் கிடந்து விறைத்துப் போயிருந்த குல்சாரி ஆசை தீர ஓடிற்று. ஆனால் இப்பொழுது அதன் மீது சவாரி செய்தது அதன் எஜமானன் அல்ல, தோல் கோட்டும் அதன்மேல் கான்வஸ் மழைக்கோட்டும் போட்டிருந்த புது ஆள் ஒருவர் சவாரி செய்தார். அவருடைய ஆடைகளிலிருந்து வர்ணம், ரப்பர் இவற்றின் வாசனை அடித்தது. சோரோ அவருக்குப் பக்கத்தில் கருஞ்சிவப்புக் குதிரையில் சென்றான். வட்டாரத் தலைமையிடத்திலிருந்து வந்த முக்கியஸ்தர்களை அவன் குலுங்கா நடையான்மீது சவாரி செய்யச் சொல்வது வழக்கம். தன்மீது யார் சவாரி செய்கிறார்கள் என்று குல்

சாரி கவலைப்படுவதில்லை. மந்தையிலிருந்தும் அதன் முதலாவது எஜமானனிடமிருந்தும் பிரிக்கப்பட்டபின் எத்தனையோ பேர் அதன்மீது சவாரி செய்திருப்பார்கள். அன்பானவர்கள், அற்பர்கள், நன்கு சவாரி செய்வோர், அவந் தரையாய்ச் சவாரி செய்வோர்—இவ்வாறு எல்லா வகையினரும் அதன்மீது அமர்ந்திருப் பார்கள். சில அகம்பாவிகளும் அதன்மீது சவாரி செய்ததுண்டு. சேணத்தில் அமர்ந்திருக் கையில் இவர்களுக்கு அகம்பாவம் தலைக்கு ஏறிவிடும். குலுங்கா நடையான் வேகமாகப் பறந்தோடுகையில் இவர்கள் வெடுக்கென இழுத்து அதைப் பின்னங்காலில் உயர்ந்து நிற்கச் செய் வார்கள், பிறகு சவுக்கை வீசி மறுபடியும் ஓடச் செய்து திரும்பவும் குலுக்கி இழுத்து நிறுத்து வார்கள். குலுங்கா நடையான்மீது தாம் செல் வது எல்லோர் கண்ணிலும் பட வேண்டும் என்பது ஒன்றைத் தவிர வேறு எனதப் பற்றி யும் கவலை இல்லாதவர்கள். இவை போன்ற பலவற்றுக்கும் குல்சாரி பழக்கப்பட்டதாகிவிட் டது. அதனால் பொறுக்க முடியாதது ஒன்றே ஒன்றுதான்—லாயத்தில் கட்டுண்டு கிடந்து அழி வது ஒன்றுதான் அதற்குச் சிறிதும் பிடிக்காதது. அதன் அடங்காத பழைய ஆசை இன்னும் அதனுள் உயிர்ப்புடன்தான் இருந்தது—ஓட வேண்டும், ஓடிக் கொண்டே இருக்க வேண்டும் என்று துடிதுடித்தது. சவாரி செய்வது யாரா யிருப்பினும் அதற்குக் கவலையில்லை. சவாரி செய்பவர் தான் இருப்பது எந்தக் குதிரை

என்று கவலைப்படுவார். செக்கர் மேனிக் குதிரை யான குலுங்கா நடையான் தன்னிடம் கொடுக் கப்பட்டிருந்தது என்றால் தன்னை மதிக்கிறார்கள், தன்னைக் கண்டு பயப்படுகிறார்கள் என்று சவாரி செய்கிறவர் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். குல்சாரி வலிவும் வனப்பும் மிக்கது. அதன்மீது சேணத்தில் அமர்ந்திருப்பவர் அச்சம் எதுவு மின்றி இருக்கலாம்.

இப்பொழுது வட்டார வழக்குரை நெறி யாளர் செகிஸ்பாயெவ் குல்சாரியின்மீது அமர்ந் திருந்தார். கூட்டுப் பண்ணையின் வேலை நிலைமை களைப் பார்வையிட்டு வருவதற்காக வட்டார மையம் அவரை அனுப்பி வைத்திருந்தது. கூட்டுப் பண்ணையின் கட்சி நிறுவகர் அவருடன் சென்றதானது அவர்பால் காட்டப்பட்ட மதிப் புக்கும் மரியாதைக்கும் மற்றுமோர் அறிகுறி யாகும். கட்சி நிறுவகர் வாய் திறக்கவே இல்லை. கவலையும் அச்சமும்தான் காரணமா யிருக்கும். ஏனென்றால் குட்டிப் பேறு வேலைகள் சரிவர நடைபெறவில்லை. நிலைமை மிக மோசமாகவே இருந்தது. சரி, மௌனமாகவே வரட் டும். ஆள் அச்சப்படுவது நல்லதுதான். வீண் பேச்சு பேசி வட்டார வழக்குரை நெறியாள ரைத் தொல்லை செய்யத் தேவையில்லை. கீழ் மட்டத்தவர் மேலிடத்தாரிடம் பயபக்தியுடன் தான் நடந்து கொள்ள வேண்டும். இல்லையேல் ஒழுங்கு முறை இருக்காது. தமக்குக் கீழ்ப்பட்ட வர்களுடன் சகஜமாகப் பழகும் அதிகாரிகள் சிலர் உண்டு தான், ஆனால் பிற்பாடு இத்தகை

யோர் கீழ் மட்டத்தவர்களிடம் செம்மையாக அடி வாங்கும் படித்தான் நேரிடும். அதிகாரம் செலுத்துவது சாதாரண காரியமல்ல. முக்கியத் துவமும் பொறுப்பும் வாய்ந்தது அது. எல்லோ ராலும் இதனைச் சமாளிக்க முடியாது.

இவ்வாறு எண்ணியவாறு குலுங்கா நடை யானின் ஓட்டத்துக்கு இசைவான சந்தத்தில் சேணத்திலே அசைந்தாடிக் கொண்டு செகிஸ் பாயெவ் போய்க் கொண்டிருந்தார். மேய்ச்சல் காரர்களின் வேலைகளைப் பார்வையிடுவதற்காக அவர் வந்திருந்தார், நிலைமை மிக மோசமாக இருப்பதை அறிந்திருந்தார் என்றாலும், நெறி யாளரின் மன நிலை நன்றாயில்லை என்று சொல் வதற்கில்லை. குளிர் காலமும் வசந்தமும் ஒன் றோடொன்று மோதிப் போரிட்டுக் கொண்டன. இரண்டில் எதுவும் விட்டுக் கொடுக்காமல் மல்லுக்கு நின்றன. இந்த மோதலால் ஆடு களுக்குத்தான் அதிக சேதம். குட்டிகள் செத்து மடிந்தன, நோஞ்சான்களாகிவிட்ட மறிகள் இறந்து விட்டன. இதை நிறுத்த ஒன்றும் செய்ய முடியவில்லை. வருடந் தவறாமல் இதே கதைதான், எல்லோருக்கும் தெரியும். இருந்த போதிலும் அவர் அரசு அதிகாரியாதலால், யாரையாவது ஒருவரைத் தேடிப் பிடித்து இந்நிலைமைக்குப் பொறுப்பாளியாக்க வேண்டும். இந்த வட்டாரத்தில் ஆடுகளுக்குப் பெருஞ் சேதங்கள் ஏற்பட்டது ஒருவிதத்தில் தனக்கு அனுகூலமானதே என்ற உணர்வு அவருடைய உள்ளத்தின் இருண்ட ஆழ் மட்டங்களில்

இருந்து வந்தது. எப்படியும் கால்நடை வளர்ப்புத் திட்டம் குறித்து நிலவும் நிலைமைகளுக்குப் பொறுப்பு ஏற்க வேண்டியது வட்டார வழக்குரை நெறியாளரும் வட்டாரக் கமிட்டிக் குழுவின் பல உறுப்பினர்களில் ஒருவருமான அவர் அல்ல. முதற் செயலாளர்தான் பொறுப்பு ஏற்க வேண்டியவர். அவர் இவ்வட்டாரத்துக்குப் புதிதாக வந்தவர், அவர் கவலைப்படட்டுமே. செகிஸ்பாயெவைப் பொறுத்தவரை அவர் எல்லாவற்றையும் கவனித்தவாறு சும்மாயிருப்பார். மேலிடத்தவர்களும் கவனித்துக் கொண்டிருப்பது நல்லதுதான். வெளி ஆளைக் கொண்டுவந்து முதற் செயலாளராக நியமித்தது சரிதானு என்ற சந்தேகம் அவர்களுக்கு ஏற்படத் தொடங்கலாமல்லவா? இந்த நியமனம் செகிஸ்பாயெவுக்குக் கிடைத்த ஓர் அடியாகும். பல ஆண்டுகளாக வட்டார வழக்குரை நெறியாளராக இருந்துள்ளோம், நம்பகமான ஆள் என்பதைப் பன்முறை நிரூபித்துக் காட்டியுள்ளோம், அப்படியும் இந்தப் பதவியில் தம்மை நியமிக்காது ஒதுக்கிவிட்டார்களே என்று அவருக்குக் கோபம். போகட்டும், எந்நேரத்திலும் துணை புரியக் கூடிய நம்பிக்கையான நண்பர்கள் அவருக்கு இருந்தனர். ஆம், இனியாவது அவர் கட்சிப் பணியாளராக நியமனம் பெற்ருக வேண்டும் — மிக நெடுங் காலமாக வழக்குரை நெறியாளராக இருந்து விட்டார்... குலுங்கா நடையான் அற்புதமான குதிரைதான். கப்பலில் அசைந்தாடுவது

போல இதமாய் இருக்கிறதே. சகதி, குழி எதனுலும் குதிரையின் வேகத்தைக் குறைக்க முடியவில்லையே. கட்சி நிறுவகரின் கருஞ் சிவப்புக் குதிரைக்கு நுரை பிதுங்குகிறது, ஆனுல் குலுங்கா நடையானிடம் இலேசான வியர்வை யைத் தவிர ஒன்றையும் காணேமே...

சோரோ அவனுடைய சொந்த சிந்தனை களில் மூழ்கியிருந்தான். அவன் தோற்றம் காண்போரைக் கலங்கச் செய்வதாக இருந்தது. வெளிறிட்டுப் போன அவன் முகத்தில் மஞ்சள் படர்ந்திருந்தது, கண்கள் ஆழப் புதைந்திருந் தன. பல ஆண்டுகளாக அவன் இருதயம் அவனைக் கஷ்டப்படுத்தி வந்தது, மேலும் மேலும் கோளாறு கடுமையாகிக் கொண் டிருந்தது. அவன் சிந்தனைகளும் சோர்வையே ஊட்டின. தானுபாய் சொன்னது சரிதான். பண்ணைத் தலைவர் அலட்டிக் கொண்டார், சப்தம் போட்டார், ஆனுல் பயன் ஏதுமில்லை. பெரும் பகுதி நேரத்தை வட்டாரத் தலைமை யிடத்திலே கழித்தார். எந்நேரமும் அங்கே அவருக்கு அப்படி என்ன வேலை? கட்சிக் கூட் டத்தில் இது பற்றி விவாதிக்க வேண்டுமென்று சோரோ நினைத்தான். ஆனுல் வட்டாரத் தலைமையிடத்தில் இருந்தோர் அவனைக் காத் திருக்கும்படிச் சொன்னுர்கள். எதற்காகவாம்? அல்தானெவ் ராஜினுமா செய்ய விரும்புவதாகப் பேச்சு அடிபட்டது, அதனுல்தான் காத்திருக்கச் சொல்கிறுர்கள் போலும். அப்படியானுல் ஏன் இன்னும் அவர் ராஜினுமா செய்யவில்லை?

தானுங்கூட ராஜிஞமா செய்துவிட வேண்டியதுதான். தன்ஞல் ஒன்றும் செய்ய முடியவில்லே. எப்பொழுது பார்த்தாலும் முடியாமல் படுத்துவிட வேண்டியிருந்தது. சோரோவின் மகன் சமான்சுர் கோடை விடுமுறையின் போது வீட்டுக்கு வந்திருந்த போது அவனும் ராஜிஞமா செய்து விடும் படித்தான் ஆலோசனே கூறிஞன். ஆம், செய்துவிடலாம்தான், ஆஞல் மனச்சாட்சி குறுக்கே நின்றது. சமான்சுர் கெட்டிக்காரப் பையன் தான், உலகில் என்ன நடை பெறுகிறதென்று தந்தையைக் காட்டிலும் அவனுக்கு அதிகம் தெரிந்திருந்தது. பண்ணே நிர்வாக முறைகள் குறித்து ஓயாமல் பேசிக் கொண்டிருந்தான். அவர்களுக்குப் பலவும் கற்றுத் தந்தனர். அவர்களுடைய பேராசிரியர்கள் கூறியவை போன்ற நிலேமைகளுக்குரிய நாள் ஒன்று வரலாம்தான். ஆஞல் அது வரை சோரோ உயிருடஞ இருக்கப் போகிருன்? அவன் தனது சுமையிலிருந்து தப்பி ஓடிவிட முடியாது. எவரும் தன்னிடமிருந்தே தப்பி யோடி ஒளிந்து கொண்டுவிட முடியாது. மக்கள் என்ன சொல்வார்கள்? பிரமாதமாக வாக்குறுதிகள் அளித்து அப்படி, இப்படி ஆகிவிடும் என்றெல்லாம் சொல்லி, அவர்களுக்கு நிறைய நம்பிக்கை ஊட்டியிருந்தான். ஆஞல் கூட்டுப் பண்ணேயைக் கழுத்தளவுக்குக் கடனில் மூழ்கச் செய்துவிட்டான். இப்பொழுது தான் ராஜிஞமா செய்துவிட்டு ஓய்வு பெறப் போவ

தாகச் சொல்ல முடியுமா? இல்லே, அவனுக்கு ஓய்வு இருக்க முடியாது, முடியவே முடியாது. இறுதி மூச்சு உள்ளளவும் அவன் தொடர்ந்து பணியாற்றவே வேண்டும். உதவி வரும், இதே போல அதிக காலத்துக்கு நிலேமை நீடிக்க முடியாது. வரக்கூடிய உதவி சீக்கிரமாக வந்தால் எவ்வளவு நன்முயிருக்கும். மெய்யான உதவி வேண்டும், இதோ இந்த ஆளேப் போன்றது அல்ல. ''நீ செய்து வைத்திருக்கும் குளறுபடிக்கு உன்னே விசாரணேக் கூண்டிலே கொண்டு போய் நிறுத்துவோம்'' என்றல்லவா கூறினுர் இந்த ஆள். நிறுத்தட்டுமே! நீதிமன்றத் தண்டனேயால் தீர்வு ஏற்பட்டுவிடாதே. ஆளேப்பார்! இங்கே மலேகளில் இருப்போர் எல்லோரும் பொறுப்பற்றவர்கள், கொடுங் குற்றம் புரிகிறவர்கள், தான் மட்டும் தான் பண்ணேக்காகக் கவலேப்படுகிற ஆள் என்பது போல முகத்தைச் சுளித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்! உண்மையில் எதைப் பற்றியும் கடுகளவுகூடக் கவலேப்படாத ஆள் ஆடம்பரமாக வேஷம் போடுவதைப் பார்! ஆனுல் இதையெல்லாம் சொல்லக் கூடாதே. வாயை மூடிக் கொண்டல்லவா இருந்தாக வேண்டும்.

## 18

மாபெரும் மலேகள் முக்காடிட்ட மாதிரி பனி மூட்டத்துள் பதுங்கி நின்றன. கதிரவனுல் மறக்கப்பட்டு அவை சினங் கொண்ட அசுரர்கள்

போல் நெடிதுயர்ந்து கரிய உருவங் காட்டின. வசந்தம் நலங் கெட்டுச் சோகமாய் இருந் தது. யாவும் ஈரம் தோய்ந்து ஒளியிழந்திருந் தன.

தாஞுபாய் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான். கொட்டகையினுள் குளிரும் இறுக்கமும் ஒருங்கே வருத்தின. ஒரே நேரத்தில் பல ஆடுகள் குட்டி போட்டு வந்தன. குட்டிகளை வைக்க இடமில்லை. குட்டிகளின் கத்தலும் நெரிசலும் தாள முடியவில்லை, பைத்தியம் பிடித்துவிடும் போலிருந் தது.

பசியும் தாகமும் பொறுக்க மாட்டாமல் குட்டிகள் கத்தின. ஈசலைப் போல அவை மடிந்து கொண்டிருந்தன. இவை யாவற்றுக்கும் மேலாக அவன் மனைவி அடிபட்டுப் படுத்தவள் இன்னும் எழுந்திருக்கவில்லை. அவள் எழுந்து உட்கார முயன்றாள், முடியவில்லை. சரி, நடக்கிறபடி நடக் கட்டும். எதிர்த்து நின்று போராட இனி அவனிடம் பலமில்லை.

பெக்தாயைப் பற்றி அடிக்கடி நினைத்துப் பார்த்த வண்ணமிருந்தான். ஒன்றும் செய்வதற் கில்லையே என்று ஆத்திரத்தில் அவனுக்குத் தொண்டை அடைத்துவிடும். பெக்தாய் ஓடிவிட் டானே என்று அவன் ஆத்திரப்படவில்லை, நாசமாய்ப் போனவன் ஒழிந்து தொலையட்டும். மற்ற பறவைகளின் கூட்டில் முட்டையிட்டு ஓடும் கள்ளக் குயிலைப் போல தன் கிடையை சந்தியில் விட்டு ஓடிவிட்டானே என்று அவன் சீற்றமடையவில்லை. அவனுக்குப்பதில் இன்

னொருவனை அனுப்பி அவனுடைய ஆடுகளை மேய்க்கச் சொல்லிவிடுவார்கள். பெத்தாயை வெட்கித் தலை குனிய வைக்க, செத்துப் போய் விடலாமென அவனை நினைக்கச் செய்யக்கூடிய தக்க பதிலை அப்பொழுது தன்னால் அவனிடம் சொல்ல முடியாமற் போயிற்றே என்று தானாபாய்க்கு ஆத்திரம் பொங்கிற்று. பொடிப் பயல்! நேற்று வந்த பொடியன்! வாழ்க்கையெல்லாம் இந்தக் கூட்டுப் பண்ணைக்காகப் பாடுபட்ட முதுபெரும் கம்யூனிஸ்டாகிய தன்னால் அவனிடம் ஒன்றும் சொல்ல முடியாமற் போயிற்றே. கோலைத் தூக்கி எறிந்துவிட்டுப் போனானே, பொடியன்! இது போன்ற ஒன்று நடைபெற முடியுமென்று தானாபாய் கனவிலும் நினைத்திருப்பானா? தனது வாழ்க்கையின் பணியைப் பார்த்து எவனாலும் எள்ளி நகையாட முடியுமென்று நினைத்திருப்பானா?

''சரி, போதும் இந்தச் சிந்தனை!'' என்று தனக்குத் தானே கூறிக் கொள்வான். ஆனால் மறு கணமே அவன் மனம் இதே சிந்தனையில்தான் திரும்பவும் இறங்கும்.

இன்னொரு மறி குட்டி போட்டது. கவர்ச்சி மிக்க இரட்டைக் குட்டிகள். ஆனால் இவற்றை அவன் என்ன செய்வது? மறியின் மடி வற்றிக் காய்ந்திருந்தது. பாலுக்கு எங்கே போவது? இரண்டும் செத்துப் போக வேண்டியவைதானே. இக்கொடுமையை என்னென்பது! செத்து ஜில்லிட்டுப் போன குட்டிகள் அதோ குவிந்து கிடக்கின்றன. அந்தச் சின்னஞ் சிறு சடலங்

களைத் தானுபாய் வாரி வெளியே எடுத்துச் சென்ருன். இரைக்க இரைக்க உள்ளே ஓடி வந்தாள் அவனுடைய மகள்.

''அப்பா, யாரோ தலைவர்கள், இரண்டு பேர் குதிரையிலே வாராங்க.''

''வரட்டும், நீ போய் அம்மாவைப் பார்த்துக் கொள்'' என்று தானுபாய் அடித் தொண்டையில் சொன்ஞன்.

கொட்டகையை விட்டு வெளியே வந்ததும் அவர்கள் வருவதைப் பார்த்தான். ''குல்சாரி வருகிறதே!'' கண்ணுக்கு இனிய காட்சி! அந்தப் பழைய துடிப்பு அவன் இதயத்தில் துள்ளியெழுந்தது. ''எவ்வளவோ காலமாகிறது! ஆனல் வருவதைப் பாரேன், கொஞ்சங்கூட மாற்றம் இல்லையே!'' வந்தவர்களில் சோரோவும் ஒருவன். குல்சாரிமீது வந்த தோல் கோட்டு அணிந்த ஆள் யார் என்று அவனுக்குத் தெரியவில்லை. வட்டாரத் தலைமை இடத்திலிருந்து வந்தவராகத்தான் இருக்கும்.

''வரட்டும் பார்க்கலாம்'' என்று கடுப் புடன் நினைத்துக் கொண்டான். தனக்குத் தக்கதொரு வாய்ப்பு கிட்டிற்று. அவன் என்ன பாடு பட்டான் என்பதை அவர்களிடம் கூறலாம். நெஞ்சில் கனன்று கொண்டிருந்ததைக் கூறிவிடலாம். வேண்டாம், அவன் முறையிட மாட்டான். அவர்கள் வெட்கப் படட்டும். இது சரியா? தனியே நின்று போராட விட்டு விட்டு இப்பொழுது மேற்பார்வையிட வருவது முறைதானு?..

அவர்கள் வருவதற்காக அவன் காத்து நிற்க வில்லை. கொட்டகையின் மூலையைக் கடந்து செத்த ஆட்டுக் குட்டிகளை அங்கே குவியலின் மீது எறிந்தான். அங்கிருந்து மெள்ளத் திரும்பி வந்தான்.

இருவரும் வந்து சேர்ந்துவிட்டனர். குதிரை களுக்கு மூச்சு வாங்கிற்று. சோரோ குற்றம் குறுகுறுக்கத் தலையைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். தன் நண்பன் தன்மீது குற்றச்சாட்டுகளைப் பொழிவான் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் குலுங்கா நடையான்மீது இருந்தவர் கோபங் கொண்ட வராக விரைப்புடன் இருந்தார். தானுபாய்க்கு முகமன் கூறுமலே அவர் கூச்சலிட ஆரம்பித்து விட்டார்.

''இது என்ன அநியாயம்! எங்கே பார்த் தாலும் இப்படி இருக்கிறதே! நடப்பது தெரிகிறதல்லவா?'' என்று அவர் சோரோவைப் பார்த்துக் கடிந்து கொண்டார். பிறகு தானுபாய் பக்கம் திரும்பி ''தோழரே, இது என்ன?'' என்று கேட்டு, செத்துப் போன ஆட்டுக் குட்டிகளின் குவியலைச் சுட்டிக் காட் டினார். ''நீ ஒரு கம்யூனிஸ்டாக இருக்க, உன்னுடைய ஆட்டுக் குட்டிகள் இப்படி மடியக் காரணம் என்ன?''

''நான் கம்யூனிஸ்டு என்பது அவற்றுக்குத் தெரிந்திருக்காது'' என்று தானுபாய் வெடுக் கென்று பதிலளித்தான். உடனே அவனுள் ஏதோ ஒரு விசை பட்டென இற்றுவிட்டது

போலிருந்தது. ஒருவகை வெறுமை அவனை ஆட்கொண்டது. அவன் அக்கறை இல்லாத வனுனன், வெறுப்புக் கொண்டான்.

''என்ன?!'' செகிஸ்பாயெவுக்கு முகம் செக்கச் சிவந்துவிட்டது. கணப் பொழுது மௌனமா யிருந்துவிட்டு ''நீ வாக்குறுதி அளித்தாயா?'' என்று கேட்டார்.

''ஆம்.'' ''என்ன வாக்குறுதி அது?''

''நினைவில் இல்லை.''

''அதனுல்தான் உன்னுடைய ஆட்டுக் குட்டி கள் இப்படி மடிகின்றன?'' என்று கூறி செகிஸ் பாயெவ் திரும்பவும் அந்தக் குவியலின் பக்கம் தனது சவுக்கைக் காட்டினுர். ஆணவம் படைத்த இந்த மேய்ச்சல்காரனுக்குத் தக்க பாடம் கற்பிக்க வாய்ப்புக் கிடைத்த உற்சாகத்தில் அங்கவடிகளில் எழுந்து நின்ருர். பிறகு சோரோவின் பக்கம் திரும்பி மறுபடியும் அவனைத் தாக்க முற்பட்டார். ''என்ன இதெல் லாம்? இங்கு இருப்பவர்களுக்குத் தாம் என்ன வாக்குறுதி அளித்தோம் என்பது கூட தெரியவில் லையே. திட்டத்தை நாசமாக்குகிருர்கள், ஆடுகளைச் சாகடிக்கிருர்கள்! நீங்கள் செய்யும் வேலை என்ன? கம்யூனிஸ்டுகளுக்கு இப்படித் தானு போதமளிப்பது? இந்த ஆள் கம்யூனிஸ் டா? எம்மாதிரியான கம்யூனிஸ்டு என்று கேட்கிறேன்!''

சோரோ ஒன்றும் சொல்லாமல் குனிந்து கொண்டான். அவன் விரல்கள் லகானைத் தடவின.

''எம்மாதிரியான கம்யூனிஸ்டு? என் மாதிரியான கம்யூனிஸ்டு'' என்று தாஞுபாய் மிக அமைதியாகப் பதிலளித்தான்.

''கம்யூனிஸ்டு ஒன்றும் இல்லே. நீ நாசவேலே செய்கிறவன். கூட்டுப் பண்ணேயின் சொத்தை நாசம் பண்ணுகிறவன், மக்களின் பகைவன். நீ இருக்க வேண்டியது சிறைக்கூடத்தில், கட்சியில் அல்ல! நமது சோஷலிசப் போட்டியையே நீ ஏளனம் செய்கிருய்.''

''ஆம், நான் சிறைக்கூடத்தில் இருக்க வேண்டியவன்தான்'' என்று முன்பு போலவே அமைதியான குரலில் தாஞுபாய் ஒத்துக் கொண்டான். அவன் உதடுகள் துடித்தன. அவனுள் வெடித்த அடக்க முடியாத கோபாவேசம், அவனுடைய மனக் கசப்பு, துன்பம், இதுவரை அவன் பட்டிருந்த பாடு இவை எல்லாம் சேர்ந்து அவன் உதடுகளில் துடித்தன. செகிஸ்பாயெவை வெறிக்கப் பார்த்துத் தனது துடிதுடித்த உதடுகளேக் கட்டுப்படுத்த முயன்றவாறு ''அவ்வளவுதாஞு, இன்னும் ஏதாவது உண்டா?'' என்று கேட்டான்.

''தாஞுபாய், ஏன் இப்படிப் பேசுகிருய்?'' என்று சோரோ இடைமறித்தான். ''நடந்ததை விவரமாக விளக்கிச் சொல்லேன்.''

''சரிதான், உனக்கும் நான் விவரமாய் விளக்கிச் சொல்ல வேண்டுமா? சோரோ நீ ஏன் இங்கே வந்தாய்?'' என்று தாஞுபாய் கூச்சல் போட்டான். ''நீ ஏன் இங்கே வந்தாய்?

பதில் சொல்லு! ஆட்டுக் குட்டிகள் மடிகின்றன என்று சொல்லவா இங்கு வந்தாய்? அது எனக்குத் தெரிந்ததுதானே! கழுத்தளவுக்கு சாணத்தில் அழுந்திக் கிடக்கிறேன் என்று சொல்லவா இங்கு வந்தாய்? அது எனக்குத் தெரிந்ததுதானே! வாழ்வெல்லாம் பண்ணைக்காக உயிரை விட்டு வந்தேனே, நான் ஒரு முட்டாள் என்பதைச் சொல்லவா வந்தாய்? அதுவும் எனக்குத் தெரிந்ததுதான்!..''

''தானுபாய்! இதெல்லாம் என்ன பேச்சு!'' சொரோவின் முகம் வெள்ளை வெளேரென்று ஆகிவிட்டது. அவன் குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

''என்கிட்டே வராதே!'' என்று சொல்லித் தானுபாய் அவனைத் தள்ளினான். ''என் வாக்குறுதி, என் வாழ்க்கை எல்லாமே நாசமாய்ப் போக! போ, என்கிட்டே வராதே! நான் சிறைக்கூடத்தில் இருக்க வேண்டியவன்! தோல் கோட்டு அணிந்த இந்தப் பிரபுவை இங்கே ஏன் அழைத்து வந்தாய்? என்னை அவர் ஓடவோட விரட்டட்டும் என்றா? என்னை அவர் சிறைக்கூடத்தில் தள்ளட்டும் என்றா? சரி தள்ளு! வளை தோண்டும் எலியே, என்னைக் கொண்டு போய்ச் சிறைக்கூடத்தில் தள்ளு!'' தானுபாய் வெடுக்கெனத் திரும்பி கைக்கு ஏதாவது கிடைக்காதா என்று சுற்றிலும் பார்த்தான். சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த கவர்க்கோலைப் பற்றிக் கொண்டு செகிஸ் பாயெவின் மீது பாய்ந்தான். ''கழிசடையே,

நிற்காதே இங்கே! ஓடிவிடு! இந்தப் பக்கம் தலை காட்டாதே!'' அவன் அடங்காத ஆத்திரம் கொண்டவனாகக் கவர்க்கோலைச் சுழற்றினான்.

பீதியுற்றுக் கதிகலங்கிவிட்ட செகிஸ்பாயெவ் என்ன செய்வதென்று அறியாது லகானை வெடுக்கு வெடுக்கென இழுத்துக் குலுங்கா நடையானை முன்னும் பின்னுமாக நகரச் செய்தார். தானபாயின் கவர்க்கோல் திகைத்துப் போன குதிரையின் தலையில் மோதி விண்ணென எதிரடித்துத் திரும்பவும் அதன் தலையில் மோதிற்று. ஆவேசங் கொண்ட தானபாய்க்கு ஏன் குல்சாரியின் தலை அதிர்ந்து ஆடிற்று, வாயிரும்பு ஏன் அதன் சிவந்தவாயை இழுத்தது, குதிரையின் உருண்டு புரண்ட கண்களில் திகைப்பும் பீதியும் ஏன் தெரிய வேண்டும் என்பது விளங்கவில்லை.

''குல்சாரி, நீ விலகிக் கொள்! தோல் கோட்டு அணிந்த இந்தப் பிரபுவை நான் அடிக்க வேண்டும்!'' என்று கூவியபடி தானபாய் பழி பாவம் அறியாத குதிரையின் தலையிலே தன் கவர்க்கோலால் மீண்டும் மீண்டும் மொத்தினான்.

உதவியாளான இளம் பெண் ஓடி வந்து அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு தொங்கி, கவர்க்கோலை அவனிடமிருந்து பிடுங்கிவிட முயன்றாள். ஆனால் அவளை அவன் தரையிலே தள்ளிவிட்டான். சோரோ சேணத்தின்மீது தாவி ஏறிக் கொண்டு செகிஸ்பாயெவுக்கும் தானபாய்க்கும் இடையில் குதிரையை ஓட்டிச்

சென்று ''இங்கே இருக்க வேண்டாம், போய் விடுவோம்! சீக்கிரம்! அவன் உங்களைக் கொன்று போட்டுவிடுவான்!'' என்று கத்தினன்.

இருவரும் குதிரைகளில் பாய்ந்தோடியதும் தானுபாய் தனது கவர்க்கோலை சோரோவின் பின்னல் வீசியெறிந்தான். அவனுடைய நாய் வெறித்தனமாகக் குரைத்து அங்கவடிகளையும் குதிரைகளுடைய வால்களையும் தாவிக் கடித்துக் கொண்டு அவர்களை விரட்டிச் சென்றது.

தானுபாய் தட்டுத் தடுமாறி அவர்கள் பின்னல் ஓடிக் களிமண் கட்டிகளை எடுத்து விட்டெறிந்து, ''நான் சிறைக்கூடத்தில் இருக்க வேண்டியவன்தான்! ஓடி விடுங்கள்! நிற்காமல் ஓடுங்கள்!'' என்று கத்தினன்.

பிறகு திரும்பி மூச்சுத் திணறியவாறு ''ஆம், நான் சிறைக்கூடத்தில் இருக்க வேண்டியவன்!'' என்று முணுமுணுத்துக் கொண்டு நடந்து வந்தான். அவனுடைய நாய் செவ்வனே தன் கடமையை நிறைவேற்றிய வீரனைப் போல அவனுக்குப் பக்கத்தில் பெருமையாக வெற்றி நடை போட்டது. தன் எஜமானன் தன்னைப் பாராட்டுவான் என்று அது எதிர்பார்த்தது. ஆனல் அவன் அதைக் கவனிக்கவில்லை. துணுக் குற்று முகம் வெளிறிட்டுவிட்ட ஜெய்தார் கம்பை ஊன்றி நொண்டியபடி அவனை நோக்கி நடந்தாள்.

''என்ன காரியம் செய்தாய்? செய்யலாமா இப்படி?''

''செய்திருக்கக் கூடாது!''

''கூடவே கூடாது!''

''குல்சாரியை நான் அடித்திருக்கக் கூடாது.''

''உனக்குப் பித்துப் பிடித்துவிட்டதா என்ன? என்ன காரியம் செய்தாய் என்பது புரியவில்லையா உனக்கு?''

''புரிகிறதே. நான் நாசவேலை செய்கிறவன், மக்களின் பகைவன்'' என்று அவன் மூச்சுத் திணறியவாறு கூறினான். பிறகு மௌனமாகி விட்டான். இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டான். அவன் உடல் விம்மல்களால் அதிர்ந்தது.

''தானுபாய், தானுபாய்'' என்று அவன் மனைவி அவனுடன் சேர்ந்து அழுது அவனுக்கு ஆறுதல் கூறினாள். ஆனால் அவனுடைய விம்மல்கள் மேலும் மேலும் கடுமையாயின. அவன் ஆடிக் குலுங்கினான். தன் கணவனால் அழ முடியுமென்று ஜெய்தார் இதன் முன்பு நினைத்திருக்க மாட்டாள்...

## 19

பரபரப்பான இந்தச் சம்பவம் நடந்து மூன்று நாட்களுக்குப் பிறகு வட்டாரக் கட்சிக் கமிட்டியின் குழுக் கூட்டம் நடைபெற்றது.

தானுபாய் பக்காசவ் முன்னறையில் உட்கார்ந்தான். அவனுடைய விவகாரம் விவாதிக்கப்பட்ட அலுவல் அறைக்குள் எப்பொழுது கூப்பிடப் போகிறார்கள் என்று காத்திருந்தான்.

கடந்த மூன்று நாட்களில் அவன் கடுமையாக நெடுநேரம் சிந்தனை செய்திருந்தான். ஆயினும் தப்பு அவனுடையதுதானு என்பதைப் பற்றி அவனுல் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அவன் செய்த குற்றம் மன்னிக்க முடியாததுதான், அரசாங்கப் பிரதிநிதி ஒருவரைத் தாக்கிவிட்டான் என்பது தெரிந்தது, ஆனுல் இதோடு முடிந்து விட்டால் விவகாரம் எளிதாகிவிடுமே. தனது தகாத நடத்தைக்காக அவன் எந்தத் தண்டனையையும் ஏற்கத் தயாராயிருந்தான். ஆனுல் ஆத்திரத்தில் அவன் எல்லாவற்றையுமே அல்லவா உதறி எறிந்துவிட்டான்? பண்ணையின்பால் அவனுக்கிருந்த கருத்தையும் கவலையையும் அல்லவா வீசி எறிந்துவிட்டான்? அவனுடைய எல்லா முயற்சிகளுக்கும் ஓயாத உழைப்புக்கும் சிந்தனைகளுக்கும் இழுக்குத் தேடிக் கொண்டு விட்டானே. இனி யாராலும் அவனை நம்ப முடியுமா? யாராலும் அவனைப் புரிந்து கொள்ள முடியுமா? ''புரிந்து கொண்டாலும் புரிந்து கொள்ளலாம் அல்லவா?'' சிறிதளவு நம்பிக்கை துளிர்த்தது. ''நாங்கள் சமாளிக்க வேண்டியிருந்த குளிர்காலம், கொட்டகை, கூடாரம், தீனி இல்லாமற் போனது, ஊன் உறக்கமின்றி ஓயாது நாங்கள் பட்டபாடு, பெக்தாய்—எல்லாவற்றையும் விவரித்துச் சொல்வேன். இப்படியா நிர்வாகம் நடத்துவதென்று அவர்களே தீர்மானிக்கட்டும்...'' நடந்தது குறித்து இப்பொழுது அவன் வருத்தப்பட்டுக் கொள்ளவில்லை. ''எனக்கு அவர்கள் தண்டனை

தரட்டும்'' என்று கூறி கொண்டான். ''இதனால் ஏனையோருக்கு நிலைமை மேம் படலாம். மேய்ச்சல்காரர்கள் வாழ வேண்டி யுள்ள வாழ்க்கை, அவர்கள் படும் அவதி, இவற்றையெல்லாம் அவர்கள் மேலும் நெருங்கிச் சென்று கண்டறிந்து கொள்ள இது உதவி புரியக்கூடும்'' என்று நினைத்தான். ஆனால் மறுகணமே அவன் நினைவில் தான் பட்டதெல் லாம் திரும்பவும் தோன்றியதும் மறுபடியும் ஆத்திரம் பொங்கியெழும், கைகளை இறுக மூடிக் கொண்டு பிடிவாதமாகக் கூறிக்கொள் வான்:

''இல்லை, நான் செய்தது குற்றமல்ல, அல்லவே அல்ல!'' பிறகு மீண்டும் அவனுள் சந்தேகங்கள் எழும்...

எக்காரணத்தாலோ தெரியவில்லை இப்ரா கிமும் அங்கே முன்னறையில் காத்திருந்தான். ''இவனுக்கு இங்கே என்ன வேலை? பிணம் தின்னும் கழுகு மாதிரி காத்துக் கொண்டிருக் கிறானே, எதற்காக?'' என்று கோபமாக நினைத்த வாறு தானுபாய் தலையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். இப்ராகிம் மௌன மாக இருந்தான். தானுபாயின் குனிந்த தலை யைப் பார்த்துவிட்டுப் பெருமூச்சு விட்டான்.

''ஏன் இவ்வளவு நேரம்? என்ன செய்கிறார் கள்?'' என்று தானுபாய் அமைதியின்றி நாற் காலியில் உட்கார முடியாமல் உட்கார்ந்திருந் தான். ''வருவது வரட்டும்! ஏன் இவ்வளவு நேரம்?'' மூடிய கதவுகளுக்குப் பின்னால் எல்

லோரும் கூடிவிட்டதாகத் தெரிந்தது. சில நிமிடங்களுக்கு முன்பு சோரோவும் உள்ளே போய்ச் சேர்ந்தான். அவன் தான் கடைசியாகச் சென்றவன். அவனுடைய பூட்சுகளின் உச்சியில் ஒட்டியிருந்த முடிகளைக் கொண்டு தாஞபாய் அவனை அடையாளம் தெரிந்து கொண்டான். குலுங்கா நடையானின் பொன்னிற முடிகள் அவை. ''அவசரமாகப் பறந்தோடி வந்திருக்கிருன், குல்சாரிக்கே நுரை தள்ளும்படி நேர்ந்திருக்கிறதே'' என்று நினைத்துக் கொண்டான், ஆனுல் தலையை நிமிர்த்தாமலே அமர்ந்திருந்தான். குல்சாரியின் வியர்வையும் முடிகளும் ஒட்டியிருந்த அந்த பூட்சுக் கால்கள் தாஞபாயின் அருகே நின்று சில கணங்கள் தயங்கிவிட்டுப் பிறகு கதவுக்குப் பின்னுல் மறைந்தன.

நேரம் நகராது அழிச்சாட்டியம் செய்தது. முடிவில் கதவைத் திறந்து கொண்டு செயலாளர் அவனை அழைத்தார்:

''தோழர் பக்காசவ், உள்ளே வாங்க.''

இதயத்தின் படபடப்பு காதில் இரைய தாஞபாய் எழுந்து நடந்தான். காதுக்குள் ஓயாது முழங்க அறையினுள் நுழைந்தான். புகை மூண்டு விட்டது போல யாவும் மங்கலாய்த் தெரிந்தன. அறையில் இருந்தவர்களின் முகங்கள் அடையாளம் தெரியாதபடி மங்கியிருந்தன.

''உட்காருங்கள்'' என்று கூறி வட்டாரக் கமிட்டியின் முதற் செயலாளர் கஷ்கத்தாயெவ்

நீண்ட மேஜையின் எதிர் முனையிலே ஒரு நாற் காலியைச் சுட்டிக் காட்டினர்.

தாஞபாய் அதில் உட்கார்ந்து மரத்துக் கனமாயிருந்த தன் கைகளை முழங்கால்களின் மேல் வைத்துக்கொண்டு கண்ணெதிரே படர்ந் திருந்த புகை கலேவதற்காகக் காத்திருந்தான். பிறகு மேஜையைச் சுற்றிலுமிருந்தோரைப் பார்த்தான். செகிஸ்பாயெவ் ஆணவமும் அகந் தையும் முகத்திலே தெரிய கஷகத்தாயெவின் வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். தாஞ பாய்க்கு இந்த ஆளின் மீது இருந்த அடங்காத வெறுப்பில் அவன் கண்ணெதிரே திரையிட் டிருந்த புகை மூட்டம் இருந்த இடம் தெரி யாமல் அறவே மறைந்து விட்டது. மேஜை யைச் சுற்றிலும் இருந்தோரின் முகங்கள் தெளி வாகத் தெரியலாயின. செகிஸ்பாயெவின் முகம் தான் எல்லாவற்றிலும் இருண்டதாக இருந்தது, கறுத்துப் பழுத்திருந்தது. சோரோவின் முகம் இரத்தம் சிறிதுமின்றி வெள்ளை வெளேரென வெளிறிட்டிருந்தது. மேஜையின் கோடியில் அவன் உட்கார்ந்திருந்தான், தாஞபாய்க்கு மிகவும் அருகில் இருந்தது அவன்தான். கரும் பச்சை மேஜை விரிப்பின் மீதிருந்த அவனுடைய மெலிந்த கைகள் நடுங்கித் துடித்தன. கூட்டுப் பண்ணையின் தலைவர் அல்தாஞெவ் பலமாய் மூச்சு விட்டு சிடுசிடுப்பாய்ச் சுற்றிலும் பார்த்த வண்ணம் சோரோவுக்கு எதிர்ப் பக்கத்தில் இருந்தார். விவாதிக்கப்படப் போகும் விவ காரம் குறித்து அவர் தனக்குள்ள போக்கை

ஒளிவு மறைவின்றி வெளிக்காட்டினர். ஏனை யோர் காத்துக் கொண்டிருப்பது போலத் தோன்றினர். முடிவில் கஷ்கத்தாயெவ் தன் முன்னிருந்த காகிதங்களிலிருந்து பார்வையை உயர்த்தி அழுத்தம் திருத்தமாக அறிவித்தார்:

''இப்பொழுது கம்யூனிஸ்டு பக்காசவின் விவகாரத்தை விவாதிப்போம்.''

''பெயரளவிலான கம்யூனிஸ்டு என்று சொல்லலாம்'' என்றார் யாரோ ஒருவர் கிண்டலாக.

''பழி வாங்கத் துடிக்கிறார்கள்'' என்று தானுபாய் நினைத்துக் கொண்டான். ''அவர்களிடமிருந்து நான் இரக்கம் எதிர்பார்க்க முடியாது. எனக்கு ஏன் இரக்கம் காட்டணும், நான் சிறையில் தள்ளப்பட வேண்டிய பகைவன் ஆயிற்றே?''

அவனுடைய விவகாரத்தைப் பற்றிய இந்த விவாதத்தில் இரகசியமாக ஒன்றோடொன்று போட்டியிட்ட இரு தரப்புகள் மோதிக் கொண்டன, வருந்தத்தக்க இந்தச் சம்பவத்தை இவை ஒவ்வொன்றும் தனக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்வதில் முனைந்திருந்தன என்பது அவனுக்குத் தெரியாது. செகிஸ்பாயெவையும் அவர் ஆதரவாளர்களையும் கொண்ட ஒரு தரப்பு புதிதாய் வந்த செயலாளரின் பலத்தைச் சோதனை செய்யவும், துவக்கத்திலிருந்தே அவரைப் பணிய வைத்துவிட முடியுமா என்று பார்க்கவும் விரும்பிற்று. கஷ்கத்தாயெவ் தனது பதவியின்மீது செகிஸ்பாயெவ் கண் வைத்திருந்ததை உணர்ந்து கொண்டு இரண்டாவது

தரப்பின் பிரதிநிதியாகச் செயல்பட்டார். அவர் தமது அதிகாரத்தை நிலைநாட்டிக் கொண்டு அதே போதில் அபாயகரமான இந்த ஆட்களையும் பகைத்துக் கொள்ளாதிருப்பதற்கு ஏற்ற தீர்வைத் தேடிக் கொண்டிருந்தார்.

செகிஸ்பாயெவ் சமர்ப்பித்திருந்த அறிக்கையைக் வட்டாரக் கட்சிக் கமிட்டி செயலாளர் படித்துக் காட்டினார். ''வெள்ளைக் கற்கள்'' கூட்டுப் பண்ணையைச் சேர்ந்த மேய்ச்சல்காரன் தானுபாய் பக்காசவ் சொல்லிலும் செயலிலும் புரிந்த ஒவ்வொரு குற்றத்தையும் அவ்வறிக்கை எடுத்துரைத்தது. தானுபாயால் மறுக்கக் கூடியது எதுவும் அதில் இல்லை என்றாலும், அதில் தொனித்த மனோபாவமும் குற்றச்சாட்டுகளை அது எடுத்துரைத்த முறையும் அறவே அவனை நம்பிக்கை இழந்து மனம் ஒடியச் செய்துவிட்டன. இந்தப் பயங்கர அறிக்கையின் முன்னால் தான் ஒன்றும் செய்வதற்கு இயலாதவனாய் நிராதரவாக நிற்க வேண்டியிருந்ததைக் கண்டதும் அவனுக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது. செகிஸ்பாயெவின் அறிக்கை அந்த ஆளைக்காட்டிலும் நச்சுத்தன்மை கொண்டதாயிருந்தது. கவர்க்கோலைக் கொண்டு அதைத் தாக்க முடியாது. தானுபாய் தனக்கு ஆதரவாகக் கூற நினைத்திருந்தவையாவும் தகர்ந்து தவிடு பொடியாகிவிட்டன, மேய்ச்சல்காரர்கள் தமது இன்னல்கள் பற்றி வழக்கமாகக் கூறக் கூடிய அற்ப முறையீடுகளுக்கு மேல் அதிகமில்லை என்னும் அளவுக்கு அவன் மனதிலேயே அவை

முக்கியத்துவம் இழந்துவிட்டன. எவ்வளவு பெரிய முட்டாள் அவன்! இந்தப் பயங்கர அறிக்கையின் முன்னுல் அவனுடைய வாதங்கள் எந்த மூலேக்கு?! யாரை எதிர்த்துப் போராடுகிருேம் என்று தெரியாமலே முன்வந்துவிட்டானே!

''தோழர் பக்காசவ், எங்கள் குழுவின் உறுப்பினரான தோழர் செகிஸ்பாயெவின் அறிக்கையில் கூறப்படும் விவரங்கள் உண்மைதான் என்பதை ஒத்துக் கொள்கிறீர்களா?'' என்று கஷ்கத்தாயெவ், அறிக்கையைப் படித்து முடித்ததும் கேட்டார்.

''ஆம்'' என்று உயிரற்ற குரலில் தாஞபாய் பதிலளித்தான்.

யாரும் வாய் திறக்கவில்லே. அறிக்கையைக் கேட்டு அவர்கள் கல்லாய்ச் சமைந்துவிட்டது போல உட்கார்ந்திருந்தனர். கேட்டீர்களா இந்த அநியாயத்தை என்று கூறுவது போல அல்தாஞெவ் அசங்காத மன நிறைவுடன் எல்லோரையும் பார்த்துக் கொண்டார்.

''தோழர்கள் அனுமதிப்பார்களாஞல் நிலேமையைத் தெளிவுபடுத்த நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்'' என்று செகிஸ்பாயெவ் திடமான குரலில் பேசிஞர். ''நான் ஆரம்பத்திலேயே தோழர்கஷே எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். தோழர் பக்காசவின் செயல்கஷே வெறும் ரௌடித்தனம் என்று கருதி விளக்கம் கூற முயலக் கூடாதென்று எச்சரிக்கை செய்கிறேன். இல்லே, அப்படி

இருந்திருந்தால் இந்த விவகாரத்தை நான் உங்களுடைய கவனத்துக்குக் கொண்டு வந்திருக்க மாட்டேன். ரௌடிகளைச் சமாளிக்க நம்மிடம் பல வழிகள் இருக்கின்றன. என்னுடைய சொந்த உணர்ச்சிகளுக்கும் இதற்கும் சம்பந்தமில்லை என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன். நான் வட்டாரக் கட்சிக் கமிட்டியினுடைய குழுவின் பிரதிநிதி, இந்த விவகாரத்தில் கட்சி அனைத்தின் பிரதிநிதி என்று சொல்வேன். அதன் அதிகாரம் மிதித்துத் துவைக்கப்படுவதற்கு நான் அனுமதிக்க முடியாது. இனி இங்குள்ள பிரதான விஷயத்துக்கு வருகிறேன். கம்யூனிஸ்டுகளிடையிலும் கம்யூனிஸ்டுகள் அல்லாதோரிடையிலும் நடைபெற்றுவரும் அரசியல் பணிகளும் போதமளிக்கும் பணிகளும் எப்படி வருந்தத்தக்க நிலையில் உள்ளன என்பதற்கும், வட்டாரக் கமிட்டியின் சித்தாந்தப் பணித் துறையில் இருந்து வரும் பெருங் குறைபாடுகளுக்கும் இந்த விவகாரம் மற்றுமோர் எடுத்துக்காட்டு. பக்காசவைப் போன்ற சாதாரண உறுப்பினர்களின் அரசியல் கண்ணோட்டத்துக்கு நாம் எல்லோருமே பொறுப்பேற்க வேண்டியவர்கள். பக்காசவைப் போல் நினைப்பது அவர் மட்டும்தானா அல்லது வேறு ஆட்களும் இருக்கிறார்களா என்பதை நாம் நிர்ணயம் செய்தாக வேண்டும். பக்காசவ் கூறிய சொற்களின் உள் அர்த்தம் கவனிக்கத்தக்கது: 'தோல் கோட்டு அணிந்த புதிய பிரபு!' என்று கூறினார். கோட்டு இருக்கட்டும் ஒருபுறம். பக்காசவின்

கருத்துப்படி நான்—சோவியத் குடிமகனுன நான், கட்சியின் ஒரு பிரதிநிதியான நான்—ஒரு புதிய பிரபு, சுரண்டல்காரன், மக்களை ஒடுக்குகிறவன் என்ருகிறது! ஆம், இதன் பொருளை, பக்காச வினுடைய சொற்களில் அடங்கியுள்ளதைப் புரிந்து கொள்கிறீர்கள் அல்லவா? இது பற்றி மேலும் சொல்லத் தேவையில்லை என்று நினைக் கிறேன்... இனி விவகாரத்தின் எதிர்ப் பக்கத் தையும் பார்க்கலாம். ''வெள்ளைக் கற்கள்'' கூட்டுப் பண்ணையின் நிலவரங்களைக் கண்டு நான் கலங்கிப் போயிருந்தேன். பக்காசவ் தாம் அளித்த வாக்குறுதி என்னவென்று மறந்து விட்டதாய்க் கூறியதும், அவரை நான் நாச வேலை செய்கிறவர், மக்களின் பகைவர் என்று சொன்னேன், அவர் இருக்க வேண்டியது சிறைக்கூடத்தில், கட்சியிலல்ல என்றேன். அவரை நான் அவமதித்துவிட்டேன் என்பதை ஏற்றுக் கொள்கிறேன், நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளத் தயாராயிருந்தேன். ஆனுல் இப்பொ ழுது, நான் சொன்னது முற்றிலும் சரிதான் என்பதில் எனக்குச் சந்தேகம் துளியும் இல்லை. நான் கூறிய சொற்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ள இப்பொழுது மறுக்கிறேன். பக்காசவ் அபாயகரமான பகை ஆள் என்று கூறு கிறேன்...''

தானுபாய் தன் வாழ்நாளில் அனுபவித்த துன்ப துயரங்களுக்கு அளவிருக்காது, யுத்தத்தின் போது தொடக்கம் முதல் இறுதி வரை போர் முனையிலே இருந்தான். ஆனுல் இது போல

அவன் இதயம் கதறி அழ முடியுமென்று இதற்கு முன் கனவிலும் நினைத்திருக்க மாட்டான். இந்தக் கதறல் முடிவில்லா பீரங்கி வெடிகளின் ஒலியாக அவன் காதில் படபடத்தது. இவ்வாறு கதறிவிட்டு அவன் இதயம் கீழே அழுந்திச் சென்றது, பிறகு மேல் நோக்கி ஊர்ந்தது, வழுக்கிச் சரிந்துவிட்டு மீண்டும் மேலே உயர முயன்றது. ஆனால் நேர் குறியில் சுடப்பட்ட குண்டுகள் அதன்மீது பாய்ந்தன. ''என் வாழ்க்கையை அர்த்தமுடையதாக்கியவை யாவும், நான் ஆற்றிய பணிகள் எல்லாம் என்ன ஆயின?'' தானுபாயின் தலைக்குள் படபடத்தது. ''மக்களின் பகைவன் என்று நான் அழைக்கப்படும் நாள் வருமென நினைக்கவே இல்லையே. அந்தப் பாழாய்ப் போன கொட்டகையைப் பற்றி, செத்து மடிந்த குட்டிகளைப் பற்றி, அந்த முட்டாள் பெக்தாயைப் பற்றி அல்லவா கவலைப்பட்டு உயிரை வதைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அதையெல்லாம் பொருட்படுத்துவோர் யாரும் இல்லை...''

''என் அறிக்கையில் கூறப்படுவதைத் தொகுத்துரைக்க விரும்புகிறேன்'' என்று செகிஸ்பாயெவ் வரிசை வரிசையாக உருக்கு அடுக்குகளில் தனது சொற்களை அடுக்கித் தொடர்ந்து பேசினார். ''பக்காசவ் நமது அமைப்பை வெறுக்கிறார்; கூட்டுப் பண்ணையை வெறுக்கிறார், சோஷலிசப் போட்டியை வெறுக்கிறார், நமது வாழ்க்கை முறை அனைத்தையுமே வெறுக்கிறார். கூட்டுப் பண்ணையின் கட்சி நிறுவகர் தோழர்

சோரோ முன்னல் ஒளிவு மறைவின்றி இவற்றைக் கூறிக் கொண்டார். தவிரவும் அவருடைய செயல்கள் குற்ற இயல் சட்டத்தின் படியும் தண்டிக்கப்பட வேண்டியவை. அரசாங்க அலுவலில் ஈடுபட்டிருந்த அரசாங்கப் பிரதிநிதி ஒருவரை அவர் தாக்கினர். நீங்கள் நான் சொல்வதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். பக்காசவ் சட்டப்படி அவருடைய செயல்களுக்குத் தண்டனை பெறவேண்டுமென்று, இந்த அறையை விட்டு வெளியே சென்றதும் அவர் காவலில் வைக்கப்பட வேண்டுமென்று கோருகிறேன். 58ஆவது பிரிவு அவருடைய குற்றத்துக்கு அனுசரிக்கப்பட வேண்டிய சட்டப் பிரிவாகும். இனி கட்சி அணிகளில் இருக்க பக்காசவுக்கு உரிமை இல்லை என்பது கூருமலே விளங்கும்!..''

இது வரம்புமீறிய கோரிக்கை என்பது செகிஸ்பாயெவுக்குத் தெரியும். ஆனல் தானுபாய் பக்காசவின்மீது குற்ற வழக்குத் தொடர வேண்டாமென்று கட்சிக் கமிட்டிக் குழு முடிவு செய்யும் பட்சத்தில் கட்சியிலிருந்து தானுபாய் விலக்கப்படுவதாவது நிச்சயமாகிவிடும் என்று அவர் எதிர்பார்த்தார். இந்தக் கோரிக்கையை எதிர்க்க கஷ்கத்தாயெவ் துணிய மாட்டார். இந்த நிலைமை செகிஸ்பாயெவின் கையை மேலும் பலப்படுத்தவே செய்யும்.

''தோழர் பக்காசவ், உங்கள் சார்பில் நீங்கள் சொல்ல விரும்புவது என்ன?'' என்று கடுப்புற்றவராய் கஷ்கத்தாயெவ் கேட்டார்.

''ஒன்றுமில்லை. ஏற்கெனவே யாவும் சொல்லப்

பட்டுவிட்டன'' என்று தானுபாய் பதிலளித்தான். ''எப்பொழுதுமே நான் நாச வேலை செய்கிறனாகவே, மக்களின் பகைவனாகவே இருந்துள்ளேன் என்பதாகத் தெரிகிறது. ஆகவே நான் என்ன நினைத்தால் என்ன? உங்களுக்குத் தெரியும், என்ன செய்ய விரும்புகிறீர்களோ அதைச் செய்யுங்கள்.''

''உங்களை நீங்கள் மெய்யான கம்யூனிஸ்டு என்றுதான் கருதுகிறீர்களா?''

''இப்பொழுது அதை என்னால் நிரூபிக்க முடியாது.''

''உங்கள் குற்றத்தை ஒப்புக் கொள்கிறீர்களா?''

''இல்லை.''

''அப்படியென்றால், ஏனைய எல்லோரையும் விட நீங்கள் சாமர்த்தியசாலி என்று நினைக்கிறீர்கள்?''

''இல்லை, அதற்கு நேர் மாறாக, ஏனைய எல்லோரையும் விட நான் மிகப் பெரிய முட்டாள் என்றே நினைக்கிறேன்.''

''நான் பேசலாமா?''

கோட்டில் காம்சொமோல் பாட்ஜ் அணிந்த ஓர் இளைஞன் எழுந்து நின்றான். ஒட்டிய முகம், மெலிந்த உடல், பார்ப்பதற்கு இன்னும் முழு ஆளாகாதவனைப் போலத் தோன்றினான். அங்கு கூடியிருந்தோரில் அவனே மிகவும் இளையவன்.

அவன் அங்கு இருந்தது இது வரை தானுபாயின் கண்ணில் படவில்லை. ''அப்படி வா! இளைஞனே, ஒரு பிடி பிடி! தயங்காதே, தாக்குத்

தாக்கென்று தாக்கு!'' என்று அவனைப் பார்த்துத் தானுபாய் தனக்குள் கூறிக் கொண்டான். ''அக்காலத்தில் நானும் உன்னைப் போலத்தான் இருந்தேன், யாரையும் சும்மா விட மாட்டேன்...''

நெடுந்தூரத்துக்கு அப்பால் மேகக் கூட்டங்களுக்கு நடுவில் பளிச்சிடுகின்ற மின்னலைப் போல குலுபாய் இளம் கோதுமைக் கதிர்களைப் பிடுங்கிக் காலின் கீழே போட்டு மிதித்த காட்சி தானுபாயின் மனக்கண்ணில் தோன்றியது. அவன் அதை மிகவும் தெளிவாகப் பார்த்தான். அவன் இதயத்தின் ஆழத்திலிருந்து சப்தமில்லாமல் ஒரு கூக்குரல் வெளிப்பட்டது.

''சரி, கெரிம்பேக்கவ், சொல்லுங்கள்...'' என்று கஷ்கத்தாயெவ் சொல்லும் போது தானுபாய்க்கு உணர்வு வந்தது.

''தோழர் பக்காசவின் செயலை நான் கண்டிக்கிறேன். கட்சியின் குழுவினுல் அவர் தக்கபடி தண்டிக்கப்பட வேண்டுமென்றுதான் நினைக்கிறேன். ஆனுல் தோழர் செகிஸ்பாயெவ் கூறுவதையும் நான் ஒத்துக் கொள்ளவில்லை.'' பரபரப்படையாமல் அமைதியாகப் பேசக் கெரிம்பேக்கவ் முயன்ருன். ''உண்மையில் தோழர் செகிஸ்பாயெவைப் பற்றியும் இங்கு நாம் விவாதிக்க வேண்டுமென்று நினைக்கிறேன்...''

''அப்படியா?'' என்று யாரோ ஒருவர் குறுக்கிட்டார். ''இப்போதெல்லாம் காம்சொமொலில் இந்த முறையில்தான் காரியங்களைச் செய்கிறீர்களா?''

''நாம் எல்லோருமே ஒரே விதிகளை அனுசரித்துத்தான் செயல்படுகிறோம்'' என்று கெரிம் பேக்கவ் பதிலளித்தான். அவன் மென்மேலும் முகம் சிவந்து பரபரப்படைந்தான். சற்று நேரம் பேச்சை நிறுத்தி சரியான சொற்களைத் தேடினான்; தனது இக்கட்டான நிலையிலிருந்து விடுபட முயன்று நம்பிக்கை இழந்தவனாய்க் கோபம் தொனிக்கக் கடுமையாய்ப் பேசினான்: ''கூட்டுப் பண்ணைத் தொழிலாளியை, மேய்ச்சல்காரரை, முது பெரும் கட்சி உறுப்பினரை அவமதிக்க உங்களுக்கு என்ன உரிமை என்று கேட்கிறேன். மக்களின் பகைவன் என்று என்னைப் பார்த்து யாராவது சொன்னால் சும்மா விட மாட்டேன்! பண்ணையில் நிலைமை மிக மோசமாக இருந்ததைக் கண்டு நீங்கள் கலக்கமுற்றிருந்ததாகச் சொன்னீர்கள். ஆனால் மேய்ச்சல்காரர்கள் மட்டும் கலக்கமடையாமல் இருந்தார்கள் என்று நினைக்கிறீர்கள்? அங்கே சென்றதும் மேய்ச்சல்காரரின் வாழ்க்கை நிலைமைகள் எப்படி இருந்தன, வேலைகள் எப்படி நடந்தேறின என்று அவரை விசாரித்தீர்களா? அல்லது ஆட்டுக் குட்டிகள் செத்தது ஏன் என்றுதான் கேட்டீர்களா? இல்லை. அங்கே சென்றதும் நீங்கள் அவரைப் பார்த்துக் கூச்சல் போட ஆரம்பித்தீர்கள் என்பது உங்களுடைய அறிக்கையிலிருந்தே தெரிகிறது. குட்டிப் பேறுக் காலத்தில் கூட்டுப் பண்ணைகள் தவியாய்த் தவிக்க வேண்டியிருக்கிறது. இது யாவரும் அறிந்த ஒன்று. நான் அடிக்கடி மலைகளுக்குப்

போக வேண்டிவருகிறது. காம்சொமோல் உறுப்பினர்களான இளம் மேய்ச்சல்காரர்களைப் பார்த்துப் பேசும்போது எனக்கு வெட்கமாயிருக்கிறது. ஏனென்றால் மிகப் பெரிய கோரிக்கைகளை நாம் அவர்கள் முன்னால் வைக்கிறோம், ஆனால் மெய்யான உதவி எதுவும் அளிப்பதில்லை. அவர்கள் எவ்விதமான கொட்டகைகளில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது என்று பார்த்தீர்களா? ஆடுகளுக்கு வேண்டிய தீனி எந்த அளவுக்குக் கிடைக்கிறது? நான் ஒரு மேய்ச்சல்காரனின் மகன். பிறந்த குட்டிகள் செத்து மடிவதைக் காணும்போது அவர்களுக்கு எப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியும். இன்னும் எல்லாம் பழைய வழியில்தான் நடந்து வருகிறது. விவசாயக் கல்லூரியில் எங்களுக்குச் சொல்லிக் கொடுத்தது போல எதுவும் இல்லை. மலைகளில் நடைபெறுவதைப் பார்க்கையில் இதயம் வெடித்து விடும் போலிருக்கிறது!..''

''தோழர் கெரிம்பேக்கவ், எங்களுடைய பரிதாப உணர்ச்சியைத் தூண்டிவிட முயல வேண்டாம். உணர்ச்சி வயப்பட்டுப் பயனில்லை. நமக்கு வேண்டியவை உறுதியான உண்மைகளே அன்றி உணர்ச்சிகள் அல்ல'' என்று செகிஸ்பாயெவ் அவன் பேச்சில் குறுக்கிட்டார்.

''என்னை மன்னிக்க வேண்டும். கொடுங் குற்றம் புரிந்தவரைக் கூண்டில் நிறுத்தி நாம் விசாரணை நடத்திக் கொண்டிருக்கவில்லை. ஒரு கம்யூனிஸ்டின் கதியைத் தீர்மானிக்கிறோம்'' என்று கெரிம்பேக்கவ் தொடர்ந்து பேசினான்.

''எனவேதான் தோழர் பக்காசவ் ஏன் இப்படிச் செய்தார் என்பது குறித்துச் சிந்தித்துப் பார்ப்பது அவசியமாகி விடுகிறது. அவருடைய செயல்கள் கண்டிக்கப்பட வேண்டும், அதில் சந்தேகமில்லை. ஆனுல் பண்ணேயின் சிறந்த கால்நடை பராமரிப்பாளரில் ஒருவரான அவரை இந்நிலைக்கு வரச் செய்தது எது?''

''நீங்கள் உட்காருங்கள்'' என்று அதிருப்தி தொனிக்க கஷ்கத்தாயெவ் கூறிஞர். ''தோழர் கெரிம்பேக்கவ், விவாதத்தை நீங்கள் பிரதான பிரச்சினேயிலிருந்து வேறு எங்கோ திருப்பி விடுகிறீர்கள். தோழர் பக்காசவ் கடுங் குற்றம் புரிந்துள்ளது எல்லோருக்கும் தெளிவாகத் தெரிகிறதென்று நினேக்கிறேன். அவர் செய்ததைக் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். இது போன்ற ஒன்று நடைபெறக் கண்டதுண்டா? கேட்டதுண்டா? நமது பிரதிநிதிகளேக் கவர்க்கோல் கொண்டு தாக்க ஒருநாளும் நாம் அனுமதிக்க முடியாது. நமது கட்சி அதிகாரிகளின் அதிகாரத்துக்குக் குழிபறிக்க யாருக்கும் நாம் இடந்தர முடியாது. தோழர் கெரிம்பேக்கவ், நீங்கள் காம்சொமோல் நிறுவனத்தில் நிலேமையை மேம்படுத்துவதில் கவனம் செலுத்துவதை விட்டுவிட்டு இதயம் வெடிப்பது குறித்தும் உணர்ச்சிகள் குறித்தும் வெற்றுப் பேச்சுகள் பேசுவது நல்லதல்ல. உணர்ச்சி வேறு, செயல் வேறு. பக்காசவ் வேண்டுமென்றே செய்திருக்கும் இந்த அடாத செயல் நம் எல்லோருக்கும் ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவ

ருக்குக் கட்சியில் இடம் இல்லை என்பதைக் கூற வேண்டியதில்லை. தோழர் சோரோ, கூட்டுப் பண்ணையின் கட்சி நிறுவகரான நீங்கள் இந்த அறிக்கையில் கண்டுள்ள விவரங்களை ஏற்றுக் கொள்கிறீர்களா?'' என்று அவர் சோரோவைக் கேட்டார்.

''ஆம்'' என்று சொல்லி சோரோ மெள்ள எழுந்தான். அவன் முகம் வெள்ளை வெளே ரென்று இருந்தது. ''ஆனால் ஒன்றை இங்கு விளக்கிக் கூற விரும்புகிறேன்...''

''விளக்க வேண்டியது என்ன இருக்கிறது?''

''முதலாவதாக, பக்காசவின் விவகாரத்தை எங்கள் கூட்டுப் பண்ணையின் கட்சிக் கூட்டம் ஒன்றில் விவாதிப்பது அவசியமென்று நினைக் கிறேன்.''

''விதிகளின்படி அது அவசியமில்லை. வட் டாரக் கட்சிக் கமிட்டிக் குழுவின் முடிவைக் கட்சி உறுப்பினர்களுக்குப் பிற்பாடு நீங்கள் தெரிவித்தால் போதும். வேறு என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''

''இதை விளக்கிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்...''

''விளக்க வேண்டியது ஒன்றுமில்லை. தோழர் சோரோ, யாவும் தெளிவாக விளங்குகிறதே. பக்காசவின் கட்சி விரோதப் பேச்சுகளும் செயல் களும் சொல்லாமலே தெளிவாகத் தெரிகிற வை. மேற்கொண்டு விளக்கம் ஒன்றும் வேண் டாம். நடந்ததற்கு நீங்களும் பொறுப்பாளி ஆவீர்கள். கட்சி உறுப்பினர்களுக்குப் போத

மளித்திடும் பணிகளுக்கு ஊறு விளைவிக்கும் முறையில் நீங்கள் நடந்து கொண்டீர்களென்று உங்கள்மீது குற்றம் சாட்டுகிறேம். இந்த விவகாரத்தை எங்கள் கவனத்துக்குக் கொண்டு வர வேண்டாமென்று தோழர் செகிஸ்பாயெ விடம் வாதாட முயன்றதன் காரணம் என்ன? மூடி மறைத்துவிடவா விரும்பினீர்கள்? வெட்கப் பட வேண்டிய செயல் அல்லவா? தயவு செய்து உட்காருங்கள்.''

பிறகு வாக்குவாதம் ஆரம்பமாயிற்று. இயந் திர-டிராக்டர் நிலையத்தின் டைரக்டரும் வட் டாரச் செய்தியேட்டின் ஆசிரியரும் கெரிம் பேக்கவை ஆதரித்து வாதாடினர்கள். தானபா யைப் பாதுகாப்பதில் அவர்கள் வெற்றி பெற்று விடுவார்கள் என்று கூடத் தோன்றியது. ஆனல் தானபாய் மனம் ஒடிந்து உட்கார்ந் திருந்தான், என்ன பேசப்படுகிறது என்பதைக் கூட அவன் காது கொடுத்துக் கேட்கவில்லை. ''நான் வாழ்ந்ததெல்லாம் இதற்குத்தான?'' என்று தொடர்ந்து தன்னைத் தானே கேட்டுக் கொண்டிருந்தான். ''மலைகளில் கிடைகளுக்கு, மந்தைகளுக்கு என்ன நேர்ந்தால் இவர்களுக்கு என்ன? இங்கிருப்போர் யாரும் அது பற்றிக் கவலைப்படவில்லை. எவ்வளவு பெரிய முட்டாள் நான்! கூட்டுப் பண்ணைக்காக, அந்த ஆடுகளுக் காக, அவற்றின் குட்டிகளுக்காக என் வாழ் வைப் பாழாக்கிக் கொண்டேன். இப்பொழுது அதெல்லாம் குறித்து இவர்களுக்கு என்ன கவலை? இப்பொழுது நான் பயங்கரக் குற்ற

வாளி, அவ்வளவுதான். நாசமாய்ப் போக! விரும்புவதைச் செய்யுங்கள். அதனுல் நன்மை ஏற்பட்டாலும் ஏற்படலாம். செய்யுங்கள், கட்சியிலிருந்து வெளியே தள்ளுங்கள். இப்பொ ழுது எனக்கு எல்லாம் ஒன்றுதான்...''

கூட்டுப் பண்ணையின் தலைவர் அல்தாஞெவ் பேசினுர். எதைப் பற்றியோ அவர் ஆத்திர மாகச் பேசினுர் என்பது அவருடைய முகபா வனையிலிருந்தும் அங்க அசைவுகளிலிருந்தும் தாஞபாய்க்குத் தெரிந்தது. ஆனுல் அவர் என்ன பேசினுர் என்பது அவன் மனதில் படவே இல்லை. ''சங்கிலிப் பிணைப்பு... குலுங்கா நடையான் குல்சாரி...'' இச்சொற்களைக் கேட்ட பிறகு தான் தாஞபாய் அவர் கூறியதைக் கவனிக்க முற்பட்டான்.

''அதெல்லாம் சொல்லும் தரமற்றவை'' என்று அல்தாஞெவ் கோபப்பட்டுக் கொண் டார். ''என் மண்டையை உடைத்துவிடுவேன் என்றெல்லாம் எல்லோர் காதிலும் விழும்படி மிரட்டியதற்குக் காரணம் என்ன தெரியுமா? குதிரைக்கு நாங்கள் கால் பிணைப்பு போடும்படி நேர்ந்ததுதான் காரணம், வேறு ஒன்றுமில்லை. தோழர் கஷ்கத்தாயெவ், வட்டாரக் கமிட்டிக் குழு உறுப்பினர்களே, கூட்டுப் பண்ணையின் தலைவர் என்ற முறையில் நான் உங்களை வேண்டு வது என்னவெனில், பக்காசவிடமிருந்து எங் களை விடுவியுங்கள். உண்மையில் இந்த ஆள் சிறைக்கூடத்தில் இருக்க வேண்டியவர். அரசாங்க அதிகாரி என்றதுமே பக்காசவுக்கு அடங்காத

வெறுப்பு உண்டாகிவிடுகிறது. தோழர் கஷ்கத் தாயெவ், முன்னறையில் சாட்சிகள் இருக்கிறார் கள். பக்காசவின் மிரட்டல்களை நேரில் கேட்டவர் கள். உள்ளே வரச் சொல்லிக் கூப்பிடட்டுமா?''

''தேவையில்லை, வேண்டாம்'' என்று முகத் தைச் சுளித்துக் கொண்டு கஷ்கத்தாயெவ் கூறினார். ''நீங்கள் சொன்னதே போதும். உட்கார்ந்து கொள்ளுங்கள்.''

அவர் வாக்கெடுக்க முற்பட்டார்.

''தோழர் பக்காசவைக் கட்சியிலிருந்து நீக்கு வதென முன்மொழியப்படுகிறது. இதை ஆதரிப் போர் எல்லோரும்...''

''தோழர் கஷ்கத்தாயெவ், ஒரு கணம் காத்திருங்கள்'' என்று சொல்லி கெரிம்பேக்கவ் அவசரமாக எழுந்தான். ''குழு உறுப்பினர் களே, நாம் பெரும் தவறிழைப்பதாகப் படு கிறது எனக்கு. இதற்குப் பதில் கடுமையாகக் கண்டித்து எச்சரிக்கை அளிப்பதோடு நிறுத்திக் கொள்ளலாம் என்று நான் ஆலோசனை கூற விரும்புகிறேன். அதேபோதில் வட்டாரக் கட்சிக் கமிட்டிக் குழு உறுப்பினர் செகிஸ்பாயெவையும் கண்டிக்க வேண்டுமென்று முன்மொழிகிறேன். கட்சி உறுப்பினர் என்ற முறையிலும் மனிதர் என்ற முறையிலும் தோழர் பக்காசவை அவ மதித்ததற்காகவும், வட்டாரக் கமிட்டியின் பிரதிநிதியாகச் சென்று, அனுமதிக்க முடியாத முறையில் நடந்து கொண்டதற்காகவும் செகிஸ் பாயெவைக் கண்டிக்க வேண்டும் என்கிறேன்.''

''வாய்வீச்சாக இருக்கிறதே இது!'' என்று

செகிஸ்பாயெவ் இரைந்தார்.

''தோழர்களே, ஒழுங்கு முறை தவற வேண்டாம். நீங்கள் இருப்பது வட்டாரக் கமிட்டிக் குழுவின் கூட்டம், வீடல்ல. கட்டுப்பாடு காக்கும்படி வேண்டுகிறேன்'' என்று கஷ்கத்தாயெவ் கூறினர். யாவும் இப்பொழுது அவர் ஏற்கும் நிலையையே பொறுத்திருந்தது. செகிஸ்பாயெவ் எதிர்பார்த்ததையே அவர் செய்தார். ''பக்காசவின்மீது குற்ற வழக்குத் தொடர வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. ஆனால் இனிக் கட்சியில் அவருக்கு இடமில்லை. இது விஷயமாகத் தோழர் செகிஸ்பாயெவ் கூறியது முற்றிலும் சரியென்பதே என் கருத்து. இது பற்றி இப்பொழுது வாக்கெடுப்போம். கட்சியிலிருந்து பக்காசவ் நீக்கப்பட வேண்டுமென்போர் கையை உயர்த்தும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.''

குழுவில் மொத்தம் ஏழு உறுப்பினர்கள். கட்சியிலிருந்து விலக்கப்பட வேண்டுமென்று மூவர் வாக்களித்தனர்; மூன்று பேர் இதை எதிர்த்து வாக்களித்தனர். கஷ்கத்தாயெவ் இனிதான் வாக்களித்தாக வேண்டும். கணப்பொழுது பார்த்திருந்துவிட்டு அவர் விலக்கப்பட வேண்டுமென்று வாக்களித்தார். தானபாய் இதையெல்லாம் கவனிக்கவே இல்லை. கஷ்கத்தாயெவ் தமது செயலாளரான பெண்ணிடம் கூறியதைக் கேட்டதும்தான் விவாதத்தின் முடிவு அவனுக்குத் தெரிந்தது.

''கூட்ட நிகழ்ச்சிக் குறிப்புகளில் இதைக்

குறித்துக் கொள்ளவும்'' என்று தமது செயலாளரான பெண்ணிடம் கஷ்கத்தாயெவ் அறிவித்தார். ''வட்டாரக் கட்சிக் கமிட்டிக் குழுவின் முடிவுப்படி, தோழர் தாஜுபாய் பக்காசவ் கட்சியிலிருந்து விலக்கப்பட்டுவிட்டார்''.

''அவ்வளவுதான்!'' என்று தாஜுபாய் நினைத்துக் கொண்டான். அவன் உடம்பு பனிக் கட்டி போலாகிவிட்டதாகத் தோன்றிற்று.

''செகிஸ்பாயெவ் கண்டிக்கப்பட வேண்டுமெனக் கோருகிறேன்'' என்று கெரிம்பேக்கவ் விடாப் பிடியாக வாதாடினன்.

அவர்கள் இந்த முன்மொழிவை வாக்குக்கு விடாமலே நிராகரித்திருக்கலாம். ஆனல் வாக்கெடுப்பு நடத்துவதென்று கஷ்கத்தாயெவ் முடிவு செய்தார். இரகசிய நோக்கம் ஒன்றுடன்தான் அவர் இந்த முடிவுக்கு வந்தார்.

''தோழர் கெரிம்பேக்கவின் முன்மொழிவை ஆதரிப்போர் கையை உயர்த்துங்கள்'' என்ருர்.

திரும்பவும் மூன்று உறுப்பினர்கள் ஆதரித்தனர், மூவர் எதிர்த்தனர். திரும்பவும் கஷ்கத்தாயெவ் தமது வாக்கினை செகிஸ்பாயெவுக்கு ஆதரவாக அளித்துக் கண்டனத் தீர்மானத்திலிருந்து செகிஸ்பாயெவைக் காப்பாற்றினுர். ''நான் செய்திருக்கும் சகாயத்தைப் புரிந்து கொண்டு இந்த ஆள் தக்கபடி நடந்து கொள்வாரா? யாருக்குத் தெரியும்?.. நரித்தனமான ஆள், ஆபத்தான பேர் வழி'' என்று கஷ்கத்தாயெவ் தன்னுள் கூறிக் கொண்டார்.

நாற்காலியைப் பின்னல் தள்ளி எல்லோரும்

எழுந்து செல்லத் தயாராயினர். யாவும் முடிவுற்றுவிட்டன என்று தானுபாய் எழுந்தான். வாயைத் திறக்காமல், கண்ணெடுத்து யாரையும் பார்க்காமல் நேரே கதவை நோக்கிச் சென்றான்.

''பக்காசவ், எங்கே போகிறீர்கள்? உங்களுடைய கட்சிக் கார்டைக் கொடுத்துவிட்டுப் போங்கள்'' என்றார் கஷ்கத்தாயெவ்.

''என்ன?'' இது வரை நடந்ததன் முழுப் பொருளும் இப்பொழுது தான் அவனுக்குப் புலப்படலாயிற்று.

''மேஜை மீது வைத்துவிட்டுப் போங்கள். இனி நீங்கள் கட்சி உறுப்பினரல்ல, கட்சிக் கார்டை வைத்துக் கொள்ள உங்களுக்கு உரிமை இல்லை...''

தானுபாய் அவர் சொன்னபடிச் செய்தான். கட்சிக் கார்டு அவனுடைய கோட்டுக்குள் ஸ்வெட்டருக்கு அடியில் அதற்கென ஜெய்தார் தைத்துக் கொடுத்திருந்த சிறிய தோல் உறையினுள் இருந்தது. உறையை அவன் வாரில் இணைத்துத் தோளில் கட்டியிருந்தான். அறையில் பூரண நிசப்தம் நிலவிற்று. கார்டை அதன் இருப்பிடத்திலிருந்து வெளியே எடுக்க நெடு நேரம் அவன் வேலை செய்ய வேண்டியிருந்தது. முடிவில் உறையை வெளியே இழுத்து அவன் மார்புடன் இருந்து கதகதப்பாகிவிட்ட அந்தக் கார்டை எடுத்துக் கஷ்கத்தாயெவின் பளபளப்பான குளிர்ந்த மேஜையின்மேல் வைத்தான். மரத்தின் ஜில்லிப்பால் தாக்குண்டது போல

அவன் உடல் நடுங்கிற்று. யாரையும் கண்ணெடுத்துப் பார்க்காமலே தோல் உறையைக் கோட்டுக்கு அடியில் இழுத்துச் சரிசெய்து கொண்டு வெளியே போகத் தயாராகிறான்.

''தோழர் பக்காசவ்!'' கெரிம்பேக்கவின் குரலில் அனுதாபம் தொனித்தது. ''ஒன்றும் சொல்ல விரும்பவில்லையா நீங்கள்? ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே. மலைகளில் நிலவும் கடின நிலைமைகளே இவ்வளவுக்கும் காரணமாக இருந்திருக்கும். கதவு மூடப்பட்டுவிடவில்லை, சீக்கிரமே நீங்கள் கட்சி அணிகளுக்குத் திரும்பி விடுவீர்கள் என்று எதிர்பார்க்கிறோம். நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?''

தானபாய் திரும்பி நின்றான். அடியின் கடுமையைத் தணிக்கத் தொடர்ந்து முயன்று வந்த இந்த இளைஞனின் எதிரே அவனுக்குச் சங்கடமாயிருந்தது.

''சொல்ல என்ன இருக்கிறது? எல்லோரையும்விட என்னால் சாமர்த்தியமாகப் பேசிவிட முடியாது'' என்று துயரம் தோய்ந்த குரலில் சொன்னான். ''எவ்வகையிலும் நான் குற்றவாளியல்ல, நான் சொல்லக் கூடியது அவ்வளவு தான். அவரைத் தாக்க முயன்றேன் என்றாலும், மோசமாகப் பேசினேன் என்றாலும் நான் குற்றவாளியல்ல. இதை என்னால் விளக்கிச் சொல்ல முடியவில்லை. அவ்வளவுதான் நான் சொல்ல முடியும்.''

அங்கு நிலவிய நிசப்தம் வருத்தமளிப்பதாக இருந்தது.

''அப்படியென்றால் கட்சியின்மீது கடுப்பு என்று தானே அர்த்தம்?'' கஷ்கத்தாயெவ் ஆத்திரமாகப் பேசினார். ''இன்னமும் நிலைமையை நீங்கள் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. கட்சி உங்களை நேர் வழிக்குக் கொண்டு வரப் பார்க்கிறது. நீங்கள் புரிந்த குற்றத்துக்காக வழக்குத் தொடராதபடி உங்களுக்குக் கருணை காட்டியிருக்கிறது. அப்படியும் குறைபட்டுக் கொள்கிறீர்கள், கடுப்புக் கொண்டிருக்கிறீர்கள்! கட்சி உறுப்பினராக இருக்கத் தகுதியற்ற ஆள் என்பதைத்தான் நிரூபித்துக் கொள்கிறீர்கள். திரும்பவும் நீங்கள் கட்சி உறுப்பினராவதற்குக் கதவு திறக்கப்படுமா என்பது சந்தேகம்தான்!''

வட்டாரக் கமிட்டிக் கட்டிடத்தை விட்டு வெளியே வந்தபோது தானபாய் அமைதியாகவே இருந்தான். வியக்கத்தக்கவாறு அமைதியாகத் தோன்றினான். இது நல்லதல்ல. கதிரவன் ஒளியுடன் கூடிய கதகதப்பான பகற்பொழுது முடிவுற்றுக் கொண்டிருந்தது. எல்லாத் திசைகளிலும் மக்கள் நடந்து கொண்டும் குதிரைகளில் போய்க் கொண்டும் இருந்தனர். மன்றக் கட்டிடத்தின் எதிரே சதுக்கத்தில் சிறுவர்கள் ஓடி விளையாடிக் கொண்டிருந்தனர். தானபாய்க்கு அவர்களைப் பார்க்கப் பொறுக்கவில்லை. அவனுக்குத் தன்மீதே வெறுப்பு உண்டாயிற்று. உடனே மலைகளுக்கு, வீட்டுக்குத் திரும்பிவிட வேண்டும். மேற்கொண்டு எதுவும் நடைபெறுமுன் திரும்பிவிட வேண்டும்.

கம்பத்தில் அவனுடைய குதிரைக்குப் பக்கத்தில் குல்சாரி கட்டப்பட்டிருந்தது. பருத்துப் பெரிதாகவும் வலுமிக்கதாகவும் அது நின்று கொண்டிருந்தது. தானுபாய் அருகே வந்ததும் காலை மாற்றி வைத்து நின்றது; அதன் கரிய விழிகளில் அமைதியும் அன்பும் ஒளிர்ந்தன. கவர்க்கோல் கொண்டு தானுபாய்த் தன் தலையில் நையப்புடைத்ததை அடியோடு மறந்து அது அவனை வரவேற்றது. குதிரை அல்லவா அது?

''குல்சாரி, நீ என்னை மன்னித்துவிடு'' என்று தானுபாய் அதன் காதுக்குள் கூறினான். ''நான் பெரிய இன்னலில் சிக்கித் துன்பப்படுகிறேன், என்னை மன்னித்துவிடு'' என்று குதிரையின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு புலம்பினான். அருகாமையில் போய்க் கொண்டிருந்தவர்களுக்கு முன்னால் அழ வெட்கப்பட்டுக் கொண்டு தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

தன் குதிரையில் ஏறிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான்.

வழியில் அலெக்சாந்திரவ்கா ஏற்றத்துக்கு அப்பால் சோரோ வேகமாக வந்து அவனுடன் சேர்ந்து கொண்டான். குலுங்கா நடையான் பறந்தோடிவந்த அந்தச் சப்தம் தவறாத குளம்பொலி, அவன் நன்கறிந்த அந்த ஒலிதன் பின்னால் ஒலிக்கக் கேட்டுத் தானுபாய் முகத்தைச் சுளித்துக் கொண்டான். திரும்பிப் பார்க்க வேண்டுமென்று அவன் நினைக்கவில்லை.

புண்பட்ட அவன் உள்ளம் இருண்டுவிட்டது. சோரோ முன்பு தான் அறிந்த சோரோவாக இல்லை, இப்பொழுது வேறுவிதமான ஆளாய் மாறிவிட்டான். உதாரணமாக இன்று அவன் எப்படி நடந்து கொண்டான்? கஷ்கத்தா யெவ் அவனைப் பார்த்துக் குரலைக் கொஞ்சம் உயர்த்திக் கொண்டதும் பள்ளிக்கூடத்துச் சிறுவனைப் போல அடக்க ஒடுக்கமாக உட்கார்ந்து விட்டானே. மக்கள் அவனிடம் அத்தனை நம்பிக்கை வைத்திருந்தார்கள், ஆனால் அவன் உண்மையைச் சொல்லப் பயப்படுகிறான். வழ வழப்பான சொற்களாய்த் தேடிப் பிடித்து சர்வ ஜாக்கிரதையாகப் பேசினான். இப்படி எச்சரிக்கையாக நடந்து கொள்ள அவனுக்குக் கற்றுத் தந்தது யார்? தானேபாய் படிக்காத வன், கஷ்டப்பட்டு வேலை செய்யும் சாதாரண உழைப்பாளி. ஆனால் சோரோ படித்தவன், யாவும் அறிந்தவன், வாழ்நாள் முழுதும் முக்கிய பதவிகள் வகித்தவன். செகிஸ்பாயெவும் கஷ்கத் தாயெவும் அவர்களை ஒத்த ஏனையோரும் கூறி யது உண்மையல்ல என்பது சோரோவுக்குத் தெரியாமலா போய்விட்டது? அவர்களுடைய பேச்சுகள் எல்லாம் வெளிவேஷம், உள்ளுக்குள் வீண் புரட்டு, முழுக்க முழுக்கப் பொய் என்பதை அவன் கண்டு கொள்ளவில்லையா என்ன? யாரை ஏமாற்றப் பார்க்கிறான்? எதற் காகவாம்?

பறந்தோடி வந்த குலுங்கா நடையானை இழுத்துப் பிடித்து சோரோ தன் பக்கத்திலே

தனக்கு இசைவாய் வந்ததைத் தாஹுபாய் கண்ணெடுத்துப் பார்க்காமலே போய்க் கொண்டிருந்தான்.

''தாஹுபாய், இருவரும் ஒன்ருய்ப் புறப்படலாம் என்று நினைத்திருந்தேன். ஆனால் வெளியே வந்து பார்த்தபோது நீ போய்விட்டது தெரிந்தது...'' என்ருன் சோரோ.

''என்னிடம் உனக்கு என்ன வேண்டும்?'' என்று அவன் பக்கம் திரும்பாமலே தாஹுபாய் முணுமுணுத்துக் கொண்டான். ''உன் வேலையைப் பார்த்துக் கொண்டு உன் வழியிலே போ!''

''தாஹுபாய், உன்னிடம் பேச வேண்டும். இப்படி என்னைப் பார். நண்பர்களாகப் பேசிக் கொள்வோம் — கம்யூனிஸ்டுகளாக'' என்று தொடங்கிய சோரோ நாக்கைக் கடித்துக் கொண்டு தயங்கினன்.

''நான் உன் நண்பனல்ல, இனி நான் கம்யூனிஸ்டும் அல்ல. நீயும்கூட கம்யூனிஸ்டாக இருந்து நீண்ட காலமாகிறது. கம்யூனிஸ்டைப் போல சும்மா வேஷம் போட்டுக் கொண்டிருக்கிருய்...''

''இல்லே, அப்படிச் சொல்லக் கூடாது! உண்மையில் அப்படி நீ நினைக்கமாட்டாய்!'' என்ருன் கலக்கமுற்றுவிட்ட சோரோ.

''அப்படித்தான் நினைக்கிறேன்! எனக்கு சொற்களே அளந்து ஜாக்கிரதையாகப் பேசத் தெரியாது. எந்த நேரத்தில் எதைச் சொல்ல வேண்டும் என்று தெரியாது. சரி, இங்குதான்

நான் திரும்ப வேண்டும், போய்வருகிறேன்.'' தாஞபாய் ஒரு முறைகூடத் திரும்பிப் பார்க்காமல் சாலேயிலிருந்து குதிரையைத் திருப்பி வயல் வெளிகளின் குறுக்கே மலேகளே நோக்கிச் சென்முன். தன் நண்பனேக் கண்ணெடுத்து ஒரு தரம்கூடப் பார்க்காமல் சென்று விட்டான்.

சோரோவின் முகம் வாடிப் போய் வெளிறிட்டதையும், தன் நண்பனே நிறுத்த அவன் கையை நீட்டியதையும், பிறகு திடுக்குற்றவஞகத் துடித்துக் கொண்டு நெஞ்சை அழுத்திவிட்டு மூச்சுத் திணறியபடி குதிரையின் கழுத்திலே விழுந்ததையும் தாஞபாய் பார்க்காமலே போய் விட்டான்.

''ஐயோ!'' இதயத்தில் துள்ளியெழுந்த வலி பொறுக்க மாட்டாமல் துடித்துச் சோரோ முனகிஞன். முகத்தில் நீலம் படர ''ஆ! குல்சாரி, சீக்கிரம்! என்னே வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேரு!'' என்று பொருமிஞன்.

ஆளரவமற்ற இருண்ட ஸ்தெப்பியின் வழியே குல்சாரி அவனேச் சுமந்து கொண்டு அதிவேகமாகப் பறந்தோடிற்று. அவனுடைய குரல் அதைப் பீதியுறச் செய்துவிட்டது. குலே நடுங்கச் செய்த பயங்கரமான ஏதோ ஒன்று அதில் ஒலித்தது. காதுகளேப் பின்புறம் சாய்த்துக் கொண்டு திகிலுடன் கனேத்துவிட்டுக் குல்சாரி பறந்தோடிற்று. அதன் முதுகில் அமர்ந்திருந்தவன் வலி தாங்காமல் துடிதுடித்தான். அவன் கைகளும் பற்களும் குதிரையின் பிடரி

முடிகளைக் கெட்டியாய்ப் பற்றிக் கொண்டிருந்தன. லகான் தளர்ந்து குதிரையின் கழுத்தில் தொங்கிற்று.

## 20

அன்று அந்தி இருட்டில் தாளுபாய் மலைகளை நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது, கிராமத் தெருக்களில் நாய்கள் எல்லாம் குரைக்கும் படிக் குதிரையில் ஓர் ஆள் பாய்ந்தோடிச் சென்று எல்லோரையும் கூப்பிட்டான்.

''வீட்டிலே யாரும் இல்லையா? வாங்க வெளியே!'' என்று வீடுகளின் முன்னால் ஆங்காங்கே நின்று கூவியழைத்தான். ''பண்ணை அலுவலகத்தில் கட்சிக் கூட்டம் நடைபெறப் போகிறது, கிளம்புங்கள்!''

''என்ன அப்படி அவசரம்? என்ன ஆயிற்று?''

''எனக்குத் தெரியாது. சோரேரா என்னைப் போய் அவசரமாக எல்லோரையும் கூப்பிடச் சொன்னார்.''

இதற்கிடையில் சோரேரா பண்ணை அலுவலகத்தில் மேஜையில் மார்பை வைத்து அழுத்திக் கொண்டு மூச்சு விட முடியாமல் திணறிக் கொண்டிருந்தான். சட்டைக்குள் கையை விட்டு நெஞ்சை அழுத்தினான். வலியால் துடிதுடித்து முனகி உதட்டைக் கடித்துக் கொண்டான். முகத்திலே குளிர்ந்த வியர்வை துளிர்த்துவிட்டது. அவன் முகத்தில் பயங்கரப் பச்சை படர்ந்திருந்தது. கண்கள் அவற்றின்

ஆழமான குழிகளுக்குள் ஆழப் புதைந்திருந்தன. அவன் பார்வை சில கணங்களுக்கு மங்கி இருண்டுவிடும். அப்பொழுது அவனுக்கு இன்னமும் தன்னைக் குலுங்கா நடையான் சுமந்து கொண்டு இருண்ட ஸ்தெப்பியில் பறந்தோடிக் கொண்டிருந்ததாகத் தோன்றிற்று. தானுபாயைக் கூப்பிட முயன்முன். ஆனுல் தானுபாய் நெஞ்சைச் சுட்டெரித்த அந்தச் சொற்களைச் சொல்லி விட்டுப் பிரிந்தவன் திரும்பிக்கூடப் பார்க்க மறுத்து விட்டான். தானுபாய் கூறிய சொற்கள் அவன் இதயத்தைப் பொசுக்கின...

பண்ணை லாயத்தை வந்தடைந்ததும் சற்று நேரம் களைப்பாறலாமென்று உலர் புல்லில் உட்கார்ந்துவிட்டான். அங்கிருந்து அவனைப் பண்ணை அலுவலகத்துக்குத் தூக்கிச் சென்றனர். லாயக்காரர்கள் அவனை வீட்டுக்கு அழைத்துச் செல்ல விரும்பினர், ஆனுல் அவன் மறுத்து விட்டான். கிராமத்திலிருந்து எல்லாக் கம்யூனிஸ்டுகளையும் அழைத்து வரும்படி ஆளை அனுப்பி விட்டு, எப்பொழுது எல்லோரும் வந்து சேருவார்களென்று காத்திருந்தான்.

காவல்கார அன்னை விளக்கை ஏற்றி வைத்தாள். பிறகு சோரோவை அலுவலகத்தில் தனியே விட்டுவிட்டு முன்னறைக்குச் சென்று கணப்படுப்பில் அவசரமாக வேலை செய்தாள். பாதி திறந்திருந்த கதவு வழியாக இடையிடையே உள்ளே பார்த்துப் பெருமூச்செறிந்து தலையை ஆட்டிக் கொண்டு வேலை செய்தாள்.

சோரோ தன் தோழர்களுக்காகக் காத்திருந்

தானே. நேரம் சொட்டுச் சொட்டாகக் கழிந்து கொண்டிருந்தது. உலகில் அவனுக்கு எஞ்சி யிருந்த நேரம் வலியும் வேதனையும் மிக்க சிறு சொட்டுகளாகப் போய்க் கொண்டிருந்தது. இத்தனை ஆண்டுகளாக வாழ்ந்தவன் இப் பொழுதுதான் காலத்தின் அருமையைத் தெளி வாகக் காண முடிந்தது. நாட்களும் ஆண்டு களும் ஓடி மறைந்ததை அவன் இதுகாறும் கவனிக்கவே இல்லை. அவன் அறியாமலே அவை உழைப்பிலும் கவலையிலும் கரைந்து சென்று விட்டன.

அவன் விரும்பிய வழியில் பலவும் நடைபெற வில்லை. அவன் பலவற்றில் தோல்வியுற்று விட்டான். அரும் பாடுபட்டான், போராடினான், கடுந் திருப்பத்தைக் கடக்க சில நேரங்களில் பின்வாங்கிச் சென்று மேலும் சுலபமான பாதை யில் செல்ல முற்பட்டான். அப்படியும் திருப்பங் களில் பலவற்றை அவன் கடந்தானில்லை. எதிர்த்துப் போராடாது எப்பொழுதுமே அவன் தவிர்த்து வந்த அந்தச் சக்தி இப்பொழுது அவனை ஒரு கோடியில் கொண்டு வந்து நிறுத்தி விட்டது, பின்வாங்கிச் செல்ல வழியில்லை. சாலை முடிந்து விட்டது. கொஞ்சம் முன்ன தாகவே அவன் சற்று நின்று ஆலோசித் திருக்கக் கூடாதா? வாழ்க்கையை நேருக்கு நேர் நின்று பார்க்கும்படி இதற்கு முன்பே அவன் தன்னைக் கட்டாயப்படுத்திக் கொண் டிருக்கக் கூடாதா?..

வலியும் வேதனையும் மிக்க சொட்டுகளில்

நேரம் கழிந்து சென்று கொண்டிருந்தது. எங்கே எல்லோரும்? ஏன் இவ்வளவு தாமதம்?

''எப்படியாவது நான் இதைச் செய்தாக வேண்டும்!'' அச்சம் அவன் இதயத்தை இறுக்கிப் பிடித்து நெறித்தது. ''எல்லாவற்றையும் இவர்களிடம் நான் சொல்லிவிட வேண்டும்.'' அவன் உயிர் அடங்கிக் கொண்டிருந்தது; மௌனமாக உள்ளுக்குள் கூச்சலிட்டுக் கத்தி அதை அடங்கிவிடாது காத்திருக்கச் செய்ய முயன்றான். கடைசிப் போருக்காகத் தயார் செய்தவாறு விடாப்பிடியாக உயிருடன் மல்லுக்கு நின்றான். ''எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன். எப்படி இவ்வளவும் நடைபெற்றதென்று, வட்டாரக் கமிட்டிக் குழுவின் கூட்டத்தில் அவர்கள் என்ன சொன்னார்கள், தானுபாயை எப்படிக் கட்சியிலிருந்து விலக்கினார்கள் என்று சொல்வேன். வட்டாரக் கமிட்டிக் குழு செய்த முடிவை நான் ஒத்துக் கொள்ளவில்லை என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளட்டும். தானுபாய் விலக்கப்பட்டதை நான் எதிர்க்கிறேன் என்று தெரிந்து கொள்ளட்டும். அல்தானையைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்பதையும் சொல்வேன். அதன்பின் அவர் என்ன சொல்கிறார் என்று அவர்கள் தெரிந்து கொள்ளட்டும். கம்யூனிஸ்டுகள் தீர்மானம் செய்து கொள்ளட்டும். என்னைப் பற்றி, கூட்டுப் பண்ணையையும் மக்களையும் பற்றிச் சொல்வேன். எப்படியேனும் இதைச் செய்து முடித்தாக

வேண்டும். எங்கே எல்லோரும்?..''

முதலில் அவன் மனைவிதான் வந்தாள். அவள் மருந்து கொண்டு வந்திருந்தாள். அவனைப் பார்த்து விட்டு அழுது புலம்பினாள்.

''உனக்கு என்ன, பைத்தியமா? கூட்டங்கள் நடத்தியதெல்லாம் போதாதா? வா வீட்டுக்கு. நீ இருக்கிற நிலையைப் பார்க்க மாட்டாயா? அட கடவுளே! உன்னைப் பற்றி நினைக்கவே மாட்டாயா?''

சோரோ அவள் பேச்சைக் கேட்கவில்லை. மருந்தை வாங்கிக் குடித்துவிட்டு அவளைப் போகச் சொல்லிக் கையை ஆட்டினான். கண்ணாடியில் அவன் பற்கள் படபடவெனத் தட்டின, தண்ணீர் அவன் மார்பிலே வழிந்தோடிற்று.

''நன்றாகி வருகிறது, எல்லாம் சரியாகிவிடும்'' என்று சொல்லி நிதானமாக மூச்சு விட முயன்றான். ''நீ போய் அங்கே காத்திரு. பிற்பாடு என்னை வீட்டுக்கு அழைத்துச் செல்லலாம். கவலைப் படாதே. அங்கே போய் இரு.''

வெளியே பலரும் வரும் சத்தம் கேட்டதும் நேரே நிமிர்ந்து உட்கார்ந்து வலியை அடக்கிக் கொண்டான், தனது கடைசிக் கடமையென அவன் கருதியதை நிறைவேற்ற தனது முழு பலத்தையும் திரட்டிக் கொண்டான்.

''என்ன நேர்ந்தது? சோரோ, நீ ஏன் இப்படி இருக்கிறாய்?''

''ஒன்றும் இல்லை. எல்லோரும் வந்து சேரட்டும், சொல்கிறேன்!''

வலியும் வேதனையும் மிக்க சொட்டுகளில் நேரம் கழிந்து சென்று கொண்டிருந்தது.

எல்லாக் கம்யூனிஸ்டுகளும் வந்து சேர்ந்ததும், கட்சி நிறுவகனை சோரோ எழுந்து நின்று தொப்பியைக் கழற்றினன். கட்சிக் கூட்டம் ஆரம்பமாயிற்று.

## 21

இரவில் நேரம் கழித்துத் தானுபாய் வீடு வந்து சேர்ந்தான். ஜெய்தார் கையில் ஒரு விளக்குடன் வெளியே வந்து அவனை எதிர் கொண்டு அழைத்தாள். எப்பொழுது வருவான் என்று கண்ணைச் சுளித்துத் தொலைவில் பார்த்துக் கொண்டு இவ்வளவு நேரம் காத் திருந்தாள்.

அவனைப் பார்த்ததுமே எவ்வளவு மோசமான நிலைமை என்பது அவளுக்குத் தெரிந்து விட்டது. அவன் வாய் பேசாமல் குதிரையின் கடிவாளத்தைக் கழற்றிவிட்டு சேணத்தை எடுத்தான். அவள் விளக்கைப் பிடித்துக் கொண்டு நின்முள். ''நகரிலே குடித்துவிட்டு வந்திருக்கக் கூடாதா? அவன் உள்ளம் இப்படித் துன்பப்படாதே'' என்று அவள் நினைத்துக் கொண்டாள். இன்னமும் அவன் மௌனமாகவே இருந்தான், அவனுடைய மௌனம் பீதி யூட்டுவதாக இருந்தது. அவனுக்குத் தெரிவிக்க அவளிடம் நல்ல செய்தி இருந்தது. பண்ணை

யிலிருந்து கொஞ்சம் தீனியும் வைக்கோலும் பார்லி மாவும் அனுப்பியிருந்தார்கள். இன்று குளிர் இல்லே, குட்டிகளே மேய்ச்சல் வெளிக்கு அழைத்துச் சென்றிருந்தனர், அவை புல்லேக் கொறித்தன.

''பெக்தாயின் கிடையை அழைத்துச் சென்று விட்டார்கள். அதற்குப் புதிய மேய்ச்சல்காரன் ஒருவனே அனுப்பியிருந்தார்கள்'' என்ருள்.

''பெக்தாயும் கிடையும் புதிய மேச்சல்காரனும் நாசமாய்ப் போக...''

''நீ களேப்புற்றுவிட்டாய்.''

''களேப்பா? கட்சியிலிருந்து என்னே வெளியே விரட்டிவிட்டார்கள்!''

''சப்தம் போடாதே! அந்தப் பெண்களின் காதில் விழும்.''

''சப்தம் போட்டால் என்னவாம்? ஏன் மறைக்க வேண்டும்? நாயை விரட்டுவது மாதிரி என்னே வெளியே விரட்டியடித்துவிட்டார்கள். எனக்கு வேண்டும்தான், உனக்கும் வேண்டும்தான். இது போதாது நமக்கு. ஏன் அப்படி நிற்கிருய்? என்னே ஏன் அப்படிப் பார்க்கிருய்?''

''போய்ப் படுத்துக் கொள்.''

''நீ சொல்லித்தான் நான் போய்ப் படுத்துக் கொள்ள வேண்டுமாக்கும்.''

தாளுபாய் கொட்டகைக்குள் சென்ருன். ஆடுகளேப் பார்த்தான். பிறகு ஆட்டுப்பட்டிக்குப் போய் அங்கே இருட்டில் சற்று நேரம் அலேந்து விட்டுக் கொட்டகைக்குத் திரும்பினுன். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லே. சாப்பிடவும்

மறுத்துவிட்டான், பேசவும் மறுத்துவிட்டான். ஒரு மூலையில் குவிக்கப்பட்டிருந்த வைக்கோலில் விழுந்து அசைவின்றி அங்கேயே கிடந்தான். வாழ்க்கையும் அதன் துன்ப துயரங்களும் இப்பொழுது அவனுக்கு அர்த்தமற்றவையாகி விட்டன. எதிலும் இப்பொழுது அவனுக்கு நாட்டமில்லை. அவன் வாழ விரும்பவில்லை, சிந்திக்க விரும்பவில்லை, எதையும் பார்க்க விரும்பவில்லை.

தூங்கிவிடலாம், தனது சிந்தனைகளை விரட்டி யடித்துவிடலாம் என்று புரண்டு புரண்டு படுத்தான். ஆனால் அவனிடமிருந்தே அவனால் ஓடிவிட முடியுமா? திரும்பவும் பெக்தாய் தொலைவிலே நடந்து செல்வதையும் வெண் பனியிலே வரிசையாய் அவன் விட்டுச் சென்ற கரிய அடிச்சுவடுகள் தெரிவதையும் கண்டான். பெக்தாயிடம் சொல்வதற்குத் தன் மனதில் எதுவும் தோன்றாமற் போனது அவன் நினைவுக்கு வந்தது. குலுங்கா நடையான் மீது அமர்ந் திருந்த செகிஸ்பாயெவ் திரும்பவும் கூச்சலிடக் கேட்டான். மழை கொட்டுவது போல அவருடைய கடுஞ் சொற்கள் அவன்மீது கொட்டின. அவனைச் சிறைக்கூடத்தில் தள்ள வேண்டுமென்ற மிரட்டல் மீண்டும் ஒலித்தது. பிறகு வட்டாரக் கமிட்டிக் குழுவின் கூட்டத்தில் தான் இருந்ததையும், நாசவேலை புரிபவனாக, மக்களின் பகைவனாகத் தான் சித்தரிக்கப் பட்டதையும் கண்டான். அவை இறுதி முடிவாக, அவனுடைய வாழ்க்கையின் முடிவாக

அமைந்தன. திரும்பவும் அவன் கவர்க்கோலைப் பற்றிக் கொண்டு இரவினுள் கூச்சலிட்டுக் கொண்டு ஓட விரும்பினான். உலகத்துக்கே கேட்கும்படிக் கூச்சலிட்டுக் கொண்டு ஓட, மலைப் பிளவு ஒன்றில் போய் விழுந்து கழுத்தை ஒடித்துக் கொள்ளும் வரை ஓடிக் கொண்டே இருக்க விரும்பினான்.

இப்படி வாழ்வதைவிட சாவதே மேலென நினைத்தான். ஆம், சாவதே மேல்!.. இவ்வாறு நினைத்தபடி தூங்கிவிட்டான்.

அவன் விழித்துக் கொண்டபோது தலை கனத்தது. எங்கே இருக்கிறோம், என்ன நடைபெற்றது என்பது விளங்கவில்லை. அருகாமை யில் ஆடுகள் இருமின, குட்டிகள் கத்தின. கொட்டகையில் தான் இருக்கிறோம் என்பது தெரிந்தது. பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. விழித்துக் கொண்டான்? எதற்காக? விழிக் காமல் நிரந்தர உறக்கத்திலே ஆழ்ந்திருக்க வேண்டுமென்று விரும்பினான். இனி அவனுக்கு என்ன இருந்தது? சாவதைத் தவிர வேறு எதுவும் இல்லை. அவனே அவன் உயிருக்கு முடிவு கட்டிக் கொள்வான்...

...பிற்பாடு அவன் ஆற்றிலிருந்து நீரை அள்ளிக் குடித்தான். தண்ணீர் போல ஜில் லிட்டது. சலசலத்த மெல்லிய பனிக் கட்டிச் செதிள்கள் அதில் இருந்தன. நடுங்கிய அவன் விரல்களின் இடுக்கு வழியே நீர் கீழே கொட் டிற்று. மேலும் மேலும் அள்ளிக் குடித்து

மேலெல்லாம நினைததுக கொண்டுவிட்டான். சற்று நேரத்துக்குப் பிற்பாடு அவனுக்குச் சுய நினைவு திரும்பிற்று. தற்கொலை செய்து கொண்டுவிடலாம் என்று, தனக்குத் தானே முடிவு கட்டிக் கொண்டுவிடலாம் என்று தான் நினைத்தது எவ்வளவு அபத்தமான நினைப்பு என்பதை உணர்ந்து கொண்டான். மனிதனுக்கு உயிர் ஒரு தரம்தான் கிடைக்கிறது, தானே அதை மாய்த்துக் கொள்வதா? செகிஸ் பாயெவும் அவரை ஒத்தவர்களும் அத்தனை பெரியவர்களா? அவர்களுக்காக அவன் தற்பலி செய்து கொள்வதா? இல்லை. தாஞுபாய் தொடர்ந்து வாழ்வான், இனியும் தனக்கு எஞ்சியுள்ள ஆயுட்காலத்தில் அவன் மலைகளையும் அசைத்துக் காட்டுவான்.

முகாமுக்குத் திரும்பி வந்ததும் அவன் தனது துப்பாக்கியையும் குண்டுகளுக்கான வாரையும் ஒளித்து வைத்துவிட்டு, பகல் முழுதும் கடுமையாக வேலை செய்தான். தன் மனைவி, தன் குழந்தைகள், தனது உதவியாளர்கள் இவர்களுடன் தான் இன்னும் அன்புடன் நடந்து கொள்ள வேண்டுமென நினைத்தான். அவர் களுக்கு சந்தேகம் எதுவும் உண்டாகிவிடக் கூடாதென்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண் டான். அசாதாரணமாக எதுவும் நடந்து விடாதது போல, எல்லாம் எப்பொழுதும் போலவே இருப்பதாகத் தோன்றும்படி அவர்கள் வழக்கம் போல் வேலை செய்தனர். இதற்காக அவர்களுக்குத் தாஞுபாய் தன்னுள் நன்றி

கூறிக் கொண்டான். வாய் பேசாமல் அவன் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தான். பிறகு மேய்ச்சல் இடத்துக்குச் சென்று கிடையைத் திருப்பி ஓட்டிவர உதவினான்.

அன்று அந்தியில் வானிலே மோசமாகி வந்தது. மழையோ வெண்பனியோ பெய்யு மெனத் தெரிந்தது. மலைகள் பனிப் படலத் திலே மறைந்து விட்டன. வானத்தில் மேகங் கள் அடர்ந்து திரண்டன. குளிரிலிருந்து ஆட்டுக் குட்டிகளைப் பாதுகாக்க என்ன வழி யென்று திரும்பவும் அவர்கள் சிந்தித்தாக வேண்டும். அவை மடியாதிருக்கும் பொருட்டுத் திரும்பவும் கொட்டகையைச் சுத்தம் செய்து சுத்தமான வைக்கோலைப் பரப்பியாக வேண்டும். தானபாய் உக்கிரமாய்த் தோன்றினான். நடந் ததை மறந்துவிட, உள்ளம் குலைந்துவிடா திருக்க முயன்றான்.

இருட்டு நேரம், வெளியே குதிரையில் யாரோ வந்த சப்தம் கேட்டது. ஜெய்தார் வெளியே சென்றாள். வந்த ஆளும் அவளும் ஏதோ பேசிக் கொண்டனர். தானபாய் கொட்டகையில் வேலை செய்து கொண்டிருந் தான்.

''ஒரு நிமிடம் வெளியே வாயேன்'' என்று ஜெய்தார் அவனைக் கூப்பிட்டாள். ''உன்னைப் பார்க்க வேண்டுமாம்.'' நல்ல செய்தி அல்ல என்பது அவளுடைய குரலிலிருந்து அவனுக்குத் தெரிந்தது.

அவன் வெளியே வந்து முகமன் கூறினான்.

வந்திருந்தது பக்கத்து முகாமைச் சேர்ந்த மேய்ச்சல்காரன்.

''அயித்பாய், என்ன சேதி? கீழே இறங்கி வா. எங்கிருந்து வருகிறாய்?''

''கிராமத்திலிருந்து வருகிறேன். அங்கே வேலையை முடித்துவிட்டு வருகிறேன். சோரோ வுக்கு உடம்பு ரொம்ப மோசமாய் இருக்கு, உடனே நீ வர வேண்டும் என்று உன்னிடம் சொல்லிவிட்டுப் போகச் சொன்னார்கள்.''

''மறுபடியும் இந்தச் சோரோதானா!'' என்று தானாபாய் நினைத்துக் கொண்டான். அவனுள் அடங்கியிருந்த ஆத்திரம் திரும்பவும் மூண்டெ ழுந்தது. அவன் சோரோவைப் பார்க்க விரும்ப வில்லை.

''என்னை டாக்டர் என்று நினைத்துக் கொண் டிருக்கிறாய்? எப்பொழுதும் அவனுக்கு சரி யில்லை தான். இங்கே இருக்கிற வேலை போதா தென்று அவனை வேறு போய்ப் பார்க்க வேண்டுமா? வானம் மறுபடியும் மோசமாகி வருகிறது.''

''தானாபாய் நீதான் முடிவு செய்து கொள்ள வேண்டும். என்ன நினைக்கிறாயோ அதன்படி செய். செய்தியை உன்னிடம் சொல்லிவிட் டேன். நான் போய் வருகிறேன், நேரமா கிறது.''

அயித்பாய் புறப்பட்டு இரண்டு தப்படி சென்றதும் குதிரையை இழுத்து நிறுத்தினான்.

''நீ சிந்தித்துப் பார்த்துவிட்டு முடிவு செய். இந்தத் தடவை சோரோவுக்கு உடம்பு

ரொம்ப மோசமாயிருக்கிறதாம். அவனுடைய மகனைக்கூட கல்லூரியிலிருந்து வரச் சொல்லிக் கூப்பிட்டிருக்கிறார்கள். அவனை அழைத்து வர ரயிலடிக்குச் சென்றிருக்கிறார்கள்.''

''தகவலைத் தெரிவித்ததற்கு நன்றி. ஆனால் நான் அங்கே போகப் போவதில்லை.''

அவன் சொன்னதைக் கேட்டுத் திடுக்குற்ற ஜெய்தார் ''எல்லாம் போகத்தான் போவுது. நீ கவலைப்படாதே, போகத்தான் போவுது'' என்றாள்.

தானுபாய் ஒன்றும் சொல்லவில்லை. அயித் பாய் போன பிறகு அவன் கோபமாய்த் தன் மனைவியின் பக்கம் திரும்பினான்.

''எனக்காக நீ பேசுவதை நிறுத்திவிடு. எனக்குத் தெரியும் நான் என்ன செய்யவேண்டு மென்று. போகவில்லை என்று நான் சொன்னால் போக மாட்டேன் என்றுதான் அர்த்தம்.''

''எதையும் ஆலோசிக்காது சொல்கிறாயே, இது சரியல்ல.''

''ஆலோசிக்க ஒன்றும் இல்லை. இத்தனை நாள் ஆலோசித்தது போதும். அப்படி நான் ஆலோசிக்கப் போய்தான் கடைசியில் என்னைக் கட்சியிலிருந்தே வெளியே தள்ளிவிட்டார்கள். எனக்கு நண்பன் யாரும் இல்லை. நான் உடம்பு சரியில்லாமல் படுத்தால் யாரும் என்னைப் பார்க்க வர வேண்டியதில்லை. யாரும் வராமலே என்னால் செத்துப் போக முடியும்!'' என்று கோபமாகக் கையை வீசிவிட்டுக் கொட்ட கைக்கு நடந்தான்.

ஆனல் அவனல் அமைதியடைய முடிய வில்லை. மறிகள் குட்டி போட அவற்றுக்குத் துணை புரிந்த போதும், கத்திய ஆடுகளைச் சபித்து ஒதுக்கித் தள்ளிவிட்டுக் குட்டிகளைத் தூக்கிக் கொண்டு கொட்டகையின் மூலைக்கு நடந்த போதும் ஓயாது தன்னுள் முணு முணுத்துக் கொண்டிருந்தான்.

''முன்பே அவன் வேலையை விட்டு விலகி யிருந்தாளுனல் இப்பொழுது அவனுடைய உடல் நிலை இவ்வளவு கெட்டிருக்காது. வாழ் வெல்லாம் உடம்பு சரியாயில்லை, முனகிக் கொண்டும் மார்பைப் பிடித்துக் கொண்டும் தானே இருந்தான். நாளெல்லாம் குதிரையிலே கழித்தான். பெரிய தலைவர் அல்லவா? இவ் வளவும் நடந்த பிறகு உன்னை நான் பார்க்க விரும்பவில்லை. நீ என்ன நினைத்தாலும் நான் கவலைப்பட்டுக் கொள்ளப் போவதில்லை. ஆனல் நீ எனக்குச் செய்ததை என்னல் மறக்கவே முடியாது. என்னைப் பற்றிக் கவலைப்படாத வனுக்கு நான் மட்டும் ஏன் கவலைப் பட வேண்டுமாம்?''

இரவாகிவிட்டது, வெண்பனி இலேசாய்ப் பெய்து கொண்டிருந்தது. தரையை நோக்கிச் சரிந்து வந்து விழுந்த வெண்பனித் திவலைகளின் மெல்லிய சலசலப்பு காதில் விழும்படி முழுமை யான நிசப்தம் நிலவிற்று.

தானுபாய் மனைவியைக் காண விரும்பாத வனுகக் கூடாரத்தின் பக்கம் தலை காட்டா மலே வேலை செய்து கொண்டிருந்தான். அவளும்

அவனிடம் வரவில்லை. ''வராமலே அங்கேயே இருந்து பாரேன்'' என்று அவன் தன்னுள் கூறிக் கொண்டான். ''எப்படியும் உன்னால் என்னை அங்கே போகச் செய்துவிட முடியாது. எதைப் பற்றியும் இனி நான் கவலைப்படப் போவதில்லை. சோரோ என் நண்பனல்ல. அவன் வழியில் அவன் போகிறான், என் வழியில் நான் போகிறேன். முன்பு நண்பர்களாக இருந்தோம், இப்பொழுது இல்லை. நான் அவன் நண்பனாயிருந்தால், இத்தனை நாளாக அவன் எங்கே போயிருந்தாலும்? எதைப் பற்றியும் இனி நான் கவலைப்படப் போவதில்லை...''

இறுதியில் ஜெய்தார் அவனிடம் வரவே செய்தாள். அவனுடைய மழையங்கி, புதிய பூட்சுகள், பெல்ட், கையுரைகள், விசேஷ காலங்களில் அவன் போட்டுக் கொண்ட தொப்பி இவற்றை எல்லாம் எடுத்து வந்து கொடுத்தாள்.

''உடுத்திக் கொள்'' என்றாள்.

''நீ உன் நேரத்தை வீணாக்குகிறாய். நான் எங்கும் போகப் போவதில்லை.''

''நீதான் நேரத்தை வீணாக்குகிறாய். வாழ்வெல்லாம் நீ வருத்தப்பட வேண்டியிருக்கும்.''

''நான் ஒன்றும் வருத்தப்பட மாட்டேன். ஒன்றும் நடைபெற்றுவிடாது. விரைவில் அவன் உடல் நலமடைந்து எழுந்துவிடுவான். அவன் படுப்பது இது முதல் தடவையல்ல, உனக்குத் தெரியும்.''

''தானுபாய், எனக்காக எதுவும் செய்யும் படி இதற்குமுன் நான் உன்னைக் கேட்டதில்லை. இப்பொழுதுதான் கேட்கிறேன். உன்னுடைய மனத்தாங்கலையும் வருத்தத்தையும் என்னிடம் கொடுத்துவிடு. நீ போய்ப் பார்த்துவிட்டு வா. கல் நெஞ்சம் படைத்தவனாக நடந்து கொள்ளாதே.''

''முடியாது'' என்று தானுபாய் பிடிவாதமாகத் தலையை ஆட்டினான். ''நான் போக மாட்டேன். இனி எதுவும் எனக்குப் பெரியதல்ல. இதமான முறைகள் குறித்தும் கடமை குறித்தும்தான் நீ கவலைப்படுகிறாய். மக்கள் என்ன சொல்வார்கள் என்று கவலைப்படுகிறாய். இனி யார் என்ன சொன்னால் எனக்கு என்ன? நான் கவலைப்படவில்லை.''

''தானுபாய், தயவு செய்து கிளம்பு. நான் போய் அடுப்பைப் பார்க்க வேண்டும். நெருப்பு எரிந்து ஓட்டுக் கம்பளிமீது விழுந்துவிடும்.''

அவனுடைய உடுப்புகளைப் போட்டுவிட்டு அவள் வெளியே நடந்தாள். ஆனால் அவன் அசையவில்லை. அங்கே மூலையில் அப்படியே உட்கார்ந்திருந்தான். தன் மனத்துள் எழுந்த எதிர்ப்பை அவனால் அடக்கிச் சமாளிக்க முடியவில்லை. சோரோவிடம் அவன் சொன்னதை அவனால் மறக்க முடியவில்லை. அங்கே போய் அவன் என்ன செய்ய வேண்டுமாம். ''இதோ பார், நீ எப்படி இருக்கிறாய் என்று பார்ப்பதற்காக வந்திருக்கிறேன். உனக்கு நான் ஏதாவது செய்ய வேண்டுமா?'' என்று விசாரிக்க வேண்டு

மாக்கும். முடியாது, அவன் செய்யக் கூடிய காரியமல்ல அது.

''இன்னும் நீ உடுத்திக் கொள்ளவில்லையா?'' என்று கேட்டாள், திரும்பி வந்த ஜெய்தார்.

''என் உயிரை வாங்காதே! நான் போகப் போவதில்லை என்று எத்தனையோ தரம் சொல்லி விட்டேன்...''

''எழுந்திரு!'' என்று அவள் கோபமாக அதட்டினாள். அவளுடைய உத்தரவைக் கேட்டுப் படையாளைப் போல உடனே அவன் எழுந்து விட்டதைக் கண்டு அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. ஓர் அடி எடுத்து வைத்து அவனை அவள் நெருங்கி வந்தாள். அவளுடைய கண்களில் வேதனையும் கொதிப்பும் நிறைந்திருந்தன. ''நீ ஆண் மகனல்ல என்றால், மனிதப் பிறவியல்லவென்றால், அழுது புலம்பும் கிழவியே அன்றி நீ வேறு யாருமில்லை என்றால், உனக்குப் பதில் நானே போய் வருகிறேன், நீ வீட்டிலே இருந்து உனக்கு இந்தக் கதி ஏற்பட்டதே என்று வருத்தப்பட்டுக் கொண்டிரு! போய் எனக்காகக் குதிரைக்குச் சேணமிடு!'' என்றாள்.

உடனே அவன் பணிவுடன் குதிரைக்குச் சேணமிடச் சென்றான். இலேசாக வெண்பனி பெய்து கொண்டிருந்தது. ஆழமான நீர்ச் சுழியில் சுழலும் நீரைப் போல இருள் மௌனமாகக் குடை ராட்டினத்தில் மெள்ளச் சுற்றிச் சுழல்வதாகத் தோன்றிற்று. இருளில் மலைகளைப் பார்க்க முடியவில்லை. ''இது என்ன வேலை! நள்ளிரவிலே எப்படி அவள் அங்கே போய்ச்

சேரப் போகிறாள்?'' இருட்டில் குதிரையின் முதுகில் சேணத்தைத் தூக்கி வைத்த அவன் இவ்வாறு தன்னுள் வினவிக் கொண்டான். ''அவளுடன் பேசிப் பயனில்லை. சொன்னதை நிறைவேற்றாமல் விடுகிறவளல்ல அவள். வழி தவறி விட்டாளானால் என்ன செய்வது? தன்னை யேதான் அவள் குறை கூறிக் கொள்ள வேண்டி யிருக்கும்...''

குதிரைக்குச் சேணமிட்ட அவனுக்குத் தன்னைப் பற்றி நினைக்கவே வெட்கமாயிருந்தது. ''நான் ஒரு நாய்ப் பிறவி. எனக்கு நேர்ந்த துன்பத் துக்குப் பிற்பாடு எனக்குப் புத்தி தடுமாறிவிட் டது. என்னுடைய துக்கத்தை ஏன் நான் இப் படி ஊரார் அறிந்து கொள்ளும்படி தம்பட்ட மடித்து வருகிறேன்? எனது அவல நிலையை ஏன் எல்லோருக்கும் தெரியப்படுத்துகிறேன்? ஜெய்தாரைப் போய் ஏன் சித்திரவதை செய் கிறேன்? அவளுக்கும் இதற்கும் என்ன சம்பந் தம்? கஷ்டப்பட வேண்டியவன் நானல்லவா? எதற்கும் உதவாதவன் நான்? மிருகமாகிவிட் டேன்!''

தானபாய் தயங்கினான். இது வரை தான் சொன்னதற்கு மாறாக எப்படிப் புறப்பட்டுப் போவதென்று சங்கடப்பட்டுக் கொண்டான். பார்வையைக் கீழே கவிழ்த்துக் கொண்டு இருண்ட முகத்துடன் திரும்பி வந்தான்.

''குதிரை தயார்தானா?''

''தயார்.''

''சீக்கிரமாக உடுத்திக் கொண்டு புறப்படு''

என்று சொல்லி ஜெய்தார் அவனுடைய மழை யங்கியை அவனிடம் கொடுத்தாள்.

தன் மனேவியே முதல் முயற்சியை எடுத்துக் கொண்டது குறித்து மனம் மகிழ்ந்தவாறு வாய் பேசாமல் உடுத்திக் கொண்டான். இருப் பினும் அவனுடைய பெருமை உணர்ச்சி அவனே விடவில்லே.

''நாளேக்குக் காலேயில் போய் வருகிறேனே'' என்று சொல்லிக் கொண்டான்.

''இல்லே, இப்பொழுதே புறப்படு. நாளேக்குக் காலங் கடந்ததாகிவிடும்.''

அருவியில் சுழித்தோடும் நீரைப் போல மலேகள் மீது இரவு சுழன்று கொண்டிருந்தது. வசந்தத்தின் கடைசி வெண்பனியின் பெரும் பெரும் திவலேகள் மிருதுவாகத் தரையிலே படிந்தன. இருட்டாயிருந்த சரிவுகளில் தாஞ பாய் தனியே போய்க் கொண்டிருந்தான். தான் நிராகரித்து விட்டதாக நினேத்திருந்த நண்பனின் அழைப்புக்குச் செவி மடுத்துச் சென்று கொண்டிருந்தான். அவன் தலே, தோள்கள், தாடி, கைகள் எங்கும் வெண்பனி படிந்திருந்தது. வெண்பனியைப் பொருட்படுத் தாமலே சேணத்தின்மீது நேரே நிமிர்ந்து உட்கார்ந்திருந்தான். அசையாதிருக்கையில் சிந் திப்பது அவனுக்குச் சுலபமாக இருந்தது. அவன் நினேப்புகள் யாவும் சோரோவைச் சுற்றி வட்டமிட்டன. சோரோ அவனுக்கு எழுதப் படிக்கக் கற்றுத் தந்தது, இருவரு மாகக் காம்சொமோலிலும் பிறகு கட்சியிலும்

சேர்ந்து கொண்டது ஆகிய அந்த நீண்ட பல ஆண்டுகளில் அவர்கள் இருவரையும் இணைத்த பல நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்த்தான். கால்வாய் வெட்டுவதில் இருவரும் பங்கெடுத்து வேலை செய்த காலம் அவன் நினைவுக்கு வந்தது. அவனுடைய படமும் அவனைப் பற்றிய ஒரு கட்டுரையும் வெளிவந்த செய்தி ஏட்டை சோரோதான் முதன்முதல் அவனிடம் கொண்டுவந்து காட்டினான். சோரோதான் முதன் முலலில் அவனுக்கு வாழ்த்துக் கூறிக் கை குலுக்கினான்.

தானபாயின் மனம் இளகி வந்தது, கல் போலிருந்தது கனிந்து உருகி வந்தது. பிறகு அவனை அச்சம் கவ்விக் கொண்டு பிடுங்கித் தின்றது. ''அவனுடைய உடல் நிலை எப்படி இருக்கிறதோ தெரியவில்லையே. இம்முறை அவன் நிலை மெய்யாகவே கவலைக் குரியதாகி விட்டிருக்குமோ? இல்லையேல் அவன் மகனை வரும்படிக் கூப்பிட்டனுப்பியிருக்க மாட்டார்களே. அல்லது என்னிடம் ஏதாவது சொல்ல வேண்டுமென்று நினைக்கிறானா? எல்லாவற்றையும் குறித்துப் பேசுவதற்காகக் கூப்பிட்டிருப்பானோ?..''

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. இன்னமும் வெண்பனி காற்றிலே சுழன்று கொண்டுதான் இருந்தது. தானபாய் தன் குதிரையைத் துரிதப்படுத்தினான். குன்றுகளுக்கு அப்பால் சமவெளியை அடைந்ததும் கிராமம் கண்ணுக்குத் தெரியும். சோரோ எப்படி இருக்கிறானோ?

இந்நேரம் அங்கே அவனிடம் போய்ச் சேர்ந் திருந்தால் நன்ருயிருக்குமே.

பிறகு காலையின் அமைதியில் தொலைவில் கிராமத்திலிருந்து உள்ளடங்கிய குரல் அவன் காதில் விழுந்தது. உயர்ந்தெழுந்து ஒலித்துத் திடுமென நின்றுவிட்ட கூப்பாடு போலிருந்தது. தாஞபாய் குதிரையைப் பிடித்திழுத்துக் காற் றின் எதிரே காதைத் திருப்பிஞன். யாவும் நிசப்தமாயிருந்தன. ஒன்றுமில்லை, அவனுடைய கற்பனையாகத்தான் இருந்திருக்கும்.

குதிரை அவனை மேலே உயரத்துக்கு இட்டுச் சென்றது. அதிகாலைப் பொழுதில் நடமாட்ட மின்றி அடங்கிக் கிடந்த கிராமத் தெருக்கள் பனி மூடி வெள்ளையாக இருந்த தோட்டங் களுக்கும் இலைகளின்றி மொட்டையாக இருந்த மரங்களுக்கும் இடையே அவன் கண்ணெதிரே தெரிந்தன. ஓர் ஆள் கூடத் தென்படவில்லை. பிறகு வீடுகளில் ஒன்றின் முன்ஞல் கறுத்துத் தெரிந்த மக்கள் கூட்டத்தைக் கண்டான். சேணம் பூண்ட குதிரைகள் மரங்களுக்கு அடியில் நின்றன. அதுதான் சோரோவின் வீடு. கூட்ட மாக இவ்வளவு பேர் வெளியே நிற்கக் கார ணம் என்ன? என்ன நேர்ந்துவிட்டது? என்ஞ...

தாஞபாய் அங்கவடிகளில் உந்தி நின்று பார்த்தான், குளிர் காற்றை முழுங்கிவிட்டுத் துணுக்குற்று நின்ருன். பிறகு குதிரையைத் தட்டிவிட்டான். "இருக்காது! இருக்காது!" அங்கே நடந்து விட்டதாய்த் தோன்றியதற்குத் தானேதான் பொறுப்பாளி என்பதுபோல அவன்

உள்ளம் பதறிற்று. அவனுடைய ஒரேயொரு நண்பன் சோரோ இறுதி விடை பெறுமுன் தன்னுடன் கடைசியாய் ஒரு வார்த்தை பேச விரும்பித் தன்னைக் கூப்பிட்டனுப்பியிருந்தான். ஆனால் அவன் தனது கோபதாபங்களைப் பெரி தாக நினைத்துக் கொண்டு பிடிவாதமாக இருந்துவிட்டானே, அவனை என்னென்பது? எந்த இழி பெயரும் அவனுக்குப் போதுமான தாக இராதே! அவன் மனைவி ஏன் முகத்திலே காரி உமிழாது விட்டாள்? இறந்து கொண் டிருப்பவனது இறுதி விருப்பத்தைக் காட்டி லும் அதிக மதிப்புக்குரியது உலகில் ஏதும் உண்டா?

ஸ்தெப்பி வெளியின் சாலையில் சோரோ குலுங்கா நடையான் மீது வந்து தன்னை எட்டிப் பிடித்ததைத் தாஜபாய் திரும்பவும் நினைத்துக் கொண்டான். அப்பொழுது அவன் சோரோ விடம் சொன்னது என்ன? எந்நாளும் இனி அவனுக்கு மன்னிப்பு உண்டா?

தாஜபாய் தனது கொடுஞ்செயலாலும் அதனால் விளைந்த பழியாலும் இருத்தியழுத்தப்பட்டுக் கூனிக் குறுகியவனாகக் குதிரை மீது வெண்பனி படிந்த தெருக்களின் வழியே சென்றான். சோரோ வின் வீட்டுக்கு அப்பால் குதிரைகளில் பலரும் வந்தது திடீரென்று அவனுக்குத் தெரிந்தது. அவர்கள் மௌனமாக சோரோவின் வீட்டை அணுகினர். பிறகு திடுதிப்பென அவர்கள் தமது சேணங்களில் ஆடிக் குலுங்கியவாறு ஒப்பாரிக் குரல் எழுப்பினர்.

''ஒய்பாய், பௌரிமாய்! ஒய்பாய், பௌரி மாய்!''*

''கஸாக்குகள் வந்துவிட்டனர்'' என்று தாஞு பாய் தன்னுள் கூறிக் கொண்டான். இனி நம்பிக்கைக்கு இடமில்லே. சோரோ இறந்து விட்டான், இந்தப் பிராந்தியம் முழுதும் மக்கள் நன்கறிந்தவன் மாண்டுவிட்டான், ஆற்றுக்கு அப் பாலிருந்த பக்கத்து இனத்தோரான கஸாக்கு கள் இரங்கல் தெரிவிக்க வந்துவிட்டனர். சோரோவை அவர்கள் தமது சகோதரஞக, அண்டை வீட்டுக்காரஞகக் கருதி அவன் மறை வுக்காக வருந்தினர். ''சகோதரர்களே, நன்றி உமக்கு. நமது தந்தையர், பாட்டன்மார்கள் காலமாய் நாம் துயரிலும் மகிழ்விலும், திரு மணங்களிலும் போட்டி விளேயாட்டுகளிலும் ஒன்றுபட்டுப் பங்கு கொண்டுவந்துள்ளோம். எங்களுடன் சேர்ந்து நீங்களும் அழுங்கள்!'' என்று தாஞுபாய் கூறிக் கொண்டான்.

பிறகு அமைதி நிலவிய கிராமம் எங்கும் எதிரொலிக்கும்படி நெஞ்சு குமுறி அவனும் சோகக் குரல் எழுப்பிஞன்.

''சோரோ-ஓ-ஓ! சோரோ-ஓ-ஓ! சோரோ-ஓ-ஓ!''

உலகை விட்டுப் பிரிந்த நண்பனுக்காக அழுது கொண்டு இடப் பக்கமாகவும் வலப்

---

* **ஒய்பாய், பௌரிமாய்** — இறந்தோருக்கு இரங்கல் கூறும் புலம்பல். — **ப-ர்.**

பக்கமாகவும் சாய்ந்தாடியவாறு மெள்ளக் குதிரையிலே சென்றான்.

இதோ நண்பனின் வீடு, இதோ குல்சாரி. அதன் மீது கரிய சேணத் துணி மூடப்பட்டிருந்தது. குதிரையின் மேல் வெண்பனி படிந்து உருகிச் சென்றது. குலுங்காநடையான் குல்சாரி தன் எஜமானனை இழந்து காலி சேணத்துடன் அங்கே நின்றது.

குதிரையின் பிடரியில் தானுபாய் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டான். பிறகு தலையை உயர்த்திவிட்டு மீண்டும் குதிரையின் மீது விழுந்தான். சுற்றிலும் இருந்தோரின் முகங்கள் அவனுக்குத் தெளிவின்றி குழம்பித் தெரிந்தன, அழுதுவடிந்து கொண்டிருந்தன.

''தானுபாய் கீழே இறங்க உதவி செய்து சோரோவின் மகனிடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்று யாரோ ஒருவர் கூறியது அவன் காதில் விழவில்லை.

குதிரையிலிருந்து அவன் இறங்க பலரும் கை கொடுத்து உதவிக் கூட்டத்தின் வழியே அவனை அழைத்துச் சென்றனர்.

''என்னை மன்னித்துவிடு, சோரோ! என்னை மன்னித்துவிடு!'' என்று தானுபாய் புலம்பினான்.

சோரோவின் மகனான மாணவன் சமான்சூர் அங்கே முற்றத்தில் வீட்டின் சுவர் பக்கம் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான். கண்களில் கண்ணீர் பெருகியோட அவன் தானுபாயிடம் வந்தான். இருவரும் கட்டித் தழுவிக் கொண்டு அழுதனர்.

''உன் தந்தை போய்விட்டார்! என் சோரோ போய்விட்டான்! என்னை மன்னித்துவிடு, சோரோ, என்னை மன்னித்துவிடு!'' என்று தானுபாய் விம்மினுன்.

பிறகு தானுபாய் அவளைக் கண்ணுற்ருன். அருகாமையில் இருந்த பெண்களிடையே பியூ பியூஜான் நின்றதைக் கண்டான். அவள் அவனைச் சோகமாய்ப் பார்த்தாள், அவள் கன்னங்களில் கண்ணீர் தாரையாய் ஓடிற்று. விம்மல்கள் தானுபாயைக் குலுக்கின.

வாழ்வில் தான் இழந்தவை யாவற்றுக் காகவும் அவன் அழுதான். சோரோவுக்காக, அவனுக்குத்தான் இழைத்த குற்றத்துக்காக, சாலையிலே சோரோவின் மீது தான் பொழிந்த கடுஞ் சொற்களை இனி எந்நாளும் திரும்பிப் பெற்றுக் கொள்ள வழி இல்லையே என்பதற் காக அழுதான். இப்பொழுது தன் அருகே அந்நியப் பெண்ணைப் போல நின்ற அவளுக் காக, அவர்கள் இருவரின் காதலுக்காக, புயல் வீசிய அன்றைய இரவுக்காக, உலகில் அவள் தன்னந் தனியே இருக்க நேர்ந்ததற்காக, மேலும் மேலும் அவள் வயது முதிர்ந்தவளாகி வந்ததற் காக அழுதான். சோக உருவாய் நின்ற தனது குல்சாரிக்காக, தான் பட்ட துன்ப துயரத் துக்காக, இவ்வளவு காலமாய் அவன் தன்னுள் அடக்கி வைத்திருந்தவற்றுக்காக அழுதான்.

''என்னை மன்னித்துவிடு, சோரோ, என்னை மன்னித்துவிடு!'' என்று மீண்டும் மீண்டும் சொல்லி அழுதான். அவளிடமும் அவன்

மன்னிப்புக் கேட்பது போல அழுதான்.

பியூபியூஜான் தன்னருகே வந்து தனக்கு ஆறுதல் சொல்லமாட்டாளா என்று ஏங்கினன். அவள் அவனிடம் வரவில்லை. கண்ணீர் உதிர்த்த படி அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

ஏனையோர் அவனுக்கு ஆறுதல் கூறினர்.

''தாஞபாய், போதும். இனி அழுது பய னில்லை. கண்ணீர் அவனுக்கு உதவப் போவதில்லை. அழாதே, போதும்.''

ஆனல் இது அவனை மேலும் கதறியழச் செய் தது.

## 22

அன்று பிற்பகலில் சோரோவை அடக்கம் செய்தனர். மேலே தொங்கிய மங்கலான முகில் படலங்களின் வழியே கதிரவனின் தெளிவற்ற ஒளி வட்டம் வெளியே தெரிந்தது. மிருதுவான ஈர வெண்பனித் துகள்கள் இன்னமும் காற்றில் சுழன்று கொண்டுதான் இருந்தன. வெண்ணிற வெளியின் குறுக்கே சப்தமின்றி வெட்டிச் செல்லும் கரிய அருவி போல சவ அடக்க ஊர்வலம் சென்றது. எங்கிருந்தோ திடுமெனத் தோன்றிய அருவி தனக்கு ஒரு படுகை அமைத்துச் செல்வது போலிருந்தது. அடைப்பு கள் கழற்றித் தொங்கவிடப்பட்டு நீள் வரிசை யின் தலைப்பில் சென்ற லாரியில் வெண்ணிற ஓட்டுக் கம்பளியில் கெட்டியாய்ச் சுற்றப்பட்ட

சோரோவின் சடலம் வைக்கப்பட்டிருந்தது. அவன் மனைவியும் குழந்தைகளும் உறவினரும் பக்கத்தில் அமர்ந்திருந்தனர். ஏனையோர் குதிரைகளில் லாரியைப் பின்தொடர்ந்து வந்தனர். சோரோவின் மகன் சமான்சுர், தானுபாய் இவர்கள் இருவரும் லாரியின் பின்னால் நடந்து சென்றனர். தானுபாய் தனது மறைந்த நண்பனின் குதிரையான குலுங்கா நடைக் குல்சாரியை இட்டுச் சென்றான். காலிச் சேணத்துடன் அது அவனுடன் சென்று கொண்டிருந்தது.

கிராமத்துக்கு அப்பால் சாலை மிருதுவான வெண்பனியால் மூடப்பட்டிருந்தது. குதிரைகளின் குளம்புகளால் கோதிவிடப்பட்ட அகன்ற கரியபாதையாய் அது ஊர்வலத்தின் பின்னால் நீண்டு சென்றது. சோரோவின் இறுதிப். பயணத்தை அது வரைந்து காட்டுவதாக இருந்தது. சாலை குன்றின் மீதிருந்த இடுகாட்டிற்குச் சென்றது. சோரோவுக்கு என்றென்றுக்குமாகச் சாலை இத்துடன் முடிவுற்றுவிட்டது.

குலுங்கா நடையானை அழைத்துச் சென்ற தானுபாய் மௌனமாக அதனிடம் பேசிக் கொண்டு நடந்தான்: ''குல்சாரி, நமது சோரோவை இழந்து விட்டோம். அவன் மாண்டு விட்டான். அன்று சாலையிலே நீ ஏன் என்னைப் பார்த்துக் கூச்சலிட்டுக் கத்தவில்லை, என்னை ஏன் நீ நிறுத்தவில்லை? ஆம், கடவுள் உனக்குப் பேச வாய் கொடுக்கவில்லை, என்ன செய்வாய் நீ? ஆனால் இதோ இருக்கிறேன் மனிதனாகப்

பிறந்தவன், குதிரையாகிய உனக்குள்ள மாண்பு எனக்கு இல்லாமற் போனதேன்? என் நண்பனை நான் நடுவழியில் விட்டுச் சென்றேன், திரும்பிப் பார்க்காமலே சென்றேன். என்ன செய்கிறோம் என்று அறியாமல் செய்துவிட்டேன். சோரோ வைக் கொன்றுவிட்டேன், என் சொற்களைக் கொண்டு சோரோவைக் கொன்று விட்டேன்...''

இடுகாட்டுக்குச் செல்லும் வழி நெடுகிலும் தாஞுபாய் தன்னை மன்னிக்கும்படி சோரோவை மன்ருடிக் கேட்டவாறு நடந்தான். சோரோ வின் உடலை மண் படுக்கையில் நிரந்தரமாகப் படுக்க வைப்பதற்காக அவனும் சமான்சுரும் சவக்குழியினுள் இறங்கியதும் ''சோரோ, என்னை மன்னித்துவிடு, எனக்கு விடைகொடு! நான் சொல்வது உனக்குக் காதில் விழுகிறதா, சோரோ? என்னை மன்னித்துவிடு!..'' என்று தாஞுபாய் கதறினன்.

முதலில் பிடிப் பிடியாக சவக் குழியில் மண் விழுந்தது. பிறகு நாற்புறமிருந்தும் மண்வெட்டி அளவுகளில் பொதபொதவென விழுந்தது. குழி மூடிக் குன்றில் புதிய மேடு ஒன்று எழுந் தது.

''சோரோ, என்னை மன்னித்துவிடு!..''

சவ அடக்கத்துக்குப் பிற்பாடு சாப்பாடும் முடிவுற்றபின் தாஞுபாயைச் சமான்சுர் தனியே அழைத்துச் சென்று ''தாஞுபாய், உங்களிடம் நான் ஒன்று சொல்ல வேண்டும்'' என்ருன்.

இருவரும் முற்றத்தைக் கடந்து மக்களிட

மிருந்தும் புகைந்த சாமவர்களிடமிருந்தும் கணப்புத் தீக்களிடமிருந்தும் விலகிப் பின்பக்க வழியாகக் கனித் தோட்டத்துக்குள் சென் றனர். பாசனக் குட்டையின் ஓரமாக நடந்து கிராமத்துக்கு அப்பால் விழுந்து கிடந்த மரத்திடம் போய் நின்றனர். அடி மரத்தின் மீது உட்கார்ந்து தத்தம் சிந்தனைகளில் மூழ்கி மௌனமாயிருந்தனர். ''இதுதான் வாழ்க்கை'' என்று தானுபாய் நினைக்கலானுன். ''சமான்சுர் சிறு பையனுக இருந்தது எனக்கு நன்முய் நினைவிருக்கிறது, இப்பொழுது பார் ஆளை. துக்கம் அவனை முழு மனிதனுக்கிவிட்டது. குடும்பத்தில் சோரோவின் இடத்தைத் தான் ஏற்றுக் கொண்டு விட்டான். இப்பொழுது இருவரும் சரி சமமாகிவிட்டோம். அது தான் வாழ்க்கை. புதல்வர்கள் தம் தந்தையர் இடத்தை ஏற்கிருர்கள். குடும்பம் புதல்வர்கள் வழியே நீடிக்கிறது; தந்தையர் விட்டுச் சென்ற பணியைத் தொடரும் தனயனுக விளங்கட்டும். மேலும் இன்னும் முன்னே சென்று அறிவிலும் விவேகத்திலும் நம்மிலும் சிறந்தவனுகித் தனக் கும் ஏனையோருக்கும் இன்பம் தழைக்கச் செய் வானுக. ஆம், தந்தையராகிய நாம் தனயரை வளர்த்து உருவாக்கிஞேம், நம்மிலும் இவர்கள் சிறப்புறுவர் என்று ஆர்வம் கொள்கிருேம். இதுதானே இவையாவற்றின் மெய்ப்பொருள்.''

''சமான்சுர், குடும்பத்துக்கு மூத்தவன் நீ'' என்று கிழவனைப் போல தாடியைத் தடவிக் கொண்டு தானுபாய் கூறினுன். ''இப்பொழுது

நீ சோரோவின் இடத்துக்கு வந்துவிட்டாய். சோரோ சொல்வதை எப்படி நான் காது கொடுத்துக் கேட்பேனோ அதே போல நீ சொல் வதையும் கேட்பேன், என்ன சொல்லு.''

''தானாபாய், உங்களிடம் ஒன்றைச் சொல்லும் படி அப்பா என்னிடம் சொல்லிச் சென்றார்.''

தானாபாய் துணுக்குற்றான். மகனின் பேச்சு முறை தந்தையின் குரலையும் பாணியையும் அப்படியே பிரதிபலித்தது. சிறுவன் எந்த அளவுக்கு அவன் தந்தையை அப்படியே ஒத் திருந்தான் என்பதை முதன்முதலாக இப்பொ ழுது உணர்ந்த தானாபாய் வியப்புற்றான். இளை ஞன் சோரோவை மகனுக்குத் தெரியாது, ஆனால் தானாபாய் நன்கு அறிவான், பசுமை யுடன் நினைவில் கொண்டிருந்தான். மறைந்தவனை நினைவில் கொண்டிருந்தான். மறைந்தவனை நினைவில் கொண்ட ஏனையோர் வாழ்கிறவரை எம்மனிதனும் உண்மையில் இறப்பதில்லை என்று இதனால் தானே கூறுகிறார்கள்?

''மகனே, அப்படியா? என்ன சொல்லு.''

''தானாபாய், நான் வீட்டுக்கு வந்தபோது அப்பா உயிரோடிருந்தார். நேற்று இரவு அவர் இறப்பதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு நான் வந்து சேர்ந்தேன். அவர் இறுதி வரை சுய நினைவுடன் இருந்தார். உங்களை எதிர் பார்த்து ஆவலுடன் காத்திருந்தார். 'தானா பாய் எங்கே? இன்னுமா வரவில்லை?' என்று கேட்டுக் கொண்டிருந்தார். நீங்கள் வந்து கொண்டிருக்கிறீர்கள், எந்நேரத்திலும் வந்து

சேர்ந்து விடுவீர்கள் என்று நாங்கள் அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தோம். உங்களிடம் அவர் ஏதோ சொல்ல விரும்பினார். பிறகு காலம் முடிந்துவிட்டது.''

''ஆம், சமான்சுர், எனக்குத் தெரியும். நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துப் பேச வேண்டியிருந்தது. எங்களுக்கு அது மிகவும் முக்கியமானது. நான்தான் தவறு செய்து விட்டேன், ஒரு நாளும் நான் என்னை மன்னிக்க முடியாது. அப்படி நான் தாமதம் செய்து விட்டேன்.''

''அவர் இதை உங்களிடம் சொல்லச் சொன்னார். 'மகனே, நான் தானுபாயிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன் என்று தானுபாயிடம் சொல்லு' என்றார். 'என் மீது கோபப்பட வேண்டாம் என்று சொல்லு. என்னுடைய கட்சிக் கார்டை வட்டாரக் கமிட்டியிடம் கொண்டு போய் ஒப்படைக்கும்படிச் சொல்லு. நேரில் தானே என் கட்சிக் கார்டை எடுத்துச் சென்று சேர்ப்பிக்கும் படிக் கூறு. இதைத் தானுபாயிடம் சொல்ல மறந்து விடாதே' என்றார். இதைச் சொல்லிவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார். வலி அவரை வாட்டிற்று. பிறகு அழுதார், அப்பொழுது அவர் என்ன சொன்னார் என்பதை எங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இறந்ததும் யாருக்காகவோ காத்திருந்தது போன்ற தோற்றம் அவர் முகத்தில் தெரிந்தது.''

மௌன விம்மல்கள் தானுபாயைக் குலுக்

கின. சோரோ போய்விட்டான். தானுபாயின் ஒரு பாதி அவனுடன் போய்விட்டது, தானு பாயின் வாழ்க்கையில் ஒரு பகுதியைச் சோரோ தன்னுடன் எடுத்துச் சென்றுவிட்டான்.

''சமான்சுர், இதை எனக்குச் சொன்னது குறித்து உனக்கு என் நன்றி. உன் தந்தைக்கும் என் நன்றி'' என்று முடிவில் தன் உணர்ச்சி களைக் கட்டுப் படுத்திக் கொண்டதும் தானு பாய் கூறினான். ''ஆனால் இதில் ஒரு சிக்கல் இருக்கிறது. நான் கட்சியிலிருந்து விலக்கப்பட்டு விட்டேன், உனக்குத் தெரியுமா?''

''தெரியும்.''

''கட்சியிலிருந்து விலக்கப்பட்ட நான் சோரோ வின் கட்சிக் கார்டை வட்டாரக் கமிட்டியிடம் எடுத்துச் செல்வது சரியல்லவே. எனக்கு அந்த உரிமை கிடையாதே.''

''தானுபாய், எனக்குத் தெரியாது அது. நீங்கள்தான் முடிவு செய்தாக வேண்டும். அப்பா இறக்குமுன் கூறிய இறுதி ஆசையை உங்களிடம் சொல்வது என் கடமை. அவருடைய இந்த இறுதி ஆசையை நீங்கள் பூர்த்திச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.''

''நிச்சயம் முழு மனதுடன் அதைப் பூர்த்தி செய்யவே விரும்புகிறேன். ஆனால் இந்தக் கொடுமை எனக்கு நேர்ந்துள்ளது. ஆகவே நீயே அதைக் கொண்டு போய்க் கொடுப்பது தான் நல்லது.''

''இல்லை. அப்பாவுக்குத் தெரிந்துதானே இதைச் செய்யச் சொன்னார். அவர் உங்களை

நம்பினார், நானும் உங்களைத்தான் நம்ப வேண்டும். வட்டாரக் கமிட்டிக்குச் சென்று இது சோரோ சயாக்கவ் கூறிச் சென்ற அவரது இறுதி ஆசை என்று சொல்லுங்கள்.''

மறுநாள் காலை இருட்டு மறையுமுன் கிராமத்திலிருந்து தானுபாய் புறப்பட்டுவிட்டான். துன்பத்திலும் இன்பத்திலும் ஒருங்கே நம்பகமான குலுங்கா நடையான் குல்சாரி தடக்குழிவிழுந்த சாலையில் உறைந்து கெட்டியான களி மண் கட்டிகளைக் குளம்புகளால் தட்டிச் சிதறடித்துப் பறந்தோடிக் கொண்டிருந்தது. இப்பொழுது தானுபாயைச் சுமந்து சென்றது. இறந்துவிட்ட அவன் நண்பனை கம்யூனிஸ்டு சோரோ சயாக்கவ் இட்ட பணியை மேற்கொண்டு தானுபாய் போய்க் கொண்டிருந்தான்.

தொலைவிலே கண்ணுக்குத் தெரியாத புவி விளிம்புக்கு மேல் பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. உதயத்தின் கருப்பைக்குள் அங்கே புது நாள் தோன்றி அந்தச் சாம்பல் நிற ஒளியிடையே வளர்ந்து கொண்டிருந்தது...

உதயத்தை நோக்கி, தொடுவானத்தில் தணிந்து நின்று பளிச்சிட்டு ஒளி வீசிய தாரகையை நோக்கிக் குல்சாரி ஓடிக் கொண்டிருந்தது. குலுங்கா நடையானின் சந்தம் தவறாத ஓட்டத்தின் கூர்மையான சடசடப்பு நடமாட்டமில்லாத சாலையில் எதிரொலித்தது. தானுபாய் அதில் சவாரி செய்து நெடு நாட்களாகிவிட்டன. எப்பொழுதும் போல குல்சாரி

யின் ஓட்டம் வேகமாக ஒரே சீராக இருந்தது. காற்று அதன் பிடரி முடிகளைப் புடைத்தெழச் செய்து சவாரி செய்த ஆளின் முகத்திலே வீசியடித்தது. குல்சாரி அற்புதமான குதிரை, அது இளமை முறுக்குக் குலையாதிருந்தது.

சோரோ தனது கட்சிக் கார்டை வட்டாரக் கமிட்டியில் கொண்டு போய்ச் சேர்ப்பித்துத் தனது இறுதி ஆசையை நிறைவேற்ற எல்லோரையும் விட்டுவிட்டுக் கட்சியிலிருந்து விலக்கப் பட்ட தன்னை ஏன் தேர்ந்தெடுத்தான் என்று வழி நெடுகத் தாஞபாய் ஆலோசித்தவாறு சென்றான். இதன் பொருள் என்ன? இது ஒரு சோதனையாக இருக்குமோ? அல்லது கட்சியிலிருந்து தாஞபாய் விலக்கப்பட்டதைத் தான் ஒத்துக் கொள்ளவில்லை என்பதைக் காட்டுவதற்குச் சோரோ வகுத்துக் கொண்ட ஒரு வழியாக இருக்குமோ? தாஞபாய் அதைத்தெரிந்து கொள்ள இனி வழி ஏதும் இல்லை. என்றும் இதற்கு அவனால் விடை காண முடியாது. திரும்பவும் சோரோ எந்நாளும் பேச மாட்டான். ''எந்நாளும் பேச மாட்டான்!'' என்னும் இச்சொற்கள் எவ்வளவு பயங்கர மானவை! அதற்கு மேல் கூறுவதற்கு ஒன்று மில்லை...

பழைய நினைவுகள் திரும்பவும் அவனைத் தாக்கின. அவன் மறந்துவிட முயன்றவை, என்றென்றுக்குமாகத் தூர விலக்கி வைத்துவிட விரும்பியவை திரும்பவும் உயிர் பெற்றெழுந்தன. எவையும் முடிவுற்றுவிடவில்லை என்பது

தெரிந்தது. சோரோவின் இறுதி ஆசையை நிறைவேற்றச் சென்று கொண்டிருந்தான். கட்சிக் கார்டை எடுத்துச் சென்று அவனைப் பற்றி, சோரோவைப் பற்றி அவர்களிடம் சொல்வான். எல்லோருக்கும் அவன் எப்படிப் பட்டவனாக இருந்தான், தானுபாய்க்கு அவன் எத்தகையவன் என்பதையெல்லாம் அவர்களிடம் சொல்வான். பிறகு தன்னைப் பற்றியும் சொல்வான், ஏனெனில் சோரோவும் அவனும் கையின் இரு விரல்களைப் போல பிரிக்க முடியாதபடி இணைந்தவர்கள்.

இளமைப் பருவத்தில் இருவரும் எப்படி இருந்தனர்; அவர்களுடைய வாழ்க்கை எத்தகையதாக இருந்தது என்பது எல்லோருக்கும் தெரியட்டும். வாழ்விலும் சரி, சாவிலும் சரி தானுபாயைச் சோரோவிடமிருந்து பிரிப்பது கொடுமையாகும் என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளக்கூடும் அல்லவா? அவன் சொல்வதை அவர்கள் காது கொடுத்துக் கேட்டால், அவன் சொல்ல விரும்புவதைச் சொல்லா விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

வட்டாரக் கமிட்டிச் செயலாளர் அலுவலகத்தினுள் சென்று சோரோவின் கட்சிக் கார்டை அவர் மேஜைமீது எடுத்து வைத்து யாவற்றையும் அவரிடம் சொல்வதாக அவன் தன் மனத்துள் கற்பனை செய்து கொண்டான். தான் செய்தது குற்றமே என்பதை ஒத்துக் கொண்டு மன்னிப்பு கேட்பான். கட்சி அணிகளில் திரும்பவும் அவன் சேர்ந்து கொள்ள அவர்கள் அனு

மதித்தால் போதும், அவன் எதற்கும் தயார். கட்சிக்கு வெளியே அவனுக்கு வாழ்க்கை சகிக்க முடியாத தாயிருந்தது, கட்சிக்கு வெளியே அவனால் தன்னைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை.

ஆனால் கட்சியிலிருந்து விலக்கப்பட்ட அவனுக்குக் கட்சிக் கார்டைக் கொண்டு வந்து சேர்ப்பிக்க உரிமை ஏது என்று அவர்கள் கேட்டால் என்ன செய்வது? ''கம்யூனிஸ்டின் கட்சிக் கார்டைத் தொட அருகதையற்றவன் நீ. இந்த வேலையை நீ மேற்கொண்டிருக்கக் கூடாது. வேறு யாரிடமாவது இந்த வேலை ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்டும்'' என்று அவர்கள் கூறலாம் அல்லவா? ஆனால் இது சோரோவின் இறுதி ஆசை ஆயிற்றே! அவன் மகன் சமான்சுர் இதற்கு சாட்சி. ''அதனால் என்ன? இறக்கும் தருவாயில் இருப்பவன் சரியான நினைவில் இல்லாதவன், அவன் எதுவும் சொல்வான். அது சரியாகிவிடுமா?'' என்று கேட்கலாம் அல்லவா?

இதற்கிடையில் குல்சாரி ஸ்தெப்பியைக் கடந்து அலெக்சாந்திரவ்கா ஏற்றத்துக்குச் சென்றது. உறைந்து போய்க் கணீரென ஒலித்த சாலையிலே அது விரைந்தோடிற்று. சீக்கிரமாகவே அது தானபாயை நகருக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விட்டது. அவன் அறியு முன்பே அங்கே போய்ச் சேர்ந்துவிட்டான்.

தானபாய் போய்ச் சேர்ந்தபோது வட்டாரத் தலைமையிடத்தில் அப்பொழுதுதான் அலுவலக நேரம் ஆரம்பமாயிருந்தது. எங்கும் அவன் நிற்க

வில்லை. வியர்த்துவிட்ட குலுங்கா நடையானை நேரே வட்டாரக் கட்சிக் கமிட்டி அலுவலகத்துக்கு ஓட்டிச் சென்று கம்பத்திலே கட்டிவிட்டுத் தன் ஆடைகளிலிருந்து தூசியைத் தட்டிவிட்டுக் கொண்டு நெஞ்சு படபடக்க உள்ளே நுழைந்தான். அவர்கள் என்ன சொல்வார்களோ? தன்னைச் சந்தித்துப் பேசுவார்களோ, என்னவோ? தாழ்வாரங்கள் காலியாக இருந்தன. கிராமங்களிலிருந்து பல வேலைகளை முன்னிட்டு வரக் கூடியவர்கள் இன்னும் வந்தாகவில்லை. கஷ்கத்தாயெவின் முன் அறைக்குள் தானுபாய் சென்றான்.

''வணக்கம்'' என்று செயலாளப் பெண்ணிடம் கூறினான்.

''வணக்கம்.''

''தோழர் கஷ்கத்தாயெவ் இருக்கிறாரா?''

''இருக்கிறார்.''

''அவரைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறேன். 'வெள்ளைக் கற்கள்' கூட்டுப் பண்ணையைச் சேர்ந்த மேய்ச்சல்காரன் நான். பெயர் பக்காசவ்'' என்றான்.

''தெரியுமே எனக்கு'' என்று சொல்லி அந்தப் பெண் ஒரு மாதிரி சிரித்துக் கொண்டாள்.

''எங்கள் கட்சி நிறுவகரான சோரோசயாக்கவ் இறந்துவிட்டதாக அவரிடம் சொல்ல வேண்டும். மரணப் படுக்கையில் சோரோ தனது கட்சிக் கார்டை இங்கு கொண்டு வந்து ஒப்படைக்கும் படி என்னிடம் கூறியதால் இங்கு வந்திருக்கிறேன்.''

''ஒரு நிமிடம் காத்திருங்கள்.''

செயலாளரான பெண் ஒரு சில நிமிடங்களுக்கு மேல் உள்ளே இருந்திருக்க மாட்டாள். அதற்குள் தாஹபாய் தவியாய்த் தவித்துப் போய்விட்டான்.

''தோழர் கஷ்கத்தாயெவ் வேலையாக இருக்கிறார்'' என்று கூறியவாறு அவள் தனக்குப் பின்னால் அறைக் கதவைக் கெட்டியாக மூடினாள். ''சயாக்கவின் கார்டைப் பதிவு அலுவலகத்தில் கொடுத்துச் செல்லும்படிச் சொன்னார். அது மண்டபத்தில் வலப்புறம் இருக்கிறது.''

''பதிவு அலுவலகம் ...மண்டபத்தில் வலப்புறம் இருக்கிறது.'' என்ன இது? தாஹபாய் குழப்பமுற்றுவிட்டான். பிறகு திடுமெனத் தெளிவு ஏற்பட்டதும் பேரிடி விழுந்தது போலிருந்தது. மெய்தானா? இவ்வளவு தானா? அவன் பெரிதாக ஏதேதோ நினைத்தல்லவா இங்கு வந்தான்...

''நான் அவரைப் பார்த்தாக வேண்டும். தயவு செய்து அவரிடம் மறுபடியும் போய்ச் சொன்னால் நல்லது. முக்கியமான ஒன்று குறித்து நான் அவரைப் பார்த்துப் பேச வேண்டும்.''

அவள் சற்றுத் தயங்குவது போல நின்றுவிட்டுப் பிறகு மறுபடியும் அறைக்குள் சென்றாள். வெளியே வந்து மறுபடியும் முன்பு போலவே சொன்னாள்:

''அவர் ரொம்ப வேலையாக இருக்கிறார்.''

பிறகு கொஞ்சம் அனுதாபமான குரலில்

''ஒன்றும் செய்வதற்கில்லை'' என்றாள். மேலும் மெல்லிய குரலில் ''அவர் பார்க்க மாட்டார், காத்திருந்து பயனில்லை'' என்று சொன்னாள்.

தானுபாய் மண்டபத்தின் வழியே நடந்து வலப்புறம் திரும்பினான். அங்கே ஒரு கதவில் ''பதிவு அலுவலகம்'' என்று குறிக்கப்பட்டிருந்தது. கதவில் ஒரு சாளரம் இருந்தது. அதில் தட்டினான். சாளரம் திறக்கப்பட்டது.

''என்ன வேண்டும்?''

''கட்சிக் கார்டு ஒன்றை ஒப்படைத்துச் செல்வதற்காக வந்திருக்கிறேன். எங்கள் கட்சி நிறுவகர் சோரேரா சயாக்கவ் இறந்துவிட்டார். நான் 'வெள்ளைக் கற்கள்' கூட்டுப் பண்ணையிலிருந்து வருகிறேன்.''

அந்தக் குமாஸ்தாப் பெண் பொறுமையுடன் காத்திருக்கத் தானுபாய் தன் கோட்டுக்கு அடியிலிருந்து தோல் உறையை வெளியே இழுத்தான். சில நாட்களுக்கு முன்பு வரை அவன் தன்னுடைய கட்சிக் கார்டை வைத்திருந்த அதே உறைதான். இப்பொழுது சோரேராவின் கட்சிக் கார்டை அதில் வைத்திருந்தான். கார்டை எடுத்துச் சாளரத்தினுள் கொடுத்தான். ''சோரேரா விடை பெறுகிறேன்!''

ஒரு குறிப்பேட்டில் அந்தப் பெண் சோரேராவின் கார்டு இலக்கத்தையும் சோரேராவின் பெயரையும் கட்சியில் அவன் சேர்ந்து கொண்ட ஆண்டினையும் குறித்துக் கொண்டதைத் தானுபாய் பார்த்துக்

கொண்டு நின்றான். சோரோவைப் பற்றிய கடைசி நினைவுக் குறிப்பு அது. பிறகு அவள் குறிப்பேட்டில் அவனைக் கையெழுத்திடச் சொன்னாள்.

''அவ்வளவுதானா?'' என்று தானபாய் அவளைக் கேட்டான்.

''ஆம்.''

''வணக்கம்.''

''வணக்கம்.'' சாளரம் மூடப்பட்டது.

தானபாய் வெளியே சென்றான். குலுங்கா நடையானைக் கம்பத்திலிருந்து அவிழ்த்தான்.

''அவ்வளவு தான், குல்சாரி'' என்று குதிரையிடம் சொன்னான். ''அவ்வளவுதான்.''

அயராது ஓடும் குல்சாரி அவனைச் சுமந்து கொண்டு கிராமத்துக்குத் திரும்பி ஓடிற்று. குதிரையின் குளம்பொலி அதிர்ந்து ஒலித்தது. எல்லையின்றி விரிந்திருந்த வசந்த பருவ ஸ்தெப்பி வெளியும் அதில் வீசிய காற்றும் அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தன. தானபாயின் குமுறிய இதயம் ஓட்டத்தின் விரைவால் சற்றுச் சாந்தமடைந்தது.

அன்று அந்திப் பொழுதில் தானபாய் மலைகளில் தனது முகாமுக்குத் திரும்பினான்.

அவன் மனைவி மௌனமாக அவனை எதிர் கொண்டு அழைத்தாள். லகானை அவனிடமிருந்து பெற்றுக் கொண்டாள். குதிரையிலிருந்து கீழே இறங்கக் கணவனுக்குத் துணை புரிந்தாள். தானபாய் அவள் பக்கம் திரும்பி அவளைக் கட்டிக் கொண்டு தன்

தலையை அவள் தோளில் புதைத்துச் கொண்டான். அவள் அவனை அணைத்துப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

''சோரோவை அடக்கம் செய்தோம். அவன் போய்விட்டான். என் நண்பனை இழந்து விட்டேன், ஜெய்தார்!'' என்றான். திரும்பவும் தாரையாய்க் கண்ணீர் வடித்தான்.

பிற்பாடு அவன் கூடாரத்துக்கு வெளியே மௌனமாக ஒரு பெரிய கல்லின்மீது உட்கார்ந்திருந்தான். அவன் தனித்திருக்க விரும்பினான், வெண்ணிற மலைத் தொடரின் முரட்டு முகடுகளுக்கு அப்பாலிருந்து மெள்ள நிலவு உதிப்பதைப் பார்த்துக் கொண்டிருக்க விரும்பினான். அவன் மனைவி குழந்தைகள் இருவரையும் படுக்கச் சொல்லித் தூங்க வைத்தான். கணப் படுப்பில் நெருப்பு சடசடத்தது அவன் காதில் விழுந்தது. பிறகு அவன் மனைவியினுடைய தெமிர்-கொமுஸ் நெஞ்சைப் பிளக்கும் துயரக் கீதம் ஒன்றை இசைக்கத் தொடங்கிற்று. காற்று துயரத்துடன் ஊளையிடுவது போல, மனிதன் ஒருவன் சோகமாய் முறையிட்டுப் புலம்பி அழுதபடி பொட்டல் வெளியின் குறுக்கே ஓடுவது போல அவ்விசை ஒலித்தது. மற்றெங்கும் நிசப்தம் நிலவிற்று. யாவும் கதி கலங்கிச் சப்தமின்றிக் காத்திருப்பது போலவும், மனிதத் துயரையும் துன்பத்தையும் எடுத்துரைத்து ஓரேயொரு குரல் மட்டும் தனியே புலம்பிக் கொண்டு ஓடுவது போலவும் இருந்தது. தனது கொடுஞ்சோகத்துக்குப்

புகலிடம் எங்கே கிடைக்கும் என்று தெரியாமல், நிசப்தத்திலும் பொட்டல் வெளியிலும் ஆறுதல் காணும் வகை அறியாமல், தொடர்ந்து அது ஓடி அலைவது போலவும், அதை வாவென்று அழைக்க யாருமே இல்லாதது போலவும் தோன்றிற்று. தொடர்ந்து அது அழுது புலம்பிற்று, தன் துயருக்குத் தானே செவி மடுத்தது. தனக்காகத் தன் மனைவி ''கிழ வேடனின் புலம்பலை'' இசைத்தாள் என்று தானுபாய்க்குத் தெரியும்.

...முன்னொரு காலத்தில் கிழ வேடன் ஒருவனும் அவன் மகன் காராகுல்லும் இருந்தனர். மகன் வீரமிக்க வேடன் ஆனான். வேட்டைக் கலையின் கடின வித்தைகளை எல்லாம் தந்தை தன் மகனுக்குக் கற்றுக் கொடுத்திருந்தார். மகன் தந்தையையும் மிஞ்சி விட்டான்.

ஒருபோதும் அவன் குறி தவறாது. எதனாலும் அதிலிருந்து தப்ப முடியவில்லை. சுற்றுப்புற மலைகளில் இருந்த விலங்குகளை எல்லாம் கொன்று விட்டான். சினை ஆடுகளையும் பச்சிளங் குட்டிகளையும்கூட அவன் ஈவிரக்கமின்றிக் கொன்றுவிட்டான். வெள்ளாடுகளுக்கெல்லாம் தாயான முதுபெரும் ஆட்டின் கிடை அனைத்தையுமே கொன்று தீர்த்துவிட்டான். முதுபெரும் ஆடும் முதுகிடாவும் மட்டும்தான் எஞ்சியிருந்தன. முதுகிடாவைக் கொல்லாதே, இன விருத்திக்காக அதை விட்டுவை என்று முதுபெரும் ஆடு அவனை மன்றாடிக் கேட்டது.

ஆனால் அவன் அதைக் கேளாது ஒரே வேட்டில் முதுகிடாவை வீழ்த்தினான். அது சுருண்டு வீழ்ந்து பாறையின் விளிம்பிலிருந்து கீழே விழுந்தது. இதைக் கண்டு முதுபெரும் ஆடு அழுது புலம்பிற்று. வேடனிடம் தன் நெஞ்சைக் காட்டி, ''சுடு என் நெஞ்சில்'' என்றது. ''நான் அசையாமலிருப்பேன். உனக்குக் குறி தவறும், அதுவே நீ சுடப்போகும் கடைசிக் குண்டு!'' என்று கூறிற்று. இளம் வேடன் அசட்டு ஆடே என்று சொல்லிச் சிரித்துவிட்டுக் குறி பார்த்துச் சுட்டான். ஆனால் முதுபெரும் ஆடு விழவில்லை. அதன் முன்னங்காலில் சிராய்ப்பதற்குமேல் அக்குண்டினால் ஒன்றும் செய்ய முடியவில்லை. வேடன் திடுக்குற்று விட்டான்; இதற்கு முன்பு இப்படி என்றுமே நடந்ததில்லை. ''பார்த்தாயா?'' என்றது முதுபெரும் ஆடு. ''இப்பொழுது நான் நொண்டி, இருந்தாலும் எங்கே என்னைப் பிடித்துப் பார்!'' என்று அது சவால் விட்டது. இளம் வேடன் ஏளனமாகச் சிரித்தான். ''சரி, ஓடு பார்ப்போம்! நான் உன்னைப் பிடித்தால் இரக்கம் காட்ட மாட்டேன், உன் வீறுப்புப் பேச்சுக்காக உன் கிழட்டுத் தொண்டையைக் கிழித்துப் போடுவேன்!''

முதுபெரும் ஆடு நொண்டிக் கொண்டு ஓடிற்று. இளம் வேடன் அதை விரட்டிக் கொண்டு பின்னால் ஓடினான். பல பகலும் பல இரவும் மலைகள் மீதும் பிளவுகளினுள்ளும் வெண்பனியிலும் பாறைகளிலும் விரட்டிச்

சென்ருன். ஆனால் அதை அவனால் பிடிக்க முடியவில்லை. துப்பாக்கியைத் தூக்கியெறிந்து விட்டான், அவனுடைய ஆடைகள் கிழிந்து நாராகத் தொங்கின. தப்புவதற்கு வழியில்லாத செங்குத்தான மலை உச்சிகளுக்குத் தன்னை அது அழைத்து வந்துவிட்டதை அவன் உணர்ந்தானில்லை. மேலே செல்லவும் வழியில்லை, கீழே இறங்கவும் வழியில்லை. முதுபெரும் ஆடு அவனை இங்கே விட்டுச் சென்றது. செல்லுமுன் அவனுக்கு ஒரு சாபமும் இட்டது: ''இங்கிருந்து நீ நகர முடியாது, யாராலும் உன்னைக் காப்பாற்ற முடியாது. கொலையுண்ட என் குழந்தைகளுக்காக, மறைந்த என் கிடைக்காக நான் அழுவது போல, உன் தந்தை உனக்காக அழட்டும். வெள்ளாடுகளுக் கெல்லாம் தாயான முதுபெரும் ஆடான நான் கதறுவது போல, இங்கே இந்தச் செங்குத் தான பாறைகளுக்கிடையே, குளிரும் இம் மலைகளிடையே தனியே நின்று உன் தந்தை கதறட்டும். காராகுல், உன்னை நான் சபிக் கிறேன்...'' முதுபெரும் ஆடு அழுது கொண்டு பாறையிலிருந்து பாறைக்கு, மலையிலிருந்து மலைக்குத் தாவி ஓடிற்று.

இளம் வேடன் தலையைக் கிறுகிறுக்கச் செய்த அந்த உயரத்தில் குறுகலான விளிம்பிலே நின்ருன். திரும்பிப் பார்க்க அஞ்சியவனாகக் கொடும் பாறையில் முகத்தை வைத்து அழுத்திக் கொண்டு நின்ருன். மேலே ஏறவோ கீழே இறங்கவோ, இடமோ வலமோ நகரவோ

வழியின்றி அந்தரத்தில் நின்றான். அவனால் வானத்தைப் பார்க்க முடியவில்லை, தரையையும் பார்க்க முடியவில்லை.

அவன் தந்தை எல்லா இடங்களிலும் சென்று அவனைத் தேடினார். ஒவ்வொரு மலையிலும் ஏறிப்பார்த்தார். பாதை ஒன்றில் மகனின் துப்பாக்கியைக் கண்ட அவர் மகனுக்கு ஏதோ விபத்து ஏற்பட்டுவிட்டதென்று தெரிந்து கொண்டார். ஆழமான இடுக்குகளிலும் இருண்ட பொந்துகளிலும் ஓடிச் சென்றார். ''காராகுல், எங்கே நீ? காராகுல், பதில் சொல்!'' கற்பாறைகள் கல் ஒலி எழுப்பிச் சிரித்து அவருடைய சொற்களையே அவர் மீது எதிர்த்தடித்துப் பதிலளித்தன: ''...காராகுல், எங்கே நீ? காராகுல், பதில் சொல்!..''

''அப்பா, இதோ இருக்கிறேன்!'' என்று மேலிருந்து திடீரென்று ஒரு குரல் கூவியது அவர் காதில் விழுந்தது. கிழவர் மேலே பார்த்தார். உயரமான செங்குத்தான பாறையில் குறுகலான விளிம்பில் காக்கைக் குஞ்சுபோல தன் மகன் தொத்திக் கொண்டு நிற்கக் கண்டார். திரும்ப முடியாமல் உலகுக்கு முதுகைக் காட்டியவாறு அங்கே அவன் நின்றான்.

''ஐயோ மகனே, எப்படி நீ அங்கே போய்ச் சேர்ந்தாய்?'' என்று அவன் தந்தை துணுக்குற்றுப் போய் அவனைக் கேட்டார்.

''எப்படிச் சொல்வேன், அப்பா. நான் செய்த பாவங்களுக்காகத் தண்டிக்கப்பட்டு இங்கு நிறுத்தப்பட்டிருக்கிறேன். முதுபெரும்

ஆடு என்னை இங்கு அழைத்து வந்து நிறுத்திப் பயங்கரச் சாபமிட்டுவிட்டது. பல நாட்களாக இங்கே நிற்கிறேன். கதிரவனையோ வானத்தையோ தரையையோ பார்க்க முடியாத நிலையில் நிற்கிறேன். அப்பா, இனி ஒருபோதும் உன் முகத்தை என்னால் பார்க்க முடியாது. அப்பா, எனக்கு இரக்கம் காட்டு, என்னைக் கொன்றுவிடு. என் துன்பத்துக்கு ஒரு முடிவு கட்டு. உன்னை மன்றாடிக் கேட்கிறேன். என்னைக் கொன்றுவிடு!''

தந்தை என்ன செய்வார்? அழுதார், அங்கும் இங்கும் ஓடினார். இதற்கிடையில் அவர் மகன் ஓயாது அவரைக் கெஞ்சினான்: ''சீக்கிரம், அப்பா! என்னைக் கொன்றுவிடு! என்னைச் சுட்டுக் கொன்றுவிடு! அப்பா, எனக்கு இரக்கம் காட்டு! என்னைக் கொன்றுவிடு!'' தந்தைக்கு மனம் வரவில்லை. முடிவில் கதிரவன் மறையும் நேரத்தில் கிழவர் குறி பார்த்துச் சுட்டார். பிறகு தன் துப்பாக்கியைப் பாறைகளில் மோதி உடைத்துவிட்டு மகனின் சடலத்தை வைத்துக் கொண்டு அழுது புலம்பிப் பாடினார்:

உன்னைக் கொன்றேனே, என் மகனே
காராகுல்,
தன்னந் தனியனானேனே உலகில் நான்,
என் மகனே காராகுல்,
விதி என்னைத் தண்டித்ததே, என் மகனே
காராகுல்,
விதி என்னை வஞ்சித்துவிட்டது,
என் மகனே காராகுல்.
ஏன் உனக்குக் கற்றுத் தந்தேன்,

என் மகனே காராகுல்,
வேட்டைத் தொழிலே ஏன் கற்றுத்தந்தேன்,
என் மகனே காராகுல்.
ஏன் கொன்ருய் நீ, என் மகனே
காராகுல்,
எல்லா விலங்கையும், எல்லா உயிரையும்,
என் மகனே காராகுல்
இப்படி அழித்தொழிக்கலாமோ நீ,
என் மகனே காராகுல்,
வாழ்ந்து பெருகப் பிறந்தவற்றை,
என் மகனே காராகுல்.
தன்னந் தனியஞனேனே உலகில் நான்,
என் மகனே காராகுல்,
என்னுடன் அழுவார் யாருமில்லே,
என் மகனே காராகுல்.
கொடுந்துயர் தாளாமல், என் மகனே
காராகுல்,
கொன்றேனே உன்னேத்தான், என் மகனே
காராகுல்,
என் கையாலே கொன்றேனே,
என் மகனே காராகுல்...

...தாஞபாய் கூடாரத்துக்கு வெளியே உட்கார்ந்து இந்தப் பண்டைய கிர்கீஸ் புலம்பலேக் கேட்டான். மௌனமாகக் கறுத்து நின்ற மலேகளுக்கு மேல் நிலா மெள்ள உயர்ந்தெழுந்து பிறகு பனி மூடிய கூர் முகடுகளுக்கும் நெடிதுயர்ந்த பாறைகளுக்கும் மேலே தொங்கியதைப் பார்த்தவாறு புலம்பலேக் கேட்டுக் கொண்டிருந்தான். தன்னே மன்னிக்குமாறு இறந்த தன் நண்பனேத் திரும்பவும் மன்ருடிக் கேட்டான்.

ஜெய்தார் கூடாரத்தினுள் இளம் வேடன்

காராகுல்லுக்கான புலம்பலைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தாள்:

உன்னைக் கொன்றேனே, என் மகனே
காராகுல்,
தன்னந் தனியனானேனே உலகில் நான்,
என் மகனே காராகுல்...

## 23

பொழுது விடியும் நேரம். இறந்து கொண்டிருந்த தனது குலுங்கா நடையானின் தலைமாட்டில் கணப்புத் தீயின் அருகில் அமர்ந்திருந்த தானபாய் தொடர்ந்து நிகழ்ந்தவை அனைத்தையும் நினைத்துப் பார்த்தான்.

பிறகு சிறிது காலத்துக்கெல்லாம் அவன் பிராந்தியத் தலைமையிடத்துக்குப் போயிருந்தது யாருக்கும் தெரியாது. அது அவனுடைய கடைசி முயற்சி. பிராந்தியக் கமிட்டியின் செயலாளரை அவன் பார்க்க விரும்பினான். முன்பு வட்டாரத் தலைமையிடத்தில் நடைபெற்ற மாநாட்டில் அவர் பேசியதை அவன் கேட்டிருந்தான். தனது துன்பத்தைப் பற்றி அவரிடம் சொல்ல விரும்பினான். இவர் தன்னைப் புரிந்து கொள்வார், தனக்கு உதவி செய்வார் என்று அவன் நம்பினான். சோரோ அவனிடம் அவரைப் பாராட்டிப் பேசியிருந்தான், மற்றவர்களும் அவரைப் புகழ்ந்து கொண்டனர். ஆனால் பிராந்தியக் கமிட்டிக்குப் போய்க்

கேட்ட பிறகுதான் அந்தச் செயலாளர் வேருெரு பிராந்தியத்துக்கு மாற்றப்பட்டுவிட்டார் என் பது அவனுக்குத் தெரிய வந்தது.

''உங்களுக்குத் தெரியாதா?''

''தெரியாதே.''

''முக்கிய விவகாரமாயிருந்தால் எங்களு டைய புதிய செயலாளரிடம் போய்ச் சொல் கிறேன். அவர் உங்களைக் கூப்பிட்டுப் பேச முடிந்தாலும் முடியலாம் அல்லவா?'' என்று முன்னறையிலிருந்த செயலாளப் பெண் கூறினுள்.

''நன்றி, வேண்டாம். என் சொந்த விவகாரமாக வந்தேன். அவருக்கு என்னைத் தெரியும், எனக்கு அவரைத் தெரியும். இல்லையேல் இங்கு வந்திருக்க மாட்டேன். நன்றி. வணக்கம், போய் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கட்டிடத்தைவிட்டு வெளியே வந்தான். பழைய செயலாளரைத் தனக்குத் தெரியும், அவருக்கும் மேய்ச்சல்காரன் தாளுபாய் பக்காசவைத் தெரியும் என்று மெய்யாகவே நம்பியவாறு வெளியே வந்தான். ஏன் தெரியாது? அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் தெரிந்து கொண்டு ஒருவரையொருவர் மதித்திருக்கக் கூடியவர்கள்தானே. இதில் அவனுக்குச் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. எனவேதான் அப்படிக் கூறினுன்.

பஸ் நிற்கும் இடத்தை நோக்கித் தெரு வழியே தாளுபாய் நடந்து வந்தான். ஒரு பீர் கடைக்கு முன்னுல் இரு ஆட்கள் காலி

பீர் பீப்பாய்களை லாரியில் ஏற்றிக் கொண்டிருந்தனர். ஓர் ஆள் லாரியில் நின்ருன். மற்றவன் தரையில் நின்று கொண்டு லாரியின்மீது சாய்த்து வைக்கப்பட்டிருந்த பலகையின் மேல் பீப்பாயை மேலே உருட்டிக் கொண்டிருந்தவன் சாலையிலே நடந்து வந்த தாஞுபாய் பக்கம் அகஸ்மாத்தாகத் திரும்பிப் பார்த்துவிட்டு அப்படியே கல்லாகச் சமைந்து விட்டான். அவன் வேறு யாருமல்ல, பெக்தாய். சாய்வுப் பலகையில் பீப்பாயைப் பிடித்து நிறுத்திக் காழ்ப்புடன் தனது பூனைக் கண்களால் ஊற்றுப் பார்த்தவாறு தாஞுபாய் தன்னிடம் ஏதாவது சொல்லப் போகிருஞு என்று காத்துக் கொண்டு அசையாது நின்ருன்.

''என்ன அப்பா நீ, தூங்குகிருயா?'' என்று லாரியில் நின்றவன் கடிந்துகொண்டான்.

பீப்பாய் கீழே சரிந்தது. வைத்த கண்களை வாங்காமல் தாஞுபாயைப் பார்த்தபடி பெக்தாய் பீப்பாயைச் சரிந்து உருளாது நிறுத்த முயன்ருன். ஆனுல் தாஞுபாய் அவனுடன் பேசவில்லை. ''இங்கே வந்துவிட்டாயா? உனக்கு ஏற்ற இடம்தான்! பீர் பக்கத்திலே இருக்கிறதே, கவலை என்ன?'' என்று நினைத்துக் கொண்டு தாஞுபாய் தொடர்ந்து நடந்தான். ''பையன் இங்கே இருந்தானுனல் உருப்பட மாட்டான்'' என்று நினைத்ததும் நடையைத் தளர்த்திக் கொண்டான். ''நல்ல ஆளாக வளர வேண்டியவன், கெட்டுப் போகிருன். அவனிடம் போய்ப் பேசிப் பார்த்தால் என்ன?''

தாஹுபாய்க்குப் பரிதாபமாக இருந்தது, திரும்ப விரும்பினுன். பெக்தாய் மட்டும் திருந்திவிட முயன்ருல் தாஹுபாய் அவன் செய்ததையெல்லாம் மறந்து அவனுக்கு மன்னிப்பளிக்கத் தயாராயிருந்தான். ஆனுல் தாஹுபாய் திரும்பவில்லை. கட்சியிலிருந்து தான் விலக்கப்பட்டுவிட்டது பெக்தாய்க்குத் தெரிந்திருந்தால் பயனுள்ள உரையாடலுக்கு இடமிருக்காது என்பதை உணர்ந்து கொண்டான். நாக்குத் தடிப்புள்ள அந்த இளைஞன் தன்னையும் தன் வாழ்வையும் தான் பற்றுறுதியுடன் பாடுபட்ட இலட்சியத்தையும் கேலி செய்ய அவனுக்குச் சந்தர்ப்பம் அளிக்கத் தாஹுபாய் விரும்பவில்லை. ஆகவே திரும்பாமல் நடந்தான். அவ்வழியே சென்ற லாரி ஒன்றில் ஏறிக் கொண்டு ஊருக்குத் திரும்பினுன். வழியெல்லாம் பெக்தாயைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். சரிந்து உருண்ட பீப்பாயைத் தடுத்து நிறுத்த முயன்றவாறு இளைஞன் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டு அசையாமல் நின்ற அந்தக் காட்சியை அவனுல் மறக்க முடியவில்லை.

பிற்பாடு கூட்டுப் பண்ணை பெக்தாய்மீது வழக்குத் தொடர்ந்துபோது சாட்சி கூறுவதற்காகத் தாஹுபாய் நீதிமன்றத்துக்குப் போயிருந்தான். பெக்தாய் தனது கிடையைத் துறந்து ஓடிவிட்டான் என்பதற்கு மேல் அவன் ஒன்றும் சொல்லவில்லை. மற்றவற்றைக் கூற அவன் விரும்பவில்லை. பெக்தாய் தன் தவறை உணர்ந்து தன் செயலுக்காக வருந்த வேண்டுமென்று

தானுபாய் விரும்பினான். ஆனால் பெக்தாய்க்கு அது போன்ற எண்ணம் எதுவுமில்லை.

''வெளியே வந்ததும் எங்களிடம் வா. உன்னுடைய எதிர் காலத்துக்கு எங்களால் ஆனதைச் செய்கிறோம்'' என்று தானுபாய் அவனிடம் சொன்னான். ஆனால் பெக்தாய் பதில் கூறவில்லை, கண்களை உயர்த்திப் பார்க்கக் கூட இல்லை. தானுபாய் விலகி வந்துவிட்டான். கட்சியிலிருந்து விலக்கப்பட்டது முதலாக அவன் தன்னம்பிக்கையை இழந்து விட்டான். குற்றம் புரிந்துவிட்டவனைப் போன்ற ஓர் உணர்ச்சி எந்நேரமும் அவனிடம் இருந்து வந்தது. கூச்சமும் தயக்கமும் மிக்கவனாகிவிட்டான். தன் கதி இப்படி ஆகுமென்று எந்நாளும் அவன் நினைத்திருக்க மாட்டான். யாரும் அவனிடம் வித்தியாசமாக நடந்த கொள்ள வில்லை என்றாலும் அவன் மற்றவர்களிடம் அதிகம் பேசாமல் ஒதுங்கித் தானுண்டு தன் வேலையுண்டு என்று இருந்து வந்தான்.

## 24

குலுங்கா நடையான் குல்சாரி தரையிலே தலை சாய்த்து அசைவின்றிப் படுத்திருந்தது. அதன் உடலை விட்டு உயிர் சிறிது சிறிதாகப் பிரிந்து கொண்டிருந்தது. அதன் தொண்டையில் ஏதோ களகளத்து உஸ்ஸிட்டது. அதன் கண் கள் விரியத் திறந்திருந்தன, ஆடாமல் தீயை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்த அதன்

விழிகள் பஞ்சடைந்து வந்தன. குச்சி போல நேராக இருந்த அதன் கால்கள் விரைத்து வந்தன.

தானபாய் தனது குலுங்கா நடையானை வழியனுப்பி வைக்கும் முறையில் அதனுடன் பேசிக் கொண்டிருந்தான்: ''குல்சாரி நீ அரும் பெரும் குதிரை. என் நண்பனாக இருந்தாய். இங்கிருந்து பிரிந்து செல்கையில் நீ என்னுடைய வாழ்வின் சிறந்த ஆண்டுகளை உன்னுடன் எடுத்துச் செல்வாய். குல்சாரி, உன்னை எந்நாளும் நான் மறவேன். இன்னமும் நீ உயிருடன் தான் இருக்கிறாய், ஆனால் ஏற்கனவே இறந்து விட்டது போல நினைத்து நான் பேசுகிறேன். ஏனென்றால் நீ இறந்து கொண்டிருக்கிறாய். எனது அரும்பெரும் குதிரை குல்சாரி, நீ என்னை விட்டுச் செல்கிறாய். என்றாவது எதிர்காலத்தில் நாம் சந்திப்போம். ஆனால் உன் குளம் பொலி யைக் கேட்க முடியாது. அங்கே சாலைகளோ, நிலமோ, புல்லோ இல்லை, அங்கே உயிரில்லை. நான் உயிருடன் இருக்கும் வரை நீ இறந்து விட மாட்டாய்; குல்சாரி, என்றும் நீ என் நினைவிலே இருப்பாய். உனது குலுங்கா நடையின் ஒலி தான் என்றென்றும் எனக்கு மனதுக்கு இனிய இசையாக இருக்கும்...''

கிழவன் தானபாய் இச்சிந்தனைகளில் மூழ்கி யிருந்தான். அவன் துயருற்றான். குலுங்கா நடையானைப் போலவே காலம் பறந்தோடி விட்டது. தானபாய் நினைத்துக் கொண்டது போல அப்படி ஒன்றும் அவன் கிழவனல்ல.

ஆனால் மனிதனைக் கிழவனாக்குவது வயதின் சுமை மட்டுமல்லவே. கிழவனாகிவிட்டேன், என் காலம் கடந்துவிட்டது, இறுதி நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறேன் என்னும் நினைப்பு அல்லவா இன்னும் அதிகமாகக் கிழவனாக்கிவிடுகிறது.

அவனுடைய குலுங்கா நடையான் இறந்து கொண்டிருந்த அந்த இரவில் தானபாய் மீண்டுமோர் முறை திரும்பிப் பார்த்து மேலும் கூர்மையாக, மேலும் ஆழமாகக் கடந்த காலத்தினுள் உற்று நோக்கியபோது, இவ்வளவு சீக்கிரமாகத் தான் கிழப் பருவத்துக்குப் பணிந்து விட்டதை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டான். பல ஆண்டுகளாகியும் தன்னை மறவாது, தன் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டு தன்னை வந்து பார்த்த அந்த இளைஞன் கூறிய ஆலோசனையைக் கேட்கத் தவறிவிட்டேனே என்று வருத்தப்பட்டுக் கொண்டான்.

கட்சியிலிருந்து அவன் விலக்கப்பட்டு ஏழாண்டுகள் கழிந்தபின் அவ்விளைஞன் அவனிடம் வந்திருந்தான். அப்பொழுது தானபாய் சரிகோசுப்பிளவில் கூட்டுப்பண்ணையின் உடைமைகளுக்குக் காவலாளனாக வேலை செய்து கொண்டிருந்தான். அங்கே ஒரு குடிசையில் தன் மனைவி ஜெய்தாருடன் வசித்து வந்தான். அவன் மகள்கள் இருவரும் பள்ளிப் படிப்புக்காக முதலில் வீட்டை விட்டுச் சென்றனர், பிறகு மணம் புரிந்து கொண்டனர். அவன் மகன் தொழில் நுட்பப் பள்ளியில் படித்து முடித்து விட்டுத் தற்போது வட்டாரத் தலைமை

யிடத்தில் வேலையில் அமர்ந்து குடியும் குடித் தனமுமாக இருந்து வந்தான்.

கோடையில் ஒரு நாள் தாஹுபாய் ஆற்றங் கரை ஓரமாகப் புல் அறுத்துக் கொண்டிருந் தான். வெப்பமாகவும் பிரகாசமாகவும் இருந் தது, புல் அறுக்க மிக அருமையான நாள் அது. பிளவினுள் அமைதி நிலவிற்று. சிள் வண்டுகள் கிரீச்சிட்டன. கிழவனுக்குரிய அகலமான கால் சட்டையும் மேல் சட்டையும் போட்டுக் கொண்டு தாஹுபாய் அடர்த்தியாக வளர்ந் திருந்த புல்லைச் சறுக்குச் சறுக்கென அறுத்துச் சாய்த்துக் கணீரென முனகியவாறு வீசிச் சென்ற தனது புல் அரிவாளைக் கவனித்தவாறு மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தான். அவனுடைய வேலை அவனுக்கு அளவிலா இன்பம் அளித்தது. அருகே ஒரு ஜீப் வந்து நின்றதையும் இரண்டு ஆட்கள் அதிலிருந்து இறங்கித் தன்னிடம் வந்ததையும் அவன் கவனிக்கவில்லை.

''வணக்கம், தாஹுபாய்! அல்லாவின் அருள் உனக்கு உண்டு!'' இரண்டொரு தப்படித் தொலைவிலிருந்து இந்தக் குரல் ஒலித்தது. அவன் திரும்பிப் பார்த்தான், இப்ராகிம் தன்ன ருகே வந்ததைக் கண்டான். இப்ராகிம் மாற்ற மின்றி அப்படியேதான் இருந்தான்: அதே சுறுசுறுப்பு, தளதளப்பான கன்னங்கள், பருத்த வயிறு. ''தாஹுபாய், நீ இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டு பிடித்துவிட்டோம் பார்'' என்று வாயெல்லாம் பல் தெரிய இளித்துக் கொண்டு

பேசினுன். ''வட்டாரக் கமிட்டிச் செயலாளரே நேரில் வந்திருக்கிருர், உன்னைப் பார்ப்பதற் காக.''

''திருட்டு நரியே!'' என்று இப்ராகிமினது சாமர்த்திய முறைகளைத் தாஞபாய் கடுப் புடன் தன்னுள் பாராட்டிக் கொண்டான். ''பெரிய கில்லாடி! கூழைக் கும்பிடு போட்டுக் கூனிக் குறுகி நிற்கிருன் பார்! என்ன பணிவு, என்ன கரிசனம்! எவனுக்கும் சேவகம் புரியத் தயாராக நிற்கிருன்!''

''வணக்கம்'' என்று கூறித் தாஞபாய் அவர் களுடன் கை குலுக்கினுன்.

''அக்சக்கால், என்னை உங்களுக்கு அடை யாளம் தெரியவில்லையா?'' என்று இப்ரா கிமுடன் வந்த ஆள் தாஞபாயின் கையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு ஆர்வமுடன் கேட்டான்.

தாஞபாய்க்கு நினைவில்லை. ''எங்கோ பார்த் திருக்கிறேன், யாராக இருக்கும்?'' என்று ஆலோசித்தான். பார்த்த ஆள்தான், ஆனுல் அதிகமாக மாறியிருக்க வேண்டும். வாட்ட சாட்டமான இளைஞன்; பழுப்பேறிய முகம், நன்னம்பிக்கை வாய்ந்த தெளிவான பார்வை. சாம்பல் நிறலினன் உடுப்பு உடுத்தியிருந்தான். கோரைப் புல் தொப்பி போட்டிருந்தான். ''நகரத்து ஆளாயிருப்பான்'' என்று தாஞபாய் முடிவு செய்தான்.

''தெரியவில்லையா? தோழர்...'' என்று இப் ராகிம் ஆரம்பித்தான், ஆனுல் தாஞபாய்

குறுக்கிட்டுத் தடுத்தான்.

''இரு, இரு! எனக்குத் தெரிந்துவிட்டது'' என்று சொல்லி, உள்ளுக்குள் சிரித்து மகிழ்ந்து கொண்டான். ''மகனே, எனக்கு அடையாளம் தெரிகிறது. எனக்கு மறக்குமா உன்னை! இன்னொரு தரம் வணக்கம் கூறுகிறேன். உன்னைப் பார்க்க நேர்ந்துள்ளது குறித்து மகிழ்ச்சி எனக்கு.''

வந்திருந்தது கெரிம்பேக்கவ். முன்பு காம் சொமோல் செயலாளராக இருந்த இளைஞன். கட்சியிலிருந்து தானுபாயை விலக்கிய வட்டாரக் கமிட்டிக் குழுவின் அந்த மறக்க முடியாத கூட்டத்தில் துணிந்து நின்று தானுபாய்க்குச் சாதகமாக வாதாடியவன்.

''என்னை அடையாளம் தெரிந்து கொண்டு விட்டீர்கள், நல்லது!'' என்று கெரிம்பேக்கவ் மகிழ்ந்து கொண்டான். ''உங்களுடன் பேச விரும்புகிறேன். வாங்க, ஆற்றங் கரையிலே நடந்தபடி பேசலாம். இவருக்கு பதில் சிறிது நேரம் நீ புல் அறுக்க வேண்டும்'' என்று இப்ரா கிம் பக்கம் திரும்பிக் கூறினான்.

தண்டனிட்டுச் சேவகம் புரியக் காத்திருந்த இப்ராகிம் அவசர அவசரமாகக் கோட்டுப் பொத்தானைக் கழற்றிக் கொண்டு ''ஓ, இதோ அறுக்கிறேன்! தோழர் கெரிம்பேக்கவ், இதோ அறுக்கிறேன்!'' என்றான்.

தானுபாயும் கெரிம்பேக்கவும் புல்வெளியைக் கடந்து சென்று ஆற்றோரத்தில் கிடந்த பாறைக் கற்கள் மீது உட்கார்ந்தனர்.

''தானுபாய், நான் இங்கு வந்திருக்கும்

காரணத்தை நீங்கள் ஊகித்துக் கொண் டிருப்பீர்கள்'' என்முன் கெரிம்பேக்கவ். ''பார்ப் பதற்குத் திடகாத்திரமாக இருக்கிறீர்கள். புல் அறுக்கிறீர்கள், ஆகவே நன்கு உடல் நலத்துடன் இருக்கிறீர்கள் என்பது தெரிகிறது. மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.''

''ஆம், மகனே, உன்னைப் பார்த்து நானும் மனம் மகிழ்கிறேன்.''

''சரி, நான் சொல்ல விரும்புவதைச் சுருக்க மாய்ச் சொல்கிறேன். எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன, உங்களுக்குத் தெரியும். பலவும் ஒழுங்கு செய்யப்பட்டிருக்கின்றன. என்னைப் போலவே நீங்களும் இவற்றை அறிவீர்கள்.''

''ஆம், மெய்தான். எங்களுடைய கூட்டுப் பண்ணையிலேயே இவற்றைக் காணலாமே. நிலைமை முன்னேறி வருகிறது. சில சமயம் என்முல் நம்பக் கூட முடிவதில்லை. சமீபத்தில் நான் ஐந்து மரப்பள்ளத்தாக்கிற்குப் போயிருந் தேன். நான் ஆடு மேய்ச்சல்காரனுக இருந்த வருடத்தில் அங்குதான் படாத பாடு பட்டு விட்டேன். இப்பொழுது அங்கு வேலை செய்த மேய்ச்சல்காரர்களைப் பார்த்த போது எனக்குப் பொருமையாய் இருந்தது. புதிய கொட்டகை கட்டியிருக்கிமுர்கள். கற் கூரையுடைய நல்ல கொட்டகை. தாராளமாக ஐந்நூறு ஆடுகளுக்கு இடமிருக்கிறது. மேய்ச்சல்காரனுடைய குடும் பத்துக்காகத் தனி வீடு இருக்கிறது. அதற்குப் பக்கத்தில் களஞ்சியமும் லாயமும் உள்ளன. அந்தக் காலத்தில் இருந்தது போலில்லை,

எல்லாம் மாறிவிட்டன. ஏனைய குளிர்கால முகாம்களிலும் நிலைமை எவ்வளவோ முன்னேறி விட்டது. கிராமத்தில் மக்கள் புது வீடுகள் கட்டி வருகிறார்கள். ஒவ்வொரு தரமும் நான் அங்கே போகும்போது எங்காவது ஓரிடத்தில் புதிய வீடு கண்ணெதிரே நிற்கக் காண்கிறேன். இந்த முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டாக வேண்டும்.''

''ஆம், நம் முன்னுள்ள கடமை அது. மாற்றப்பட வேண்டியவை இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. நிச்சயம் இதற்கான முயற்சிகளில் இறங்குவோம். இனி நான் இங்கு வந்த காரணத்தைச் சொல்கிறேன். தானுபாய், நீங்கள் திரும்பவும் கட்சியில் சேர்ந்து கொள்ள வேண்டும். உங்கள் விவகாரத்தை மறு பரிசீலனை செய்ய விரும்புகிறோம். அண்மையில் எங்கள் குழுக் கூட்டம் ஒன்றில் இது பற்றிப் பேசினோம். என்றுமே சரி செய்யாதிருப்பதைவிட காலங் கடந்தேனும் சரி செய்வது நல்லதுதானே.''

தானுபாய் பதில் சொல்லவில்லை. அவனுக்குக் குழப்பமாக இருந்தது. ஒரு பக்கம் ஆனந்தம், ஒரு பக்கம் மனக் கசப்பு. கடந்த காலம் அவனுள் உயிர் பெற்றெழுந்தது, அவன் மனத்துள் இருந்த புண் ஆறுப் புண்ணாகி வருத்திற்று. அந்த நினைவுகள் மீண்டும் உயிர் பெறுவதை அவன் விரும்பவில்லை. கடந்த காலம் குறித்து அவன் நினைக்கவே விரும்பவில்லை.

''நன்றி, உன்னுடைய அன்புக்காக நன்றி'' என்றான். ''கிழவனை மறவாதிருப்பதற்காக

நன்றி.'' சற்று நேரம் மௌனமாய் இருந்து விட்டுத் தன் உள்ளத்தில் இருந்ததை எடுத் துரைத்தான்: ''நான் கிழவனாகி விட்டேன். இனி என்னால் கட்சிக்கு என்ன பயன்? கட்சிக்கு என்னால் என்ன செய்ய முடியும்? இனி எதற்கும் என்னால் பயனில்லை. என் காலம் கழிந்தோடி விட்டது. நான் சொல்வதைக் கேட்டு நீ கோபப் படக் கூடாது. நான் இதைப் பற்றி சிந்தித்துப் பார்க்கிறேன்.''

அதன்பின் நீண்ட காலத்துக்குத் தானபா யால் தன்னுள் ஒரு முடிவுக்கு வர முடிய வில்லை. ஒத்திப் போட்டு வந்தான். நாளைக்குப் போகலாம், நாளைக்குப் போகலாம் என்று கூறிக் கொண்டிருந்தான். காலம் கடந்து சென்றது.

சரி போய் விட்டு வரலாம் என்று ஒருநாள் தீர்மானத்துக்கு வந்து குதிரைக்குச் சேணமிட்டுப் புறப்பட்டுச் சென்றான். ஆனால் பாதி வழி சென்று திரும்பிவிட்டான். என்ன காரணம்? அவனுடைய முட்டாள்தனம்தான் இப்படி அவனைத் திரும்பச் செய்தது என்பது அவனுக்குத் தெரியும். தான் ஒரு முட்டாள், குழந்தைப் பிள்ளை என்று கூறிக் கொண்டான். இதை உணர்ந்து கொண்டான் ஆனால் இது பற்றி அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஸ்தெப்பி வெளியில் குதிரை ஒன்று புழுதி எழுப்பிச் சென்றதைக் கண்டான். குல்சாரி என்று உடனே அவனுக்குத் தெரிந்தது. இப்பொழுது அவன் அதைப் பார்ப்பது அரிதாகி விட்டது. கோடைப் பருவத்தின் வறண்ட

ஸ்தெப்பியில் குல்சாரி வெள்ளைப் புழுதித் தடமிட்டுச் சென்றது. தொலைவிலிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருந்த தானுபாயின் முகம் இருண்டுவிட்டது. குலுங்கா நடையானின் குளம்புகள் எழுப்பிய புழுதி இதற்கு முன்பு குதிரையை எட்டிப்பிடிக்க முடிந்ததில்லை. பறந்து செல்லும் கரும் பறவை போல முன்னால் பறந் தோடும், விம்மிப் புடைத்தெழும் புழுதித் தடம் அதன் பின்னால் தொடர்ந்து வரும். ஆனால் இப்பொழுது புழுதி குதிரையைச் சூழ்ந்து கொண்டுவிட்டது. குதிரை முன்னால் பாய்ந்தோடிற்று, ஆனால் அது எழுப்பிய புழுதி மறு கணமே அதைச் சூழ்ந்து கொண்டது. குல்சாரியால் புழுதியிடமிருந்து பிய்த்துக் கொண்டு முன்னால் போக முடியவில்லை. வயதாகிவிட்டது, பலமிழந்து பின்னடைந்து வந்தது என்பதையே குறித்தது இது. உள்ளம் பதைபதைக்க இதைப் பார்த்துக் கொண்டிருந்த தானுபாய் ''குல்சாரி, உன்னால் முடியவில்லை, தவிக்கின்றாய்'' என்று கூறிக் கொண்டான்.

சவாரி செய்பவன் சாட்டையால் அடிக்க குல்சாரி புழுதியில் அகப்பட்டு மூச்சுத் திணறித் திண்டாடுவதை அவன் கற்பனை செய்து பார்த் தான். குலுங்கா நடையானின் விழி பிதுங்கி யதையும், முண்டியெழுந்த புழுதியிலிருந்து பிய்த்துக் கொண்டு முன்னே செல்ல அது அரும் பாடுபட்டதையும், முடியாமல் திண்டா டியதையும் அவன் தன் மனக்கண்ணால் கண் டான். தன் குரல் குல்சாரிமீது சென்றவனுக்கு

எட்டாது, இருவருக்கும் இடையே நெடுந் தொலைவு இருந்தது என்று தெரிந்திருந்தும், ''நிறுத்து! குல்சாரியை அப்படி விரட்டாதே!'' என்று உரக்கக் கூவியபடி, குறுக்கே சென்று அவனைத் தடுக்க நினைத்துத் தன் குதிரையை விரட்டிச் சென்றான்.

ஆனால் அங்கு போய்ச் சேரும் முன்பே குதிரையை இழுத்துப் பிடித்து நிறுத்தினான். குல்சாரியில் சென்றவன் தன்னைப் புரிந்து கொண்டால் நல்லது தான், இல்லை என்றால் என்னாவது? ''உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ! உன் புத்திமதி எனக்கு வேண்டாம்! கிழட்டு முட்டாள், விலகிப் போ!'' என்று கூறினால் என்ன செய்வது?

குல்சாரி மேலும் மேலும் விலகிச் சென்று கொண்டிருந்தது. அதன் ஓட்டம் சீராயில்லை, முக்கித் திணறுவதாய் இருந்தது. புழுதிப் படலத்தில் மூழ்கி மறைவதும் பிறகு வெளிப்படுவதுமாக அது ஓடிக் கொண்டிருந்தது. நீண்ட பல நிமிடங்களுக்குத் தானாபாய் அதன் ஓட்டத்தைப் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு குதிரையைத் திருப்பித்தன் வழியிலே சென்றான்.

''குல்சாரி, நமது ஓட்டக் காலம் முடிவுற்று வருகிறது. வயதாகிவிட்டது இருவருக்கும். இனி யாருக்கும் நாம் தேவையில்லை. நானும் ஓட முடியாதவனாகி வருகிறேன். இனி அவ்வளவு தான் நமக்கு, எஞ்சிய காலத்தையும் கழித்து விட்டுப் போய்ச் சேர வேண்டியதுதான்...'' என்று கூறினான்.

ஓராண்டுக்குப் பிற்பாடு குலுங்கா நடையான் பார வண்டி இழுத்துச் சென்றதைத் தானுபாய் கண்ணுற்ருன். மீண்டும் அவன் உள்ளம் பதறினுன். அற்புதமான பந்தயக் குதிரையா யிருந்தது, இப்பொழுது செல்லரித்த பழைய கழுத்துப் பட்டியை மாட்டிக்கொண்டு பார வண்டி இழுக்க வேண்டியதாகி விட்டதைக் கண்டு அவன் பொறுமினுன். இக்காட்சியைக் காணச் சகிக்காதவனுகத் திரும்பிக் கொண்டான்.

அதன்பின் மீண்டும் ஒரு முறை அவன் குலுங்கா நடையானைச் சந்தித்தான். சுமார் ஏழு வயதிருக்கும், நிஜாரும் கிழிந்த பனியனும் அணிந்த சிறுவன் ஒருவன் அதன்மீது சவாரி செய்து தெரு வழியே போய்க் கொண்டிருந் தான். வெறுங் காலால் தட்டிக் குதிரையை வேகமாக ஓடச் செய்ய முயன்ருன். தனியே குதிரையில் அமர்ந்து ஓட்டிச் செல்கிருேமே என்று அவனுக்குப் பெருமை. பரபரப்புற்றுத் தோன்றினுன். அவனுடைய முதலாவது குதி ரைச் சவாரி போலும். அதனுல்தான் மிகவும் சாதுவான, மிகமிக மெதுவாகச் செல்லக் கூடிய முன்னுள் குலுங்கா நடையானை குல் சாரியைக் கொடுத்திருந்தார்கள்.

''தாத்தா, என்னைப் பார்!'' என்று அந்தச் சிறுவன் வெற்றிக் கூச்சலிட்டான். ''நான் ஒரு ஜெனரல்! ஆற்றைக் கடக்கப் போகிறேன்!''

''பிரமாதம்! போ நீ, பயப்படாதே!'' என்று தானுபாய் உற்சாகமூட்டினுன்.

லகானை ஆட்டித் துணிவுடன் குதிரையை

ஆற்றுக்குள் ஓட்டிச் சென்ருன். எதிர் கரையை அடைந்து குதிரை தடுமாறியபடி மேலே ஏறிய போது சிறுவன் தன் இருக்கையிலிருந்து நழுவி விழுந்து விட்டான்.

நனைந்து போய் பீதியுற்று ''அம்மா!'' என்று கத்திஞன்.

தாஞபாய் அவனை நீரிலிருந்து தூக்கிக் குதிரையிடம் கொண்டு போஞன். குல்சாரி அங்கே பாதையில் மாறி மாறி ஒவ்வொரு காலாக உயர்த்திக் காற்றிலே தொங்கவிட்டுக் கொண்டு பொறுமையுடன் காத்திருந்தது. ''பாவம், குல்சாரிக்கு எலும்பு வலிக்கிறது. கிழடு தட்டி விட்டது'' என்று நினைத்தவாறு சிறுவனை அதன்மீது உட்கார வைத்தான்.

''போய் வா, திரும்பவும் விழுந்துவிடாமல் பார்த்துக் கொள்.''

சாலையிலே குல்சாரி மெள்ள நடந்து சென்றது.

பிறகு குலுங்கா நடையான் தாஞபாயிடம் திருப்பித் தரப்பட்டு, அதை அவன் தெம்பு பெறச் செய்துவிட்டதாகத் தோன்றியபின் கடைசி முறையாகக் குல்சாரி இப்பொழுது அவனை நகருக்கு அழைத்துச் சென்றுவிட்டுத் திரும்பிய வழியில் இறந்து கொண்டிருந்தது.

தாஞபாய் தன் மகனையும் மருமகளையும் பார்த்து விட்டுத் திரும்பி வந்தான். மருமகளுக்கு இரண்டாவது குழந்தையாக மகன் பிறந்திருந்தான். தாஞபாய் அவர்களுக்கு ஓர் ஆட்டுக் குட்டியும் ஒரு மூட்டை உருளைக்கிழங்

கும் வீட்டில் செய்த ரொட்டியும் ஜெய்தார் தயாரித்து அனுப்பிய வேறு சில பணியாரங் களையும் எடுத்துச்சென்றிருந்தான். ஜெய்தார் தனக்கு உடல் நலமில்லை என்று கூறி வரா மலிருந்துவிட்டாள். அதை அவள் வெளியே சொன்னதில்லை என்றாலும் மருமகளை அவளுக்குப் பிடிக்கவில்லை. அவர்களுடைய மகன் கோழை, தைரியமில்லாதவன். அவன் தேடிக் கொண்ட மனைவி பொல்லாதவளாக இருந்தாள். வீட்டிலே இருந்து கொண்டு இரும்புக் கரம் கொண்டு கணவனை அடக்கியாண்டாள். தமது ஆதிக் கத்தை நிலைநாட்டிக் கொள்வதற்காக, அதி காரம் தம் கையிலேதான் இருக்கிறதென்று காட்டிக் கொள்வதற்காகப் பிறிதொருவரை அவமானப்படுத்தவோ, மனம் புண்படச் செய் யவோ சிறிதும் தயங்காதவர்கள் இருக்கிறார்கள்.

மகன் வீட்டுக்குத் தானுபாய் சென்றிருந்த போது இப்படித்தான் ஆயிற்று. அவனுடைய மகன் பதவி உயர்வு எதிர்பார்த்திருந்தான். ஆனால் அவன் ஒதுக்கப்பட்டுவிட்டு வேறொரு வனுக்கு அந்தப் பதவி தரப்பட்டுவிட்டது. இப்பொழுது அவன் மனைவி பழி பாவமறியாத தனது மாமனாரான கிழவரின்மீது பாய்ந்தாள்.

தானுபாய்க்கு ஏன் இங்கு வந்தோம் என்றாகி விட்டது.

அவன் மருமகளாயில்லாமல், அவனுடைய சொந்த மகனின் மனைவியாக இல்லாமல் வேறு யாராவது இதைச் சொல்லியிருந்தால் தானு பாய் சும்மா விட்டிருக்க மாட்டான். ஆனால்

சொந்தக் குடும்பத்தவர்களே இப்படிப் பேசினால்—அவர்கள் நல்லவர்களாயினும் சரி, கெட்டவர்களாயினும் சரி—யார் என்ன செய்ய முடியும்? கிழவன் ஒன்றும் சொல்லவில்லை, அவளுடன் வாக்குவாதம் புரியவில்லை. அவளுடைய கணவன் முன்னேற முடியாமற் போனதற்குக் காரணம் தானல்ல; தன் மகன் ஓர் உதவாக்கரை, புத்தி சுவாதீனமுள்ளவன் எவனும் காத வழி ஓடிச் சென்றுவிடும்படியான ஒருத்தியை அவன் தேடிப் பிடித்துத் தனக்கு மனைவியாக்கிக் கொண்டு விட்டான், அதனால்தான் அவனால் முன்னேற முடியவில்லை என்று தாஞபாய் அவளிடம் சொல்லவில்லை. ''நல்ல மனைவியாக இருப்பவள் மோசமான கணவனை சுமாரானவனாகவும், சுமாரான கணவனைச் சிறந்தவனாகவும் ஆக்கி விடுவாள்'' என்ற முதுமொழி முற்றிலும் உண்மையாகும். ஆனால் கிழவன் தன் மகனை அவனுடைய மனைவிக்கு முன்னால் வெட்கித் தலைகுனியச் செய்ய விரும்பவில்லை. தன்னால் தான் அவர்களுக்கு இந்த நிலையென்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கட்டுமே.

எனவேதான் அவ்வளவு அவசாரமாக அவன் அங்கிருந்து புறப்பட்டுவிட்டான். அவர்களுடன் இருக்க அவனுக்குச் சகிக்கவில்லை.

இப்பொழுது கணப்புத் தீயின் முன்னால் உட்கார்ந்திருந்தபோது தாஞபாய் தன் மருமகளைத் திட்டினான்: ''எப்படிப்பட்ட முட்டாள் நீ! நீங்கள் எல்லாம் எங்கிருந்துதான் வருகிறீர்களோ? கண்ணியமோ மதிப்போ இல்லாதவர்

கள், யாரிடத்தும் ஓர் இனிய சொல் சொல்ல முடியாதவர்கள். நீங்கள் நினைப்பதெல்லாம் உங்களைப் பற்றிதான். உங்களைக் கொண்டு ஏனையோரையும் அளந்து மதிப்பிட முற்பட்டு விடுகிறீர்கள். இல்லை, நீங்கள் நினைப்பது போல நடக்கப் போவதில்லை, நான் அவர்களுக்குத் தேவைப்படுகிறேன். இன்னமும் என்னால் பயன் உண்டு...''

## 25

காலைப் பொழுது நெருங்கிவிட்டது. மலைகள் பூமிக்குமேல் உயர்ந்தெழுந்து நின்றன. ஸ்தெப்பி வெளி கண்ணுக்குத் தெரியலாயிற்று. அது பரந்து விரிந்து சென்று தொலைவினுள் மறைந்தது. மலைப் பிளவின் ஓரத்திலே நெருப்பு எரிந்து தணிந்து சாம்பலுடன் கனன்று கொண்டிருந்தது. தலை நரைத்துப் போன கிழவன் அதன் அருகே உட்கார்ந்திருந்தான். அவன் கோட்டு அவனுடைய தோளை மூடியிருந்தது, இனி அவன் குலுங்கா நடையானை மூடத் தேவையில்லை. குல்சாரி அடுத்த உலகினுள் நுழைந்துவிட்டது, அல்லாவின் மந்தையில் ஒன்றாக ஓடிக் கொண்டிருந்தது... தானபாய் இறந்த குதிரையை உற்றுப் பார்த்தான். குல்சாரியா இது? அவனுக்கு சந்தேகமாயிருந்தது. அதைக் குலுக்கிய இறுதி வலிப்பின் போது தலையை அது பின்னால் சாய்த்துக் கொண்டுவிட்டது. விலாப்புறமாகப் படுத்துக்

கிடந்தது. கடிவாளத்தால் அதன் கன்னங்களில் ஆழமான கோடுகள் பதிக்கப்பட்டிருந்தன. கால்கள் விரைத்து நீண்டிருந்தன. பிளந்து போய்விட்ட அதன் குளம்புகளில் இருந்த லாடங்கள் தேய்ந்து விட்டன. அவை இனி குல்சாரியை தாங்கிச் செல்லப் போவதில்லை, சாலைகளில் இனி அவை தடம் பதிக்கப் போவதுமில்லை. அவன் புறப்பட வேண்டிய நேரம் வந்துவிட்டது. கடைசி முறையாகக் குனிந்து குதிரையைப் பார்த்தான். ஜில்லிட்டுப்போன அதன் கண்ணிமைகளைத் தணித்து அதன் கண்களை மூடினான். கடிவாளத்தைக் கையில் எடுத்துக் கொண்டு மறு முறை திரும்பிப் பார்க்காமல் நேரே நடந்தான்.

ஸ்தெப்பி வெளியைக் கடந்து மலைகளை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். அவனுடைய துயரச் சிந்தனைகளில் தொடர்ந்து ஈடுபட்டவாறு நடந்து சென்றான். தான் மூப்படைந்து விட்டதையும், இனி தனக்கு அதிக காலம் எஞ்சியில்லாததையும் நினைத்தபடி நடந்தான். தனது இனப் பறவைகளிடமிருந்து பின்தங்கித் தனியே விடப்பட்ட பறவையாகச் சாக அவன் விரும்பவில்லை. இனத் திரளுடன் சேர்ந்து பறந்து அவற்றின் மத்தியில் சாக வேண்டுமென்று ஆசைப்பட்டான். யாருடன் வாழ்க்கையைப் பகிர்ந்து கொண்டானோ அவர்கள் சுற்றிச் சூழ்ந்திருந்து தனக்கு விடை கூறுவதைக் கேட்டவறு சாக வேண்டுமென ஆசைப்பட்டான்.

''சமான்சுருக்குக் கடிதம் எழுதுவேன்'' என்று தானுபாய் தீர்மானம் செய்து கொண்டான். ''அவனுக்குக் கடிதம் எழுதி இதைச் சொல் வேன்: 'குலுங்கா நடையான் குல்சாரியை நீ மறந்திருக்க மாட்டாய். அதில் ஏறிச் சென்றுதான் நான் உன் தந்தையின் கட்சிக் கார்டை வட்டாரக் கட்சிக் கமிட்டியிடம் கொண்டு போய் ஒப்படைத்தேன். நீ தான் என்னை அங்கு அனுப்பி வைத்தாய். நேற்று இரவு நான் நகரிலிருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். வழியில் அந்த அரிய குதிரை இறந்துவிட்டது. இரவு முழுதும் குல்சாரியின் தலை மாட்டில் உட்கார்ந்திருந் தேன். என் வாழ்க்கை பூராவையும் அப்பொழுது நான் சிந்தித்துப் பார்த்தேன். விரைவில் என் காலம் முடிவுற்றுவிடும். குலுங்கா நடை யான் குல்சாரியைப் போல வழியிலே நான் இறந்துவிடுவேன். என் மகன் சமான்சுரே, நான் கட்சியில் திரும்பவும் சேர நீ எனக்கு உதவ வேண்டும். எனக்கு அதிக காலம் எஞ்சி யிருக்கவில்லை. எப்பொழுதும் இருந்தது போலவே இருக்க விரும்புகிறேன். உன் தந்தை சோரோ தனது கட்சிக் கார்டை நான் வட்டாரக் கட்சிக் கமிட்டியிடம் கொண்டு போய் ஒப்படைக்க வேண்டுமென்று கூறிச் சென்றதன் காரணத்தை இப்பொழுது நான் தெரிந்து கொண்டுவிட் டேன். நீ சோரோவின் மகன், கிழவன் தானு பாய் பக்காசவை நீ நன்கு அறிவாய்...' ''

தோளில் கடிவாளக் கயிற்றைப் போட்டுக்

கொண்டு தானுபாய் ஸ்தெப்பி வழியே நடந்தான். அவன் கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடி அவன் தாடியை நனைத்தது. கண்ணீரை அவன் துடைக்கவில்லை. குலுங்கா நடையான் குல்சாரிக்காக அவன் அழுதான். தன் கண்ணீரின் வழியே கிழவன் புதிய காலைப் பொழுதைக் கண்டான். மலையடிவாரத்துக்கு மேலே தனியே ஒரு தாரா வேகமாகப் பறப்பதைக் கண்டான். அது தன் இனத்துடன் சேர்ந்து கொள்ள அவசர அவசரமாகப் பறந்து கொண்டிருந்தது.

''சீக்கிரம்! உன் சிறகுகள் தளர்ந்துவிடுமுன் வேகமாகப் பறந்து உன் இனத்தாருடன் சேர்ந்து கொள்!'' என்று தானுபாய் அதைப் பார்த்து மெள்ளக் கூறினான். பிறகு பெருமூச்செறிந்தவாறு ''குல்சாரி, போய் வா நீ!'' என்றான்.

அவன் தொடர்ந்து நடந்தான். உள்ளத்தை உருக்கும் பழங்காலப் பாடல் ஒன்று அவன் காதில் ஒலித்தது.

...தாய் ஒட்டகம் பல நாட்களாகத் தன் குட்டியைத் தேடி அலைந்தது. அதைக் கூப்பிட்டபடி திரிந்தது. கருவிழிக் குட்டியே, எங்கே சென்றாய் நீ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது. அதன் கால்களில் வழிந்தோடுகிறது. எங்கே நீ? பதில் சொல்லாயோ? அதன் மடியிலிருந்து, நிரம்பி நிறைந்த மடியிலிருந்து பால் சொட்டுகிறது, தூய வெண்ணிறப் பால்...

1966

விற்பனையாளர்கள்

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்

41, பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை — 600 098

ஷோ-ரூம்

136, மவுண்ட் ரோடு, சென்னை — 600 002

கிளைகள்

80, மேலக் கோபுர வீதி, மதுரை — 625 001

87-89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர் — 641 001

சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி — 620 008

செர்ரி ரோடு, சேலம் — 636 001

விற்பனை நிலையங்கள்

3 — 22 — 75 — D, மதுரை சாலை; திருநெல்வேலி ஜங்ஷன்

66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்

Перевод сделан по изданию:
Чингиз Айтматов. Повести и рассказы.
Изд. „Молодая гвардия". 1970.